☆ ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு (நகல் பதிப்பு) தொகுதி I

☆ மக்கள் பதிப்பு : ஜுன் 1998.

☆ விலை (தொகுதி 1 to 8, 9 புத்தகம்) : ரூ.1000/-

☆ வெளியீடு : கலை பண்பாட்டுத் துறை,
புதுவை அரசு.

☆ பதிப்பாக்க மேற்பார்வை : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்,
புதுவை - 605 001.

☆ அச்சு : மோகனா பதிப்பகம்,
புதுச்சேரி.

☆ வெளியீட்டுக் குழு : திரு. கி. இராசாராம்
திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர்
திரு. பிரபஞ்சன்
திரு. செபஸ்தியான்
முனைவர். எல். இராமமூர்த்தி.




ஆர்.வி. ஜானகிராமன்
முதலமைச்சர்

புதுச்சேரி
27.4.98

# வாழ்த்துரை

புதுவை மாநிலம் பண்டைக்காலம் தொட்டு, வரலாற்றுப் பெருமை மிக்கதாய் உள்ளது. சங்கப் புலவர்கள் பலர் இங்கு வாழ்ந்துள்ளதை அறிஞர்கள் பலர் சுட்டியுள்ளனர். கி.மு 2–ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே புதுச்சேரி மேலை நாட்டாருடன் தொடர்பு கொண்டிருந்ததை அரிக்கமேட்டு ஆராய்ச்சிகள் உறுதிப்படுத்துகின்றன. இவை புதுவைக்கென்று சிறப்பான சமூகப் பண்பாட்டு வரலாற்றுப் பாரம்பரியம் உண்டு என்பதை உறுதி செய்துள்ளன.

புதுவையின் 18–ஆம் நூற்றாண்டின் சமூகப் பண்பாட்டுச்செய்திகளை அறிய உதவும் ஆனந்தரங்கப்பிள்ளையின் நாட்குறிப்புகள் இப்பொழுது மறுபதிப்புச் செய்து வெளியிடப்பட்டுள்ளன. புதுச்சேரியில் பிரெஞ்சு அரசு நிர்வாகத்தில் மொழிபெயர்ப்பாளராக (துவிபாஷியாக) இருந்த ஆனந்தரங்கப்பிள்ளை தனது காலத்து அரசியல், சமய, சமூக நடப்புகளை நாட்குறிப்பில் எழுதி வைக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தார். இவரது நாட்குறிப்பு உலக நாட்குறிப்பு வரிசையில் வைத்து எண்ணத்தக்கது. மேலும், இந்நாட்குறிப்பில் அவர் கூறியுள்ள கருத்துக்கள் அவருடைய கண்ணோட்டத்தில் அன்றைய சூழ்நிலையில் எழுதப்பட்டன என்பதையும் இங்குக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இத்தகு சிறப்புமிக்க நாட்குறிப்புத் தொகுதிகள் கடந்த பல ஆண்டுகளாக விற்பனைக்கு இல்லாத குறையைப் போக்க, மக்கள்பதிப்பாக அவற்றை வெளியிட அரசு எண்ணங்கொண்டது. அவ்வகையில் முதல் எட்டுத் தொகுதிகள் இப்பொழுது வெளியிடப்படுகின்றன. தமிழுக்கு அளப்பரிய தொண்டுகளை ஆற்றிவரும் புதுவை அரசு தமிழுக்குச் செய்யும் அருந்தொண்டாக இப்பணி அமைவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

அனைத்துத் தொகுதிகளும் பின்னர் ஆய்வுப் பதிப்பாக வெளியிடப்பட உள்ளன. இப்பணியை மேற்கொண்டுள்ள கலை பண்பாட்டுத் துறையினரையும், புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனத்தாரையும் நான் உளமாரப் பாராட்டி வாழ்த்துகிறேன்.

*ஆர்.வி. ஜானகிராமன்*
(ஒப்பம்)



எஸ்.பி. சிவக்குமார். பி.ஏ.,பி.எல்.,
கல்வி அமைச்சர்

புதுச்சேரி
27.4.98

# வாழ்த்துரை

நாட்குறிப்பு வேந்தர் ஆனந்தரங்கப்பிள்ளை அவர்கள் எழுதிய நாட்குறிப்புத் தொகுதிகள் பன்னிரண்டில் எட்டுத் தொகுதிகளை முந்தைய புதுவை அரசு வெளியிட்டது. அத்தொகுதிகள் அனைத்தும் விற்பனையாகித் தற்போது மக்கள் பயன்பாட்டிற்குக் கிடைக்காத சூழ்நிலையில், தமிழறிஞர்கள் இத்தொகுதிகளைப் பதிப்பிக்குமாறு அரசைக் கேட்டுக் கொண்டனர். அதற்கேற்ப ஐவர் அடங்கிய குழு நியமிக்கப்பட்டு நூல் மறுபதிப்புச் செய்யப்பட்டுள்ளது.

ஆய்வுலகிற்கும் தமிழ் உலகிற்கும் பயன்தரும் தரமான ஆய்வு நூல்களை வெளியிட்டுவரும் புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனத்தின் வழியாக முன்பு வெளிவந்த எட்டுத் தொகுதிகளையும் வெளிவர வேண்டிய நான்கு தொகுதிகளையும் ஆய்வுப் பதிப்பாக வெளியிட அரசு திட்டமிட்டுள்ளது. அதற்கு முன் உடனடித் தேவை கருதி இப்போதைக்கு இது குறுகிய கால மறுபதிப்பாக, மக்கள் பதிப்பாக முன்பதிப்பில் உள்ளவாறே கலை பண்பாட்டுத் துறை சார்பில் புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனத்தின் மூலம் இத்தொகுதிகள் வெளிவருகின்றன.

தமிழ் உலகமும் வரலாற்று மாணவர் உலகமும் இப்பதிப்பை வாங்கிப் பயன்பெறுவதோடு நல்லாதரவும் அளிக்கும் என உறுதியாக நம்புகிறேன். இதுபோன்ற நற்பணிகள் தொடரவும் வெற்றி பெறவும் வாழ்த்துகிறேன்.

*எஸ்.பி. சிவக்குமார்*

(ஒப்பம்)



ந. இராஜசேகர், இ.ஆ.ப.
கல்விச் செயலர்.

புதுச்சேரி
27.4.98

# அணிந்துரை

ஒரு நாட்டின் வரலாறு என்பது பெரும்பாலும் அந்நாட்டை ஆண்ட மன்னர்களின் வரலாறாகவே எழுதப்பட்டு வந்துள்ளது. வரலாறு என்பது மக்களைச் சார்ந்து எழுதப்பட வேண்டும். அவர்களுடைய வாழ்க்கை அமைப்பு, சமூகச் சிக்கல் முதலியவற்றை அது பிரதிபலிக்க வேண்டும் என்று வரலாற்று ஆசிரியர்கள் கருதுவர். வாழ்ந்து முடித்தவர்களின் அனுபவப் பாடங்களே வரலாறு. அத்தகைய வரலாறு இன்றைய வாழ்க்கையை வளப்படுத்தத் தேவையான ஒன்று என அறிவியல் துறையினரால் நம்பப் படுகிறது. வாழ்ந்து முடித்தவர்களின் அனுபவங்கள் தம்முடைய சொந்தச் சிக்கல்களை மட்டும் விவரிக்காமல் ஒரு சமூகத்தின் எல்லா மக்கள் சார்பாகவும் எழுதப்படுமானால் அது ஓர் அரிய வரலாற்றுப் பெட்டகமாக அமையும். இத்தகைய ஓர் அரிய வரலாற்றுப் பெட்டகம்தான் ஆனந்தரங்கரின் நாட்குறிப்புத் தொகுதிகள்.

ஏறத்தாழ இரண்டரை நூற்றாண்டுகளுக்கு முன்னரே ஒரு மனிதர், தாம் அனுபவித்த, பார்த்த, கேட்ட நிகழ்ச்சிகளைப் பதிவு செய்திருக்கும் அதிசயம் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

புதுவை மண்ணில் வரலாற்று நாயகராக வாழ்ந்து பல்வேறு வரலாற்று நிகழ்ச்சிகளைப் பதிவுசெய்த ஆனந்தரங்கப்பிள்ளை அவர்களின் நாட்குறிப்பு மறுபதிப்புச் செய்யப்பட்டு வெளிவருவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

1735–இல் (இன்றைய) பரங்கிப்பேட்டையில் உள்ள பிரெஞ்சுத் தொழிலகத்தில் சுதேசித் தலைவராக ஆனந்தரங்கரை ஆளுநர் லெனாய்ர் (Lenoir) நியமித்தது முதல் அவரது வரலாற்று வாழ்க்கையும் தொடங்கியது.

ஆனந்தரங்கர் 1736–ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 6–ஆம் நாள் தொடங்கி 1761–ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 12–ஆம் நாள்வரை எழுதிய நாட்குறிப்புகள் புதுச்சேரியின் வரலாற்றுப் பெட்டகங்கள் ஆகும்.

1761–ஆம் ஆண்டு முடிந்த நாட்குறிப்பு 85 ஆண்டுகளுக்குப் பிறகு எ. கலுவா மொம் பிரேன் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது. அதன் பின்னர்ச் சென்னை அரசின் முயற்சியால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு 1904–ஆம் ஆண்டில் முதல் தொகுதி வெளியானது. இதற்குப் பின்னர் 1948–இல் தமிழ்ப் பதிப்பின் முதல் தொகுதி வெளிவந்துள்ளது. முதல் எட்டுத் தொகுதிகளே தமிழில் வெளிவந்துள்ளன. 8–ஆம் தொகுதி 1963–இல் வெளிவந்தது.

முன்னைய புதுச்சேரி அரசால் வெளியிடப்பட்ட நாட்குறிப்பின் எட்டுத் தொகுதிகளும் விற்றுத் தீர்ந்து போனமையால் மீண்டும் அத்தொகுதிகளை மறுபதிப்புச் செய்து வெளியிட இன்றைய அரசு எண்ணங் கொண்டது. இவ்வெளியீட்டுத் திட்டத்திற்கு ஐவர் அடங்கிய குழு ஒன்று அமைக்கப்பெற்றது. கலை பண்பாட்டுத்துறை அருங்காட்சியகப் பொறுப்பாளர் திரு. கி. இராசாராம் தலைமையில் திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர், திரு. பிரபஞ்சன், திரு. செபஸ்தியான், புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர். எல். இராமமூர்த்தி ஆகியோர் அக்குழுவில் இடம் பெற்றனர்.

அக்குழுவின் பரிந்துரைகளின்படி மறுபதிப்பாக்கம் பின்வருமாறு திட்டமிடப்பட்டது.

1. நாட்குறிப்பின் ஒன்று முதல் எட்டுத் தொகுதிகளை அப்படியே உள்ளவாறே உடனடியாக நிழற்படப் பதிப்புச் செய்து மலிவு விலையில் மக்கள் பதிப்பாக வெளியிடுவது.

2. அதன் பிறகு அனைத்துத் தொகுதிகளையும் உள்ளடக்கி எளிய தமிழில் விளக்கக் குறிப்புகளோடு வெளியிடுவது.

3. உடனடி நடவடிக்கையாகக் கலை பண்பாட்டுத்துறை சார்பாக மக்கள் பதிப்பின் அச்சுப் பணியை மட்டும் புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம் மேற்கொள்ளும்.

4. ஆய்வுப் பதிப்புத் திட்டத்தைப் புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம் மேற்கொள்ளும்.

மேலே குறிப்பிட்ட திட்டமிடலின் விளைவாக மக்கள்பதிப்பு இப்பொழுது வெளிவருகிறது.

இத்தொகுதிகள் சமூக, பண்பாட்டு வரலாற்று மாணவர்களுக்கும் மொழியியல் அறிஞர்களுக்கும் மிகவும் பயன்படும். இத்தகைய நாட்குறிப்பு வரலாறுகள் நம் சமூகப் பண்பாட்டுப் பழக்க வழக்க வேர்களை அறிய உதவும் என்பதில் எந்த ஐயமும் இல்லை. இப் பதிப்பு வெளிவருவதற்கு உழைத்த அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகளையும் வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

*ந. இராஜசேகர்*
(ஒப்பம்).



ஆனந்தரங்கப் பிள்ளை

பிரத்தியேகமான

ஆனந்த ரங்கப்பிள்ளையவர்களின்

சொஸ்த லிகித

# தினப்படி சேதி குறிப்பு.

முதற் புத்தகம்

விலை ரூபாய்

சந்தானம் பிரின்டிங் ஒர்க்ஸ், புதுவை.

1948

# நான் முகம்

பெரிய மொங்கோல் ஔரங்கஜீப், இராச்சிய பரிபாலனஞ் செய்யத்துவக்கிய ஒன்பதாம் வருஷம் செப்டம்பர் மீ 29 உ (11 Août 1766) கிழக்கிந்தியா பிராஞ்சுக் கூட்டுறவுச் சங்கத்தின் காரியதரிசி பெபேர் (Bebber) என்பவருக்கு முத்திரையிட்டனுப்பிய பரமனுப்படி, பிரஞ்சுக்காரர்கள் இந்தியாவில், நிரந்தரமாய் வியாபாரஞ்செய்யவும், அதற்காகச் சூரத் நகரில் ஒரு காரியாலயம் ஏற்படுத்திக்கொள்ளவும், தங்கள் தேசத்தின் சரக்குகளைக் கப்பல் மூலம் இந்தியாவுக்குக் கொண்டுவந்து, சூரத்தில் சுங்கத்தீர்வையை ஒரு முறை செலுத்திய பிறகு, எவருக்கேனும் தங்குதடையின்றி விற்பனை செய்யவும், அவற்றை வாங்குவோரும், தடையேதுமின்றி விற்பனை செய்யவும், இந்தியாவின் சரக்குகளை வாங்கி தங்கள் தேசத்துக்கு எடுத்துச்செல்லவும், இங்கிலீஷ்காரர், ஹொல்லாந்துகாரர், இந்தியாவில் அனுபவிக்கும் சகல வியாபாரச்சலுகைகளுடனும், சுதந்தரத்துடனும் வாணிபஞ்செய்ய உத்திரவிடப்பட்டார்கள்.

பெபேருக்குப் பிறகு, பிரான்சுவா மர்த்தேன், சூரத்தில், கிழக்கிந்தியா பிராஞ்சுக் கூட்டுறவுச் சங்கத்தின் காரியதரிசியாக நியமிக்கப்பட்டு, வியாபாரஞ்செய்தார்.

நாள்டைவில், ஆசிய தூரக்கிழக்குத் தீவுகளோடுசெய்யும் வியாபாரந்தான், பெரிய லாபத்தைத் தருமென்கிற முடிவுக்கு வந்தார். இங்கிலீஷ்காரர், ஹொல்லாந்து தேசத்தார் உதாரணங்களும் இந்த முடிவுக்குப் புறம்பானவையல்ல.

இக்கருத்தை நிறைவேற்றும்பொருட்டு, அவர் வங்காளக் குடாக்கடல் துறைக்குச் சோழமண்டலத்தை நோக்கிப் பிரயாணமானார். வழியில் சில நாள் சென்னையில் தங்கினார். அவ்வூரில், கத்தோலிக் பாதிரியார் கரோன் என்பவரோடு நட்புக்கொண்டார்.

அப்பாதிரியாரின் ஆலோசனைக்கிணங்கி, தமக்கும், உள்நாட்டு வியாபாரிகளுக்குமிடையே தரகராய் பூந்தமல்லி தானப்ப முதலியாரை நியமித்துக்கொண்டார்.

பிறகு, சோழமண்டலக்கரையில், சென்னைக்கும், பரங்கிப்பேட்டைக்கும் நடுவில், கப்பல் சாமான்களை இறக்கி,

ஏற்றுமதி செய்ய வசதியான, ஒரு வெற்றிடத்தைத் தெரிந்து கொண்டார். அதுதான் புதுச்சேரி.

பிரான்சுவா மர்த்தேன் எழுதிவைத்த ஞாபகக் குறிப்பு களை வாசிக்குமிடத்து, அக்காலத்தில், தட்சணத்தில் அராஜ ரீகமே மேலோங்கி இருந்ததாகத் தெரிகிறது. பீஜப்பூர் சுல்த் தான் 6, 7 வயதுள்ள சிறுவர். இராஜீயத்தைப் பரிபாலிக்கும். அரசியல் ஆலோசனை சபையிலோ பிராமணர்கள் அதிகம்.

இவ்விரண்டு முகாந்திரங்களைப்பற்றி, மாகாண, ஊர்க ளுடைய அதிகாரிகள் மத்திய அதிகார வர்க்கத்தினரின் பலவீனத்தை உபயோகப்படுத்திக்கொண்டு தங்கள் இஷ்டப் படி நடந்துகொண்டார்கள். அந்நிய தேசத்து வியபாரிகளுக் கும் தங்க இருப்பிடம் கொடுக்கவும், சலுகைகள் காட்டவும் தலைப்பட்டார்கள். கோலகொண்டா இராஜா கர்னுடக தேசத் தின் வடபகுதியைத் தன் வசமாக்கிக்கொண்டதுமல்லாமல், மயிலாப்பூரில் வியாபாரஞ்செய்துகொண்டிருந்த போர்ச்சு கீசியரையும் துரத்திவிட்டு, அந்த ஊரையும் பிடித்துக் கொண்டார்.

அதுவரையில் கப்பம் கட்டிவந்த, மதுரை, தஞ்சாவூர் இராஜாக்களும், சுதந்தரக்கொடியை நாட்டிவிட்டார்கள்.

அச்சமயத்தில்தான், பிரான்சு கடற்படை சேனுபதி ப்ளான்கே தெலாயே (Blanquet de la Haye) மயிலாப்பூரை முற்றுகையிட்டு, கோலகொண்டா இராணுவத்தினரை, தரைச்சண்டையில் ஜெயித்து, ஓடச்செய்து, 1672 ஞு ஜூலாய் மீ 25-ந் தேதி மயிலாப்பூரைப் பிடித்துக்கொண்டார்.

இந்த ஜெய செய்தி தென் இந்தியா சிற்றரசர் யாவரை யும் வியப்பில் ஆழ்த்தியது. அவரவர்களும் பிராஞ்சுக்காரரின் சிநேகத்தை விரும்பினுர்கள்.

தற்போது திரிச்சிராப்பள்ளி ஜில்லாவில் அடங்கியிருக்கும் வல்கொண்டபுரம் அதிகாரியான ஷர்க்கான்லூடி பிராஞ் சுப் படைகளின் வீரத்தைப் புகழ்ந்தும், பாராட்டியும், பிராஞ்சு சேனுபதிக்கு வாழ்த்துச்செய்தி அனுப்பிவைத்தார். தமது அதிகார எல்லைக்குள், எங்கு வியாபாரஞ் செய்ய பிராஞ்சுக்காரர்கள் விரும்பினுலும் தாம் அதற்கு இசைவ தாகச் சூட்சுமமாய்த் தெரிவித்துக்கொண்டார்.

இந்தச் சமயத்தை நழுவ விடுவாரா சேனுபதி? தன் சிப்பந்திகளில் ஒருவராகிய பெல்லான்ழே தெ லெஸ்பினே (Bellanger de Lespinay) என்பவரை ஷர்க்கான் லூடியிடம் தூதுவராக அனுப்பி, புதுச்சேரியில், பிரான்சு கூட்டுறவுச் சங்கத்திற்கு வியாபாரம் செய்ய உத்தரவு கொடுக்கும்படிக் கேட்டுக்கொண்டார்.

பெல்லான்ழே தெ லெஸ்பினே வல்கொண்டபுரஞ் சேர்ந்து ஷர்க்கான் லூடியைக்காணப்போன நேரத்தில், அம் மன்னர் ஹொல்லாந்து வியாபாரிகளுடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தார். அந்த வியாபாரிகளும் புதுச்சேரியில் தங்கள் வியாபாரத்திற்கு இடம் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

பிராஞ்சு இராணுவத்தினரின் வீரச் செயல்களையும், பிராஞ்சு வியாபாரிகளின் நேர்மையோக்கியதையையும், அவர்கள் அரசரின் மகத்துவத்தையும் எடுத்துக்காட்டி ஷர்க்கான் லூடி, பிராஞ்சு கூட்டுறவுச்சங்கம் புதுச்சேரியில் நிரந்தரமாய்த் தங்கி வியாபாரஞ்செய்யவும், சரக்குக்கிடங்குகள் கட்டிக்கொள்ளவும், உத்தரவு கொடுத்தார். 1673 ஸு சனவரி மீ 2-ம் உ!

அது முதற்கொண்டு, அயர்வு சோர்வில்லாமல் விடா முயற்சியுடன், தமக்கு வாசஸ்தலமும், சிப்பந்திகளுக்கு விடுதிகளும், பிராஞ்சினின்று புறப்பட்ட கப்பல்கள் புதுச்சேரி துறைக்கு வருமளவும். கூட்டுறவுச் சங்கச் சரக்குகளைக் காப்பாற்ற விசாலமான கிடங்குகளும், பிரான்சுவா மர்த்தேனுல் கட்டப்பட்டன.

தரகு தானப்ப முதலியாரும், உள்நாட்டு வியாபாரிகளையும் நெசவாளர்களையும், பொதுஜன ஊழியர்களையும், புதுச்சேரிக்குத் தருவித்து, அவரவர்கள் அவசரம், வசதிகளுக்குத் தகுந்ததைப்போல் வெவ்வேருக வீடுகள் கட்டிக் கொள்ளச்சிரத்தையுடன் பாடுபட்டார். அம்முகாந்திரத்தினுல் தான், புதுச்சேரியில், பிராமணர், வேளாளர், செட்டிகள், கோமுட்டிகள், செங்குந்தர், வன்னியர், வண்ணூர் வீதிகள் இன்றையவரையில் காணப்படுகின்றன.

இப்படியாக, வியாபாரம், பெரிய தோரணையில் நடந்து வரும்பொழுது, திருடர்கள் பயமும், தேசப் பாதுகாப்புக் குறைவினுல் ஏற்பட்டது. அக்காலத்தில் புதுச்சேரி செஞ்சி சுபாப் திமாஜீ கிஷோஹரா என்பவரின் ஆளுகைக்குட்பட்

டிருந்தது. பிரான்சுவா மர்த்தேன் தமது சிப்பந்திகளாகிற, ஹெர்மேன், வித்தூலா அப்பாஜி என்கிற பிராமணரையும் அவரிடம் அனுப்பி, பிராஞ்சு வியாபாரிகளின் வீடுகளையும், சங்கத்தின் கிடங்குகளையும் சுற்றி ஒரு கோட்டை கட்டுவதற்கு உத்தரவு கேட்டார். அந்த உத்தரவும், திஸா ஞூ (1688) ஜமானீள் அல்லா மீ முத்திரையிட்ட பரமனுமூலம் கிடைக்கப்பெற்றது.

கோட்டை துரிதமாய்க் கட்டி முடிக்கப்பட்டது. அந்தக் கோட்டைக்குத் தென்புறத்தில், தற்போது சிமோனேல் என்பவர் வீடு கட்டியிருக்கும் இடத்தில், அர்ச்சியசிஷ்ட லாஜருக்கு, தானப்பமுதலியார், முதல் முதலாக புதுச்சேரியில் கிருஸ்த்தவ கோவில் கட்டுவித்து, அதில் தெய்வ ஆராதனை சடங்குகள், பூசைகள் செய்ய கப்புய்சேன் சபை பாதிரிமார்களிடம் ஒப்புவித்தார்.

கோட்டைக்கு மேற்புறத்தில் புதிதாய்க் குடியேறினவர்கள் வீடுகள், திருடர்களின் அட்டகாசங்களுக்கு உட்பட்டேயிருந்துவந்தன. அதற்காக, பிரான்சுவா மர்த்தேன், அப்போது செஞ்சியில் இராச்சிய பர்ரமாண்டுவந்த, ராம்ராஜாவிடம் ஹெர்மேனையும், வித்தூலா அப்பாஜி பிராமணரையுமனுப்பி, தற்காப்பு ஏற்பாடுகளைச் செய்யும்படி கேட்டுக்கொண்டார்.

அந்த வேண்டுகோளுக்கிணங்கி செஞ்சி இராஜ்யத்தை ஆண்டுவந்த ஹர்ஜி ராஜனுக்குப் பிறகு, சிம்மாசனமேறிய, ராம்ராஜாவும். புதுச்சேரியில் புதிதாய்க் குடியேறிய சுதேசி வர்த்தகர்களையும், தமிழ் மக்களையும் காபந்துசெய்ய தம் சிப்பந்திகளுக்கு உத்தரவு இட்டதுமல்லாமல், தனியாய் பாதுகாப்புக்கென்று ஒரு அவல்தாரரையும் அனுப்பினார், (1790 ஆ ஜூன் மீ 7 உ பரமனு)

பிரமாதி ஞூ (1691) சித்திரை மீ 21 உ தானப்பமுதலியார் மரணமடைந்தார், அவர் அலுவலில் அவர் குமர்ரன் முத்தியப்பமுதலியார், சங்கத்தின் தரகராக, பிரான்சுவா மர்த்தேனால் நியமிக்கப்பட்டார்.

சீர்திருத்தம் பெற்றவர்களென்றும், நாகரீகமானவர்களென்றும் தங்களைப் பாராட்டிக்கொள்ளும் ஐரோப்பியர்களிடத்தில், பொறுமையென்பது செழித்தோங்குகிறது புதுச்சேரியில், தங்கள் வியாபாரத்தில் பெருத்த லாபமடைகிறார்க

மென்று கண்ட ஹொல்லாந்துக்காரர்கள், தங்கள் ஜென்ம தேசத்திற்குக் காகிதமெழுதி. ஒரு பெரிய கடற்படையை வரவழைத்தார்கள்.

அந்தக் கடற்படை புதுச்சேரியை 1693ம் ஆ ஊத் மீ 23 உ முற்றுகையிட்டது. செப்தம்பர் மீ 3, 4, 5, 6, தேதிகளின் பலத்த சண்டைக்குப் பிறகு பிராஞ்சுக்காரர் சரணடைந்தனர் கோட்டையையும், அதற்குள் அடங்கிய வீடுகள் கிடங்குகளை தரைமட்டமாய் இடித்து, பிரான்சுவா மர்த்தேனையும் அவர் சிப்பந்திகளையும், சண்டைக் கைதிகளாக. ஹொல்லாந்துக்காரர், பத்தாவியாவுக்கு அழைத்துப் போனார்கள்.

1697-ம் ஆண்டில், ரிஸ்வீக் என்னும் நகரில் பிராஞ்சுக்காரருக்கும் ஹொல்லாந்துக்காரருக்கும் ஏற்பட்ட சமாதான உடன்படிக்கைப்படி புதுச்சேரி பிராஞ்சுக்காரருக்குத் திரும்பிக்கொடுக்கப்பட்டது. 1699-ம் ஆ செப்தம்பர் மீ 17 உ பிரான்சுவா மர்த்தேனும் அவர் சிப்பந்திகளும் புதுச்சேரிக்குத் திரும்பிவந்தார்கள். எவ்வளவு சீக்கிரமாய், புதுச்சேரியில் கோட்டை கட்டப்பட்டது. எவ்வளவு துரிதமாய் வியாபாரம் உன்னத நிலையை அடைந்தது என்பவையெல்லாம் சரித்திர பூர்வமான நிகழ்ச்சிகள்.

பிரான்சுவா மர்த்தேன் 1706-ம் ஆ தெசம்பர் மீ 31 உ புதுச்சேரியில் தேகவியோகமானார்.

அவருக்குப் பதிலாக, புதுச்சேரியைப் பராமரிக்கவும் வியாபாரத்தை மும்முரமாயும், நல்லபலன் தரும் வகையாய் தொடர்ந்து நடத்தவும் கியோம் ஆந்த்ரே எபேரை (Guillaume André Hébert) பிராஞ்சு அரசர், 14-வது லூய் நியமித்து அனுப்பினார்.

அந்த மனிதன் ஒரே முழுக்கில் கூடை மண் வாரவேண்டுமென்கிற எண்ணமுடையவர். எவ்வளவு சுருங்கின கால அளவில். திரண்ட ஆஸ்தியைச் சம்பாதிக்க முடியுமோ, அவ்வளவையும் சம்பாதிக்கிற எண்ணத்துடன் புதுச்சேரிக்கு வந்தார்.

இவர் பிராஞ்சுதேசத்து அரசரிடத்தில் செல்வாக்குடையவர். ஏனென்றால் அரசருக்கு ஆலோசனை கொடுப்பவர்களில் ஒருவர் கிழக்கிந்தியா பிராஞ்சுக்கூட்டுறவுச் சங்கத்தின் மேல் பார்வையாளர்களான ஐவரில் ஒருவர், அப்பேன் பட்டணத்து மேற்றிராணியாரின் சகோதரர்.

எபேர் புதுச்சேரிக்கு வந்த சில மாதங்களில், சங்கத்தரகர் ஐரோப்பிய வர்த்தகர்களுக்கும் உள்நாட்டு வியாபாரிகளுக்கு

மிடையே, விற்பவை கொள்பவை பொருத்துவோர் ஆனபடி யாலும், மொழிபெயர்ப்பதற்கும் உடன்படிக்கைகளைத் தயாரிப்பதற்கும் அவசரம் வேண்டியவராயிருந்தமையால் முக்யஸ்தராயிருந்ததையும், ஆனல் முத்தியப்பமுதலியார், முற்றிலும் தம் வசமுள்ளவராய் இல்லாமலிருந்ததையும் தெரிந்துகொண்டார்.

ஒரு நாள் ஐம்பது பேழைகளிலடங்கிய பவழங்களை, மணங்கு ஒன்றுக்கு, 120 வராகன் விழுக்காடு விற்றுக்கொடுக்கும்படி எபேர், முத்தியப்பமுதலியாருக்கு ஆக்கியாபித்தார், தரகர், உள்ளூர் வெளிநாட்டு வியாபாரிகளை வரவழைத்து, பவழங்களைக்காட்டியபோது, அவர்கள் பரிசோதனை செய்து, சரக்குகள் முதல்ரகத்தைச் சேர்ந்தவைகளல்ல வென்று மதித்து, மணங்கு 106 வராகனுக்குக்குமேல் பொருந்தாது என்று சொல்லி விட்டார்கள். எபேர் 110 வராகனுக்குக் குறைவாகக் கொடுக்க முடியாதென்ருர்.

முத்தியப்பமுதலியார் வியாபாரிகளைக் கட்டாயப்படுத்தி ஏற்றுக் கொள்ளச்செய்தார். வெளியில் புறப்பட்டவர்கள், ஒருவர்க்கொருவர் சண்டையிட்டுக்கொண்டு, தங்கள் தங்களிருப்பிடம் சேர்ந்தார்கள்.

இந்தச் செய்தியை அறிந்த எபேர், கோபங்கொண்டு முத்தியப்பமுதலியாரை நீக்கி, தரகராய், தமது விசுவாசமுள்ள நைநியப்பிள்ளையை நியமித்தார். 1708 ம் ஆ. தெசம்பர் மீ 18உ புதுச்சேரி, மேல் ஆலோசனைக் கூட்டத்தார், விவாதித்த பிறகு செய்த முடிவுகளின் தொகுதி 1-ம் புத்தகம் 66-ம் பக்கம் பார்க்கவும்

நைநியப்பிள்ளை வியாபாரிகளைக் கூட்டிக்கேட்டபோதும் அவர்கள் மணங்கு, 106 வராகனுக்குமேல் தங்களுக்கு வேண்டியதில்லை யென்று சொல்லிவிடவே அவர்களை எபேர் வீட்டுக்கு அழைத்துப்போய், தந்திரமாய் 108 வராகனுக்கு முடிவு செய்தார்.

முத்தியப்பமுதலியார் தரகுவேலையிலிருந்து நீக்கப்பட்ட தகவல் பாரீசு நகருக்குத் தாமதித்தேவந்தாலும் அரசருக்கும் கிழக்கிந்தியா பிராஞ்சுக் கூட்டுறவுச் சங்கத்தாருக்கும் முதலில் வியப்பைக்கொடுத்து, பிறகு அவர்கள் கோபத்தையும் மூட்டிவிட்டது.

அரசர் தமது ஆலோசனைச் சங்கத்தைக்கூட்டி, எபேரை, உடனே பிராஞ்சு தேசத்துக்கு வரவழைத்துக்கொள்ள வேண்டுமென்றும் அவருக்குப்பதில், பியேர் துய்லிவியேயை (Pierre Dulivier) புதுச்சேரி முதல் அதிகாரியாக நியமித்து அனுப்பவேண்டுமென்றும் புதுச்சேரி கூட்டுறவுச் சங்கத்தின் தரகர் கிருஸ்துவராயிருக்கவேண்டு மென்றும் தீர்மானித்தார். 1711 ஆ பெவ்ரியே மீ 14 உ

பியேர் துய்லிவியே புதுச்சேரிக்கு, ராஜ கட்டளையை எப்படி நிறைவேற்றுவதென்று மேல் ஆலோசனைச் சபையை ஆலோசித்து எடுத்துக்கொண்ட தீர்மானம் பின்வருமாறு:

"நைநியப்பிள்ளை தரகராய் நியமிக்கப்பட்ட காலமுதல், பிராஞ்சுக்காரருடைய தரணி என்கிற மேரையில், மொகாலியரிடத்திலும் இந்தியா மற்றப் பிரஜைகளிடத்திலும் செல்வாக்கு பெற்றுவிட்டார். இந்த உண்மையை அனேக சந்தர்ப்பங்களிலும், சில நாட்களுக்கு முன் நடந்த சம்பவத்தாலும் அறிந்துகொண்டோம். நபாப் புதுச்சேரி மேல் அதிகாரிக்கு எழுதிய கடிதத்தில், பிராஞ்சுக்காரருக்குச் சுதேச மன்னர்களால், இந்தியாவில் கொடுக்கப்பட்ட சகல இடங்களையும், கிராமங்களையும், திருப்பிக்கொடுத்துவிடவேண்டுமென்றும், அவற்றின் வரும்படிக்காக 8000 ஷக்கார் கொடுக்கவேண்டுமென்று தாக்கீது அனுப்பினார். கிராமங்களை வசப்படுத்திக்கொள்ளவும், பணத்தை வசூலிக்கவும் குதிரை வீரர்களை அனுப்பிவைத்தார். சமாதானம் செய்யும்படி அனுப்பப்பட்ட நைநியப்பிள்ளை, ஒரு காசுகூட செலவில்லாமல் குதிரை வீரர்களைத் திரும்பிப் போகும்படி செய்தார். அவர் தரகராய் அமர்ந்தது முதல், மொகாலியர்களால் ஏற்பட்ட சகல சங்கடங்களிலிருந்து, புதுச்சேரியை நிவர்த்தி செய்திருக்கிறார்."

"பிராஞ்சு சங்கத்தின், உள் விஷயங்களையும் வெளி விஷயங்களையும் நன்கறிந்தவரானபடியால், அவர் வேலையைப் பிடுங்கிவிட்டால், உடனே மொகாலியர் ஆளும் பிராந்தியத்தில் குடியேறி, தலைமறைவாய் உள்ளுக்குள், பழிவாங்கும் சிந்தனையுடன், மொகாலியர்களைத் தூண்டிவிட்டு புதுச்சேரியின் நாசத்தைத் தேடிவிடுவார்.

"இதுவுமன்னியில், கிராமங்களின் குத்தகைக்காரர்களுக்கும், புகையிலை வெற்றிலை காசுக்கடை குத்தகைக்

காரர்களுக்கும், அவரே புண்ணியானபடியால் மொகாலி யர் செய்யப்போகும் முதல் அசைவுக்கே, குத்தகைக் காரர்களும் பெரிய சுதேசி வியாபாரிகளும் ஓடிவிடுவார் கள். கூட்டுறவுச் சங்கத்திற்குப் பெருத்த நஷ்டம் உண் டாகும். சோழமண்டலக்கரையில், அவரை ஒத்த சாமார்த்தியசாலி வேறு ஒருவருமில்லையென்கிற கியாதி யையும் பெற்றிருக்கிறார்.''

"ஐரோப்பிய ஜனங்களுக்குச் சுதேச மன்னர்களால் கொடுக்கப்பட்டிருக்கும், சகல இடங்களையும், கிராமங் களையும் பிடுங்கிவிடவேண்டும் என்கிற கெட்ட எண்ணத் தைக் கொண்டிருக்கும் மொகாலியர்களிடத்தில் சமா தானஞ் செய்ய கிரிஸ்துவர்களில் தற்சமயம் ஒருவரு மில்லை. சவரிமுதலியார் ஒருவரே, கிரிஸ்துவர்களுக்குள், ஐரோப்பியரிடத்தில் உண்மையான விசுவாசி, அன்புள்ள வர். அவருடைய நேர்மையில் தடையின்றி நாம் நம்பிக்கை வைக்கலாம். நைநியப்பிள்ளையோடு அவர் வேலை செய்தால் கொஞ்சத்துக்குள். சகல விஷயங்களை யும் அறிந்துகொண்டு, பிரஜைகளின் நம்பிக்கைக்குப் பாத்திரவானுகலாம். அப்போது தனியாய் தரகுவேலை யைத் திறமையாய்ச் செய்வார் கிருஸ்துவர்களுக்கு ஆதரவு அளித்து, அவர்களை வியாபாரத் துறையில் ஈடுபடுத்துவார்.''

''ஆனதைமுன்னிட்டு, நைநியப்பிள்ளையையும் சவரி முதலியாரையும் சங்கத்தரகர்களாக நியமிக்கிறோம். தங்களுக்குள், முதலவர் இரண்டாமவர் என்கிற வித்தி யாசமில்லாமல், அன்னியோன்னியமாய் சகல சுதந்தரத் துடனும் அதிகாரத்துடனும் அவர்கள் தரகு வேலையைக் கவனிக்கவேண்டியது. 1714 ஆ மார்ச்சு 9 உ மேல் ஆலோசனைச்சபை விவாதத்திற்குப்பின் எடுத்துக் கொண்ட முடிவுகளின் தொகுதி, 1வது புஸ்தம், பக்கம் 139.''

சவரிமுதலியார், முத்தியப்பமுதலியாரின் மருகர்.

எபேர் பரிசுநகர் திருப்பியது முதல் விண்காலம் போக்க வில்லை. மந்திரிகளையும், இராஜவம்சத்தையும், கிழக்கிந்திய பிராஞ்சுக் கூட்டுறவுச் சங்கத்தின் நிர்வாகிகளையும், அடிக்கடி சந்தித்து, தான் மாசற்றவரென்றும், தன்பேரில் கொண்டு வரப்பட்ட குற்றச்சாட்டுகள் ஆதாரமற்றவையென்றும் ஓல மிட்டார்.

அவர் தொந்தரவுகளைச் சகிக்கமுடியாமல் அரசர், அவருக்குப் பிரஜையின் சேனுபதியென்கிற புதுப்பட்டத்தைக் கொடுத்து, அவர் மகனைப் புதுச்சேரி மேல் ஆலோசனைக் கூட்டத்து அங்கத்தினராக நியமித்து, இருவரையும் புதுச்சேரிக்குத் திருப்ப அனுப்பிவைத்தார்.

புதுச்சேரிக்கு வந்த சில மாதங்கள் கழித்து, எபேர் மகன் நைநியப்பிள்ளையை வரவழைத்து, என் தகப்பனுர் உமக்குக் கொடுத்த தரகு வேலையில் 40,000 வராகன் சம்பாதித்திருக்கிறீர். அதில் 10,000 வராகன்களை என் தகப்பனுருக்குக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். நைநியப்பிள்ளை அதற்குச் சம்மதிக்காமற்போகவே, 5000த்திற்கு இறங்கி, கடைசியாக 3000க்கு வந்தார். அந்தத் தொகையைக் கொடுக்கவும், நைநியப்பிள்ளை மறுத்துவிட்டார். அதிலிருந்து எபேரின் பகை மூண்டது

அரசியல் மேல் ஸ்தானங்களை வகிக்கும் பிரமுகர்களிடம் குற்றம் குறைகள் காணப்படுவது இயற்கையே. முன்பு சிநேகிதர்களாயிருந்து, பின்பு மனக்கசப்புள்ளவர்களாய் மாறி கட்சியில் பகைவர்களாவதையும் நாம் பார்க்கிறோம் நைநியப்பிள்ளைக்கும் புதுச்சேரியில் பகைவர்களிருந்தார்கள். அவர்களுடைய லஞ்சங் கொடுத்ததாகச் சொன்ன பிராதுகளைச் சேர்த்து, நைநியப்பிள்ளை பேரில் லஞ்சங்கள் வாங்கின குற்றத்தைச் சுமத்தி சிறையில் வைத்தார்.

1715 ஆ. ஜுன் மீ 5வ. கடைசியில், 50 சவுக்கடிகள் தோளில் பெறவேண்டுமென்றும், மூன்று வருஷம் சிறைத்தண்டனை அனுபவிக்கவேண்டுமென்றும், 8888 வராகன்களைக் கூட்டுறவுச் சங்கத்திற்கு மான நஷ்டம் கொடுக்கவேண்டுமென்றும், 4000 வராகன் அபராதம் கட்டவேண்டுமென்றும், மூன்று வருடம் சிறைத்தண்டனையை அனுபவித்த பிறகு, பிராஞ்சு எல்லையிலிருந்து வெளியேற்றப்பட வேண்டுமென்றும், ஷெ தொகைகளைச் செலுத்தத் தவறினுல், மூன்று வருஷ சிறைவாசத்துக்குப் பிறகு, மோரீஸ் தீவுக்கு அடிமையாய் அனுப்பப்படவேண்டுமென்றும், நைநியப்பிள்ளை தீர்மானிக்கப்பட்டார்.

நைநியப்பிள்ளைக்குப் பதிலாக, முத்தியப்பமுதலியார் குமாரர் கனகராயமுதலியார், தரகராய் ஏற்படுத்தப்பட்டார். (1716 ஆ. மே மீ 2 வ. மேல் ஆலோசனைச் சபை விவாதித்த பின் எடுத்த முடிவுகளின் தொகுதி, புத்தகம் 1. பக்கம் 177.)

1717 ஆ ஊத் மீ 8 உ நைநியப்பிள்ளை, சிறையிலேயே இறந்துவிட்டார். அவருக்கு: குருவப்பா, மூத்தப்பா, வேங்கடாசலமென்ற மூன்று குமாரர்களிருந்தார்கள். இவர்களில் மூதலவர் குருவப்பா, தம் தகப்பனார் மாசற்றவரென்றும், அநியாயமாய்த்தண்டிக்கப்பட்டாரென்றும், அவருக்கு விரோதமாய் வாக்கு மூலம் கொடுத்த சாட்சிக்காரர்களெல்லாம், பலவந்தத்தாலும், பயத்தினாலும் அப்படிச் செய்தார்களென்றும், ஆகையால் நைநியப்பிள்ளை வழக்கை மறுவிசாரணை செய்ய வேண்டுமென்றும், பிரான்சு தேசத்தின் அரசருக்கு விண்ணப்பம் செய்துகொண்டார். அரசர் ஆலோசனைச் சபை முன்பாக, அந்த விண்ணப்பத்தை ஊர்ஜிதம் செய்யத்தக்க ஒரு நியாயவாதியை தெரிந்தெடுத்துக்கொள்ளும்பொருட்டு, பரீஸ் நகரத்திற்குத் தாமே சென்றார்.

அக்காலத்தில், 14-வது லூயி அரசர் இறந்து, அவருக்குப் பதில் அவர் பௌத்திரனின் குமாரர், 15-வது லூயி சிம்மாசனமேறியிருந்தார். 6 வயதுள்ளவராய் அரசர் இருந்தபடியால், அவரைக் காபந்து செய்யவும் இராச்சியத்தைப் பரிபாலிக்கவும் இறந்த அரசரின் சகோதரர் குமாரர் துய்க் தொர்லெயான் ஏற்பட்டார். தமது பெரிய தகப்பனார் செய்ததெல்லாம், அவிவேகமானதும், அநீதியுமானதென்ற கொள்கை துய்க் தொர்லெயானுக்கு. அரசியல் அமைப்பை உடைத்தெறிந்து மக்களுக்குச் சுதந்தர உரிமையையும் சம தத்துவத்தையும் கொடுத்து, சமூகத்தைச் சீர்திருத்த வேண்டுமென்கிற ஆசையுடையவர்.

பிராஞ்சு அரசரின் ஆலோசனைச் சங்கத்தார்:

1718 ஆ பெவ்ரியே மீ 8 உ செய்த முதல் தீர்மானத்தால், புதுச்சேரியில் விசேஷ அலுவல்காரர்களை நியமித்து, நைநியப்பிள்ளை வழக்கில் வாக்கு மூலங்கொடுத்த சாட்சிக்காரர்களை மறு விசாரணை செய்யும்படி உத்தரவிட்டனர்.

மறு விசாரணையின்போது, சேகரித்த வாக்கு மூலங்களடங்கிய தஸ்தாவேசுகளைப் பார்வையிட்டு, 1720 ஆ செப்தம்பர் 10 உ யில் செய்த முடிவான தீர்மானப்படி நைநியப்பிள்ளையைத் தண்டித்த தீர்மானத்தை விழலாக்கி, அவர் ஞாபகத்தை முன்னிருந்த ஸ்திதியில் நிலைநாட்டினார்கள்

நைநியப்பிள்ளை சொத்துகளை ஏலம் போட்டுக் கிடைத்த 10.060 வராகன்களையும் அவற்றை தம் பொக்கிஷத்தில் சேர்த்துக்கொண்ட நாள் முதல், நூற்றுக்குப் பத்து வீதம் கூடிய வட்டியையும், கிழக்கிந்தியா பிராஞ்சுக் கூட்டுறவுச் சங்கத்

தார் நைனியப்பிள்ளை குமாரர்களுக்குக் கொடுக்கும்படியும், எபேர், அவர்களுக்கு மானநஷ்டமாய் 20,000 லீவர் (Livres) கொடுக்கும்படிக்கும் தீர்மானித்தார்கள்.

குருவப்பா கிரிஸ்து மதத்தைத் தழுவிக்கொண்டார். பிராஞ்சிந்தியாவின் ஒரு சுதேசி, கனவில் எந்தெந்த சம்பத்துகளைக் காணமுடியுமோ, அவைகளை நனவில் அடைந்தார். தற்கால அரசர் துய்க் தொர்லெயான் அவருக்கு ஞானத் தந்தையாகவும் இளம்பிராயமுள்ள அரசர் தாயார், ஞானத் தாயாகவும் ஏற்பட்டார்கள்.

அர்ச். மிக்கேல் சபையின் குதிரைவீரர் பட்டத்தைப்பெற்றூர். பிராஞ்சுப் பிரசையாக்கப்பட்டார்.

கிழக்கிந்தியா, புது பிராஞ்சுக் கூட்டுறவுச் சங்கம் அவரை, புதுச்சேரி தரகராய் நியமித்தது. தபலியோம் வேலையை (Registrar) அவரும், அவர் சகோதரர்களும், வாரிசுகளும் தலைமுறை தலைமுறையாய் சாசுவதமாய்ச் செய்துவரும்படி தீர்மானித்தது. (கூட்டுறவுச் சங்கம் புதுச்சேரி மேல் ஆலோசனைக் கூட்டத்திற்கு எழுதிய கடிதம்.— மேல் ஆலோசனைக் கூட்டத்தார் விவாதத்திற்கு எடுத்த முடிவுகளின் தொகுதி.—புத்தகம் பக்கம் 341.)

ஆயுள் பாகத்தில் அவருக்கு அதிர்ஷ்டம் இருந்ததாகச் சொல்லமுடியாது. அவர் இறந்த தேதி தெரியவில்லை. மொகலாய ராணுவத்தார், அடிக்கடி புதுச்சேரிக்குவந்து, சுதேசிகள் வீடுகளில் கொள்ளையடிப்பதுண்டு அவற்றைத் தடுக்க, மேல் ஆலோசனைச் சபையார் புதுச்சேரி சுற்றிலும் ஒரு சுவர் கட்ட நினைத்தார்கள். அவர்களிடம் பணமில்லை. பொது ஜனங்களிடம் ஒரு சிறு வரியை வசூலிக்க நினைத்தார்கள். 1724 ம் வருஷம் ஜூன் மாதம் 4 ந்தேதி எல்லா ஜாதி நாட்டாண்மைக்காரரையும் கூட்டி அந்தத் தீர்வைக்குச் சம்மதிக்கும்படி குருவப்பா செய்தார். அவர் 1725 ம் வருஷம் முதல் மூன்று மாதங்களில் இறந்துபோயிருக்கவேண்டும் ஏனென்றால், அவருக்குப் பிறகு, மறுமுறை கனகராயமுதலியார் தரகராக நியமிக்கப்பட்டார். அந்த நியமனத்தைக் குறைகூறி, குருவப்பா குடும்பத்தார், பரீஸ் கூட்டுறவுச் சங்கத்தின் நிர்வாகிகளுக்கு ஒரு ஆட்சேப மனு அனுப்பினார்கள். அதற்கிணங்க, அந்த நிர்வாகிகளும் 1725 ம் வருஷம் ஒக்தோபர் மாதம் 5 ந்தேதியில் புதுச்சேரி ஆலோசனை மேல் சபையாருக்கு எழுதிய கடிதத்தில் கனகராயமுதலியாரை நீக்கிவிடும்படி ஆக்கியாபித்தார்கள்.

அந்தக் கடிதம் மேல் ஆலோசனைச் சபையாருக்கு, 1726 ம் வருஷம் ஜூலாய் மாதம் 10 ந்தேதி கிடைத்தது. மறுநாளே அந்தச் சபையார் கூடி செய்த முடிவு பின்வருமாறு:

"தரகு வேலைபார்க்க எல்லா குணங்களையுமுடைய வர் கனகராயமுதலியாரைவிட வேறு யாருமில்லை. இந்தச் சபை அவரிடம் பூரண சந்துஷ்டி யடைந்திருக்கிறது. யோக்கியர் மட்டுமல்ல, விவேகி, பிரமாணிக்கமுள்ளவர், அனுபோகஸ்தர், வியாபாரத்தில் தேர்ச்சியடைந்தவர், வியாபாரிகளிடம் செல்வாக்குடையவர், அவர் உத்தி யோகத்தை முயற்சியோடு செய்வதைத் தினமும் ருசுப் பித்துவருகிருர். கீழ்ப்படிதலுள்ளவர். சுதேசி ஜனங்கள் நடமாட்டத்தை அப்போதைக்கப்போது தெரிவிப்பவர். அந்த நடமாட்டத்தை யறிந்து தக்க ஏற்பாடுகள் செய் யாமற்போனால் ஆபத்துகள் நேரிடும். அவரை நீக்கிவிட் டால், துறையிலிருக்கும் நாலு கப்பல்களுக்குச் சரக்கு சேகரித்து ஏற்றுமதி செய்யமுடியாது." (மேல் ஆலோ சனைச் சங்கத்தார் விவரித்தபின் எடுத்த முடிவுகளின் தொகுதி. 2 வது புத்தகம் பக்கம் 704.)

1726, 1727 வருஷங்களில், வடகிழக்கு பருவ மழையின்மை யால் புதுச்சேரியில் 1728 ஆ. கொடிய பஞ்சம் ஏற்பட்டது. அந்த நிர்ப்பாக்கியமான நிலையைப் பிரயோஜனப்படுத்திக் கொண்டு, பொதுஜனத்தின்பேரில் விதித்திருந்த தீர்வையை விலக்கும்படி கனகராயமுதலியார் செய்தார் (மேல் ஆலோச னைச்சபை விவாதத்திற்குப் பின் செய்த முடிவுகளின் தொகுதி 2-ம் புத்தகம் பக்கம் 190.)

கிழக்கிந்தியா பிரஞ்சுக் கூட்டுறவுச் சங்கத்திற்கும், பிரான்சு வியாபாரிகளுக்கும் கனகராயமுதலியார் செய்த விசுவாசம் நிறைந்த தொண்டையும், முயற்சியையும், கிரியை யும் ஆனந்தரங்கப்பிள்ளை தினசரி வாயிலாகத் தெரிந்து கொள்ளலாம்.

*

சென்னைக்கடுத்த பிரம்பூரில், 1709 ஆ. மார்ச் மீ 30உ ஆனந்தரங்கப்பிள்ளை பிறந்தாரென்று அவருடைய சாதகக் குறிப்பைக்கொண்டு நம்பப்படுகிறது. பெரம்பூரில் அவர் தகப் பனுர் திருவேங்கடம்பிள்ளை, ஒரு சிறிய வியாபாரி. சொற்ப வருமானத்தைக்கொண்டு குடும்பத்தை நடத்திவந்தவர். மேனுட் டார் சொல்லுமாப்போல் அவர் சீவியம் வெளுப்படைந் திருந்தது, சோபிக்கவில்லை.

நைநியப்பிள்ளை தரகு வேலையை ஏற்றுக்கொண்ட சில மாதங்களுக்குப் பிறகு எபேர் கேட்டுக்கொண்டதின்பேரில், தமது மைத்துனர் திருவேங்கடம் பிள்ளையையும், சென்னையி லிருந்து சில வணிக முக்கியஸ்தர்களையும் புதுச்சேரிக்கு வர வழைத்தார். சங்கத்தின் வியாபாரத்தை விஸ்தாரப்படுத்தவும் தம் சொந்த வியாபாரத்தைச் சீர் திருத்தவும், அவர் எண்ணி

னபடி திருவேங்கடம்பிள்ளை, முயற்சியோடும் ஊக்கத்தோடும் காரியங்களைச் செய்தார்.

நைநியப்பிள்ளை சிறையில் வைக்கப்பட்டபோது, பயத்தினால் திருவேங்கடம்பிள்ளை சென்னைக்குப் போய்விட்டார். தரகு வேலையோடு, குருவப்பா புதுச்சேரிக்குத் திரும்பி வந்தபோது, திருவேங்கடம்பிள்ளையும் புதுச்சேரிக்குத் திரும்பி வந்தார். மைத்துனரிடம் எப்படி விசுவாசமாய் நடந்துகொண்டாரோ, அப்படியே தங்கை மகன் குருவப்பாவிடமும் விசுவாசமாய் நடந்துகொண்டார்.

குருவப்பா, அனேக மாதகாலம், பாரிஸில், அரசருடையவும், அரச வம்சத்தாருடையவும் விருந்தினராய் இருந்தபடியால், மது பிரியராக ஆய்விட்டார் புதுச்சேரிக்குத் திரும்பி வந்து அந்தத் துர்ப்பழக்கத்தை விட்டாரில்லை. தரகு வேலைபளு முழுதும் திருவேங்கடம்பிள்ளையின் பேரில் சுமத்தப்பட்டது.

குருவப்பிள்ளைக்குப் பிறகு, திருவேங்கடம்பிள்ளை ஒரு வருஷந்தான் ஜீவித்தார். பிராஞ்சுக் கூட்டுறவுச் சங்கத்தின் நிர்வாகிகளுக்கும், தரகு வேலையைப்பற்றி ஆட்சேப மனு எழுதினவரும் அவர்தான் என்று ஊகிக்க இடம் இருக்கிறது. ஆனந்தரங்கப்பிள்ளையும் தம் குறிப்பில் கனகராயமுதலியாரைப் பற்றிப் பேசும்போதெல்லாம், குரோத உணர்ச்சியை வெளிபடுத்துகிறார் அவர் பகை எவ்வளவு வேரூன்றியிருந்ததென்றால், கனகராயமுதலியார் சம்பாதித்த திரவியங்களை, அவர் மரணத்திற்குப் பிறகு சின்னாபின்னமாய்ப் போகும்படி செய்தார்

இங்குக் குறிப்பிடவேண்டிய விஷயமொன்று உண்டு. குருவப்பா பாரீஸ் நகரத்தில், சம்பாதித்த செல்வாக்கு முழுதும் ஆனந்தரங்கப்பிள்ளைக்கு உதவியாயிற்று.

திருவேங்கடம்பிள்ளை இறந்துபோனபோது, ஆனந்தரங்கப்பிள்ளைக்கு 17 வயது தான். இருந்தபோதிலும், அப்போது மேலதிகாரியாயிருந்த லெனுவார் அவரிடம் பட்சம் வைத்து கைதூக்கிவிட்டார். பரங்கிப்பேட்டையில், சங்கத்திற்காகவும் சில்லரை வியாபாரிகளுக்காகவும் ஒரு நெசவுச்சாலையையும் சாயந்துவைக்கிற கிடங்கையும் ஏற்படுத்தி, அவற்றிற்கு ஆனந்தரங்கப்பிள்ளையைத் தலைவராக்கினார். இதுவுமன்னியில் சிலருக்கு லாஸ்பேட்டையிலும் ஆர்க்காட்டிலும் 20 வியாபார ஸ்தலங்கள் ஏற்பட்டிருந்தன.

மற்ற விஷயங்களை, ஆனந்தரங்கப்பிள்ளையின் தினசரியிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

ஆனந்தரங்கப்பிள்ளை தினசரி, சிறு கதைகள் கொத்து அல்ல. சரித்திர நூலுமல்ல. அன்றுடம் பார்த்ததையும், கேட்டதையும் குறைக்காமலும், மிகை படுத்தாமலும், கற்பனு சக்தியை உபயோகிக்காமல், உள்ளதை உள்ளபடி அவர் அதில் குறிப்பிட்டிருக்கிறூர். ஆசிரியர் தம் குடும்பத்தின் சுக துக்க நிகழ்சிகள் முதற்கொண்டு, ஐரோப்பாவிலும், இந்தியாவிலும் நடந்த சம்பவங்களையும் சண்டைகளையும், வியாபார விஷயங்களையும். கப்பல் போக்குவருத்துகளையும் நம் முன்னோர் பழக்க வழக்கங்களையும், நடவடிக்கைகளையும், சாதிமத பூசல்களையும் அரசியல் விஷயமாய் தாம் டூப்ளேக்குக் கொடுத்த ஆலோசனைகளையும், புதுச்சேரி உத்தியோகஸ்தர்களுடைய குணுதிசயங்களையும் ஒன்றையும் விடாமல் கலப்பாக யாவற்றையும் சித்திரித்திருக்கிறூர். இதனுல் அவர் தமது தினசரி குறிப்புகளைப் பயிரங்கப்படுத்த நினைத்தேயில்லை என்பது தெளிவு.

முதல் அதிகாரி முதற்கொண்டு கடைசி சிப்பந்தி வரையில் எல்லோரிடத்திலும் சம அன்பைக் காட்டி வந்தவர் ஆகையால் யாவரும் அவரிடம் பதிலுக்கு முழு நம்பிக்கை வைத்து தங்களுக்குத் தெரிந்ததை ஒளியாமல் அவரிடம் சொல்லி வந்தார்கள். இதனுல் அன்றே, அரசியல் ரகசியங்கள் முதற்கொண்டு தனிப்பட்டவர்கள் குடும்ப விஷயங்கள் வரையில் யாவற்றையும் அறிந்து, ஒரு தீர்மானத்துக்கு வர அவரால் முடிந்தது.

ஆனந்தரங்கப்பிள்ளையின் தினசரியைப்பற்றி பாலபாரதியில் வ. வெ. ஸுப்ரமண்யஐயர் எழுதிய அபிப்பிராயம் பின்வருமாறு;

"இந்த நூல் மிகவும் அபூர்வமான நூலாகும். நமது தேச சரித்திரத்தின் மிகவும் இருளடைந்திருக்கிற ஒரு பாகத்தை இது நன்கு துலக்கித்தருகிறது. நம் நாட்டு அரசர்களின் பலஹீனத்தையும், பொச்சாப்பையையும் சிறுமையையும், ஜனங்களின் தேசபக்தியின்மையையும் துரோக சிந்தையையும் கண்டு, ஆதியில் வியாபாரம் செய்து பொருளீட்டவேண்டும் என்பதைத் தவிர வேறு நோக்கமில்லாத ஐரோப்பியர் மேற்குறித்த காரணங்கள் பற்றி இந்நாட்டை வென்று அதைத் தங்கள் அதிகாரத்துக்குள் கொண்டுவந்து விடலாகும் என நினைத்து அவ்வெண்ணங்களை நிறைவேற்றுவதற்காகத் தந்திரங்கள் செய்து அரசர்களுக்குள் கலகங்களை உண்டாக்கியும், வெளிப்படையாகவும் மறைவாகவும் நம் தொழில்களை அழித்தும், பொருள்களைக் கொள்ளையிட்டும் வந்த காலத்தில் கூரிய அறிவும், லௌகீக ஞானமும், இந்த மோசநாசகம்பளி வேஷத்துக்கெல்லாம் சூத்திர கயிறு

களைக் கையில் பிடித்தவரிற் பிரமுகர்களான், பிரஞ்சு ராஜதந்திரிகளோடு நெருங்கிப் பழகும் வசதியும் பெற்றுள்ள ஆனந்தரங்கப்பிள்ளை என்பார். அப்போதைக்கப்போது சவகாசம் ஏற்படுத்திக்கொண்டுதான் நேரில் கண்டும், கேட்டும் உள்ள விஷயங்களைச் சித்திரகுப்தனைப்போல ஒன்று விடாமல் குறித்துவைத்த புஸ்தகமே இப்பிரஸ்தாப தினசரியாகும்''

''தினசரியைச் சித்திரகுப்தனது கணக்குக்கு ஒப்பிட்டோம் அந்தப் பயங்கரமான கணக்கில் நாம் முக்கியம் என்று நினைக்கும் விஷயங்கள் மிகவும் லேசாகவே பதியப்பட்டிருக்கலாம். நாம் அலக்ஷியமாகத் தள்ளிவிடும் காரியங்களும் எண்ணங்களும் வெகு விஸ்தாரமாக எழுதப்பட்டிருத்தல் கூடும். அதேமாதிரி ஆனந்தரங்கப்பிள்ளையும், பெரும்பாலார் பிரதானம் என்று கருதும் சம்பவங்களைப்பற்றிச் சில வேளைகளில் ஓரிரண்டு வார்த்தைகளே எழுதியிருக்கிறார். ஒன்றுமில்லாத விஷயம் என்று நினைக்கக்கூடியவற்றைப்பற்றி, விமரிசையாக எழுதிவைத்திருக்கிறார். அவர் எந்தக் கருத்துக்கொண்டு இவ்விதம் எழுதினார் என்று கண்டுபிடித்தல் நமக்குச் சாத்தியமில்லை. ஆனால், அவர் எழுதி வைத்திருக்கும் குறிப்புகளைப் படிக்கும்போது, அக்காலத்துத் தமிழ்நாட்டை நாம் சலனப்படக்காட்சியில் (ஸினிமாவில்) பார்ப்பது போன்ற உணர்ச்சி நமக்கு உண்டாகிறது. அத்தினசரியாகிய புகைப்படச்சுருள் அவிழ அவிழ எத்தனை விதமான உருவங்கள் தோன்றி மறைகின்றன! ஒவ்வொரு உருவமும் உயிரோடிருப்பதுபோலத் தோன்றுகிறது! ஊசியால் குத்தினால் அவ்வுருவங்களினின்று ரத்தம் வருமென்று நமக்குத் தோன்றும். 'கிசு கிசு'' மூட்டினால், சிரித்துவிடுவார்கள் என்று நினைப்போம். அவ்வளவுக்கு அவை உயிருள்ள மனிதன் என்கிற உணர்ச்சி நமக்கு உண்டாகிறது.

... ... ... ... ... ... ... ...

''இத்தினசரியின் வாசகத்தைப்பற்றி'' ஓரிரண்டு வார்த்தைகள் சொல்லுவது முறையாகும். அது செந்தமிழ் நடையில் எழுதப்படவில்லை. அதில் எழுத்துப் பிழைகள் மலிந்துகிடக்கின்றன. அநேக படியாத குமஸ்தாக்களைக்கொண்டு எழுதுவித்தது. இந்த எழுத்துப் பிழைகளுக்கும், கருந்தமிழ் நடைக்கும், ஒரு காரணமாயிருக்கலாம் தினசரி கருந்தமிழில் எழுதப்பட்டிருப்பதாலும், அதன் நடையில் ஓர் வன்மையும் ஓட்டமும் இருப்பதால், அதை நாம் செந்தமிழாக்காமல், அப்படியே அச்சிடு

வதற்கு, அறிவாளிகள் ஆக்ஷேபிக்க மாட்டார்களென நம்புகிறோம்'' (பால பாரதி 1ம் புத்தகம், 168-ம் பக்கம்.)

இத்தினசரி, புதுவை புத்தகசாலை மேல் விசாரணைக் கழகத்தார் முயற்சியால், பிராஞ்சிந்தியா பிரதிநிதி சபையாரின் செலவில் அச்சடிக்கப்பெற்றது. புதுவை உயர்நீதி சன்னிதானத்தின், தலைமை மொழிபெயர்ப்பாளர், ஸ்ரீமான் ரா. தேசிகம்பிள்ளை, அரும்பாடுப்பட்டு அச்சுப்பிழைகளைத் திருத்தஞ்செய்தார். ஆனந்தரங்கப்பிள்ளை வாழ்க்கைக் குறிப்பு எழுதியும் உதவினார் அவருக்கும், பிராஞ்சிந்தியா பிரதிநிதி சபையோருக்கும், பொதுமக்கள் வந்தனமும் நன்றியும் உரித்தாகுக.

ஞானு தியாகு.



# பொருளடக்கம்

[வாசகர்கள் விரும்பும் விஷயங்களைச் சுலபமாகத் தேடி அறிந்துகொள்ளும்பொருட்டு, தினசரியின் இம் முதல புத்தகம் 15 அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டது.]

## அத்தியாயம் I

நள ஸ்ரீ ஆவணி மீ 25 உ 6-9-1736 முதல் பிங்கள ஸ்ரீ ஆனி 7 உ 17-6-1737 இறுதியாக—பக்கம் 7—16

*துய்லோரான் சங்கத்தின் அங்கத்தினராக நியமனம்; துய்பெலியேவின் ஆட்சேபமும், ராஜிநாமாவும்.— தங்கசாலை ஏற்படுத்திக்கொள்ள உத்தரவுபெறுவதற்குச் செய்த செலவு.— சங்கத்திற்கு நெசவு பாக்கள் கொடுப்பதாகச் சுங்குவார் சேஷாசலசெட்டி ஒப்பந்தம் — பழயசங்கத்தின் வியாபாரிகள் ஒப்பந்தம்.-ஆனந்தரங்கப்பிள்ளை சட்டகர் மாதவராயப்பிள்ளை மரணம்.—தங்கசாலையில் வேலைபார்க்கப் பொட்டி பத்தன் நியமனம். அவனுக்கும் கனகராயமுதலிக்கும் உள் உடன் படிக்கை.— கனகராயமுதலிக்குப் பயிரங்க பங்கு--தங்கசாலையில் ரூபாய் அமைப்பதின் செலவு.— 'மோர்'' என்கிற கப்பலில் சரக்குகள் ஏற்ற ஆனந்தரங்கப்பிள்ளை பரங்கிப்பேட்டைக்குப் போனது. அந்தக்கபபல் துய்மா குவர்னருக்கும், இமாம் சாய்புக்கும் சொந்தம்.— கனகராயமுதலியாருக்கு நீரிழிவு வியாதி கண்டிருப்பதால் அவருக்கு மரணம் கிட்டியிருக்கிறது. அவர் அலுவலைப்பெற்றுக்கொள்ள ஆனந்தரங்கப்பிள்ளை முயற்சி.— மணிலாவுக்குப் பயணமான சங்காபுரி என்ற கப்பலில் திருட்டுத் தனமாகக்கட்டுகளை ஏற்றினதாகச்சொல்லிய பிராதுக்கு ஆசிரியர் சமாதானம். -பேனிக்ஸ் என்கிற கப்பல் ஏற்றிக்கொண்டு வந்த சரக்குகளின் விபரம்.--லெனுவார் குவர்னர், பரிசுக்குப் போய் எழுதின கடிதம்.—"மெலிப்போ" என்கிற கப்பல் பரீஸ் சங்கத்தின் கடிதத்தைக் கொண்டுவந்தது.— துய்லோரான். ஷலோசி: இவர்களைச் சங்கத்தின் அங்கத்தினர்களாகக் குவர்னர் நியமித்தார்.--"துய்க் தெ புர்போன்" என்கிற கப்பல் கொண்டுவந்த சாமான்கள்.— லெனுவார் கடுதாசிகள் வந்தன. அவர் தம் மைத்துனர்" துய்மெலியேவுக்கு எழுதின கடிதத்தில் எப்படி. துய்மா, லஞ்சங் கொடுத்து குவர்னர் ஆனார் என்பது விளக்கம்.*

## அத்தியாயம் II.

### பிங்கள ஹு ஆனி மூ 10 உ 20—6—1737 முதல் காளயுக்தி ஹு ஆனி மீ 1 உ 11—6—1738 வரை—பக்கம் 17—33.

ஷோவலேன் என்கிற கப்பல் வருகை—பெலிப்பேர் என்கிற கப்பல் புறப்பாடு.—' வெற்றியே'' பந்தருக்குத் தலைவனாக நியமனம்.—' மொக்கா''ஊரின்கோட்டையைத் தாக்கிப்பிடித்த வரலாறு "மொறப்பா" கப்பல் படைகளின் வீரச் செயல்கள்.—இரண்டாவது பெரிய அதிகாரியான "தெலோர்ம்" "லெனுவார், துய்மெலியே" இவர்கள் பிராஞ்சு தேசத்துக்குப் புறப்பட்டார்கள். – "தெலோர்மூக்கு" ஆசிரியருடைய புகழ் மாலை. "பெங்றியே", "பொர்ஷெ" இவர்களும் பிராஞ்சு தேசத்துக்குப் பயணமானார்கள். அவர்கள் போன காரணங்கள்.—"க்ளோத் விஸ்தெலு" மேற்றிராணியாரின் மரணம். சேசு சபையாருக்கும் அவருக்கும் உண்டான சச்சரவு.— இமாம் சாய்பு கடிதம். அதில் அடக்கமாயிருந்த உண்டிப் பத்திரம். இதை மாற்ற ஆலம்பறைக்கு ஆள் அனுப்புதல்.— குவர்னருக்குப் பிராஞ்சு தேசத்தினின்று கடிதம்.—' சிஞோர்'' சீனவுக்குப் பயணம். அவர் ஆசிரியருக்கு அனுகூலமாய்ப் பேசுபவர்.—"நோசெஞ்சோர் தேசஞூதி" என்கிற கப்பல் மணிலாவுக்குப் பயணம்; அதன் தமிழ் கப்பலோட்டி கனகராயமுதலி சகலன் அழகப்பன்.– சென்னை "கர்வாலோ," கப்பலோட்டி தெலா' வில்பாக், துய்புவா இவர்களிடமிருந்து தேவனாம்பட்டணம் குவர்னர் உபார்'' வழியாக வந்த கடிதங்கள்.— வழுதாவூர், தேவனாம்பட்டணம் குத்தகைதாரன் கோதண்டராமய்யர் குவர்னரைச் சந்தித்து சம்பாவனை பெற்றது.— மணிலா போய் திரும்பி வந்த "சங்கரபாரிக்"- கப்பல் ஓட்டுகிற தெலாவீல் பாகுக்கு, சரக்குகள்பேரில் கிடைக்கும் நிதி.— ஆசிரியர் குவர்னருடன், வராகன் மாற்று விஷயமாய்ச் சம்பாஷணை.– பிராஞ்சிலிருந்து "லெகோந்து தெ துலூஸ்" கப்பல் வருகை — அது கொண்டுவந்த கடிதங்களைபற்றி எலியாஸ் உடன் சம்பாஷணை.—சேன்மோசேப் கப்பல் வருகை.—அது கொண்டு வந்த லெனுவார் கடிதத்தை. "லொலேயேர்", ஆசிரியருக்குக் காண்பித்தது —சீனத்திற்குமிளகு ஏலக்காய் ஏற்றி செல்லும், "சேன் பெனுவா" கப்பல் வருகை.—பழைய சங்க வியாபாரிகளுடன், வியாபார உடன்படிக்கைப் புதுப்பிக்கப்பட்டது. அவர்களுக்குக் கொடுத்த வெகுமானங்கள், அவர்களை வழியனுப்ப புதுச் சடங்குகள்.-தங்கசாலையில் ரூபாய் அடிக்க, இமாம் சாய்புவினிடமிருந்து வெள்ளிக்கட்டிகள் வாங்கல்.— "சேன்மெழரோன்" கப்பல் வருகை. அது கொண்டுவந்த சங்

கத்துக் கடிதம், குவர்னர் துய்மாவுக்கு "சேன்மிஷேல்" சபை குதிரைவீரர் பதக்கம் இராசா அளித்ததையும், கனகராய முதலியாருக்கு, சங்கத்தார் கொடுதத பதக்கத்துச் சேதியும் அடங்கியுள்ளது — அந்தப் பதக்கத்தின் விசேஷம்.— ஒரு பிராஞ்சு சிப்பாய் சுட்டுக் கொல்லப்பட்டான்.

## அத்தியாயம் III.

காளயுக்தி ஸு ஆனி மீ 29 உ 9-7-1738 முதல் காளயுக்தி ஸு கார்த்திகை மீ 17 உ 29-11-1738 வரை—பக்கம் 34 – 56.

சந்தா சாய்பு, தன் வைத்தியர் வசமாய், குவர்னருக்கும் ஆலோசனை சங்கத்து அங்கத்தினர்களுக்கும் அனுப்பிய காணிக்கை. அதன் காரணம்.—பிராஞ்சிலிருந்து மசுக்கரை தீவுகள் மார்க்கமாய், "துய்ஷேச்" கப்பல் வருகை. அக்கப்பலோட்டி சொன்ன சேதி: லாபூர்தோனுக்கு "சேன் லூய்" பதக்கம் அளிக்கப்பட்டது, அவர் மனைவியும் பிள்ளையும் மரணமடைந்த சேதி.—காரைக்காலையும் அதைச்சார்ந்த ஐந்து கிராமங்களையும் வாங்குவதற்கு, தஞ்சாவூர் ராசாவுக்குக் காவடி அனுப்பப்பட்டது அவனுக்கு அனுபபிய வெகுமான்ங்களின் விபரம்.—காரைக்காலில் அரசியல் செய்ய "திருவா" என்பவரையும், சில உத்தியோகஸ்தர்களையும் அனுப்பினார்கள்.— உத்தியோகஸ்தர்களை ஏற்றிக்கொண்டு, சேன் ஜெரான் கப்பல் புறப்பாடு.—காவடி எடுத்துப்போனவர்கள் முந்த மந்திரி ரங்கோசீ பண்டிதரை கண்டுபேசினவிடத்தில் அவர் காரைக்காலை விற்க மறுத்துவிட்டார், காரைக்கால் வாசிகளுக்கு, பிராஞ்சுக்காரர் ஊரை வாங்கிய சேதியைக்கொண்டுபோனமலையப்ப முதலியாரையும் ஊரைவிட்டுத் துரத்திவிட்டார்கள்.— "துய்ப்ளே"வுக்குச் சொந்தமான 'பேனிக்ஸ்', கப்பல், மோக்காவிலிருந்து வந்தது அந்த விடத்தில் வியாபாரம் மந்தமாயிருந்தது -ஆனபடியால் செய்த ஒப்பந்தங்கள் விழலாய்ப் போனது- திருவதி பாலு செட்டி சந்தா சாய்பு பாளயத்தினின்று வருகை. குவர்னரோடு அந்தரங்க சம்பாஷணை. அவருக்குக் கொடுத்த வெகுமானம், அவர் மற்றவர்களுக்குச் செய்த வெகுமானம். அவர் குணங்கள் குற்றங்கள்.—காரைக்காலைப்பிடிக்க கடல் மார்க்கமாய்பட்டாளம் புறப்பாடு —போன காரியம் முடியாமல் திரும்பியது —தஞ்சாவூர் போனவர்கள் ஓட்டமாய் திரும்பியது.—மொக்காவிலிருந்து "லெ துய்க் தெ புர்போன்" கப்பல் நிறைய காப்பிக்கொட்டை ஏற்றிவந்தது.—சீர்மைக்குச் சரக்குகள் ஏற்ற, ஆசிரியர் பரங்கிபேட்டைக்குப் போனது— அச்சிகரைக்கு 'ல பே" என்கிற கப்பல் புறப்பாடு—அப்பொல்

லோன் என்கிற கப்பல், குவர்னருக்கு சேன் மிஷேல் பதக்கம் கொண்டுவந்தது. விருந்தும் விழாவும்—கனகராய முதலியார் தனக்குப் பதக்கம் வராததால் துக்கம்.—தஞ்சாவூர் ராசாவுக்கு வெகுமானம் கொண்டுபோனவர்கள் வழியில் நிறுத்தப்பட்டு வெட்கத்தோடு திரும்பியது—சந்தாசாய்பு கொடுமையால் குடிகள் கஷ்டம். இதுசமயம் பார்த்துப் காரைக்காலைப் பிடிக்க குவர்னர் கருத்து.—கனகராய முதலியாருக்கு அனுப்பிய பதக்கம் வரவே, அது முகாந்தரமாய் விழா.—துய்க் தெ புர்போன், பேனீக்ஸ் கப்பல்கள் புறப்பாடு—பவழம் வாங்கின துரைக்கு துய் லோரான் வட்டம் சேட்டான்.— அதற்குச் சமாதானம் சொன்னதின் பேரில் குவர்னரைக் கண்டுபேசச் சொன்னான். குவர்னரிடம்போய் வெகுமானம் வைத்துப்பேசியதில், குவர்னர் முதலில் உபகாரஞ்செய்ய மறுத்தது, பிறகு ஆறுதல் வார்த்தைகள் சொல்லியது — ஆலோசனை சங்கத்துக்கு இது விஷயமாய் பேச வாக்குக்கொடுத்தது பின்பு ஆலோசனை சங்கத்தார் வட்டியைத் தள்ளிக்கொடுத்து ஆசிரியர் யாவருக்கும் நன்றி தெரிவித்துக்கொண்டது. ஈசன் செயலால் மட்டும், மனிதர் ஈடேறுகிறார்கள் என்று எழுதியது.

## அத்தியாயம் IV

காளயுக்தி ௵ தை மீ 30 உ 8-2-1739 முதல் சித்தார்த்தி ௵ தை மீ 5 உ 13-2-1740 வரை—பக்கம் 51—77.

"திருவா" சந்தர்நாகூருக்குத் தலைவனாக நியமனம்-மொக்காவுக்குப் போகும் மோர் என்கிற கப்பலில், "பெர்சியாவுக்கு" அதிபதியாகிய மர்த்தேன்வில் பயணம் — காரைக்காலை வாங்கின விஷயமாய், சந்தா சாயபுவிடமிருந்து வைத்தியன் பெரேரா கடிதம் கொண்டுவந்தான்.— கோலார், காரைக்காலுக்கு அதிபதியாக நியமனம்.—தெலோர்ம் பெவ்ரியே, லெனுவார் இவர்களுடைய சௌக்கியசேதி - கோலார் சில சிப்பந்திகளுடன் காரைக்காலுக்குப் பயணம்-கொல்லர், தச்சர், ராணுவத்தார் சிலரும்கூட போனார்கள்.— இமாம் சாய்பு வருகை, அவரை எதிர்கொண்டவர்கள் —இமாம் சாய்பு குவர்னரைக்கண்டபோது பிராஞ்சு கூட்டுறவுச் சங்கத்தார் அவருக்கு எழுதிய கடிதத்தையும் வெகுமானங்களையும் குவர்னரிடமிருந்து பெற்றார் — வெகுமானங்களின் விபரம்.—பிற்பகலில் இமாம்சாய்பு குவர்னரைக் கண்டபோது, இவர் லட்சம் வராகன் கடன் கேட்டார் பேர்பாதி கொடுப்பதாக இமாம் சாய்பு ஒப்புக்கொண்டு, காவலிலிருந்த ஒரு பிராமணனை விடுவித்துக் கொண்டு, ஆலம்பரைக்குப்பயணமானார். —இமாம் சாயபுவுக்கு

மூட்டைகட்டி அனுப்பிய வெகுமானங்களின் விபரம்.—இராத்திரியில் வந்த கப்பலிலிருந்து இறங்கியவர்கள். இறக்கப்பட்ட சரக்குகளின் விபரம். – சுங்கு சேஷாசல செட்டியார் சங்கத்தாருக்குச் சரக்குகள் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு உடன்படிக்கை எழுதும்போது எழுந்த வில்லங்கங்கள் தீர்ந்தவகை — மாற்று குறைவாக வராகன்களை வைத்திருப்பவர்களுக்குத் தண்டனை.— பெர்சியா தேசத்து அரசன், டில்லி பாஷா பேரில் சண்டையிட்டு, டில்லியைப் பிடித்து ஓமரூக்களை சிரச்சேதஞ்செய்து, முகமதுஷாவைச் சிறையிலிட்டு, இனிமேல் ரூபாய்களில் தன் உருவத்தைப் போடும்படி, சூரத் நவாபுக்குக் கடிதம் எழுதினான். அவனுக்கு அனுசரணையாக நிஜாம் சதி செய்தான்.— முகம்மதுஷா மகளைத் தன் மகனுக்கு விவாகம் செய்வித்து, டில்லியில் உள்ள ஐசுவரியங்கள் யாவற்றையும் எடுத்துகொண்டு, தமாஸ் சொலிக்கான் தன் தேசம் திரும்பியது — குவர்னருக்கும், லொலியேர் பாதிரியாருக்கும் சீர்மை தபால்.— குவர்னர் துவிபாஷி எல்லப்பனுடன் சம்பாஷணை — மொக்காவுக்குப் போன 'மோர்'' கப்பல் திரும்பிற்று. அவ்விடத்தில் வியாபார மந்தம் — பிராஞ்சிலிருந்து ''துய்'தோர் லேயான்'' கப்பல் கொண்டுவந்த சேதிகள் —புதுச்சேரி ஊருக்குள், மலஜலம் விசர்ஜனம் செய்யக்கூடாதென்கிற கட்டளை — ஆற்காட்டு ரூபாயை புதுச்சேரியில் வழங்கக் கட்டளை — சந்திரகிரஹணம்.— கனகராய முதலியார் குமாரனின் மரணம் அவன் ஜாதகம்— பிராஞ்சுக்குப் போன கப்பல்கள் 'ப்ளோறி த்ரித்தோன்'' ப்ரேன்ஸ் தெ கோன்திர இவைகளில் ஏற்றிய சரக்குகளின் விபரம்.— மசுக்கரையிலிருந்து வந்த 'மூப்பிதேர்' கப்பலில் ஏறிப்போனவர்கள்.—'வேன்சான்'' மரணம் —பழைய நயினார் மனுஷர்கள், தங்களைத் தவிர்த்து புது நயினாரை ஏற்படுத்தியதால், ஒருவனை விட்டு ஊரில் திருடச் சொன்னார்கள், அவனும் அவன் சகாக்களும் பிடிபட்டுத் தண்டனை அடைந்தது.— பிரான்சிச்கோ பெரேரு வருகை— சவரிமுத்து முதலியார் மகளுக்குப் பேய் ஓட்டினார்கள் கிருஸ்துவ பாதிரிகளின் பிராது கனகராய முதலியார் மறுமொழி.— அமேனிலிருந்து துய்க்தோர் லேயான் ஏற்றிவந்த சரக்குகள்.—பிரான்சீஸ்கோ பெரேரு பயணம் —

## அத்தியாயம் V.

சித்தார்த்தி ஸு மாசி 7௳ 15—2—1740 முதல் ரௌத்திரி ஸு மார்கழி 6௳ 17—12—1740 வரை பக்கம். 8.—101.—

துய்க்தொர்லேயான் பிராஞ்சுக்குப்பயணம் மாயேவிலிருக்கும் மூப்பித்தேருக்கு சேன் ழோசேப் சரக்குகள் கொண்டு

போனது. ஏன் மோரப்பாவை அனுப்பவில்லை? பெலிப்போ பலுதாஸ் போனது.—இமாம் சாயபு வருகை—எப்படி அவர் குவர்னரைப் பார்த்தார்.—பிரான்சிலிருந்து குவர்னருக்குக் கடிதங்கள்.—அவைகளில் உள்ள செய்தி; பிரான்சுக்கும், பிரிட்டனுக்கும் சண்டை மூளப்போகும் என்ற வதந்தி அச்சண்டையின் காரணங்கள்—ஒரு இந்து வாலிபன் கிருஸ்துவனானது—லொலீயர் மேற்றிராணியார் பட்டம்பெற்ற சடங்கு—தஞ்சாவூர் அரசன் குவர்னருக்கு வெகுமானம் அனுப்பியது.—வியாபாரிகளுடன் சரக்கு ஒப்பந்தம்—'சேன் ழெரான்' இன்னொரு கப்பல்வருகை—சின்னசுங்குரான் கப்பல் மணிலாவுக்குப் புறப்பாடு—அஜாத் அசனலி குவர்னருக்கு அனுப்பிய வெகுமானம். —மராட்டியர் கலவரம். கணவாயைப் பிடிக்க எத்தனம். தேசத்தில் அமளி. எல்லாப் பெண்டுபிள்ளைகளும் புதுச்சேரியில் தஞ்சம் தேடுகிறார்கள்.—புதுச்சேரிக்கும் சென்னைக்கும் ஜனங்கள் ஓடிவருகிறார்கள்.—நிஜாம் மராட்டியரோடு சமாதானம்—சப்தர் அலிகான் ஆற்காடு வருகை.—சந்தா சாயபு குவர்னருக்கு கடிதம்.—மராட்டியர்கணவாயைத்தாண்டிவிட்டார்கள் —புதுச்சேரியின் பந்தோபஸ்து.—இமாம் சாய்பு பெண்சாதியின் வருகை. அந்தம்மாள் அங்கி தீ பிடித்தது.—தோஸ்த் அலிகான் பெண்சாதி வருகை.—இமாம் சாய்பு பெண்சாதி மரணம். சவம் ஆலம்பரைக்கு அனுப்பப்பட்டது.—சப்தர் அலிகான் பெண்சாதி நபாபு குடும்பத்தார் அனைவரும் வந்தவர்—குவர்னர் தோட்டத்தில் இறங்கினவர்களின் அழுகை ஓசை—சப்தர் அலிகான் வெகுமானமும் கடிதமும்—அக்கடிதத்தில் அடங்கியிருந்த விசேஷ செய்திகள்.—சந்தா சாயபு பெண்சாதி வருகை.—மசுக்கரையிலிருந்து வந்த புல்லி கப்பல் கொண்டுவந்த, மந்திரி, சங்கத்தார் கடிதங்கள்—டூப்ளே புதுச்சேரி குவர்னராக நியமனம்.—அரசர் பிறந்த நாள் கொண்டாட்டம். பஹதூர் வருகை.—சப்தர் அலி சந்தா சாயபு வருகைக்கு முஸ்தீப்புகள்—அவர்கள் வருகை,—குவர்னரைப் பார்த்துவிட்டு, கோட்டையையும் சுற்றிப்பார்த்தார்கள். அவர்கள் புறப்பாடு—மராட்டியர் திருவண்ணாமலை சேத்துபட்டைக் கொள்ளையடித்தது, குலாம் உசேன் அவர்கள்பேரில் சண்டைக்குப் போகவே. அவனை முறியடித்தது.- மராட்டியர் பரங்கிப்பேட்டையைக் கொள்ளையடித்தது. ஜனங்கள் கூடலூருக்குப் பயந்தோடியது.—

## அத்தியாயம். VI

ரௌத்திரி ஸு மார்கழி மீ 12வ 22—12—1740 துவக்கி துர்முகி ஸு சித்திரை மீ 5வ 14—4—1741 வரை. பக்கம்: 103—122.

*மராட்டியர், திருப்பாதிரிப்புலியூர், பாகூர் வரையிலும் மற்றொரு பக்கம் உழவர்கரை வரைக்கும் வந்து சூரையாடினார்கள். எப்படி புதுச்சேரி பந்தோபஸ்து செய்யப்பட்டது — பரங்கிப் பேட்டையில் மராட்டியர்கள் செய்த கொள்ளையின் வருணனை. —அஷேம், பெகு, பிராஞ்சு தேசங்களினின்று வந்த கப்பல்கள் கொண்டுவந்த சரக்குகள்—தோஸ்த் அலிகான் பெண்சாதி வகையராக்களை இட்டுக் கொண்டுபோக, மீர்குலாம் உசேன் வருகை.—இமாம் சாயபு சாமான்கள் வருகை —மீர்குலாம் உசேன், குவர்னரைச் சந்தித்தபோது, அவருக்குச் செய்த மரியாதை-தோஸ்த் அலிகான் பெண்சாதி வகையராக்கள், ஆற்காடு கோட்டைக்குப் பயணம் —இரண்டாவது குவர்னர் வீட்டில் ஐரோப்பியர்கள் கூட்டம்—ரகோசி போன்சலாவிடமிருந்து, புதுச்சேரி, சென்னை, சதுரங்கப்பட்டினம், நாகப்பட்டினம் குவர்னர்களுக்கு வந்த கடிதங்கள் —வித்தல் பண்டிதரும் அவர் இளைய குமாரனும் சிறையில் அடைப்பட்டார்கள்.—புதுச்சேரிக்கு வெளியிலுள்ள கிராமவாசிகள், பிறரிடமிருந்து, கடிதம் பெறக்கூடாதென்று கட்டளை.—திருப்பாதிரிப்புலியூர் மஞ்சகுப்பம் தெண்ணல் இவ்விடங்களில் மராட்டியர் கொள்ளை.—உழவர்கரைக்கு வந்தபோது, சனங்கள் பயந்து கடல்கரைக்குச்சென்று, புதுச்சேரிக்கு வந்தார்கள்.—வடக்கே போன மராட்டியர்கள், சதுரங்கப்பட்டினத்து ராணுவத்தால் முறியடிக்கப்பட்டு, திரும்பி மஞ்சகுப்பம் வரையில் கொள்ளை அடித்துக் கொண்டுபோனார்கள்.—சப்தர் அலிகான் செட்டி கோட்டைக்குப்போவதாக வதந்தி.—தஞ்சாவூர் அரசர் அனுப்பிய வெகுமானம் குவர்னருக்குக் கொண்டுபோகப்பட்டது.— கூலிவேலை செய்பவர்கள் யாவரும் கும்பினி வேலைக்கு வர வேண்டுமென்ற உத்தரவு—புகையிலை விலை நிர்ணயம்—மாயே குவர்னர் சிஞ்சார் புறப்பாடு.—லாகிரி வஸ்துகள் விற்பனைக்குத்தடை-எப்படி அந்தத்தடை உத்தரவு பறையடிக்கப் பட்டது—குவர்னருக்குக் கொச்சி அரசர் கடிதமும் வெகுமானமும் —திருச்சினாப்பள்ளியிலிருந்து சந்தா சாயபு நம்பிக்கையிழந்து, சப்தல் அலிக்கு எழுதின கடிதம்—வேலூர் கோட்டையிலிருந்து முகம்மது அலியும், அலி அக்பீரும், சந்தா சாயபு பெண்சாதியைப் பணம் கேட்டது.—அவள் மறுத்தபடியால் திரும்பிப்போனது.—மதுரை படேசாயபு மராட்டிய*

ரோடு போர்செய்து இறந்தார் என்றும், அவர் படைகள் முறியடிக்கப்பட்டதாயும் செய்தி. அவர் உயிருடன் இருப்பதாக மறுபடி வந்த செய்தி.—சந்தா சாயபு மராட்டியர் வசம் அகப்பட்டுக்கொண்டதாய் கடிதம் வந்தது.—குவர்னர் ரகோசி போன்சலாவுக்குக் கடிதம் எழுதினர்.—கனகராயமுதலியாருக்கு உசேன் தாயார் ஒரு பல்லக்குக் கொடுத்தார்.—

## அத்தியாயம். VII

துர்மதி ௵ சித்திரை ௴ 6௳ 15—4—1741 துவக்கி துந்துபி ௵ வைகாசி ௴ 16 ௳ 25–5–1742 வரையில். பக்கம் 123 145.–

ரகோசி போன்சலா, பாத்தேசிங்கு இவர்களின் வெகுமானங்களைக்கொண்டுவந்த கான்பகதூர் அக்கீம்சாயபுகேள்வியின்பேரில், விட்டல் பண்டிதர் விடுதலை அடைந்தார். உடனே அவர் புதுச்சேரியினின்று வெளியேறினர். அவரை அழைத்துவரச்சென்ற சேவகர்களை மராட்டியர் கைதுசெய்தார்கள். அவரைத் திரும்பி அழைத்துவரச் சென்ற ஸ்தானபதியும் சேவகர்களும் கைதியானர்கள்.—அதற்கு எதிர் நடவடிக்கையாக புதுச்சேரியிலுள்ள மராட்டியர் கைதுசெய்யப்பட்டார்கள்.—ஸ்தானபதி திரும்பிவரவும் மராட்டியர் விடுதலை — விட்டல் பண்டிதரை அழைத்த விஷயம்பற்றி சில மராட்டியர் வருகை வீட்டல் பண்டிதரை அனுப்ப நிபந்தனை — முத்தியப்பிள்ளை விடுதலை—மராட்டியர்களுக்கு அனுப்பிய வெகுமானங்கள் திரும்பிவிட்டன. குவர்னர் காரைக்காலுக்குப் பயணம்போக முஸ்திப்பு—போய் திரும்பிவிட்டார் — வெள்ளையர்கள் நெருப்புவிழா கொண்டாட்டம்—குவர்னர் பிராஞ்சு சங்கத்தின் தலைவர்களில் ஒருவராக நியமிக்கப்பட்ட சேதியை, "திரித்தோன்" கப்பல் கொண்டுவந்தது. அல்லின் அக்கீம் சாயபு வெகுமானம் "பெவ்ரியேர்" காரைக்கால் அதிகாரியாகி புறப்பட்டார்.—நிஜாம் மகன் நாஜர்சிங்கு வெகுமானம்—, மகம்மது அலி வெகுமானம்கள், சாராயம் விற்க உத்தரவு, கான்பகதூர் வெகுமானம்.—ஓடிப்போன ஒரு ஒல்லாந்து சேவகனைக் கொன்றார்கள் — வலங்கை, இடங்கையர் வித்தியாசமில்லாமல் புதுச்சேரி வீதிகளில் உலாவலாம் என்ற கட்டளை ஒரு வெள்ளை சேவகன் செய்த கலகம். தேவனாம்பட்டணம் குவர்னர் மரணம். "கோலார்" திரும்பிவந்தது.–சீயாம் மேற்றிராணியார் · லொலியேர் பயணம் அஷேனுக்கு துய்தோர்லேயான் புறப்பாடு. ஏழு சண்டை கப்பல்களுடன் "லபுர்தோனே" வருகை — திருவா வருகை. அருணசல செட்டிக்கு குவர்னர் வெகுமானம். இரண்டாவது துரையிடம் அலுவலை ஒப்

படைத்து துய்மா குவர்னர் பிராஞ்சுக்குப் பயணம். அது சமயம் நடந்த வைபவம். அவேஷனிலிருந்து திரும்பிய "துயக்தொர்லே யான்" கப்பலிலிருந்து இறங்கிய தொக்காதோர் சுல்தானைக் கண்டு மரைக்காயர் சொன்ன செய்தி மொகி, பெகு, ஏனம், சந்தர்நாகூர் இவ்விடங்களிலிருந்து கப்பல் வருகை, குவர்னர் டுப்ளே வருகை. அவருக்குச்செய்த மரியாதை. ஆசிரியர் அவரைக் கண்டது. வந்தவாசி ரங்கப்பிள்ளை காவலில் வைக்கப்பட்டார். துய்ப்ளெக்ஸ் காலாப்பட்டுக்குப் போனது, நாலு மணியக்காரர், கள் நியமனம், துய்ப்ளெக்ஸ் அரியாங்குப்பம் போனது. சபதர் அலிகான் மீர்சத், மீர்குலாம் உசேன் குவர்னருக்கு வெகுமானம் அனுப்பியது—வர்த்தகர்களுக்குச் சரக்கு ஒப்பந்த உடன்படிக்கை. மணிலாவுக்குப் போன கப்பல் திரும்பிற்று அவ்விடத்து வியாபாரநிலே, டில்லிபாக்ஷாவிடமிருந்து கொடியும், நகபத்தும், குவர்னருக்கு வெகுமானமாக அனுப்பப்பட்டது. கனகராயமுதலியார் தங்கை மகன் கலியாணம்—தோமாஸ் பாதிரியார், கொர்தியே இவர்கள் மரணச்செய்தி—மணிலாவுக்கு "மூான் பிதோன்" கப்பல் பயணம்.—

## அத்தியாயம் VIII

துந்துபி ஹு வைகாசி மீ 26உ 5-6-1742 துவக்கி துந்துபி ஹு பங்குனிமீ 30உ வரை. பக்கம் 116-165

திருட்டுக்காக மூன்று கட்டுக்காரர்களுக்குக் காவல். வியாபாரிகளுக்கு வெகுமானம்—நம்பிக்கைத் துரோகத்துக்காக மரந்தை முதலிக்குக் காவல். தற்கால விடுதலை, பின்னிட்டு அபராதம்—கட்டுக்காரர்களுக்குத் தண்டனை "எர்க்குய்ல்" கப்பல் வருகை.— லீஸ் கப்பல் வருகை- அது கொண்டுவந்த ஐரோப்பா சண்டை செய்தி—நான் பகதூரை எதிர்கொண்டு மரியாதை செய்யும்போது, பீரங்கிப்போட்டார்கள், ஒரு பிராமணத்திக்குக் காலில் காயம்—இராசாபண்டிகை—அழிசிபாக்கத்தைக்காபந்துசெய்ய சிப்பாய்கள் அனுப்பப்பட்டார்கள்—மீர் அசாத்புதுச்சேரிக்குவரும்புடவை கட்டுகளைத் தடைசெய்தது-கனகராயமுதலியாருக்கு விட்ட ஆலங்குப்பத்தில், சுண்ணும்பு பொத்யையும், கூவத்தூர், மரி கிருஷ்ணபுரம், தூக்கணும் பாக்கம் இவ்விடங்களில், மறியல் செய்துவைக்கப்பட்ட புடவை மூட்டைகளையும் மீண்டுகொண்டுவர, சிப்பாய்கள் அனுப்பப்பட்டார்கள்— கெடாவுக்குப்போன "மரி ழோசேப்" கப்பலில் ஏற்றின சரக்குகள்— துப்ளேக்ஸ்க்கு ஆண்பிள்ளை பிறந்து இறந்துவிட்டது.— வேலூரில், சப்தர் அலிகான் தூங்கும்போது கொலை செய்யப்பட்டான்.—அவர்களைச் சேர்ந்தவர்களும காவலில் வைக்கப்பட்டார்கள். பிரான்சுக்குப் பிளேரி

கப்பல் பயணம்—மீர்சத் சாத் அல்கான் வேலூர் நவாப்பாகபட்டஞ் சூட்டப்பட்டாள்,— சப்தர் அலிகான் மரணத்துக்குச் சென்னை குவர்னர் துக்கம் கொண்டாடியது.— இங்கிலீஷ் காரருக்கு ஐந்து கிராமங்கள் மானியம்.— சௌக்கியத்திற்காக துய்ப்ளேக்ஸ் உழவர்கரைக்குப் பயணம்.— "மோன் சோன்" தேவனும்பட்டணத்துக்குக் குவர்னராகப் போகையில் அசிரியர் வழிகாட்டி அனுப்பியது.— சந்திரகிரஹணம்.— துய்ப்ளேக்ஸ் புதுச்சேரிக்குத் திரும்பியது— நிஜாம் பரிவாரங்களுடன் ஆற்காட்டுக்கு வந்தது.— ஆற்காடு கோட்டையிலிருந்து, மீர்சத் வழுதாவூருக்கு வந்தது— அவரைத் துரத்திக் கொண்டு ராணுவத்தோடு உசேன் சாயபு வந்து திருவக்கரையில் தங்கினது— இரண்டு ராணுவத்தாரும் சண்டையிட்டு, தேசத்தைக் கொள்ளையடித்தது.— உசென்சாயபு தம்பி முகம்மது ஜமால் உழவர்கரைக்கு வந்து குவர்னருக்குச் சொல்லி அனுப்ப, கனகராயமுதலியாரை அவரிடம் தூதாயனுப்பினார்கள். திரும்புகையில், எல்லப்பிள்ளைசாவடியில், துலுக்க ராணுவத்தார் கனகராயமுதலியாரை அலங்கோலப்படுத்தியது.— நிஜாம் ஆற்காட்டுக்கு வருகையின் வருணனை, அயல் பிள்ளைகளின் பெயர். சுற்றத்தார் பெயர்—ராணுவம் தங்கின நில விஸ்தரிப்பு.—மீர்சத் நிஜாமைக் காணப்போனது— புதுச்சேரியைக் காபந்துசெய்ய, எல்லா வெள்ளையர்களையும் ராணுவ சேவைக்கு அழைத்தது.—மாசி மகம்.—மணிலாவிலிருந்துவந்த கப்பல், மணிலாவுக்குப் போன கப்பல்.— கோட்டை சுப்பய்யன் வீட்டில் பரிசோதனை அதன் காரணம்.- மணிலாவுக்குப்போன "மூன் பிதோன்" கப்பல் கொண்டுவந்த சேதி, மொக்காவுக்குப் போன "நெப்த்தூய்ன்" கப்பல் கடல் கள்ளர்களால் விரப்பட்டு, கொள்ளையடிக்கப்பட்டது.—போர்ச்சுகீஸ் கப்பல் அதை மீட்டு மங்களூரில் கொண்டுபோய் வைத்தது.

## அத்தியாயம் IX

ருத்ரோத்காரி ௵ சித்திரை ௴ 29 ௳ 8-5-1743 துவக்கி ருத்ரோத்காரி ௵ தை ௴ 23 ௳ 2-2-1744, வரை, பக்கம்:166- 189

சென்னையிலிருந்து நிஜாமுக்கு வெகுமானம் கொண்டு போன மூன்று வெள்ளையர்களும் பிரதம துவிபாஷியும் வருகை ஆசிரியர் இவரைக் கண்டு பேசியது —கடனுக்காக, கோபால நாராயணய்யர் மரிங்வ்ஞுபுரத்தில் பிடிப்பட்டு, காவலில் வைக்கப்பட்டார்.—குவர்னருக்கு நிஜாம் அனுப்பிய வெகுமானம்.— உசேன்சாயபு நிஜாமை எதிர்கொண்டு அழைக்கப் போனது—நிஜாம் வருகை, அவர் ராணுவத்தின் வருணனை. வழுதாவூர் மீர்சத் நிஜாமை எதிர்கொண்டழைக்கப்போனது

புதுச்சேரியிலுள்ள வெள்ளைக்காரர் சட்டைக்காரர் யாவரையும் ராணுவ சேவைக்கு அழைத்து, அவர்களுக்குப் பயிற்சி அளித்தது—மொக்காவிலிருந்து செய்துன் கப்பல் வருகை—வியாபாரிகளுக்குச்சரக்கு ஒப்பந்தம்—இரண்டுகிராமங்களின் குத்தகை சீட்டில், ஆசிரியர் மேல்ஒப்பம் வைத்து—பசோராவிலிருந்து கப்பல் வருகை—சூரத்து வழியாய் பிராஞ்சுதேசத்தரசர் கடிதம் வந்தது அதில் பிராஞ்சுப்படைகள் வெற்றி அறிவிக்கப்பட்டிருந்தது—புதுச்சேரியில் விழா.—பிராஞ்சிலிருந்து பேனிக்ஸ், அயெரேநோத்து கப்பல்கள் ஒரு போர்த்துகீஸ் கப்பலும் வந்தது—ஏமாற்றிச் சிறைபிடித்துவரச் சொல்லி வியாபாரம் செய்த சூத் என்பவனை அலுவலிலிருந்து நீக்கினார்கள்—பிராஞ்சிலிருந்து கப்பல் வருகை—குவர்னர் குமாரத்திகளுக்கு கனகராயமுதலியார், ஆசிரியர், சேஷாசலசெட்டி, டக்கேசாசாய்பு, வர்த்தகர்கள், முத்தியாபிள்ளை, சவுளிக்கடைகாரர்கள் சலத்து வேங்கடாசலசெட்டி, குண்டூர் ரவணய்யசெட்டி, சந்தாசாயபு மகன் மளிகைக்காரர் தங்கசாலைகாரர்கள் வெகுமானம்—கலியாண வைபவம் நடனகச்சேரி, தாசிக்கச்சேரி, வாண வேடிக்கை—குவர்னர் தமக்கு வெகுமானம் செய்தவர்களுக்கு பிரதி வெகுமானம் செய்தார்—அப்போது நடந்தவேடிக்கை கலியாணத்திற்கு வந்த மொகூல், உசேன்கான், குலாம்உசேன் ஆசிரியரைக் கண்டுபோனது-முராரி ராயனுக்கும் நவாப் அசப்ஜாவுக்கும் உடன்படிக்கை அதுசேதி தெரிந்து புதுச்சேரியில் விழாக்கொண்டாட்டம்—திருச்சிராப்பள்ளியிலிருந்துவெகுமானம்—குவர்னரும் ஆசிரியரும் அழிச்சிபாக்கத்துக்குப் போய் அரியாங்குப்பத்துத் திருவிழா கொண்டாடியது—பங்காளம், பசோரா, மசுக்கரையிலிருந்து கப்பல்கள் வருகை—நவராத்திரி பண்டிகை—கோபால நாராயணய்யர் விடுதலை—நிஜாம் வெகுமானம் வந்த வைபவம்—மொசாம்பீக்கு பிரான்சு, மாயே இவ்விடங்களுக்குக் கப்பல்கள் பயணம்—ஆசப்ஜா வடக்கே நோக்கிப் பிரயாணம்—கோபாலநாராயணய்யருக்கும், சேஷாசல செட்டியாருக்கும் சமாதானமாச்சுது.—காரைக்காலில், சரக்குத் தீர்வையைப்பற்றி கனகராயமுதலியாருக்கும் ஆசிரியருக்கும் விவாதம்—வாஞ்சியூர் உப்புத்தீர்வை—முரட்டாண்டியில் குவர்னர் வீடுகட்டுவித்து அங்கு நாற்பதுநாள் தங்க பிரயாணம்— போலீசு மேல்அதிகாரி "தொனி" மரணம்.—ராமகிருஷ்ணதாசுக்கு வந்த ஆபத்து.—முத்தையாபிள்ளை காரைக்காலுக்குப் பயணம். வழியில் துர்க்குணத்தால் திரும்பிவந்தார். முரட்டாண்டியில் "துயிலோருனுக்கும், தெப்றேமெனிலு"க்கும் சண்டை.—பகலில் நட்சத்திரம் எரிந்துவிழுந்த உத்பாதம்.—முரட்டாண்டியைத் துய்ப்ளேக்ஸ் பேட்டையென்று அழைக்க உத்தரவு.—தேவனாம்பட்டணம் குவர்னர் சென்னைக்குச் சின்ன துரையாகப் பயணம்.—வால் நட்சத்திரம். ஆசிரி

யர் பல்லக்கு, நேராய் கோட்டைக்குள் போகவர உத்தரவு — கான்பகதூர் ஆனை மரணம்.— சென்னை குவர்னர் "பெனியோன்" இங்கிலாண்டுக்குப் பயணம். "மொர்ஸ்" அவருக்குப் பதில் குவர்னர்.— தேவனும்பட்டணம் குவர்னர் "இன்" புதுச்சேரிக்கு வந்தபோது, அவருக்குச் செய்த உபசாரம்.

## அத்தியாயம் X

நந்ரோத்கரி ஹு தை மீ 29 உ 28-2-1744 துவக்கி
துரோதன ஹு வைகாசி மீ 10 உ 19-5 1745 வரை. பக்கம் 190–206

பிராஞ்சுக்குக் கப்பல் புறப்பாடு.– நாஜர் ஜங்கை மராட்டியர் கொலைசெய்ததாக, ஆற்காட்டிலிருந்து, குவர்னருக்குக் கடிதம்.— துறைமுகத்து உத்தியோகஸ்தன் இறந்துவிட்டபடியால், பதிலுக்கு ஜகனிவாசமுதலியார் நியமனம்.— பிராஞ்சுக்குக் கப்பல் பயணம் — சர்க்கார் உத்தியோகஸ்தர் அதிகமாயிருப்பதால், சிலரை நீக்கி விட்டார்கள்.–பிராஞ்சுக்குக் கப்பல் பயணம் தேவனும்பட்டணம் துபாசி கல்யாணம்.— குவர்னர் உழவர்கரைக்குப் போனார்,— காரைக்கால் மருந்துகிடங்கு தீ பிடித்ததால் விபத்துகள்.—ஆசிரியர் மகள் வயது வந்தபோது. வரிசைகள் சிறப்பு — சமதர் அலிகான் குமாரன் சாயபு ஜாதாவைப் பட்டாணியர் கொலைசெய்தது – அதினால் பட்டாணியரைக் கொலை செய்தது —குவர்னர் மகள் பிரசவித்து மரணம்.— பிராஞ்சிலிருந்து கப்பல் வருகை — மொஜாம்பிக்குப் போன "சேம்பியேர் கப்பல் வருகை.—வெள்ளைக்கொடி போட்டிருந்தபடியால் ஜனங்களின் பீதி.— பரங்கிப்பேட்டையிலிருந்து. பிராஞ்சுக்கு சரக்குகள் ஏற்றிக்கொண்டு கப்பல் பயணம்.— குவர்னர் முரட்டாண்டிக்குப் போகிறபடியால், கோட்டையில் முஸ்தீப்பு — தளவாய் வீரராகவ நாயக்கரையும் அவர் குமாரனையும் திருட்டுக்காகக் காவலில் வைத்தார்கள்.— குவர்னர் முரட்டாண்டிக்குப் பயணம்.— உப்புட்டூர் பெருமாள் ரெட்டி வீட்டில் நடந்த களவு சொத்துகளின் விபரம்.— முத்தையப்பிள்ளை, புதுச்சேரியிலிருந்து, அனேக மாசங்களாக வெளியில் போய்விட்டபடியால், அவருக்குப் பதில், கருதம்பி நயினாரை பாளயக்காரராக நியமித்தார்கள். சாவடி அழகப்ப முதலியாருக்கு மணியம் வேலை ஆச்சுது.— தளவாய் வீரநாய்க்கன் ஜாமீன் கட்ட ரொக்கம் தேடுவதற்கு விடுதலை செய்யப்பட்டது.— குவர்னரும் அவர் பெண்ஜாதியும், பொம்மையார்பாளையம் போய், சுவாமியாரைச் சேர்ந்து, ஆசீர்வாதம் பெற்றது.— அசேஷனுக்குப் போன, "பவோரி" கப்பலை இரண்டு இங்கிலீஷ் கப்பல்கள் சண்டைபோட்டு, பிடித்துக்கொண்டது.— ராமேஸ்வரம் போகும் சம்புதாசுக்கு மரி

யாதை செய்தது. — குவர்னர், கனகராய முதலியார், இன்னும் பல பெரிய மனிதர்களைக் கண்டு, சம்புதாஸ் வெகுமானம் பெற்றது — நவாப் கொடிபோட்டு, அஷேனுக்கு ஒரு கப்பல் பயணம். — பெருமாள் செட்டி வீட்டில் போன களவுக்காக, ஆறுமுகம் மகைக்கரைக்கு அனுப்பப்பட்டான். பரசுராமபிள்ளை மகனுக்கு அர்ப்பாக்தேர்வேலை கிடைத்தது ராமேஸ்வரம் போய் திரும்புகையில், சம்புதாஸ், சீர்காழிக்குச் சமீபமாய் கொள்ளையிடப்பட்டார் — மணிலா, சீனமக்கா, தருணுசேரி, இவ்விடங்களிலிருந்து கப்பல்கள் வருகை. — மணிலாவிலிருந்து மற்றொரு கப்பல் வருகை. — சம்புதாஸ் சென்னைக்குப் பயணம். — சம்புதாஸ் மகன் கல்யாணத்திற்குப் போக, திருவேங்கடப்பிள்ளை பயணம். அவரிடங்கொடுத்த வெகுமானங்களின் ஜாபிதா. — அந்தக் கல்யாணம் நடக்காமற்போன காரணம். —

## அத்தியாயம் XI

குரோதன ஸு ஆவணி மீ 29 உ 10—9—1745 துவக்கி குரோதன ஸு தை மீ 28 உ 6—2—1746 வரையில் — பக்கம் 208-232.

நவாப் அன்வருதிகான் வருகையை எதிர்கொண்டு அழைத்தவர்களுக்கு வெகுமானம். குவர்னருக்கு வெகுமானம். — நவாப் அனவருதிகானைக் குவர்னர் எதிர்கொண்டுபோய் புதுச்சேரிக்குள் அழைத்துவந்த வர்ணனை. — கோட்டையைப் பார்த்துவிட்டு, குந்தாணி பீரங்கியை சுடச்சொல்லிப் பார்த்த பிறகு, குவர்னர் வீட்டுக்கு வருகை சிற்றுண்டி அருந்திய பிறகு அவருக்குக் கொடுத்த வெகுமானங்களின் விபரம். — காரைக்கால் பிரகாச முதலியார் விண்ணப்பத்தைக் குவர்னர் ஆசிரியரிடம் கொடுத்து மறுமொழி எழுதச் சொன்னது பிரகாசமுதலியார் இராசியாய்ப் போன தகவல் கிடைத்தது. — பறையர் தங்களைக் கோவிலில் ஒதுக்கி வைப்பது சரியல்ல வென்று சொல்ல, பெரிய சாமியார் ஏற்றுக்கொண்டது. — கனகராய முதலியார் மைத்துனி பெண் டாம்பீக அலங்காரஞ் செய்துகொண்டதைச் சுவாமியார் கண்டித்தது பாதிரியார் கிருஸ்துவப் பெண்பிள்ளைகள் உடுத்திக்கொள்ளவேண்டிய விதத்தைப்பற்றி கட்டளை கிருஸ்துவர்களின் கிளர்ச்சி. கனகராயமுதலியார் தலையீடு, அமைதி, பாதிரியார் குவர்னரிடம் பிரையாது குவர்னர் கட்டளை. — வீராசெட்டி காவலில் வைக்கப்பட்டான். — கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதியிடம் ஆயிரம் வராகன் கடன் வாங்கி மறுதளித்த திருவேங்கடம்பிள்ளை சித்திரவதை செய்யப்பட்டார். — பெருங்காற்றுமழை அதனால் புதுச்சேரிக்கு உண்டான

நஷ்டம்:— குவர்னர் முரட்டாண்டிக்குச் சௌக்கியத்துக்காகப் போனர்:— மூன்று நாள் பெரும் காற்று அடித்தது.— ரெட்டியார்பாளையத்தில் புதுச்சேரிவாசிகளுக்குக் கனகராய முதலியார் விருந்துசெய்தார். ஆசிரியரின் கருத்து.— ஆனந்தரங்கப்பிள்ளை, இவர் மகள் பாப்பாள், திருவேங்கடம் பிள்ளை, இவர் மகன் அப்பாவு சாதகங்கள். – காரைக்காலில் ஐந்து கிராமங்கள் குத்தகைக்கு வாங்கினது.— தங்கசாலையில் விலைவாசி. — பாமோசி நாய்க்கனுக்கு புதுச்சேரியில் குடியேற உத்தரவு.— தேவனும்பட்டணம் வக்கீல் ஆதியப்பனைப் பிடித்து வைத்தார்கள்.— கூடலூர்மேரில் சண்டைசெய்யப் படை எழுச்சி.— தவளக்குப்பத்தில் படைகள் செய்த அட்டூழியங்கள்.— குவர்னருக்குப் புகழ்மாலை. —

## அத்தியாயம் XII

குரோதன ஸு தை மீ 29 உ (7-2-1746) முதல் குரோதன ஸு பங்குனி மீ 7 உ (16-3-46) வரை— பக்கம் 235—258.

சேன் லூய் என்ற போர்ச்சுகல் கப்பல் வருகை அதைத் துரத்திக்கொண்டு மூன்று இங்கிலிஷ் கப்பல்கள் ஓடிவந்தன. அதன் காரணம்.— அபயமளிப்பதற்குப் புதுச்சேரி கோட்டை கொத்தளங்களில் முஸ்தீப்பு.— தேவனும்பட்டணம் துவிபாஷிக்குக் குவர்னர் கடிதம்.— மபூஸ்கான் குவர்னரைச் சந்திக்க உத்தரவு கோரியது — தவளக்குப்பம் சாவடியிலிருந்த ராணுவத்தினர் செய்த கலவரம்.— பதிலுக்குத் தேவனும்பட்டணம் குவர்னர் உத்தரவுபடி, படகுகள் புதுச்சேரி கோட்டைக்குவந்தது -தவளக்குப்ப ராணுவத்தை அரியாங்குப்பத்திற்குத் திருப்புதல் — மாபூஸ்கானை எதிர்கொண்டுபோனவர்கள், அவன் ஒரு சாதாரண சோனகனைப்போலிருக்கிறானென்றும், நவாபுக்குச் செய்த மரியாதை தனக்கும் நடக்கவேணுமென்றும் சொன்னதாகச்செய்தி — குவர்னர் சம்மதித்து மாபூஸ்கான் முன் போய் வரவழைத்து வெகுமானம் செய்தது. கனகராய முதலியார் மரணம். அவர் மனைவி குவர்னர் மனைவியுடன் செய்த சூழ்ச்சி.—கனகராய முதலியார் வீட்டில் முத்திரை வைக்கப்பட்டது. பிரேத ஊர்வல வர்ணனை.— ஆசிரியரின் புகழ்மாலை. கனகராயமுதலியார் சகோதரன், மைத்துனன் குவர்னரைக் கண்டது.— அவர்களுக்குள் இருக்கும் வழக்கை விசாரிக்க, குவர்னர் மகாநாட்டைக் கூட்டியது.— மகாநாட்டாரின் பெயர்கள். துய்மா தோட்டத்தில், மகாநாட்டார் கூடியது வாதி. பிரதிவாதிகளின் வாக்குமூலங்களை விசாரித்தனர்.— மாபூஸ்கான் அனுப்பிய இரண்டு பித்தளை பீரங்கிகளைக்கொண்டுவர மாயே சிப்பாய்கள் பயணம்.—

குவர்னருக்கு. மகாநாட்டார் இந்து முறைமையை விளக்கியது.— மகாநாட்டார் செய்த தீர்மானம்.— கனகராயமுதலியார் அமைத்துனர்கள், ஆசிரியரைத் தாக்க செய்த ஏற்பாடுகள் — குவர்னருடன் திருச்சிராப்பள்ளி வேங்கடகிருஷ்ணன்பற்றிச் சம்பாஷணை.

## அத்தியாயம் XIII

குரோதன ஹு பங்குனி மீ 8 உ (*17-3-1746*) முதல் குரோதன ஹு பங்குனி மீ 21 உ(*30-3-1746*) வரை. பக்கம் *251-276.*

ஈஸ்வரன் கோவில் மூல ஸ்தானத்தை யாரோ அசுசியப் படுத்தியதால், பிராமணர்கள் யாவரையும் விரதம்மேற் கொள்ளச் சொன்னார்கள். பெருமாள்கோவில் எதிரில் ஒரு மகாநாடு கூடிற்று. அதைக் கலக்கும்படி, குவர்னர் பாளையக்காரருக்கு உத்தரவுவிட்டார். பலாத்காரத்தைப் பாளயக்காரர் உபயோகப்படுத்தியதால், மகாநாட்டார் எதிர்த்துக் கொண்டார்கள், குவர்னர் அவர்களை அழைப்பித்து கண்டித்து, அவர்கள் விவகாரத்தை ஆசிரியரே தீர்த்துவைக்கும்படி உத்தரவுவிட்டார்.— காரைக்காலிலிருந்து நெல் ஏற்றி வந்த படகு, தேவனும்பட்டணத்தில் பிடிபட்டது அதை ஓட்டிவந்த இஸ்லாமியன் சொல்லவேண்டிய வக்குமூலத்தை அவனுக்குச் சொல்லியனுப்பியது —மஞ்சகுப்பத்தில் இங்கிலீஷ் ராணுவத்தார் நடமாட்டம்.— நபாப் எல்லையில் கலகம் நேரிட்டால் பிராஞ்சுக்காரர் அதற்கு ஜவாப்தாரியல்ல என்று நபாப் அனவர்திகானுக்குக் கடிதம் —குவர்னர் பேர்கொண்ட விழாக் கொண்டாட்டம்.—படகு எஜமான் இஸ்லாமியன் வாக்கு மூலத்திற்கும், அடி பொறுக்கமாட்டாமல் படகு ஓட்டியவன் சொன்ன வாக்கு மூலத்திற்கும் வித்தியாசம்.— இங்கிலீஷ்காரர் சண்டை செய்யப்போவதாக வதந்தி.— கனகராய முதலியார் அசையும் பொருள்களின் ஜாபித்தாவை தயாரிக்கும்படி குவர்னர் சொன்னது.— சண்டை வதந்தியை முன்னிட்டு, கோட்டைக் கதவுகள் முன்நேரத்தில் சாத்தப்பட்டன.— இமாம் சாயபு கடிதமும், அவர் நிஜாமிடமிருந்து வாங்கி அனுப்பிய கடிதமும் குவர்னருக்கு வந்தது.— அவற்றில் அடங்கிய விஷயங்கள்.— சந்திர கிரஹணம்— இமாம் சாயப்புக்கு எழுதிய மறுமொழி — கனகராய முதலியார் ஆதீன விஷயமாய் ஆசிரியருக்கும் அவர் கணக்குப் பிள்ளைக்கும் சம்பாஷணை,— ஷெ ஆதீனசொத்துகளின் மதிப்பு. குவர்னருக்கு எவ்வளவு லஞ்சம் கொடுப்பதாகச் சொல்லி, குவர்னரை சரிகட்டினார்கள்.— அந்த மதிப்பு விஷயமாய் மகாநாட்டாரைக் கூட்டியது.— மகாநாட்டார், கனகராயமுதலியார்

ஆதின சொத்துகளைப் பிரித்துக்கொடுத்த விபரம்.—தஞ்சாவூர் சமஸ்தானத்தைப்பற்றி வழக்கு.—பத்தேசிங்கு, குவர்னரை உதவிகேட்டது. அவருக்குக் குவர்னர் மறுமொழி.—தானியப்ப முதலியாருக்கும், மலையப்பமுதலியாருக்கும் விவாதம்.— பிரமாண மூலமாய் தீர்த்துக்கொள்ளும்படி உத்தரவு.

## அத்தியாயம் XIV

துரோதன ஸூ பங்குனி மீ 22 உ 31-3-1746 முதல் அக்ஷய ஸூ சித்திரை மீ 11-4-1746 வரை — பக்கம் 279—296

கனகராய முதலியார் வீட்டிலிருந்து அவர் பெண்சாதியை வெளியேற்ற, ஆசிரியர் போனார்.— கனகராயமுதலியார் பெண்சாதியின் தர்க்கம்:— தானப்ப முதலியார் மறுமொழி:— ஆசிரியர் வேண்டுகோளுக்கு இணங்கி, கனகராய முதலியார் பெண்சாதி, தன் வசமுள்ள நகைகளை, மதிப்புபோடக் காண்பித்தல் மதிப்பை உயர்த்திப்போட தானப்ப முதலியார், மதிப்பாளர்களைக் கேட்டுக்கொண்டது.— தானப்ப முதலியார் குறை திசயங்கள்:— கனகராய முதலியர் பெண்சாதி, மருமகள் இவர்களுக்குத் தானப்ப முதலியார் கொடுக்கவேண்டிய பொருள்களை, மகாநாட்டார் தீர்த்து எழுதிய பத்திரம் — குவர்னர் துரையிடம் போய் சொன்னதற்கு அவர், அந்தத் தீர்ப்பை நிறைவேற்றிவைக்க, அரசியலுக்கு அதிகாரம் கொடுத்தார்.— ஆசிரியர் வழியில் ராமசந்திர அய்யரை சந்தித்து அவர் குவர்னர் பேரால் வெங்கடாசல அய்யரை சந்தித்துப் பேசிய விபரங்களை அறிந்துகொண்டது.

கனகராய முதலியார் பெண்சாதிக்கும், மருமகளுக்கும் 3500 வராகன் 7 வட்டி, கும்பினி பத்திரம் வாங்கிக்கொடுத்து வழக்கைத் தீர்த்தது.—வீட்டைவிட்டுப்போக அந்த அம்மை, 15 நாள் கெடுவு கேட்டது —ராமச்சந்திர அய்யர் விஷயத்தை ஆசிரியரே தீர்த்துவைக்கும்படி குவர்னர் உத்தரவு.—பச்சைக் கல் கடுக்கன்களைப்பற்றி, பாதிரியார் ஆலோசனையின்பேரில், வீட்டிலேயே சத்தியம் செய்யும்படி உத்தரவு.— கடை வியாபாரிகளின் நிலுவையைப்பற்றிக் குவர்னர் சொன்னது —கனகராய முதலியார் வீட்டில் மலையப்ப முதலியார் சத்தியம் செய்தது பொதுஜனங்களின் அபிப்பிராயம்.— தேவனாம்பட்டணம் ஷேக் ரகி முல்லாசாயபு கடிதம், அதற்கு மறுமொழி.— கனகராய முதலியார் பெண்சாதியும், மருமகளும் தானப்ப முதலியாருக்கு எழுதிக்கொடுத்த பாரிக்கத்து.— சத்தாராவிலிருக்கும், சந்தா சாயபு சினேகிதன், அலி அக்பர் வருகை.— சௌக்கார்களுக்குக் கொடுக்கவேண்டிய கடன்களை உடனே செலுத்

தும்படி சந்தாசாயபு மனைவிக்கு வேண்டுகோள்.— தரங்கம்பாடி துறையில், புதுச்சேரி மர்ஷோன் என்கிற கப்பலை ஐந்து இங்கிலீஷ் கப்பல்கள் தாக்கின விஷயத்தைப்பற்றி, காரை கப்பலிலிருந்து கடிதம் வந்தது. அது விஷயமாய் குவர்னர் கருத்து.

## அத்தியாயம் XV

அக்ஷய ஞு சித்திரை மீ 3 உ (13-4-1746) லிருந்து, அக்ஷய ஞு சித்திரை மீ 13 உ 22-4-1746) வரை—பக்கம் 296—318.

தரங்கம்பாடி சின்ன குவர்னர் வருகை. அவனுக்குச்செய்த அசாதாரணமான மரியாதைகளின் காரணம்.— பத்தேசிங் வக்கீல் கேசவராயன் கொண்டுவந்த கடிதத்தைப்படித்து, அது மர்மமான கடிதம் என்று யூகிக்கப்பட்டது.— வந்தவாசி திரு வேங்கடம் பிள்ளைக்கும் தளவாய் ரங்கய்யன் பெண்சாதிக்கும் உள்ள வழக்கில் பிரமாணம் செய்யும்படி குவர்னர் தீர்ப்பு.— உபயஸ்தர்கள், பிரமாணத்தின்போது சொன்ன வாக்குமூலம். கணக்கு ரங்கப்பிள்ளை பேச்சைக்கேட்டு, தனவான்கள் ஆலோசனைகளைத் தவிர்த்து, பெண்சாதி மிரட்டலுக்கு உட்பட்டு, கவர்னர் நடப்பதால் வரும் அபகீர்த்தி.— ஆசிரியர் பலத்த கண்டனம்.— மாரிசெட்டி, குவர்னருக்குக் கொடுக்கவேண்டிய கடனுக்காக, ஆசிரியர் சீட்டு எழுதிகொடுக்கச் சொன்னதற்குக் கடைக்காரர்கள் அவனை துன்புறுத்தியதாக, ஆலோசனை சங்கத்தாரிடம் பிராது.— மீரான் குவர்னரிடஞ் சொல்ல, குவர்னர் ஆசிரியரை அழைத்தது.— பிறகு, அந்தக் கடைக்காரர்களை விசாரித்ததில், அவர்கள் அப்படித் தாங்கள் சொல்லவில்லையென்றதனால், குவர்னர் மீரானைக் கோபித்தார்.— தளவாய் ரங்கய்யன் மனைவி ரங்கம்மாள் ஊரைவிட்டு ஓடப்போனாள்.— கனகராய முதலியார் பெண்சாதி, தன் புருஷன் வீட்டை விட்டு. வேதபுரீசுஸ்வரர்கோவில் தெருவில் குடிபோனாள்.— கனகராய முதலியார் குணாதிசயங்கள்.— அவர் தம்பியின் அற்பபுத்தி.— லெகு, கிய்யார் இவர்கள் உத்தியோகத்தை இழந்து விட்டார்களென்று வதந்தி — ஊர்கணக்கு கொக்கே என்பவன் குடித்துவிட்டு, குடிசை நுழைந்தபோது, தாக்கப் பட்டான்.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 21 | 28 | சனகஸ்ஸி முலியும் | கனகராய முதலியும் |
| 191 | 30 | செவுனி வாசமுதலியை | ஜகனிவாச முதலியை |
| 215 | 26 | செஷுனி வாசல் முதலி | ஜகனிவாச முதலி |

# ஆனந்தரங்கப்பிள்ளை

## (வாழ்க்கைக் குறிப்பு)

நம் நாட்டின் வரலாற்றிலே நல்லிடம் பெறத்தக்க அறிஞர்களுள் ஒருவர் ஆனந்தரங்கப்பிள்ளை. செயற்கரிய செய்த இப்பெரியார் சென்னைக்கடுத்துள்ள பிரம்பூர் என்னும் பதியில் சருவதாரி வருடம் பங்குனி மாதம் 21ம் தேதியில் பிறந்தார்.

பிரம்பூரில் பிரசித்திவாய்ந்த குடும்பங்களில் ஒன்று திருவேங்கடப்பிள்ளை என்பாரின் குடும்பமாகும். இக் குடும்பம் செல்வத்திற் சிறந்து பெருந் திருவினையுடைய தன்றெனினும் நல்லொழுக்க நற்சீலங்களில் தலைசிறந்து நன்மதிப்பு வாய்ந்திருந்தது.

திருவேங்கடப்பிள்ளையின் மைத்துனர் நைனியப்ப பிள்ளை என்பார் புதுச்சேரியில் வசித்துவந்தார். அவரும் சென்னையை விட்டு வணிகமுறையிலே புதுச்சேரிக்குக் குடியேறி, அங்கு அரசாங்கத்தார் ஆதரவு பெற்று, நன் னிலையில் வாழ்க்கை நடத்திவந்தவராவார். தமது தொழி லாற்றத்துக்கு உறுதுணையாயிருப்பதற்காகத் தம் மைத் துனர் திருவேங்கடப்பிள்ளையைப் பிரம்பூரிலின்று புதுச் சேரிக்கு வரவழைத்துக்கொண்டார்.

ஆனந்தரங்கப்பிள்ளை பிறந்த சில ஆண்டுகளுக்குப் பின் புதுச்சேரியை உறைவிடமாகக் கொண்டுவிட்ட திருவேங் கடப்பிள்ளை, அவ்வூரில் சிறந்ததோர் நிலையை எய்தினர். ஊர் குடிமக்களின் அன்பையும், ஆதரவையும் அவர் பெற்று; அரசாங்கத்துக்கு உதவித் தரகராய் நியமிக்கப் பட்டார். பின்னர் திவானாகவும் ஆயினர்.

திருவேங்கடப்பிள்ளை தாம் மேற்கொண்ட காரியங்கள் பலவற்றிலும் தம் மைந்தர் ஆனந்தரங்கப்பிள்ளையை ஈடுபடுத்தி, அவற்றில் அவருக்குத் தேர்ச்சியுண்டாகும்படி செய்து வந்தார். அரசியற்றுறையிலுங்கூட தம் தகப்பனருக்கொப்ப, ஆனந்தரங்கப்பிள்ளை பேரனுபவம் பெறலாயினர்.

திருவேங்கடப்பிள்ளை தாம் திவானாய் இருக்கும் பொழுதே காலமாயினர். அவருக்குப்பதிலாகக் கனகராய முதலியார் என்பவர் திவான் பதவியில் அமர்த்தப்பட்டார். அவரும் சிறிதுகாலத்துக்குப் பின்னர் இறந்துபடவே, கிழக்கிந்தியா கூட்டுறவுச் சங்கத்தார் ஆனந்தரங்கப்பிள்ளையைத் திவானாக ஆக்கினர்.

ஆனந்தரங்கப்பிள்ளை திவானாக நியமனம் பெற்றபின் நாட்டு நடப்புகளிலே அதிகக் கவனம் செலுத்தி, மக்களுக்கும் அரசாங்கத்தாருக்கும் நன்மையையும், நல்லுறவையும் தேடிவருவாராயினர். இதனால் குடிமக்கள், எல்லோரும் அவரைத் தம் அதிபராகவே கருதி ஒழுகிவந்தார்கள். பிராஞ்சு கிழக்கிந்தியா கூட்டுறவுச் சங்கத்தாரும் அவர்பால் நன்மதிப்பு வைத்து அவருக்குத் தனி உரிமைகள் பல வழங்கினர் இசை முழக்கோடு பல்லக்கில் அவர் குவர்னர் மாளிகைக்குப் போகவும், தங்கப்பிடிபோட்ட கைத்தடி வைத்திருக்கவும், மிதியடியோடு அரசாங்கத்து அலுவலகங்களில் தடையின்றி நுழையவும், அவர் உரிமை பெற்றிருந்தார்.

அக்காலத்தில் தென்னாட்டிலிருந்த சிற்றரசர்களும் ஆனந்தரங்கப்பிள்ளையைப் பாராட்டுவாரானார்கள் முசபர்சங் அவருக்கு மன்சுபேதார் என்ற பட்டம் வழங்கினர்.

ஆனந்தரங்கப்பிள்ளை நாட்டுமக்களிடையே ஏற்படும் தகராறுகளைத் தீர்த்து வைப்பதுண்டு. நாள்தோறும் ஊர்ப் பொதுச்சாவடிக்குச் சென்று, அவ்விடத்தில்

ஆராய்ச்சிக்கு வருகின்ற இத்தகைய வழக்குகளை அவர் நன்றாகப் பரிசீலனைசெய்து, தீர்ப்பளித்து வந்தார். அவர் செய்யும் தீர்ப்புகளெல்லாம் இருதிறத்தாராலும் பாராட்டப்பெற்றவையாகவே இருந்தன.

புதுச்சேரிக்குப் புறம்பே உள்ள இடங்கள் பலவற்றிலும் நடக்கும் காரியங்களையும், திட்டஞ்செய்யப்படும் அரசியல் சம்பந்தமான செய்திகளையும், அப்போதைக்கப்போது அறிந்து அவற்றிற்கேற்பப் புதுச்சேரியின் நிலைமையைச் சீர்செய்யும் முறையிலே, அவர் பெரிதும் சதுரப்பாடுடையவராயிருந்தார். இதற்காக அவர் நம்பிக்கையுள்ள பல நன்மக்களை ஊர்கள்தோறும் அனுப்பி அவர்கள் வாயிலாகச் செய்திகளைக் காலதாமதமின்றியும் பிறர் அறியாவண்ணமும் பெற்றுவந்தார்.

அக்காலத்தில் புதுச்சேரிக்குக் குவர்னராய் இருந்தவர் டூய்ப்ளேக்ஸ் என்பவர் அவர் பிள்ளையவர்களின் அறிவையும், ஆற்றலையும் பலபடப் பாராட்டி, அவர்தம் உதவியைப் பெரிதும் தேடுவாராயினர் இதனால் ஆனந்தரங்கப்பிள்ளை உள்நாட்டு விஷயங்களிலும், அண்டை நாடுகளின் காரியங்களிலும் கவனம் செலுத்தவேண்டியதாயிற்று. புதுச்சேரியின் பிரதம மந்திரி என்னும்படியான நிலைமையில் அவர் எல்லா நிகழ்ச்சிகளையும் நடத்துவாரயினர்.

பிரஞ்சுக்காரருக்கும், ஆங்கிலேயருக்கும் அடிக்கடி ஏற்பட்ட போர்களிலே ஆனந்தரங்கப்பிள்ளை புத்தி நுட்பத்தோடு செய்த ஏற்பாடுகள் சாலச்சிறந்தனவாயிருந்தன. இவ்வேற்பாடுகளின் காரணமாகப் பிரஞ்சுக்காரர்கள் முன் எச்சரிக்கையாகச் சில செய்துகொள்ளவோ, அல்லது சமயம் உற்றபோது திடீரெனத் தாக்குதல்கள் புரியவோ வழியாயிற்று.

ஆனந்தரங்கப்பிள்ளை பிராஞ்சு கிழக்கிந்தியா கூட்டுறவுச் சங்கத்தாருக்குச் செய்த உதவிகளுள் சிறந்தது அவர் தம் வாணிபத்தைப் பெருகச்செய்ததேயாகும். நெசவுத் தொழிலுக்கு ஆதரவு தந்து, அத்தொழிலைப் புதுச்சேரிப் பிரதேசங்களில் வளரச்செய்து, அயலூர்களுக்கு நல்ல துணிகளை ஏராளமாக ஏற்றுமதி செய்துவந்தார். நெசவுச் சாலைகளோடு, சாயச்சாலைகளும், அச்சுச்சாலைகளும் அவர் அமைத்து, தாமே எல்லாவற்றையும் நேர்முகமாகப் பார்வையிட்டு வந்ததே அத்தொழில் வளம்பெறுவதற்குக் காரணமாயிற்று துணிகள் தரை மார்க்கமாகவும், கடல் வழியாகவும் பற்பல ஊர்களுக்கு அனுப்பப்பட்டன. தம் வர்த்தகத்திற்கெனவே **ஆனந்தப்புரவி** என்ற பெயருள்ள ஒரு கப்பலை அவர் தமக்குச் சொந்தமாய் வைத்திருந்தார். அக்கப்பலில் துணிமாத்திரமேயன்றி வேறு பல சரக்குகளும் ஏற்றி அனுப்பப்பட்டுவந்தன.

ஆனந்தரங்கப்பிள்ளை கல்வி கேள்விகளில் சிறந்தவர். அவருக்குப் பல மொழிகள் தெரிந்திருந்தன. என்றாலும், தம் சொந்த மொழியாகிய தமிழ் மொழியில் அவருக்குப் பெரும் பற்று உண்டு தமிழ் நூல்களை ஆராய்வதிலும், தமிழ்ப்புலவர்களை ஆதரிப்பதிலும் அவர் கொண்ட ஊக்கம் மிகவும் பாராட்டத்தக்கது. திருக்குறளை முற்றும் படித்து அவர் மனப்பாடஞ்செய்திருந்தார் என்று ஊகிக்க இடமுண்டு ஒருகால் அவர் சித்துக்காட்டுச் சின்னத் தம்பிமுதலியார் என்ற புலவரைச் சந்தித்து, திருக்குறள் பற்றி உரையாடினதே இதற்குச் சான்றாகும்.

பண்டைத் தமிழ் நாட்டிலே தமிழ்ப்புலவர்கள் அரசவைகளுக்குச்சென்று பாக்கள் பாடி பரிசில்கள் பெறுவதைப்போலவே, ஆனந்தரங்கப்பிள்ளையின் அவைக்குப் பல புலவர்கள் சென்று, அவரைப் புகழ்ந்து பாடி, பரிசில்கள் பல பெற்றுள்ளார்கள்.

தாமரைமலர் சூரியனை எதிர்நோக்குவதுபோலவும்' சக்கரவாகம் என்னும் பறவை சந்திரனை எதிர்நோக்கு

வதைப்போலவும், மயில்கள் மேகத்தை எதிர்நோக்குவது போலவும், அக்காலத்திய புலவர்கள் ஆனந்தரங்கப்பிள்ளையின் கையை எதிர்நோக்கிக்கொண்டிருந்தார்கள்.

அவரால் ஆதரிக்கப்பட்ட புலவர்கள் பலர் எனினும் சிறப்பாகக் குறிக்கத்தக்கவர்கள் தியாகராயப்புலவர், மதுரகவிராயர், சவ்வாதப்புலவர் முதலியவர்கள் ஆவார்கள். அவர் ஒரு புலவருக்குத் தட்டு நிறையத் தங்கக்காசுகள் கொடுத்த செய்தி அறிந்து மகிழத்தக்கது.

ஆனந்தரங்கப்பிள்ளை பேரில், இலக்கண விளக்கப் பரம்பரை சதாசிவதேசிகர் ஆனந்தரங்கக் கோவை என்ற பெயருடைய ஒரு கோவை நூல் யாத்துள்ளார். கஸ்தூரி ரங்கய்யர் என்ற ஆந்திரப்புலவர் ஒருவர் ஆனந்தரங்க ராட்சந்தமு என்ற தெலுங்கு யாப்புநூல் ஒன்று ஆக்கியுள்ளார். சீனிவாசகவி என்ற பெயருடைய மற்றொரு புலவர் ஆனந்தரங்க விஜயம் என்ற ஒரு நூலை இயற்றியுள்ளார்.

ஆனந்தரங்கப்பிள்ளை பெரிய தருமசீலர். பலவித பொதுத் தருமங்கள் அவரால் செய்யப்பட்டிருக்கின்றன. பல சத்திரம் சாவடிகள் அவர் கட்டியுள்ளார். சில கோவில்கள் எழுப்பியுள்ளார். பெருங்கோவில்கள் சிலவற்றிற்கு நிபந்தங்கள் செய்துள்ளார்.

ஆனந்தரங்கப்பிள்ளை செய்தவற்றுள் எல்லாம் பெருஞ் சிறப்பினதாய்த் திகழ்வது அவர்தம் நாட்குறிப்பேயாகும். இந்தியருக்குச் சரித்திரக் கருத்தில்லை என்று சிலர் நினைக்கலாம். அதற்குக் காரணம், ஐரோப்பியரைப் போல் நாம் நமது நாட்டு வரலாற்றை முறையாக அவ்வப்போது எழுதிவைக்காததேயாகும். அதைப் பொய்ப்பித்து விட்டார் ஆனந்தரங்கப்பிள்ளை. அவர் நாட்குறிப்பு இன்று விலை மதிக்கமுடியாத சரித்திர பொக்கிஷமாக விளங்குகிறது. பிள்ளை அவர்கள் கண்டும், கேட்டும் குறித்ததே அந் நாட்குறிப்பு. அது துய்ப்ளேக்ஸ் கால இந்தியாவைப் படம் பிடித்துக்காட்டுகிறது. அரசியல் சூழ்ச்சிகள், சமுதாய நிகழ்ச்சிகள், கலகங்கள், முற்றுகைகள், கப்பல் போக்குவரவு, வாணிப நிலை, முகல்மன்னர் நடத்தை, நவாபுதர்பார்,

ஆங்கிலேயரின் போக்கு, பிரஞ்சுக்காரரின் அரசாளும் முயற்சி, அக் காலமக்கள் பட்டபாடு, அன்னியர் அடித்த கொள்ளை, புதுச்சேரி, ஆர்க்காடு, வந்தவாசி, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, ஐதராபாத், தில்லி முதலிய இடங்களில் நடந்த சம்பவங்கள்; ம்பார்த் தந்திரங்கள், துய்ப்ளேக்ஸ், லபூர்தோனே, பராதி, லல்லிதொலாந்தால் முதலிய பிரஞ்சுத் தலைவர்கள் தன்மை வன்மைகள், அக் காலப் பிரமுகர் வரலாறுகள், நீதியுரைகள், சோதிடக் குறிப்புகள், புலமையறிவு முதலிய பலவற்றையும் அந்நாட் குறிப்பு தன் அகத்தே கொண்டிருக்கிறது. எல்லோருக்கும் புரியும் வண்ணம், அக் கருத்துக்கொண்டே, அது பச்சைத் தமிழிலே, கொச்சைத் தமிழிலே எழுதப்பட்டிருக்கிறது.

1760ம் ஆண்டில் ஆங்கிலேயர் புதுச்சேரியின்மீது படை எடுத்தனர் செஞ்சிப் பக்கமிருந்து அவர்கள் சேனை புதுச்சேரியை அணுகிவிட்டது. நகரம் கலக்கத்தில் ஆழ்ந்தது. தெற்கில் அரியாங்குப்பம் வழியாகவும் எதிரிகள் சேனை ஊரைநோக்கி நடக்கலாயிற்று. பிரஞ்சுக்காரரின் ஆற்றல் குறைவுபட்டது. நாலுபக்கங்களிலும் முற்றுகை வலுக்கவே, நகரத்து மாந்தர்க்கும், போர் வீரர்களுக்கும் உணவுப்பொருள் முட்டுப்பட்டது. ஆனந்தரங்கப்பிள்ளை மனங்கலங்கினர். அச் சமயம் அவர் நோய்வாய்ப்பட்டிருந்தார். அவர் சென்னைக்குப் பிரயாணப்படவும் முயன்றார். நோயின் காரணமாக அது முடியவில்லை. மக்கள் படும் துயரமும் நகரத்துக்கேற்பட்ட ஆபத்தும் அவர் மனவேதனையை அதிகப்படுத்திவிட்டன. போர் முடிவதற்கு நான்கு தினத்திற்குமுன், அதாவது 1761ம் ஆண்டு ஜனவரி மாதம் 11ந் தேதி, அவர் இறைவன் திருவடியை அடைந்துவிட்டார்.

ஆனந்தரங்கப்பிள்ளைக்குப் பின் அவர் சகோதரரின் மைந்தராகிய திருவேங்கடப்பிள்ளை என்பவர் பிரஞ்சுக் கிழக்கிந்திய கூட்டுறவுச் சங்கத்தில் உத்தியோகம் பெற்று பிள்ளை அவர்களைப்போலவே சீரும் சிறப்பும் அடைந்து வரலானார்.

ரா. தேசிகன்

பிரத்தியேகமான

# ஆனந்த ரங்கப்பிள்ளை (துபாஷ்)

# தினப்படி சேதி குறிப்பு

## சொஸ்த லிகிதம்

ஜோஸப் பிரான்ஸ்வா டுப்ளே பிரபு புதுச்சேரியின் கவர்னர் அவர்களுக்கு துவிபாஷி வேலையிலிருந்தவர். —

தமிழ் நள ௵ ஆவணி மாதம் 25-க்கு கிறிஸ்து.
1736, ஆண்டு செப்தெம்பர் மீ 6 ௳ வியாழக்கிழமை

காலமே எட்டு மணிக்கு கோன்சேல் பண்ணி முசே துலார்முக்கு கோன்சேல் உத்தியோகம் கொடுத்தார்கள். நாளது மத்தியானத்துக்குமேல் நாலரை மணிக்கு முசே துமெலியோ-முசே துமாஸ் குவர்னர் துரை யண்டைக்குப் போய் முசே துளோராம் எனக்குப் பிறகு கையெழுத்துப் போடுகிறதானால் நானிந்த உத்தியோகத்திலே யிருப்பேன்; இல்லாவிட்டால் எனக்கு முன்னே அவன் கையெழுத்துப் போடுகிறதானால் எனக்கு கும்பனியார் உத்தியோகம் கவையில்லையென்று சொன்னான். அதுக்கு துரையிருந்து சொன்ன உத்தரம்: கும்பனியார் எழுதியனுப்பினபடிக்கு நான் கொண்டு நடப்பிக்கவேணுமேயல்லாமல் அதைத்தள்ளி நடத்து கிறது எனக்கு ஞாயமில்லையென்று சொன்னார். அதுக்கு முசே திமிலியோர் சொன்னது: ஆனால் நீர் வந்த கப்பலிலே என்னை முசே துலேர்ம், முசே சினுருக்குப் பிறகு கையொழத்துப் போடச் சொல்லி எழுதிவர யில்லயா? அதுக்கு முசே லெனு வார் பழய குவர்னர் துரை அதிகாரியத்துக்கு கோன்சேல் பற்றி உம்முடனேசொன்ன உத்திரம் கும்பனியாருக்கு இந்தச் சங்கதிதெரியாமல் எழுதினார்கள். நாம் போய் கும்பனியார்க்குடனே கண்டு பேசி உமக்கு கும்பனியா ருடைய ஒடுதி அனுப்பிவைக்கிறோம். நீர் நடப்பிக்க இல்லை

யென்று கும்பனியார் பளுவு சுமத்தினால் அதுக்கு நாம் உத்திரவாதியாயிருக்கிறோம். நம்முடைய நாளிலே நடந்த படிக்கு முசே லெகுவுக்குப் பிறகு முசே துமேலியா, நாலாவது யிடத்து கையெழுத்துப்போடட்டுமென்று சொன்னதுக்கு உம்முட உத்திரம் அறியுறபரியந்திரம் முன் நடந்தபடிக்கு நடப்பிக்கிறோம் என்று வார்த்தைப்பாடு கொடுத்தீர். அதின் பிற்பாடு என்னை அழைப்பித்து உம்முடைய முன்பாக வைத்துக் கொண்டு இவர் எந்த மட்டுக்கும் இந்த மரியாதையுடனே நடப்பிக்கிறாரோ அந்தமட்டும் நீர் இந்த உத்தியோகத்திலேயே இரும் என சொல்லப்பட்ட, பேருக்குப் பிறகு கையெழுத்துப் போடச்சொன்னால் நீர் அந்த மட்டிலே உத்தியோகம் விட்டு விடும் என்று சொன்னாரே அதுக்கு நீர் நானந்தப்படிக்கு நடப்பிப்பேன் என்று வார்த்தைப்பாடு கொடுத்தீரே! அந்தப்படிக்கு ஒரு வருஷம் நடப்பித்தீரே ! இன்னும் பனிரெண்டு மாதம் நடத்துகிறதானால் இந்த உத்தியோகத்தில் இருக்கிறோம் இல்லாவிட்டால் எனக்கு இந்த உத்தியோகம் கனவில்லை என்று சொன்னார். அதற்கு துரை சொன்னது நீர் இப்போது இருக்கும் உத்தியோகத்திலேயே இரும். எப்போதும் சம்பளமே வாங்கிக்கொள்ளும். கையெழுத்து மட்டும் முன் சொல்லப்பட்டவர்களுக்குப் பிறகு போடும் என்று சொன்னார். எனக்குச் சாப்பாடு செலவுக்குக் குறைச்சலில்லை மானமாங்காட்டும் பெரியது என்று சொல்லி தமக்கு உத்தியோகம் தேவையில்லை யென்று சொன்னார். அதற்குத்தான் துரை உம்முடைய மனது என்று சொன்னார். முசே துமேலியோ அனுப்பிவைத்துக்கொண்டு போனார்.

ஆவணி மீ 29-ந் தேதிக்கு செப்தம்பர் மீ 10-ந் தேதி திங்கட்கிழமை காலை 8 மணிக்கு

ஆலம் பரவியிலிருந்து நவாபு அல்லி தொஸ்தீகானஸிப்பி அனுப்பின சீர்ப்பாவும் ரூபாய் முத்திரைப் பரவானாவும் வந்தது கனகஸ்ஸிமுலியும் கூட வந்தான். எதிரேபோய் அழைத்து வந்து கோட்டையிலே ஏறி பர்வானாவும் சீர்ப்பாவும் கொண்டு போனவுடனே கோட்டையிலே இருபத்தொரு பீரங்கிகள் போட்டார்கள் சீமை கப்பலிலேயும் இருபத்தொரு பீரங்கி விழுக்காடு மூணு கப்பலிலேயும் போட்டார்கள். அன்றைய தினம் மத்தியானத்துக்கு மேல் ரூபாய் போட்டுக்கொள்ளச் சொல்லிவந்த சன்னதை பல்லக்கின் பேரிலே வைத்துக்கொண்டு மேளதாள சம்பிரத்துடனே ஊர் பிரதக்ஷணம்வந்தார்கள். இந்த ரூபா முத்திரைகொடுக்கிறதுக்கு நவாப் தொஸ்தலிகானுக்கு நசர் எண்பதினாயிரம் ரூபாய் தர்பார்காசு ரூபாய் இருபத்தையாயிரம் இதல்லாமல் சுமாம் சாயபுக்கு பதினையாயிரம்

ரூபாய் ஆக—செலவு ரூபாய் நூத்திருபதினாயிரம். இதற்கு சுமார் – வராகன் நாற்பதினாயிரம். இதுபேசுகிறதுக்கு முன்னே எளியரும் மீரானும் போனபோது செலவும் வெகுமானமும் கூட எண்ணாயிரம் வராகனுக்கு உண்டு. இதல்லாமல் ரூபா முத்திரைக்குப் பிரயத்தனம் பண்ணநாள் முதல்கொண்டு செல வழிந்த திரவியம் மெத்த உண்டு ஆனால் சுமாராக எழுத லாம். தொகை தெரியாதபடியினாலே சுமாராய் எழுதுகிறதல்ல வென்று நிறுத்திப்போட்டேன்........முசே லெனுவாரானால் இவ்வளவு திரவியம் செலவழியார்......................

**புரட்டாசி மீ 21-ந் தேதி ஒக்தோபர் மீ 3-ந் தேதி புதன் கிழமை**

பத்துமணி நேரத்தில் சுங்குவாருக்கு ஒப்பந்தம் கொடுத்து பாவை கட்டு 1471-க்கு மூனுந்தர விலைப்படிக்கு சுமார் லக்ஷத்திருபதினாயிரத்து நானூத்தி தொண்ணூற்று ஒன்றரை வராகனுக்கு கொன்திராத்துலே கையெழுத்துப் போட்டு பிற்பாடு பதினொரு பீரங்கியும்போட்டு அவன் தம்பி யும் கூட கையெழுத்துப் போட்டபடியினாலே சேஷாசல செட்டிக்கு ஆறு கெஜம் சிவப்பு சகலாத்தும் டி தம்பி லக்ஷிமி பதி செட்டிக்கு ஆறுகஜம் சகலாத்தும் கொடுத்தார்கள். கிடங் குக்கு வந்த டிருபர், கனகராயமுதலி ஆனந்தரங்கப்பன் முத் தையா பிள்ளை இவர்களுக்கு எப்போதும் கொடுக்கிற வாடிக் கைப்படிக்கு சகலாத்து வெகுமானம் கொடுத்தார்கள்........

**புரட்டாசி மீ 22-ந் உ-க்கு ஒக்தோபர் மாதம் 4 உ. வியாழக் கிழமை**

பழய கும்பனி வர்த்தகர்களுக்கு கோந்திராத்து எழு தின கட்டு 1262-க்கு மூனுந்தர விலை சுமார் லக்ஷத்தி பதினை லாயிரத்து எழுநூற்றெண்பத்தஞ்சும் பணம் பத்தும் இந்தப் படிக்கு எழுதியிருக்கப்பட்ட கோந்திராத்திலே பழய கம்பனி வர்த்தகராகிய சிதம்பரசெட்டி ஆதிவராகசெட்டி முதலிய பேர் கையெழுத்துப் போட்டார்கள். ஐப்பசிமீ (ஒக்தோபர்மீ) பழய கும்பனி. வர்த்தகருக்கு—வெகுமானம் பண்ணி பதினொரு பீரங்கியும் போட்டார்கள். முன்—சுங்குவார் அவரவர்களுக்கு எப்படி வெகுமானம் பண்ணினார்களோ அந்தப்படிக்குத் தானே இவர்களும் வெகுமானம் பண்ணினார்கள்.

சேஷாத்திரி பிள்ளை மருமகன் மாதவராய பிள்ளை என்கிற வன் செங்கழுநீர்ப்பட்டு பாளையத்திலிருந்து வாலிகொண்ட புரத்துக்குப்போய் சீனிவாச பண்டிதனுடனே கூடயிருந்து சமயங்கி எழுதிக்கொண்டிருந்தவன் அவ்விடத்திலே மேக வியாதிகண்டு அதின்பேரிலே பேதியும் சோபையும் கண்டு கேவல உபத்திரவமாயிருக்கிற சேதி கேட்டு சேஷாத்திரி

பிள்ளை அவர்கள் வாலிகொண்டைக்குப்போய் தம்முடைய குமாரத்தி கனகம்மாளையும் மாதவராயபிள்ளையையும் அழைத்துக்கொண்டு புதுச்சேரிக்கு ஆவணி மீ 18உ சாயங் காலம் வந்தார்கள் ... இவ்விடத்திலே வந்தபிற்பாடு இவ் விடத்திலே இருக்கப்பட்ட வைத்தியரை அழைப்பித்துப் பார்க்குமிடத்தில் ஆயுசு அந்த மட்டானபடியினால் என்ன அவுஷதம் கொடுத்தாலும் குணமில்லாமல் ஐப்பசி மாதத்தில் ஞாயிற்றுக்கிழமை இருபது நாழிகைக்கு மாதவராயப்பிள்ளை வைகுண்டத்தை அடைந்தார். அந்தத் துக்கம் சேஷாத்திரி பிள்ளைக்கு ஒரு மிதத்திலேயில்லை. சற்று தைரியசாலி ஆனபடி யினாலே அதைரியம் காண்பியாமல்—தைரியத்துடனே யிருந்தார்.

சேஷாத்திரிபிள்ளையும், அவர் பிள்ளையும் வந்து இருந்தார் கள்—குஞ்சு குழந்தைகளும் ஐப்பிசி மாதம் 15ந்தேதி சனிக் கிழமை செங்கற்பட்டுக்குப் போனார்கள்,........ —— ——

நள ௵ கார்த்திகை மீ 24உ 1736 டிசம்பர் மீ 5உ

ஆலம் புரவியிலிருந்துவந்த தட்டாரபொட்டிப் பத்தனுக்கு கவர்னர் ஓர்—கோன்செல்காரனைவரும் கோன்சேல்பண்ணி தங்கசாலையிடவே தட்டாரவேலையிலே பாதி பொட்டிப் பத் தனுக்கும் பாதி முந்தியிருக்கப்பட்ட தட்டார வேலாயுதன் பரஞ்சோதி மற்றுமுள்ளபேருக்கும் இந்தப்படி திட்டம்பண்ணி சாயங்காலம் அஞ்சு மணிக்கு கவர்னர் துரையாகிய மூசே தும்மா வீட்டிலே இருதரத்தார்க்கும் சகலாத்து வெகுமானம் பண்ணினார்கள். மெனுகிரி பண்டிதருக்கும் அவர் குமாரனுக் கும் மோகதா தட்டான் ரமோசிக்கும் சகலாத்து வெகுமானம் பண்ணினார்கள். ஆலம்புரவியிலிருந்து வந்த பொட்டிப்பத்தன் தங்கசாலையில் உத்தியோகம் வாங்குகிறதற்கு ஆயிரம் வராகன் மாத்திரம் செலவு பண்ணினான். அந்தப்படி செலவு பண்ணினபடியினாலே கிடைச்சுதேயல்லாமல் இல்லாமல்போ னால் கிடைக்கமாட்டாது. ஆலம்புரவியிலிருந்து தங்கசாலை வர்த்தகர் முன்னிலையாயிப்படக்கி நடக்கிறபடிக்கு புதுச்சேரி தங்காசாலையும் சேஷாசலசெட்டி முகாந்திரமாய் நடக்க வேண்டுமென்று கனகராயமுதலி துரையுடனே சொல்ல அதுக்கு துரை நல்லதென்று கோன்சேல்பண்ணி சேஷாசல செட்டியை தங்கசாலைக்கு வர்த்தகனை வைக்கத்தக்கதாக நேமிச்சார்கள். சேஷாசலசெட்டிக்கு பங்கு 2, கனகராய முதலிக்கு பங்கு 1, இந்தப்படிக்கு இவர்கள் உள்பேச்சுப் பேசிக்கொண்டு வெளிக்கு அதை சேஷாசலசெட்டி என் பிச்சு கனகராயமுதலி உளவாய் இருந்து நடத்துகிறான். கனக ராயமுதலி தன் மனதிலேதான் பங்கு இருக்கிறது, ஒருவருக்

கும் தெரியாதென்னும் போலவே எண்ணிக்கொண்டிருக்கிறான். அவன் இப்படி எண்ணிக்கொண்டிருந்தாலும் ஊரிலே இருக்கப்பட்ட ஜனங்களனைவரும் இவன் பங்கு என்கிறதுதானறிவார்கள். மொசியோ லெனுவார் குவர்னருடைய நானாலும் சேஷாசலசெட்டியை தங்கசாலைக்கு வர்த்தகனாக வைக்கப்போகிறதில்லை. கனகராயமுதலி அச்சமில்லாமல்பங்கு இருக்கப்போகிறதுமில்லை. இப்போதிருக்கிற மூசே ஜம்மா கெட்டிக்காரனல்லாததினாலே அவனுக்குச் சம்மதியானபடிக்கெல்லாம் நடந்தேறிப்போகிறது.

நள மார்கழி மீ 16 தேதிக்கு 1736 தெசம்பர் மீ 26உ புதன் கிழமை

காலமே 10 மணிக்கு கோன்சேல்பண்ணி தங்கசாலைக்கு வர்த்தகனாக நேமிச்சார்கள். சங்கு சேஷாசலசெட்டிக்கும் திருவீதி பாலு செட்டி மனுஷன் சலது வேங்கடாஜலசெட்டிக்கு பங்கிலாவது தன் பேரிலே கும்பினியிலே கொடுக்கிற வெள்ளிக்கு ரூபாய் போட்டு கொடுக்கச்சொல்லித் தீர்த்தார்கள். கனகராயமுதலிக்கு முன்போலே மூணுத்தொருபங்கு. அது துரை மாத்திரம் அறிந்திருப்பர். மற்றப்பேர் அறியார்கள். மற்ற ஊரிலே இருக்கிறவர்களெல்லா மறிவார்கள் கோன்செல்காரிலேயும் இரண்டொருத்தர் அறிந்திருப்பார்கள். மற்றப்படி சேருக்கு இத்தனை ரூபா கொடுக்கிறதென தீர்த்ததில்லை. முன் திருவீதி பாலுசெட்டிக்கும் குமாஸ்தாவுக்கும் இரண்டு பங்கல்லோ எழுதினது. அந்த இரண்டு பங்கிலே குண்டூரி வெங்கண்ணசெட்டி தம்பி பாலுசெட்டிக்கு ஒரு பங்கும், திருவீதி பாலுசெட்டிக்கும் வேங்கடாசலசெட்டிக்கும் மற்றொரு பங்கும் இந்தப்படியாக கோன்சேலிலே தீர்த்தார்கள். ஜனவரி விடுமுறை பண்டிகை போனபிறகு கையெழுத்துப்போடுவார்கள்.

1736ம் ஆண்டு டிசம்பர் மீ நள ஞூ மார்கழி மீ 1 உ தங்கசாலை கணக்கு, ரூபாய்முத்திரை வந்தவுடனே கும்பனியார் மேலுகிரி பண்டிதரை அழைப்பிச்சு சிறிது வெள்ளி கொடுத்து ரூபாய் போடச்சொன்னார்கள். அதுக்கு அவர் கும்பனியாருக்குப் போட்டுக் கொடுத்தவயணம் ..................

வெள்ளி (Dollars பத்தருக்கு சேர் 2100 க்கு செலவு தள்ளாமல் கண்ட ரூபாய்...49173 12|5 இதில் பலமாறு ஆயிரம் கலப்பாயிருக்கிறது, ஆனபடியினாலே சேர்100-க்கு விழுபடி ரூபாய் 2341 9/16——பத்தருக்கு குறுசுகூ சேர் 100க்கு கண்டு முதல் ரூபாய் 2343 1/8———இதுக்குள் தங்கசாலை கழிவி ஆணிக்காரன் தட்டாரரசலக்கு குரவனுக்கு உள்பட 1000 க்கு ரூபாய் 16 விழுக்காடு தள்ளிக்கொடுத்து மற்றதும் எடுத்துக்கொள்ளுகிற சட்டம் இப்படி கண்டு முதலிக்கும்

குவர்னர் துரை மூசே ஆம்மா, சேஷாசலசெட்டி, கனகராய முதலி திருவீதி பாலுசெட்டி குமாஸ்தா நாலாவது வேங்கடாசல செட்டி குண்டுரி வெங்கண்ணசெட்டிக்குத் தீத்துக்கொடுத்த வயணம்—குரூசு பத்தருக்கு சேர் 100க்கு......ரூபா 2335... இதுக்கு கும்பினியார் வர்த்தகருக்கு துரட்டிக்குத் தள்ளி ..... 1000-க்கு 16 விழுக்காடு இந்தப்படிக்கு வர்த்தகங்கோட்டைக்கு 1000-க்கு கூலி 16 விழுக்காடு தள்ளிக்கொண்டு...... வருகிற வெள்ளி எல்லாம் ரூபாய் போட்டுவிச்சுக் கொடுக்கிறது. இந்தப்படி மூன்று வருஷத்திற்கு வர்த்தகருக்கு பங்கு வயணம்..................

சங்கு சேஷாசலசெட்டிக்கு...........பங்கு 3...

கனகராய முதலிக்கு... ..................,பங்கு 1...

திருவீதி பாலுசெட்டிக்கு...... ...... ..பங்கு ½...

குண்டுரி வெங்கண்ணசெட்டிக்கு...,பங்கு ½...

ஆக பங்கு அஞ்சின்பேரிலே கோட்டைக் கும்பனிக்குப் போட வேண்டிய ரூபாயும் படுத்திகுவேர் வர்த்தகருக்குத் தேவையான ரூபாயும்... போட்டுக் கொடுக்கிறது.

செலவு கூலி வயணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தட்டாருக்கும், அரிப்புக்காரருக்கும் கூலி...ரூபா '4 | | | | | |
| தட்டாருக்கு | ... | ... | ... | ... | ரூபா 13 5/32 |
| அரிப்புக்காரர் | ... | ... | ... | ... | ரூபா 2 1/32 |
| ஆணிக்காரனுக்கு | | ... | ... | ... | ரூபா 1 1/4 |
| கனகராயமுதலிக்கு பெரிய துவிபாஷ்தனத்துக்கு | | | | | ரூபா 1/2 |
| பாண்டக்காரனுக்கு | | ... | ... | ... | ரூபா 1/8 |
| தர்மத்திற்கு | | ... | ... | ... | ரூபா 1/8 |
| ஆக செலவு | ... | 1000-க்கு ரூபா | | ... | 16 |

**கூலி முன்சரிபடுத்தி தள்ளுபடிக்கு**

முன் மேலுகிரிபண்டிதர் ஆணிக்காரனுக்கு நடந்தது ரூபாய் 2. 1/2 க்கு துரை தள்ளிப்போட்டது ரூபாய் ... 1¼
முளைக்காரருக்கு தள்ளு ரூபாய் ... ... ... ¼
ஆக முன்னுக்கு இப்போது தள்ளு ரூபாய் ... ... 1½

நள ஷு மார்கழி மீ 1736 டிசம்பர் மீ

முன்னுக்கு இப்போது தனம்

கனகராயமுதலியாருக்கு ரூபாய் ... ... ... ⅛
பாளையக்காரருக்கு ரூபாய் ... ... ... ½
தர்மத்துக்கு ரூபாய் ... ... ... ⅛
ஆக முன்னுக்கு இப்போது தனச்செலவு கூலி ரூபாய் .. ¾

ரூபாய் முத்திரை வந்தவுடனே மேலுகிரி பண்டிதர் கையில் நூறு சேர் வெள்ளி கொடுத்து ரூபாய் என்ன காணு மென்று முசே லெகுவும் முசே தும்மா குவர்னர் துரை அவர்கள் முஸ்த்தீது பண்ணி அந்த வெள்ளியை ரூபா போடுவிச்சு கண்டு முதல் கணக்கு எழுதிவிக்கச் சொல்லிச்சொல்ல அந்தப் படிக்கே வெள்ளியை ரூபா போடுவிச்சு முசே லெகுவுக்கு மேலுகிரி பண்டிதர் எழுதின கணக்கு.

**கணக்கு வயணம்**

பத்தருக்கு வெள்ளி சேர் 100-க்கு ரூபாய் ... 2343 1/8
ஈயத்திலே கூடிவரும் என்று எழுதிவச்சது சேர்த்த தற்கு ரூபாய் ... ... 3/32
சேர்ந்து ரூபாய் ... ... 9. 3/8
ஆகசேர் 100 க்கு ரூபாய் ... ... 2352 1/2

1000 க்கு செலவு 16 விழுக்காடு தள்ளிப்போடவேண்டு மென்று இந்தப்படிக்கு முசே லெகுவுக்கு மேலுகிரிபண்டிதர் எழுதிவைத்தார். 100 சேர் வெள்ளிக்கு மேலுகிரி பண்டிதர் இரண்டாயிரத்தி முன்னூத்தி அன்பத்திரண்டரை ரூபா காணுமென்று எழுதி கொடுத்திருக்க, ரூபாயும் அன்பதினாயி ரம் மட்டும் போட்டுக் கொடுத்திருக்க, வர்த்தகருக்கு 100 சேர் வெள்ளிக்கு இரண்டாயிரத்தி முன்னூத்திமுப்பத்தைந்து

ரூபாயாக மூசே தும்மாவும் மற்றுமுள்ள கோன்சேல் யாவர்களும் எப்படித் தீர்த்துக் கொடுத்தார்களோ தெரியாது நூறு (100) சேர்வெள்ளிக்கு பதினேழுரை ரூபாய் திருமுருகா யிருக்கச்செ என்னமா யோசனை பண்ணிக்கொடுத்தார்களோ தெரியாது.

இதுக்கு மூசிசே தும்மா குவர்னர் துரைக்கு இந்தக் காரியம் செய்து கொடுத்ததுக்கு வர்த்தகர் அஞ்சு பங்குகளுக்குள் 400 வராகனுக அஞ்சு பங்குக்கும் கொடுத்த பரிதானம் வராகன் 2000 இந்த வராகன் இரண்டாயிரமும் துரைகையில் கொடுக்கக்கொண்டு இந்தக் காரியம் அவர்களுக்கு அனுகூலம் பண்ணிக்கொடுத்தார்.

வர்த்தகர் வெள்ளி வாங்கிப் போய் ரூபாய்யோடு விச்சு மூசே லெகுவுக்கு செலுத்தினது.

1737 ஞு ஜனவரி மீ 4 வ நள ஞு மார்கழி மீ 25

பத்தருக்கு சேர் 224 வி ராகனிடை 65-க்கு சேர் 100-க்கு ரூபா......2335

ஆக கூடின ரூபாய் 5259. 11|16 ... ... ... ...

ரெண்டு குலானு போட்டிருக்கிறனும காசு ... ...

பத்தருக்கு சேர் 100-க்கு ரூபாய் ... 23|8 ...

ஆகசேர் 324-க்கு கூடின ரூபாய் ... 7567 1|16 ...

இதுக்கு கூலிக்கு பிடிச்சுக்கொண்டது 1000-க்கு ரூபாய் 16 ஆக ...

ரூபாய் 121 1|16 போக நீக்கி ரூபாய் மூசே லெகுவுக்கு செலுத்து ரூ. ... .. 7446 ...

## 1737 வரு நள ஞு

நள வரு தை மீ 6வ

ஆனந்தரங்கப்பன், மக்காவுக்குப்போகிற இமாம்சாயபும் மூசே தும்மாவும் குவர்னர்துரையும் கூட்டாய் அனுப்புகிற லெமோர் என்கிற கப்பலுக்கு அரம் சாமுக்கும் சில்லரைக்காரருக்கும் கூடின சரக்கை கட்டுப் போடுவிச்சு கப்பலுக்கு ஏத்துவிச்சு கப்பல் பயணம் பண்ணி அனுப்பத்தக்கதாக பரங்கிப்பேட்டைக்குப் பயணம் போனுன்.

ஜனவரி மீ 30 வ தை மீ 21 வ

மக்காவுக்குப் போகிற லெமொரா கப்பல் சரக்கெல்லாம் ஏத்திக்கொண்டு மூசே கபிரியேல்தும்மாவும், மூசே லப்பிரிங்கிரியும்

நாளது ௵ புதவாரம் நாள் சாயங்காலம் அஞ்சு மணிக்குப் பரங்கிப்பேட்டையிலிருந்து சலங்கின்பேரிலேறி கப்பல்மேல் போய் ஏறினார்கள், கப்பல் மறுநாள் வியாழக்கிழமை பத்து மணி நேரமட்டும் காற்று இல்லாமல் ஓசந்து நடந்து அதுக்கு மேல் மறைஞ்சு போச்சுது

மாசி ௴ 21 ௳

வியாழக்கிழமை இராத்திரி ஒன்பது மணிக்கு ஆனந்தரங்கப்பன் பரங்கிப்பேட்டையிலிருந்து புதுச்சேரி வந்துசேர்ந்தான்.

வெள்ளிக்கிழமை 22-ந் தேதி மாசி ௴ (முதல் தேதி மார்ச்சு ௴ 1737 ௵

மறுநாள் காலை மூசே சிஞோர் வீட்டுக்குப் போன விதத்திலே மூசே சிஞோர் சொன்ன சேதி : கப்பல் போய் ஒரு மாதமாய் வராதுபோன தென்னகாரணம் என்று காணபிச்சுக் கொண்டார். அதன்பேரில் ஒரு மாதமாய் கனகராயமுதலியார் கிரிழிவுகண்டு வமட்டையாய் வீட்டிலே படுத்துக்கொண்டு இருக்கிறானே இவன் இனிமேல் கடைத்தேறமாட்டான், என்றும் அந்த இடம் வரும் — அதுக்குச் சந்தேகமில்லை. ஆனால் நாலுநாள் முன்னது பின்னது என்று சொல்லி துரை அண்டைக்குப்போகிறபோது அவன் அப்படிப்பட்டத்தக்கதாக போகவரயிருப்பதால்லாமல் அவனுடையவும்—பேசச்செய்யும் அவன் அதநத்துப்போக பேசவேணும் என்று அனுப்பியும் பலவிதமாயிருக்கிற யோசனையும் சொன்னார். அதன்பேரில் மூசே குவர்னர் துரை மூசே துமாவைக் கண்டு பேசி மற்று முள்ள கோன்செல்பேரையும் கண்டு பேசி மூசே தும்மாவையும் திரும்பியும் கண்டு பேசி அதின் பிற்பாடு துமோராம் என்னை அழைத்து ரங்கப்பன் பேத்துருக்கு எப்படி யிருக்கிறது அந்த நீர்வியாதியென்று கேட்டான் ..... அந்த வியாதி லக்ஷணம் சுவஸ்தப்படுகிறதில்லை நாலுநாள் சவுகரியம்போல் யிருக்கு. மறுபடியும் காணும் அப்படித்தான் இப்போ யிருக்கிற சாடையென்று சொன்னேன். அந்த இடம் உனக்குவரும் அதுக்குச் சந்தேகமில்லை. நாமும் துரையும் அப்படித்தான் என்று யோசனை பண்ணியிருக்கிறோம் என்றும் சுவாமியும் அப்படித்தானே தயவுபண்ணியிருக்கிறார். கெட்டியாய் அந்தப்படி நடக்கும் என்று சொன்னார். அதுக்கு நான் உபசாரஞ் சொல்லி அனுப்பிவிச்சுக்கொண்டு வந்தனன்.

எனக்கு 16௳ பரங்கிப்பேட்டையிலிருந்து சிறிது சரக்கு காங்கு வந்து இருபது கட்டு போட்டுக்கொண்டார் மூசே தும்மா

1737. மார்ச்சு ௴ 20 ௳ நள ௵ பங்குனி ௴ 11 ௳

மணிலாவுக்குப்போகிற சங்கரபாரிக்கு என்கிற கப்பல் மணிலாவுக்கு ஏத்தவேண்டிய கட்டுகள் ஏத்திக்கொண்டு சென்

னப்பட்டினத்தில் வேண்டியிருக்கிற மெல்லிசு வம்பாத்து சிட்டைகளைக் கட்டுப்போட்டுக்கொண்டு இருக்கிறதை ஏத்திக் கொள்ளத்தக்கதாக பயணம் முஸ்தீப்பாய் மூசே துபுவாய்ரு செல்லியார். மூசே திரிவாய், கப்பித்தேன் மூசே மகேதெல்லா வீல்லபாகு, தமிழ் கப்பித்தான் லூயிஸ் பிரகாசம் கேள்வியாய் அப்போ கனகராய முதலி மைத்துனன் செகன்னிவாச முதலி இவர்கள் இந்நாள் மயிலாபுர துறைக்குப் போகிற சங்கரபாரிக்கு என்கிற கப்பலின் பேரில் பயணமாய் ஏறினார்கள். கப்பலும் பாயெடுத்து மயிலாபுரத் துறைவைத்து பிடித்து அவ்விடத்துக் கட்டை ஏத்திக்கொண்டு அவ்விடத்தி லிருந்து மணிலாவுக்கு பங்குனி மீ 18 உ (ஷி ஹ 1737 மார்ச்சு மீ 27-ந் உ) பாயெடுத்து ஓடிப்போனான்...பங்குனி மீ 19உ மயிலாப்புரத்து துறையிலிருந்து மூசே துபுவாய் மூசே தும்மாவுக்குக் கடுதாசி எழுதி அனுப்பினான். அந்தக் கடுதாசியைப்பார்த்தவுடனே கூடலூர் துபாஷி. நயினியப்பன் என்னிடத்திற்கு அனுப்பி அழைத்து வரச்சொன்னார் நான் போய் கண்டுபேசினேன். மூசே தும்மா என்னைக் கேட்ட வயனம் மூசே துப்புவா மயிலாபுரத்துறையிலிருந்து ஒரு கடுதாசி எழுதினார். அந்தக் கடுதாசியில் என்ன யென்றால் நம்மது கூடலூரிலிருந்து வந்தது என்று நாலு கட்டு எழுதிவிச்சு அந்த நாலுகட்டுக்கும் பகத்தூராவாங்கிக்கொண்டதாயும் அந்த நாலு கட்டும் கப்பல் லீவுரு-மேலேயும் காண்பிக்கயில்லை கப்பல் ரசீதும் காண்பிக்கயில்லையாம். அந்தக் கட்டு ஏத்தினது பொய்தானோ அந்த வயனம் என்னவென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது அவர் இப்படி யெழுகிறத்துக்கு என்ன ஞாயம் இருக்கிறது? ஆனால், நடந்த சேதியெல்லாம் சொல்லுகிறேன் தேவரீர் தயவுபண்ணிக்கொள்ளும் என்று சொல்லி கூடலூரிலிருந்து சலங்கின் பேரிலே கட்டுவந்ததும் கட்டுமரக்காரன் வந்து கபுறு சொன்னதும் சாமய்யன் மூசே லவீல்லபாகு அண்டைக்கு அனுப்பி, கட்டு ஏத்திக்கொள்ளச்சொல்லி கப்பல் ஒபிஎபியேமார்க்கு கடுதாசி கேட்டதும், அவர் கடுதாசி கொடுத்ததும் அந்த கடுதாசியை கட்டுமரக்காரன் கையிலே கொடுத்து செலங்கிலே கொடுத்து செலங்கையும்கூட அழைத்துக்கொண்டுபோய், கட்டை கப்பலின்பேரிலே ஏத்திவிட்டும் ஏத்திக்கொண்ட ரசீது வாங்கிவரச்சொல்லி கட்டுமரக்காரனுடனே சொல்லி அனுப்பினதும் அவன் அத்தப்படிக்கு சலங்கை கப்பலுக்கு அழைத்துப்போய் நாலு கட்டையும் ஏத்திவிட்டு, கட்டு ஏத்திக்கொண்ட ரசீது கடுதாசியைக் கட்டுமரக்காரன் வாங்கிக்கொண்டு, சலங்குக்காரனை கூடலூரே போய்விடச்சொல்லி ரசீதைக் கொண்டுவந்து என்கையிலே கொடுத்து, தன் கூலியை வாங்கிக்கொண்டு கட்டுமரக்காரன் போய்விட்டான்.

## நள ௵ பங்குனி ௴ 1737 ௵ மார்ச்சு ௴.

பங்குனி ௴ 18உ மார்ச்சு ௴ 27உ அந்த ரசீதை எடுத்துக் கொண்டு மறுநாள் முசே தீபுவாய்ருசெல்லியோர் கையில் கொடுத்து, கட்டு மாலை கணக்கு எழுதிவிச்சு அவர் எழுதின பகதூரிலே அவரும் முசே லவீல்பாரும் கையெழுத்துப்போட்டு என்கையிலே பகதூர் கொடுத்தார்கள் கப்பலிலேயிருந்து வந்த ரசீதிலேயிருந்த மார்க்குப்படிக்கு பகதூர் மேலே எழுதின தென்றும் இந்தச்சேதியெல்லாம் முசே தூம்மாவுடன் சொன் னேன் இப்படியெல்லாம் நடந்திருக்க அவன் கையெழுத்துக கடுதாசி உன்கையிலே இருக்கிறபடியினாலே நீர் யோசனை பண்ணக்கவையில்லை என்று சொன்னான் இந்தச்சேதியை நான் முசே துமெலியோ, முசே பிரேஞோர், முசே துலோர்ம் இவர்களு டனே முசே தீபுவா மயிலாபுரத்துறையிலிருந்து எனக்கு அனுப்பின கடுதாசியும் காண்பிச்சு நடந்தசேதியும் சொன் னேன். அவர்கள் சொன்னது இப்படி எல்லாம் நடந்திருக் கச்சே, ஆலோசனை என்னயிருக்கிறது என்று சொன்னார்கள் மறுநாள் துரை கடற்கரை ஐய்யாமாரை அழைப்பிச்சு மனிலா கப்பலின் பேரிலே ஏறி கட்டுகளுக்கு கணக்கு இருக் கிறதா என்றுகேட்க அவர்கள் பரங்கிப்பேட்டை துறையிலி ருந்து வந்து ஏறினகட்டுகளும் கூடலூரிலிருந்து வந்து ஏறின கட்டுகளும் புதுச்சேரியிலே ஏறின கட்டுகளும் எழுதிச்சொன் னார்கள். கூடலூர்த் துறையிலிருந்து ஏறின கட்டிலேரங்கப் பன் கட்டுநாலு என்று எழுதி இருந்தது. அதைப்பார்த்துக் கொண்ட பிற்பாடு துரைக்கு விசிறப்பட்டது.

நள ௵ பங்குனி ௴ 18 உ பதிவு முன்காலைக்கு 1737 ௵ மார்ச்சு ௴ 15 உ சாயங்காலம் சீனத்துக்குப் போயிருந்த சபெ னிக்ஸ் என்கிற கப்பல் வந்தது துறைபிடிச்சு சொடி கிரகா ரக்கு முசே செஞ்சாவோர் முசே பிறிஞோமும் கப்பல் கப்பித் தான் முசே தெசர்தானும் அஞ்சு மணிக்கு இறங்கினார்கள், சீனத்துச்சரக்கு இந்தக் கப்பலிலே வந்தது முசே செஞ்சவோர் சொன்னது: அரம் சாமுக்கு வந்த சரக்கு மதிப்புசொன் னது....................

வெள்ளை சர்க்கரை பாரம்—125-க்கு—பிக்கல்——500.....

வெள்ளை கற்கண்டு—பாரம் 250-க்கு—-பிக்கல்......1000...

துத்திநாகம்.............பாரம் 1025-க்கு...பிக்கல்......4100...

ஆலத்தி கர்ப்பூரம் ..................................பிக்கல்..................

ரசம்...................................................பிக்கல்...3½......

பட்டு சுருட்டு நாலுவிதமும்..............................................
பீங்கான்கள் நாலுவிதம்..............................................
தேப்பெட்டிகள்..............................................

இதல்லாமல் கப்பல் கப்பித்தான், சின்ன கப்பித்தான் மத்து முள்ள ஓபிசியே மார்களும் உண்டு, அதுவும் பதிநயிரம் வராகன் கொண்டதுபோலே காணுது..........ஊர்சிதமாய் எழுதப்பட்டது....................

பங்குனி மீ 6 ௨ மார்ச்சு மீ 15 ௨ சீனத்திலே பிராஞ்சுக் காரருக்கு நடந்த சேதியை சீனத்து கப்பலிலே வந்தவர்கள் சொன்னது என்னவென்றால் சீமையிலிருந்து சீனத்துக்கு வந்திருந்த சீமை கப்பல் கப்பித்தான் முசே மொர்லே என்கிறவன் அண்டையிலிருக்கிற வெள்ளைக்காரன் வேட்டைக்குப் போகிறத்துக்கு துப்பாக்கியிலே குண்டு போட்டு கெட்டிச்சுக் கொண்டுபோகச்சே ஊர் எசமான் (அவர்கள்பேர் வெனுசு என்றும் சொல்லுகிறார்கள்.) அவருடைய குமாரன்மேல் வீட்டின் மேலே யிருந்தவன்..............

*பீங்கள ௵ வைகாசி மீ 4 ந் தேதி 1737 ௵ மே மீ 13 ந் தேதி*

திங்கட்கிழமை காலமே சென்னப்பட்டணத்திற்கு வந்த சீமை கப்பலிலேயிருந்து முன் இவ்விடத்திலிருந்து குவர்னர் துரை எத்தனம் பண்ணி சீமைக்குப்போன முசே லெனுவார் அவர்களுடைய கடுதாசிவந்ததும் அந்த ஆள் பரியிலே போய் சேர்ந்ததும் அவ்விடத்திலே தமக்கு திரெக்த்தர்த்தனம். வந்த சேதி எழுதின காகிதம் கடுதாசிகள் சின்னதுரை முசியே தெலோர்முக்கு ஒரு கடுதாசியும் மேற்படி தாயாதி முசே திமெலியோர் அவர்களுக்கும் ஒரு கடிதாசியும் எழுதிவந்தது அந்தக் கடுதாசியிலே எழுதியிருந்த வயனம்...... 1736 ஆண்டு மே மீ 9 ந்தேதி தாம் லா ஓரியாம் போய் சேர்ந்ததும் அவ்விடத்திலேயிருந்து வேலை பார்க்கிற திரெக்தோரைக்கண்டு பேசின பிற்பாடு அவ்விடம்விட்டு சூன் மீ 2 ந்தேதி பரீசு போய்ச்சேர்ந்தோம் என்கிறதும், அப்பால் பரீசு என்கிற 100 சதானியப்பட்டணத்திலே யிருக்கிற கும்பனியர் திரெக்தேரவர்களைக் கண்டு பேசினதும், நாளது மீ 9 ந் தேதி கும்பெனிக்கு திரெக்தேரனைவரும் தம்மையும் அந்த பங்கிலே சேர்த்துக்கொண்டு தமக்கு திரெக்தேர் உத்தியோகம் கொடுத்து தாமும் திரெக்தேரானதும், தம்முடைய அண்ணன் தம்பி தம்முடைய சம்சாரங்கள் நன்றாயிருக்கிற சேதியும் இந்த வருஷத்திற்கு கும்பனியார் புதுச்சேரிக்கு நாலு கப்பலும் வங்காளத்துக்கு மூணு கப்பலும் ஆக ஏழு கப்பல் வருகிறதென்றும், அதிலே அக்தோபர் மீ த்து கடைசியிலே இரண்டு கப்பல் புறப்படுதென்றும், மத்தது சனெ

வரி மீ -க்குள்ளாக புறப்படு தென்றும் இப்படியாக எழுதினர். இதல்லாமல் முசே திமிலியேரை உமக்குச் சம்மதியிருந்தால் எப்போதும் உத்தியோகத்திலேயே இருக்கச் சொல்லியும் அல்லது உமக்கு அவ்விடத்திலே இருக்கிறதற்குச் சம்மதியில்லாமல் போனால் உம்முடைய மனதுக்குச் சம்மதியாயிருக்கிறபடிக்கு வரலாம் என்று யிப்படியாக எழுதி நீர் வருகிறதுக்குச் சம்மதியாயிருந்தால் நீர் வரும்போது முசே தும்மாவை பொர்குரதோர் பண்ணிவரச் சொல்லி எழுதினர். இந்தக்கடுதாசி வந்தவுடனே நானும் வாசுதேவய்யனும் போனோம் என்கையிலே கொடுத்து படிக்கச் சொன்னர்.

நாளது ஞாயிற்று திங்கட்கிழமை சாயங்காலம் தம்பி திருவேங்கடம் சென்னைப்பட்டணத்துக்குப் போனன் அவன் போன காரியம் யின்னதென்று எழுதவேணுமென்ருல் ரொம்ப கடுதாசியும் செல்லும் இந்த வேளையிலே எழுதுகிறது மல்ல அதை சுமாராக்குகிறதுமல்ல. அது இன்னம் சிறிது நாள் போனவுடனே எழுதவேண்டியது.

### சூன் மாதம் 15உக்கு ஆனி மீ 5ந் தேதி

சீமையிலிருந்து புலிப்போர் என்கிற கப்பல் இரண்டு மணிக்கு பகலுக்கு மேலாக வந்தது. கப்பல் கப்பித்தான் முசே லசார் என்கிறவன் இந்தக் கப்பல் பங்காளத்துக்குப் போகிற கப்பலானபடியினலே இந்த கப்பலிலே வந்த தொண்ணூத்து நாலு பெட்டி வெள்ளியையும் இறக்கி ரூபாய் போடச்சொல்லி தங்கசாலையிலே விலைகள் இது தொகை முப்பதினயிரம் மார்க்கு இது ரூபாய் போட்டு ஆனவுடனே இந்தக் கப்பல் பங்காளத்துக்குப் போகும் இந்த கப்பலிலே வந்த கடுதாசி புதுச்சேரி கொன்செலுக்கு வந்ததை நாளது சாயங்காலம் அஞ்சு மணிக்கு முசே தும்மா குவர்னர் துரை வீட்டிலே கோன்செல் கூடி கும்பினியார் கோன்செலுக்கு அனுப்பின கடிதாசியைப் பார்த்தவுடனே அதிலே முசே துலாரென்பரும் முசே ஷொசியும் இந்த இரண்டு பேரும் தவிர மத்தப்பேர் எழுதியிருந்தபடியினலே இவர்களை கோன்செயிலே இருக்கவேண்டாமென்று துரை போகச் சொன்னபடியினலே முசே துலோராமும் முசே ஷொசியும் இரண்டு பேரும் எழுந்துவந்துவிட்டார்கள். அதின் பிற்பாடு மற்ற கோன்செலியேரும் துரையும் இருந்து கடுதாசிகள்பார்த்து கோன்செல் கலைஞ்சு வெளியே புறப்பட்டவுடனே துரை தம் முட சொந்தத்துக்கு வந்த கடுதாசியை அவிழ்த்துப் படித்துப் பார்க்க, முசெ துலேராமையும் முசே ஷொசியையும் உமக்குச் சம்மதியாயிருக்கிறதை வைத்துக்கொள்ளலாம் போலே யிருந்தால் வைத்துக்கொள்ளச் சொல்லி எழுதியிருந்தபடியினலே, முசே திமிலியேரும் உத்தர . விட்டிருக்கிறபடியி

ஞலேயும், முசே துலோராம் சின்னதுரை இவர்கள் இரண்டு பேரும் சீமைக்குப் போகிறபடியினாலேயும். வேறே இவ்வளவு கெட்டிக்காரர் இல்லாதபடியினாலேயும், துரையிவர்கள் பேரிலே பட்சமானபடியினாலேயும், துரையிவர்களைத் தானே வைத்துக் கொண்டார். இந்தச்சேதி வெளிக்குத் தெரியாதபடியினாலே அவரவர்கள் சரிப்போனாப்போலே சொல்லுவார்கள். இப்போது மேலே எழுதியிருக்கப்பட்ட சேதி உண்மை. இப்போது நமக்கு ஆஸ்பிதமாயிருக்கின்ற கோசெல்காரர் நமக்குச் சொன்னபடியினாலே உண்மையான சேதி வெளிப்பட்டது. இந்த வருஷம் கும்பனியார் அனுப்பின கடுதாசி சீமையிலே எழுதுகிறபோது முசே லெனுவார் அவ்விடத்திலேயில்லை. அவர் லொரியாமிலே கும்பனியார் சரக்கு விக்கவந்த படியினாலே கும்பனியார் இந்தியக்கரைக்கு அனுப்புகிற கடுதாசியை எழுதும்போது முசே லெனுவார் இல்லாததினாலே இப்போது வந்த கும்பனியார் கடுதாசியிலே அவர் கையெழுத்துப் போட்டு யிருக்க இல்லை. இந்த ஊருக்கு என்று புறப்பட்ட கப்பல் பிந்திப்போச்சு. அந்தக்கப்பல் இரண்டு மூனு நாளையிலே காணுமென்று இந்தக் கப்பல்காரர்கள் சொன்னார்கள்.

இந்தக்கப்பலிலே முசே லெனுவார் கடுதாசி ஒருத்தருக்கும் வரயில்லை.

1737 ஆண்டு ஜூலை மாதம் 17-ந் தேதிக்கு பிங்கள வருஷம் ஆனி மீ 7–தேதி

திங்கட்கிழமை சாயங்காலம் இரண்டு மணிக்கு தூக்தெபூர்போம் என்கிற கப்பல் வந்தது இந்தக்கப்பல் கப்பித்தான் மறக்கிசாக்கு என்கிறவன் வந்தான். இந்த கப்பலின் பேரிலே புதுச்சேரிக்கு இரண்டுபேரும் இறங்கினவுடனே கோட்டையிலே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள் அவர்களும் துரை வீட்டுக்கு வந்து கும்பனியார் கொடுத்த கடுகாசியை துரை கையிலே கொடுத்தார். அதின் பிற்பாடு முசே தீருவாய் முசே கொர்த்சியே வீட்டில் போய் தங்கினார். அவன் வியாதிஸ்தனாய் வந்தான். கும்பனியார் கடுதாசியிலே எழுதியிருக்கிற வயனம் முன் பிலிப்போ என்கிற கப்பலின் பேரில் வந்த கடுதாசி வயனப்படிக்கு யிருக்குமே ஆனபடியினாலே வேறே ஒரு விந்தையும் இல்லை முசே தீருவாய் இவ்விடத்துக்கு வந்து கோன்செலியூராயிருக்கிறபோது பங்காளத்து திரெக்தெராவது அல்லது மாயே திரேக்தேரிடத்துக்கு வேறே ஒருத்தரை அனுப்பவேணுமானால் முசே திருவாயை அனுப்பச் சொல்லிகும்பனியார் ஒடுதிகொடுத்து அனுப்பியிருக்கிறார்கள்

கும்பனியார் இந்தக கப்பலிலே புதுச்சேரிக்கு அனுப்பின வெள்ளி மார்க்கு 30000 இப்போதிருக்கிற வெள்ளி மார்க்கு

சேர் 1-க்கு விலை வராகன் 7, பணம் 5. முதல்கொண்டு வராகன் 7-ம் பணம் 6 மட்டுக்கும் விற்கிறார்கள், முன்வந்த பிலிப் பேர் என்கிற கப்பலிலேயும் தூக்தெபூர்போம் என்கிற கப்பலிலேயும் பவழப்பெட்டி 34-ம் சகலாத்து நானாவித தினுசும் பொன் கலாம் வெள்ளி கலாம் சாராயம் பின்னேயும் சீமையிலிருந்து வரப்பட்ட தினுசுகளுண்டோ அந்த தினுசுகளெல்லாம் வந்தது......

இந்தக் கப்பலிலே முசே லெனுவாருடைய கடுதாசி அவருக்கு ஆஸ்ப்தமாயிருக்கிற பேரன்பருக்கும் வந்தது. முசே தும்மா குவர்னர் துரைக்கும் உண்மையாகத்தானே எழுதிவந்தது. முசே தெலார்முவாகிய் சின்னதுரைக்கும் முசே துமிலியேருக்கும் முசே லெனுவாரவர்களுடைய கடுதாசியும் அவர் தமையனார் கடுதாசியும் பின்னேயும் அவர்களுடைய பந்துசனங்களுடைய கடுதாசிகளும் வந்தது. முசே துமேலியேருடைய தகப்பனார் முசே துமேலியேரவர்கள் இல்லை யென்று ரொம்பவும் நிஷ்டூரமாகவே யெழுதினார் முசே லெனுவார் முசே துமெலியேருக்கு எழுதின கடுதாசி வயணம்

முசே லெனுவார் சீமைக்குப் போன பிறகு இந்தியாவுக்கெல்லாம் திரெக்தேர்த் தனம் கொடுத்த பிற்பாடு தாமொன்றும் இந்த மட்டுக்கும் மேல் வாங்கிக்கொண்டதில்லை, ஆனபடியினாலே கும்பனியார் எப்போதும் எழுதுகிற சட்டப்படிக்கு எழுதிப் போட்டார்கள். முன்னுக்குத் தாமாய்த் தானே உத்திரவு கொடுப்போம் என்றும் தம்முட உத்திரவின் பேரிலே நடத்தினதல்ல என்றும் முசே துலோர்மயும் முசே துமேலியேரையும் வரச் சொல்லியும் முசே துமேலியேர் பேரிலே கும்பனியார் ரொம்ப பக்ஷமாயிருக்கிறார்களென்றும் தாம் யிருக்கவேணுமென்றால் யிருக்கலாம் என்றும், யிருந்தால் எப்போதும் உத்தியோகம் எப்போதும் முசே லெகுவுக்குப் பிறகு கையெழுத்துப் போடுகிறதென்றும் பின்னேயும் அந்தரங்கமாய் எழுதியிருக்கிற சேதிகளுண்டு. முன் மேலே யெழுதியிருக்கப்பட்ட சேதி மாத்திரம் முசே துமெலியேர் என்னுடன் சொன்னார்:—என்னுடனே சொல்லச்சே வாசுதேவ பண்டிதரும் கூட யிருந்தார். நானும் வாசுதேவ பண்டிதரும் முசே துமேலியேரைக் கேட்டோம்: என்னன்பர் நீர் சீமைக்குப் போரீரோ—யிருக்கிறீரோ: என்ன என்று கேட்டோம். என்னுடைய தாய்தகப்பன் பந்து சனங்கள் தம்பித் தமையன் உடன்பிறந்தாரனைவரும் அங்கே யிருக்கச்சே நானொருத்தன் இங்கிருந்து என்ன சாம்பிராச்சியம் அனுபவிக்கப்போகிறோம், அல்லவென்று இவ்விடத்திலிருந்து இவ்வளவுதானே சம்பாதிக்கப்போகிறது. இவ்வளவு சிமையிலே

சம்பாதிக்கமாட்டேனு? இவ்விடத்திலே நூறு வராகன் சம்பாதிக்கிறதைவிட அவ்விடத்திலே பத்து வராகன் சம்பாதிச்சால் போதும் என்றும் அவ்வளவு சம்பாத்தியத்துடனே பந்து சனங்களுடனே இருந்து கூடியிருந்துகொண்டு நிச்சிந்தையாயிருக்கலாமென்றும், அங்கே இருககிற நடபடிக்கையும் தங்கள் இராச்சியத்தினுடைய இயல்பும் நடத்தையும் சொல்லிக்கொண்டிருந்தார். நாங்கள் முன்னாலே வெள்ளைக்காரரிலே பெரிய மனுஷர்கள் சொல்லிக் கேட்டதுமுண்டு. இதல்லாமல் செவாளியே குருவப்பிள்ளை அவர்கள் சொல்லக்கேட்டதுமுண்டு. அவைகள் கேட்டிருந்ததுக்கும் முசே துமேஸியேர் அவர்கள் சொன்னதுக்கும் சரிப்பட்டிருந்தது. இதல்லாமல் முசே துமேஸியேர் அவர்கள் சொன்னது இப்போது குவர்னர் துரையிருக்கிற முசே தம்மாவுக்கு சீமையிலே மினீஸ்த்தராயிருக்கிறவரண்டையிலே வேலைக்காரன் தன் துரையுடனே சொல்லிக்கொண்டு தன் துரையைக்கொண்டு கும்பனியாருக்கு சொல்லிவிச்சு, அதின் பேரிலே கும்பனியார் அந்த மினீஸ்த்தர்களுடைய வார்த்தைக்குத் தடை சொல்லக் கூடாததினாலேயும், முசே லெனுவாரவர்கள் வருகிறுமென்று எழுதிக்கொண்டபடியினாலே, முசே தும்மாவுக்கு புதுசேரிக்கு குவர்னர் துரை தனம் கொடுத்து அனுப்பினார்கள்.

ஆனாலிந்த உத்தியோகம் வாங்கிக்கொடுத்த மினீஸ்த்தருடைய வேலைக்காரனுக்கு முசே தும்மா பரிதானம் கொடுத்த வயனம்:

உத்தியோகம் வாங்கிக்கொடுக்கிறதற்கு பதினாயிரம் வராகன் கொடுக்க அப்புறம் இவருக்கு எந்த மட்டுக்கும் உத்தியோகம் நடக்குதோ அந்த மட்டுக்கும் வருஷத்துக்கு வருஷம் இரண்டாயிரம் டாலர் கொடுக்க உடம்படிக்கையென்றும் பின்னையும் அவருடையபுத்தி இல்லாதநடத்தைகளையும்ஊரிலே தனித்தனித் துரைத்தனமாயிருக்கிற சேதிகளையும் பேசிக்கொண்டு இருந்தார்கள். இவ் வருஷம் புரட்டாசி மாதத்திலே முந்தின மாசமாய் சீமைக்குப் போகிற கப்பலிலே தாமும் முசே துலொர்மும் பயணமாய்ப் போகிறது ஊர்ச்சிதமாய்ச் சொன்னார்.

## 1737–க்கு பிங்கள ஹு

*ஜூன் மீ 20 உ ஆனி மீ 10 உ*

சீமையிலிருந்து பங்காளத் துக்குப் போகிறதுக்கு ஆக வந்த கப்பல் பேர் ஷொவலேன் கப்பல் கப்பித்தேன் பேர் முசே ஷெவரி. இந்தக் கப்பலிலே வந்த வெள்ளிமார்க்கு 2[illegible] இந்த வெள்ளியும் ரூபாய் போட்டு பங்காளத்துக்கு போகிற

**1737 ஜுன் மீ 28 உ தமிழ் பிங்கள ஷு ஆனி மீ 18 உ**

இராத்திரி பிலிப்போ என்கிற கப்பல் வங்காளத்துக்கு கப்பல் கப்பித்தான் மூசே லசாரும் ஏறி கப்பல் பாயெடுத்து ஓடிப் போனான். இந்தக் கப்பலில் ஏறின ரூபாய் லட்சம் மூன்று (3)

**ஆடி மீ 2-உக்கு சூலை மாசம் 13-ந் உ சனிக்கிழமை.**

இராத்திரி பங்காளத்துக்கு ஷொவலேன் என்கிற கப்பல் பாயெடுத்தான். கப்பல் கப்பித்தான் பேர் மூசே ஷேவரி இந்த கப்பலிலே ஏறின ரூபாய் லட்சம் அஞ்சு 5.

**ஆடி மீ முதல் தேதிக்கு சூலை மாசம் 12-ந் தேதி வெள்ளிக்கிழமை**

மத்தியானம் கோன்சேல் கூடி மூசே வேரியேனை பந்தருக்குப் பெரியவனாக அனுப்புக்கிறதாகத் தீர்த்தார்கள் மூசே கோலாநுக்கு சரீரம் சுவஸ்தமில்லாதபடியினால் இவரை அனுப்பி அவரை அழைப்பிக்கத் தீர்த்தார்கள்.

**1737 சூலை மீ 19 உக்கு பிங்கள ஷு ஆடி மீ 8 உ**

மொக்காவின்பேரிலே சண்டைக்குப்போன மூரப்பா என்கிற கப்பல் பிடித்த நாள் வெள்ளிக்கிழமை மத்தியானம் பனிரெண்டு மணிக்கு வந்து சேர்ந்து துறை பிடித்தது. மூசே மாக்து சாக்கி கப்பலுக்கு ஏழு பீரங்கிபோட்டு அப்பால் கோட்டைக்குப் பீரங்கி போட்டான். மொக்கா கோட்டையிலே போட்டிருந்த அராபிக்காரருடைய கொடியை இவர்கள் பறிச்சுக் கொண்டுவந்தார்கள். அந்தக்கொடியை கப்பலுடைய விலிய பாய் மரத்திலே போட்டுக்கொண்டுவந்தான். அந்தக் கொடி வர்ணம் முழு சிவப்பு நடுவே அஞ்சு விரலெழுதியிருந்தது. அந்தக்கொடியைக் கப்பல் கப்பித்தான் மூசே லசாரடுது இறங்கி வரச்சே அந்தக் கொடியை இறக்கிக்கொண்டுவந்துசீர் குவர்னர் துரை மூசே தும்மாவுக்குக் காண்பிச்சு கோட்டையிலே கொண்டுபோய்வைத்தார்கள். இந்தூரிலே இருந்துபோன சோல்துகள் லீப்ததினாந்துமார், கப்பித்தான்மார் அனைவரும் அப்படைக்குப்போனவர்கள். அனைவரும் வந்தார்கள். இந்த நாள் சாயங்காலம் ஆறு மணிக்குக் கோட்டைபீரங்கியெல்லாம் ஒருதரம் தீர்ந்து அப்பால் கொத்தளத்துப் பீரங்கிகளும் தீர்த்தார்கள். மொக்காவுக்கு இவர்கள் போனவுடனே நடந்த சேதியை முன் எழுதாதபடியினாலே இப்பால் எழுதினேன். முன் சொல்லப்பட்ட பேருடைத்தான கப்பல் அந்த துறையிலே நங்கூரம் போட்டுயிருந்தார்கள். துறைக்காரன் ஒரு சலங்கும் கடமொழும் அனுப்பினான். அந்தச் சலங்கையும் கடமொத்தையும் விடாமல் கப்பலிலே கட்டிக்

கொண்டு நாலஞ்சு நாள் கடலோரமாயிருந்தபடியினாலே துறைக்கு வராமலிருந்து கடல் சீர்ப்பட்டப்பிறகு சிறிது பேர் சண்டை முஸ்தீத்தா இறங்கினார்கள். இவர்கள். இறங்குகிறதுக்கு முன்னமே கோட்டைக்காரர் அறிந்தார்கள் இவர்கள் சண்டைக்கு வந்தார்கள் என்கிற சேதியை. இப்படியிருக்கிற தருவாயிலே அவ்விடத்திலேயிருக்கிற டொலாவும் மற்றுமுள்ள பேர்களும் அவர்கள் கோயிலாகிய பள்ளிக்குப் போயிருந்தார்கள். அவ்வேளையிலே கப்பலின் பேரிலேயிருந்து ஒரு பீரங்கியிலே தீபக துடுக்கையைப்போட்டு சுட்டார்கள். தீபக துடுக்கை வந்து அவர்களிருக்கிற பள்ளியிலேபோய் விழுந்தது. அதிலேயிருந்து விரி சிலே—பொறிகிருப் போலே கொஞ்சமாய்ப் பொறிந்தது. அதை அவர்கள் பார்த்து இதென்ன வாச்சரியம் யென்று சிறு பேரெல்லாம் வேடிக்கை பார்க்கவந்தார்கள். அவர்கள் வந்து பார்த்துக்கொண்டிருக்கிற வேளையிலே அந்தத் தீபக துடுக்கை வெடித்தது. அதிலே இருபத்தஞ்சுபேர் சேதப்பட்டுப்போனார்கள். இப்படிச் சேதமானவுடனே அந்த டேர்லர் நாட்டிலே போய் விட்டான். அவன் நாட்டிலே போய்விட்டானென்கிற சேதி கேட்ட மாத்திரத்திலே இவர்கள் கோட்டையின்பேரிலே போயிறங்கி ஒரு மணி நேரம் இவர்களும் அவர்களும் சண்டை பண்ணினார்கள். அந்தச் சண்டையிலே இவர்களிலே அஞ்சு பேரும் அவர்களிலே நாற்பத்தஞ்சு பேரும் சேதமானார்கள், இப்படிச் சேதமான உடனே கோட்டை இவர்கள் பாரிசமாச்சுது—ஆனவுடனே அவர்கள் கொடியை வாங்கிக்கொண்டு இவர்கள் கொடியைப் போட்டான் ஒரு கப்புருல். அந்தக்கப்புருலுக்கு ஒப்பிசியே உத்தியோகம் கொடுத்தார்கள். இப்படி சிறிது நாள் கோட்டையிலே இவர்கள் அனுபவித்துக்கொண்டு இருக்கச்சே அந்தவூருக் கெஜமானாகிய நவாப்பு இவர்கள் அண்டைக்கு தானாபதிகளை அனுப்பி இவர்களுக்குக் கொடுக்க வேண்டிய பணத்துக்கு............

**பிங்களஞூ 1737 ஆண்டு புரட்டாசி மாசம் 21 ந்தேதிக்கு ஒக்தோபர் மாசம் 4 ந்தேதி வெள்ளிக்கிழமை**

காலமே ஒன்பது மணிக்கு பொழுதுவிடிந்த சாமத்துக்கு சீமையாகிய பிராஞ்சுக்குப்போகிற பிலோரி என்கிற கப்பலின்பேரில் கப்பித்தான் மூசே தோடுதோலேன் இந்தக் கப்பலின் பேரிலே சின்ன துரைத்தனம் பண்ணின மூசே தெலோர்ழவும், மூசே லெனுவார் துமெலியேரும் இவ்விடத்திலே சக்கிரத்தேராயிருந்த மூசே பெபுரியேரும், அவர் பெண்சாதியும் மூசே போர்ஷேயும் சிலங்கின்பேரிலேறி பெரிய கப்பலின்பேரிலே போய்ச்சேர்ந்தார்கள். மூசே துலேர்ழ சின்ன துரைத்தனம் பண்ணிப் போகிறபடியினாலே சலங்கின் பேரிலேஏறச்சே கோட்டையிலே பதினஞ்சுபீரங்கிபோட்டான். கப்பலின்பேரில் போனஉடனே

கப்பலின் பேரிலே ஒன்பது பீரங்கிபோட்டான். இந்த நாள் கப்பல் பிராஞ்சுக்குப் பாயெடுத்து ஓடிப்போனான். ஆனால் சின்னதுரை சீமைக்குப் பயணம்போனபடியினாலே இந்தப் பட்டணத்திலேயுள்ள சனங்கள் வெகுபேர் தாபந்தப்பட்டார்கள். எதனாலே இந்தச் சனங்கள் தாபந்தப்பட்டார்கள். இப்போது போன சின்ன துரையினிடத்திலே வழக்குக்குப் போனவிடத்திலே மகாராசனென்றும் ஏழையென்றும் வித்தியாசமில்லாததினாலேயும், லஞ்சபரிதானம் கவாத்துமனாகவாங்கி அறியாதவனானபடியினால், வெள்ளைக்காரனென்றும் தமிழனென்றும் வித்தியாசம்பார்த்து நடக்காதபடியினாலேயும் தான்கேட்டதற்கு ஞாயமானபடிக்கு தீர்க்கிறபடியினாலேயும் வெகு சனங்கள் அங்கலாயத்து தாபந்தப்பட்டார்கள். இனிமேலுக்கு சின்ன துரைத்தனத்துக்கு வரப்போகிறவர் முசே லெகு வானபடியினாலேயும் அவர் கண்டிப்பு மனுஷன் அல்லவென்கிறத்தினாலேயும் வெள்ளைக்காரரைக் கண்டிக்காமாட்டார் என்கிறத்தினாலேயும் துரைத்தனம் பண்ணுகிறமுசே தும்மாவுக்குமெதுவானபடியினாலேயும் முசே லெனுவார் குவர்னர் துரைத்தனம் பண்ணின சட்டத்துக்கு அரைவாசி திட்டமாயாகிறவரும் இந்த சின்ன துரையிருந்தபடியினாலே நடந்து தென்று இனிமேலே சத்து அபந்தரையாய் நடக்கும் என்னுப்போலேயும், பட்டணத்து சனங்களும் அனேகம் வெள்ளைக்காரும் மதாபந்தமார்களும் கொஞ்சம் கொஞ்சம் வெள்ளைக்காரருக்கு இனிமேலுக்கு தங்கள் மனதின்படியே நடப்பிக்கலாமென்று சந்தோஷமாயிருந்தார்கள். அவர்கள் கொஞ்சம்பேர் தவிர மற்றப்பேருக்கு எல்லாம் தாபந்தந் தான் ஆனால் அவருக்கும் முசேதிரிலியேருக்கும் ரங்கப்பன் வீடு எப்படிப் போகிறது என்றும் நமக்குப் பிற்பாடு ரங்கப்பனுக்கு ஆதரவு இல்லையே கனகாராயமுதலிக்கும் ரங்கப்பனுக்கும் துவேஷ மாச்சுதே என்றும் துரைத்தனம் பண்ணுகிறவன் விவேகமில்லாமல் கனகாராய முதலி வழியிலே நிற்கிறவனாச்சுதே ரங்கப்பனுக்கு எப்படி என்கிற விசாரத்தைத் தொட்டு முசே எலியாகுடனே யெங்களுக்கு போகிறதத்துக்கு மிகுந்த ஆசை யிருந்தாலும் ரங்கப்பனை விட்டுப் போகிறதற்கு மனம் வரவில்லை. ஆனாலும் உம்மால் ஆனமாத்திரம் சகாயம் அவனுக்குச் செய்யவேணுமென்று வார்த்தைப்பாடு வாங்கிக்கொண்டு போனார்கள். அவர்களுக்கு என்பேரிலே இவ்வளவு பக்ஷம் வந்ததே என்றால், முசே லெனுவாரை நம்பினவன் இவனுக்கு வேறு ஆதரவில்லை என்கிறதினாலேயும், கனகாராய முதலியாருக்கும் இவருக்கும் வெகு நாளாய் துவேஷமாயிருக்கிற சங்கதி எல்லாம் அறிஞ்சவனானபடியினா

லேயும் அவர்கள் இரண்டுபேருக்கும் மிகுந்த பக்ஷம் உடா யிருந்தது. அவர்கள் சுவாமியை எப்போதும் பஜனை பண்ணப் பட்டவர்கள் பாவத்துக்குப் பயந்தவர்கள்; ஆனபடியினாலே சகல சனங்களும் இவர்களுக்கு நல்ல யாத்திரையுண்டாய் ஆரோக்கியத்துடனே சீமைக்குப்போய்ச் சேரவேணுமென் றும் வாழ்த்தினார்கள். அவர்களுக்கு சுவாமியும் அப்படியே தயவு செய்வார், அதற்குச் சந்தேகமில்லை. மூசே பெபுரியேர் சீமைக்கு அவர் பெண்சாதியுடனே கூடப்போன தேதென் றால் முன்னாலே மூசே மோலந்தேனுக்குப் பிறந்த பிள்ளை சீமைக்குப் போய் மூசே மோலாந்தேன் தமயனண்டையிலே யிருக்கிறது. மூசே மோலேந்தேன் சாகச்சே தன் பணத்துக்கும் தன் காரியத்துக்கும் மூசே பெபுரியேரை பெருக்குதோர் பண் ணினபடியினாலே அந்த மூசே பெபுரியேர் தானே மோலந்தேன் பெண்சாதியைக் கலியாணம் பண்ணிககொண்டபடியினாலே அந்த மோலாந்தேன் பிள்ளையுடைய பணமும் கூட இந்த பெபுரி யேர் வசத்திலே இருக்கிறபடியினாலே மூசே மோலாந்தேன் தம யன் அந்தப் பிள்ளையுடைய பங்குப் பணமும் கணக்கும் அனுப் பச்சொல்லி எழுதினபடியினாலே இவர்கள் தானே போய் கண்டு பேசி பணமுங் கொடுத்து கணக்கும் சம்மதி பண்ணிப் போட்டு வருவோமென்று மூசே பெபுரியோரும் அவர் பெண்சாதியும் சீமைக்குப் போனார்கள். மூசே போர்ஷே சீமைக்கு எது நிமித் தியம் போனதென்றால் பந்தருக்கு எசமானாகப் போயிருந்தபடி யினாலே அவ்விடத்து வர்த்தகருக்கும் இந்த போர்ஷேக்கும் ஆகாமல் மூசே லேனுவார் சீமைக்குப்போன பிற்பாடு மூசே தும்மா இவ்விடத்து துரைத்தனத்துக்கு வந்த இடத்திலே மூசே தோலார்மு முன்னிலையாய் அவ்விடத்து வர்த்தக கோரள்ள பாலு செட்டி யென்கிறவன் போர்ஷே கும்பனிக்கு துரோ கம் பண்ணினனென்றும் தங்களை அநியாயம் பண்ணின னென்றும் புதுசாய் வந்த மூசே தும்மாவுடனே சொல்லு கையில் அந்த போர்ஷேயரை வரச்சொல்லியும் அந்த இடத் துக்குப் பதில் மூசே கோலாரை அழைப்பிவிச்சு மூசே போர்ஷேரை அழைப்பிச்சுக் கொன்சேலிலே அவன் பேரிலே நேரம் சுமத்த அதற்கு இவன் ஒப்புக்கொள்ளாமல் மூசே லேனுவார் இந்தச் சம்மதியெல்லாம் அறிவார் அவருடைய உத்தரவுப்படிக்குத்தான் நான் நடந்ததும், அவரும் அவ்விடத் திலே யிருக்கிறபோலே ஆனதே அங்கே போய் தீர்த்துக் கொள்ளுகிறபடி மூசே போர்ஷே சொன்னான். அதற்குத் துரை களும் கோஞ்சேலாயிருப்பவர்களும் சீமையிலே போய் தீர்த் துக்கொள்ளுகிறோமென்று சொன்னால் அதைத் தள்ளிப் போகாதே அதினாலே துரையும் மத்துமுள்ள கோன்சேலியர் களும் சீமையிலே கும்பனியாரண்டை யிலே போய் தீர்த்துக் கொள்ளச் சொன்னார்கள். ஆனபடியினாலே மூசே போர்ஷே யுங் கூட முன் யெழுதப்பட்ட கப்பலின்பேரிலே போனான்.

அற்பிசி மீ 30-ந் உ நவம்பர் மீ 11-ந்உ திங்கட்கிழமை

சூரிய உதயமான பதினெண்ணரை மணிக்கு மோஞ்சே ஞோர், பிஸ்பு அவர் பேர் காலம் பண்ணிப்போனுர் இவர் சம்பா கோயில் சபையாயிருந்தவர். அவர்கள் நடத்தை இந்த பிஸ்புக்கு சம்மதியாகாமல் அவர்களுடனே விரோதிச்சுக்கொண்டு கப்பு சேன் கோயிலிலேபோயிருந்தார். இவர்களுக்கும் அந்தச் சம்பா கோயிலுக்கும் சபையாருக்கும் எது நிமித்தியம் சண்டையாச்சுதென்றல் முன் 1723 ஸ்ரீ–1712-1713 ஸ்ரீ முன் 1712 1713 ஸ்ரீ ரோமை பிரதானமாகிய குருபாப்பு உத்தாரப்படிக்கு பத்திரியாருக்கு ஒருத்தர் வேதத்தினுடைய காரிய திருச்சபை எங்கெங்கே இருக்கிறதோ அங்கேயெல்லாம் போய் விசாரித்து எத்திதாக்ஷியாய் வேதத்துக்கு, விரோதமாய் நடந்த பேர்களைத் தண்டிக்கச் சொல்லியும் பாப்புடைய உத்தாரப்படிக்கு நடவாதவர்களைச் சாபம் போடச் சொல்லியும் இப்படிப் பின்னையும்.........

காளயுக்தி ஸ்ரீ சித்திரை மீ 10 உ 1738 ஸ்ரீ ஏப்ரல் மீ 19 உ

கோல்கொண்டையிலே போயிருக்கிற நவாபு தோஸ்தலிக் கானுகியவும் ராய்சி சோகர்கான் யிமாம் சாயபு இவர்களிருந்திருக்கிற தண்டிலே இருந்து கும்பனி சேவர் கோவிந்தராவும் ஷெ அண்ணன்மார்களும் மூசே தும்மா குவர்னர் துரைக்கு யிமாம் சாயபு கடுதாசியும் பிராஞ்சுக்கார வக்கீலாகி இருக்கிற அனந்தய்யன் கடுதாசி கனகராய முதலி பேருக்கு கொண்டு வந்தான் குவர்னர் துரைக்கு வந்த யிமாம் சாயபு கடுதாசியிலே ஆலம்பரவிக் கோட்டையிலே இருக்கிற கஜான் தாரோகாவுக்கு ஒரு உண்டிகை கடுதாசி ஒன்றும் அந்த உண்டிகை கடுதாசிப் படிக்கு வாங்கிக்கொள்ளச் சொல்லி குவர்னர் துரைக்கு கடுதாசியும் வந்தது. அந்த உண்டிகை இத்தனை வராகன் என்று தெரியவில்லை உண்டிகை சம்மதி வராகன் இவர்களுக்குக் கடன் கொடுக்கிறது.

காளயுக்தி ஸ்ரீ சித்திரை மீ 11 உ-க்கு 1738 ஸ்ரீ ஏப்ரல் மீ 20 உ ஞாயிற்றுக்கிழமை

காலமே இந்த உண்டிகையைக் கொண்டு ராயசம் சினப்பன் ஆலம்பரவிக்குப் போனான். 21-ந்தேதிக்கு 12-ந்தேதி திங்கள்கிழமை காலமே நான் துரை அண்டைக்குப்போயிருக்கச்சே மூசே இலியாகும் பெரியதுரையும் பேசியிருக்கச்சே சென்னப்பட்டணத்து தபாலிலே இருக்கிற தபால்காரன் ஒரு கடுதாசி கொண்டுவந்துகொடுத்தான். அப்போது மூசே சிஞோரும்

கூடயிருந்தார். இங்கிலீஷ்காரருக்கு பேரஞ் சேசுமரி என்கிற சிமை கப்பல் வந்தது. அந்தக் கப்பலிலே பிராஞ்சாவிலிருந்து தன்னுடைய சினேகிதன் ஆயிரத்தி எழுநூத்தி முப்பத்தேழாம் வருஷம் ஒக்தோபர் மீ 13 உ எழுதின கடுதாசி வந்தது என்று சொன்னார் மூசே சிஞோர். மற்ற முள்ளபேர் போனபிறகு மூசே ஜலியாகூடனே சீமைச்சேதி வந்தது எல்லாம் நல்ல கபுதுதான் பின்னை ஒன்றும் இல்லை அதிசயம் இவ்வருஷத்துக்கு என்று சொல்லி என்னைத் திரும்பிப்பார்த்தான். நான் சேர நின்றவன் அப்புறம் தூரப்போனேன். தூரப்போன பிற்பாடு அவருடனே என்னமோ சொல்லிக்கொண்டிருந்தார். அந்தச் சேதி தெரியவில்லை.

மூசியே சிஞோர் என்னை அழைச்சு ரங்கப்பா நான் சீனத்துக்குப்போகிறேன்.வெள்ளியம் நூறுபார மட்டுக்கும் வேண்டியிருக்குது. நாகூர் பரங்கிப்பேட்டை இந்த விடங்களிலே எங்கே வந்தாலும் வாங்கச் சொல்லியும் நம்முடைய மனுஷரை அந்தந்தத் துறையிலே அவர்களுக்கு உள்ள சம்பளம் கூட்டிக்கொடுக்கிறேனென்றுசொல்லினர். அவர் சீனத்துக்குப் போகிறமென்று சொன்னபோது நாராசம் ஏத்தினுபோலே இருந்தது அது எனக்கு மெத்தவும் விசாரம் தமது அந்த விசாரத்தையும் அந்தக் காரியத்தையும் கடுதாசியிலே எழுதி முடியாது. ஆனல், உனக்கு இத்தனை விசாரம் தமது நிமித்தியமேனென்றல் மூசே லெனுவார் போன பிற்பாடு எனக்கும் கனகராயமுதலியாருக்கும் இருக்கும் துவேஷத்தினுலே அவர் என்பேரில் எப்போதும் தயவாய் நான் சொல்லுகிற காரியத்தை அங்கீகரிச்சு கேட்கிறதும் அது நடக்க வேண்டிய காரியமிப்படி என்று ஆலோசனை சொல்லுகிறது மல்லாமல் என் விசேஷம் துரையினிடத்திலே ஆலோசனைக் காரரிடத்திலே பிரஸ்தாபமானல் என்னை மேன்பாடாய் சொல்லுகிறது. இந்தப்படிக்கு எனக்கு இவர் உதவி ஒத்தாசையாயிருக்கிறபடியினுலே கனகராயனுந்த நீ அதுக்குத்தான் இதுகளெல்லாத்தையும் குறிச்சு எனக்கு சொல்லி முடியாத கஸ்தி உண்டாயிருந்தது. ஆனல் இவருக்கு ஸ்வாமி நல்ல யாத்திரையைக்கொடுத்து ஆரோக்கியத்தையும் கொடுத்து நல்ல ஆதாயத்தையும்கொடுத்து சீக்கிரம் அதுக்குமே முந்தின மாசமாய்வந்து எனக்கு ஆதரவாயிருக்க வேணுமென்று சுவாமியைப் பார்த்து பசனை பண்ணுகிறேன். சுவாமியும் அப்படித் தானே தயவு பண்ணுவார் அதுக்குச் சந்தேகமில்லை.

1738 ௵ அவ்ரீல் மூ 25 உ காளயுக்தி ௵ சித்திரை மீ 16 உ

புதுச்சேரியிலிருந்து மணிலாவுக்குப் பயணமாய் நொச்சி செஞோர் தெசஆதீ என்கிற கப்பல் பயணமாயிற்று. நாள் வெள்ளிக்கிழமை இராத்திரி மூணுஞ்சாமத்துக்குப் பாயெடுத்து ஓடிப்போனுன். இந்தக் கப்பலுக்கு கப்பல்கப்பிதான் மூசே சோல்மினி ஆக்க சோபர்கார்கு மூசே யேர்பேர்த் தமிழ் கப்பித்தான் கனகராயமுதலி சகலப்பாடி அழகப்பன். இந்தக்கப்பலிலே அரமனைக்காரர் கெழ்விகள் கட்டு முன்னூறு லிருந்து நானூறுக்குள்ளே இருக்கும் மத்ததும் அரம்சாமுதும் வெள்ளைக்காரருதும் இவ்விடத் தமிழருதும் கொஞ்ச நஞ்சமுண்டு.

மூன் 15-உக்கு அவ்ரீல் மீ 24 உ வியாழக்கிழமை

இராத்திரி மூணுஞ்சாமத்துக்கு தேவனும்பட்டணத்திலிருந்து அவ்விடத்து குவர்னர் துரை ஆன பட்டு கூட பாலிலே போட்டு அனுப்பின இரண்டு கடுதாசியும் வந்தது. அந்தக் கடுதாசி இரண்டும் ஆராரு தென்றல் சென்னபட்டணத்து கருவாலி கடுதாசி ஒன்றும் மூசே லாவீல் பாது மூசே துபுவா கடுதாசி ஒன்றும் மூசே கருவாலியு எழுதின கடுதாசியிலே தன் கப்பலும் மூசே துபுவா லவீல்பாகுடைய கப்பலும் இரண்டும் மணிலா விட்டு புறப்பட்டுவந்த பிற்பாடு நங்கூரத்தண்டை மூசேலவில் பாதுடைய கப்பல்விட்டுப்போட்டுதான் முந்திவந்தேன் அந்தக்கப்பல் ஓரம் இந்த நாளையிலேகாணுமென்று எழுதியிருந்தது. மூசே ல. வீல்பாதுவுடைய கடுதாசியிலே தங்கள் நல்லாத்திலே தண்ணியேத்துறோம் அஞ்சாறு நாளையிலே வந்து சேருகிறோம் என்று எழுதியிருந்தது. இப்போது ஊரிலே பணக்கடிசையினுலேயும் கும்பனியிலே பணம் ரொம்பவும் கடிசையாயிருக்கிற படியினுலேயும் சகலமான சனங்களுக்கும் இந்தச் சேதி வந்து சந்தோஷத்தை வருவிச்சுது.

காளயுக்தி சித்திரை மீ 17-ந் உ க்கு 1738 அவ்ரீல் மீ 26-ந் உ சனிக்கிழமை-

வழுதாவூர் சீமை குத்தகை தேவனும்பட்டனத்து சீமை குத்தகை பண்ணிக்கொண்டிருக்கிற கோதண்டராம ஐயநும் புதுச்சேரி ஆளுகிற மூசேதும்மாகுவர்னர்துரை அவர்களைக் கண்டு சாயங்காலம் அஞ்சுமணிக்கு பேட்டி பண்ணிக்கொண்டார். கோதண்டராமய்யர் துரையவர்கள் வீட்டிலே போய் படியிலே ஏறி மேல் வீட்டிலே போய் நடு பெரிய சாலையிலே போன உடனே குவர்னர் துரையவர்கள்நடுவாசல்படி மட்டாய் வந்து இவரைக் கட்டிக்கொண்டு நடுசாலையிலே மேல் புறத்திலே போட்டிருந்த பாங்கு பேரிலே துரை அவர்களும்

கோதண்டராமய்யரும் போய் உட்கார்ந்துகொண்டு கனகராய முதலி குறுக்கேயிருந்து துவிபாஷைத்தனம் பண்ண வடவண்டையிலே கோன்சேயில் காரராயிருக்க, இந்தப்படிக்கு இவருடைய பூர்வோத்திரம் அவர் கேட்க, சத்து நேரம் இஷ்டலாபமாய் பேசியிருந்த பிற்பாடு அஞ்சுகசம்.................. சகலாத்தும் அஞ்சு கெஜம் பச்சையும் ஆறேழ்வராகன் பெறும் ஒரு கண்ணாடியும் இரண்டு சூரிகத்தியும் இரண்டு கத்திரியும் கொடுத்தார்கள். இவரும் துரையும் முதல் வந்தவுடனே சாலை நடுவில் ஒருத்தருக்கொருத்தர் கட்டிக்கொண்டுள்ள சமயம் ஏழு பீரங்கி போட்டார்கள். சகலாத்து மற்ற வெகுமானம் கொடுத்த பிற்பாடு அச்சையனுக்கு இரண்டு கெஜம் சகலாத்தும் கோனேரி பண்டிதருக்கு இரண்டு கெஜம் சகலாத்தும் வீராரெட்டிக்கு இரண்டு கெஜம் சகலாத்தும் கொடுத்தார்கள் அதின்பேரில் கோதண்டராமய்யரை அனுப்பிவித்துக் கொள்ளச்சே கோட்டை பார்த்தீர்களா என்று துரை அவர்கள் கேட்டார்கள். நீங்கள் உத்தரவு கொடுத்தால் அப்படியே போய் பார்க்குறோம் என்று சொன்னார்கள் கனகராயமுதலியாரைக் கூட கூட்டி கோட்டை மத்தமெல்லாம் பார்க்கச் சொன்னார்கள். அப்படியே அவர்களும் போய் பார்த்து அவர் இறங்கி இருந்த சுங்குவார் பூந்தோட்டத்திலே போய்விட்டார்கள். ஆனால் முசே லெனுவார் துரைதனத்திலே கோதண்டராமய்யருக்கு பீரங்கி சகலாத்தும் அகப்பட போகிறதில்லை இத்தனை மரியாதையும் நடவாது.

21௳ சித்திரை, 30 அவ்ரீல் 1738, புதவாரம் நாள் பகல் ஒருமணி வேளையிலே முன் நள ஸு பங்குனி மீ' த்திலே மணிலாவுக்குப்போன சங்கரபாரீக்கு என்கிற கப்பல் அவ்விடத்திலே துரக்கிவிட்டு மறுபடியும் மத்தாளுள் வந்தது கப்பல் கப்பித்தான் முசே லவீல் பாத சொபிரேகார்க்கு முசே தீபுவாருசேல் ஆனால் முசே லவீல் பாதும் சொபிரே கார்குக் கொமிசியோ முண்டு இந்தக் கப்பல் சேதி சரக்கு ஸதரா எப்படி என்றால் காங்குதினுசுடனே கூடினது 100 க்கு 50 ஆதாயம் பரியம் கம்பாயம்ருடன் இந்த தினுசுகளுக்கு 100-க்கு 20 பரியம். இதரதினுசுகளுக்கு 100-க்கு 80 பரியம். பங்காளத்து தினுசுகளுக்கு 100 க்கு 80 அல்லது 90 பரியமென்றும் எழுத்துப் பாட்டைகளுக்கு சென்னப்பட்டணத்து தினுசு மெல்லீசு லம்பாசு-மெல்லீசு சீலடை இதுகளுக்கு 100-க்கு 20 அல்லது 25-க்கு பரியம் என்றும் புதுச்சேரி திருப்பாபுலியூர் இந்த இந்தவிடத்துசிட்டைக்குலிம்பாசுக்கும் முதலாய் லாபமும் முதலுக்கு நஷ்டம் வருவது முண்டு......

தள யென்றும் எழுத்துச் சிட்டி சத்தெல்லாம் ஒரு வரு ஷத்து தவணைக்கு சத்தாக முசே திபுவா, முசே லவில் பாத கணக்கு கொண்டுவந்து கொடுத்தார்கள்.

1738 ஹு மே மீ 6 உ காளயுக்தி ஹு சித்திரை மீ 27 உ செவ்வாய்க்கிழமை

இந்தநாள் காலமே ஆறரை மணிக்குமேல் ஏழு மணிக்குள்ளாக நாம் குவர்னர் துரை வீட்டிலே போயிருக் கச்சே நம்மைப்பார்த்து குவர்னர் துரை கேட்டசேதி என்ன என்றால், கையிலே என்ன இருக்குதென்று கேட்டார். அதுககு நீர் மூந்த நாள் கொடுத்த மலாக்கா பொன் கட்டியிருக்கு தென்று சொன்னேன். ஆனால் கட்டிக்கு இருநூத்தி எழுபத்தி ரண்டு வராகன் விலைக்குக்கொடுக்கிறீரா என்று கேட்டார். அதுக்கு நான சொன்னது சிஞ்ஞோர் கேட்டவிலை இருநூத்தி எழுபத்தொண்ணே முக்கால் வராகனுக்கு உமக்கு சம்மதியா யிருந்தால் கொடும் அதுக்குமேலே ஒரு காசும் ஒசத்தலும் எனக்குக் கவையில்லை என்று சொன்னேன் அதுக்கு அவரிருந்து கொண்டு இனிமேல் நீ கொண்டுவந்து கொடுக்கப் போகிற வராகன் இப்பொழுது வழங்கும் ஆலம்புரவி வராகனல்ல வோ கொடுக்கப்போகிறது. அது ஏழேமுக்காலே அரைக்கால் மாத்துயிருக்கிறது, அது எனக்கு சம்மதி அல்ல. எட்டேவீசம் மாத்திருக்கும் வராகன் கொண்டுவந்துகொடுத்தால் தமக்கு சம்மதியென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது இப் போது வழங்குகிற வராகன் நான் கொண்டுவந்து தருகிறே னென்று சொன்னேன். அதுக்கு அவர் சொன்னது நீ பித்தளை வராகன் கொண்டுவந்து கொடுத்தாலும் வாங்கிக்கொள்ளச் சொல்லுகிறயாயென்று சொல்லி பின்னை ஒரு உத்திரவு சொன்னார். என்ன சொன்னாரென்றால், நாங்கள் நேற்றைய தினம் கோன்செல்கூடி கோன்செலில் தீர்த்தகாரியம் என்ன வென்றால் இனிமேல் இந்த ஊருக்குள்ளே எட்டுமாத்துக் குள்ளே குறைஞ்ச வராகன் யாதாமொருத்தன் கொண்டு வருகிறானோ அவன் கையிலே ஆயிரம் வராகன் அபராதமும் வாங்கிக்கொண்டு கொணக்குமுத்திரைபோட்டு பின்னையும் அவமானம் பண்ணுவோம் என்று தீர்த்தோம்.

அந்தப்படிக்கு இன்று சாயங்காலம் தமுக்கும் போட்டு விச்சு தீர்த்தபடிக்கு கடுதாசி எழுதி கோட்டையிலே, பிடவை பார்க்கிறசாலையிலே, கோவிலிலே, சாவடியிலே இந்த மூணு ஸ்தானங்களிலே ஸ்தாபிப்போம் என்று சொன்னார். அதுக்கு நானிருந்துகொண்டு இப்ப ஊரிலேயிருக்கிற வராகன் எல் லாம் அந்த வராகனாயிருக்கிறபடியினாலே நீர் இப்ப உத்திரவு கொடுத்தால் வெகு ஜனங்களுக்கு ரொம்ப வருத்தமாயிருக்கும்

என்று சொன்னேன். அதுக்கு அவர் அது கொண்டு காரியமென்ன. நாம் அந்தப்படி செய்யவேணுமென்று சொன்னார். ஆனால் ஞாயம் அவருக்கு தோத்தாமல் செய்கிறகாரியமேயல்லாமல் செய்காரியமல்ல.........மத்தியானம் பன்னிரண்டு மணிக்குமுன் 1737 ஆம்ஹூ நொவம்பர்மீ 11உக்கு பிங்களஹூ அற்பிசி மீ 30உ பிரான்சாவிலிருந்து மத்தியானம் பனிரெண்டு மணிக்கு புறப்பட்ட தெகோன்த்தே லூஸ் என்கிற கப்பல் இந்த நாள் பனிரெண்டு மணிக்கு வந்து பிடித்து பதினஞ்சு பீரங்கிபோட்டது. கப்பல் கப்பித்தான் புத்தே தேல ஓரியன்ட் என்கிறவன் இறங்கச்சே ஏழு பீரங்கியும் போட்டு இறங்கிவந்து அரை மணிக்கு குவர்னர் துரை யண்டைக்கு வந்து கண்டு சந்தித்து கும்பனியாருடைய கடுதாசியும் துரை கையிலே கொடுத்தான். இதிலே பின்னே ஒரு அதிசயமும் கேள்விப் படவில்லை ஆனால் அந்தக்கப்பல்காரன் சொன்ன சேதி மூசே லெனுவார் சீமையிலே பரீசு என்கிற பட்டணத்திலே ஆரோக்கியத்துடனே கும்பனி திரெக்தேர் மாரெல்லாம் இவர் பேச்சுப்படி நடக்கிறதேயல்லாமல் மறுபேச்சு யில்லாமல் இவர் பேச்சு மெத்த மேன்பாடாய் நடக்கிறது என்று சொன்னார்கள். இதல்லாமல் மேஸ்திரி பீட்டியும் பிரான்சியாவில் மூசே லெனுவாருடைய வீட்டிலே குனேக்கூடச் சாப்பிட்டுக் கொண்டு சாரிபோகிறதுவருகிறதுஇரண்டுபேரும்கூடப்போய் வருகிறதும் மற்ற நேரம் இரண்டுபேரும் ஒருவீட்டிலே குனே யிருக்கிறார்களென்று சொன்னார்கள். மூசே வென்சாம் தை மாதத்திலே வருகிற கப்பலிலே வருகிறார் என்று சொல்லுகிறார்கள். இந்த நாள் சாயங்காலம் ஆறு மணிக்கு மூசே எலியாசு வீட்டுக்கு போனவிடத்திலே அவர் சொன்ன சேதி சீமை கப்பல் வந்த பிற்பாடு சாயங்காலம் துரையண்டைக்குப் போனவிடத்திலே துரையவர்கள் சொன்ன சேதி மூசே துளோராம் மூசே லெதுவு அவர்கள் முன்பாக சொன்னது என்ன வென்றால் மூசே எலியாசு கும்பனியாரவர்கள் பேரிலே மிகுதியும் தயவாகி நமக்கு என்ன காரியமுண்டோ அதுகாரியங்களெல்லாம் நீர் வந்து சொல்லிக்கொண்ட காரியம் என்ன உண்டோ அந்தப்படிக்கு செய்து கொடுக்கச்சொல்லி எழுதி பின்னேயும் சிறிது சங்கதி எழுதினார்கள். இது வல்லாமலும் நமக்கு கும்பனியாரும் கடுதாசி அனுப்பினார்கள். அந்தக் கடுதாசி பிறகே வருகிற கப்பலிலேவருகிறது. இதுகளெல்லாம் நீரும் நாமும் தனிச்சுப் பேசிக்கொள்ளச்சே உமக்கு மெத்த சந்தோஷமாயிருக்குமென்றும் சொன்னாராம். அதுக்கு இவர் சிறிது உபசரணையான வார்த்தை சொல்லிவிட்டு வந்தார். இவர் என்னுடனே சொன்னார் அதுக்கு நான் நீர் ஏதாகிலும்

கும்பனியாருக்குக் கடுதாசி எழுதினதுண்டா என்று கேட்டேன். அதுக்கு அவர் சொன்னது நாம் கும்பனியாரை அறியவும் அறியோம், அவர்களுக்குக் கடுதாசி எழுதினதுமில்லே. மூசே லெனுவார் என் பேச்சை மேன்பாடாய் அவ்விடத்திலே கும்பனியாருடனே சொல்லி இந்த மேன்பாடெல்லாம் வருத்திவிச்சார் என்று சொல்லி மூசே லெனுவாரை மெத்த ஸ்தவுத்தியமாய் கொண்டாடினார். முன் சொல்லப்பட்ட சீமை கப்பலிலே வந்த வெள்ளி மார்க்கு 4000 இதை வெள்ளி ரூபாய் போட்டுவித்து இந்த கப்பல் வங்காளத்துக்காக வந்த கப்பலானபடியினால் ரூபாய் போட்டுஆன உடனே இந்த ரூபாயும் கப்பலிலே ஏத்தி வங்காளத்துக்கு கப்பல் பயணம் பண்ணி அனுப்பிவிப்பார்களென்று சொல்லுகிறார்கள்.

28 உக்கு மே மீ 7 ந்தேதி புதன்கிழமை

இந்தநாள் காலமே எட்டுமணிக்கு பிறுக்கு தெனுசரிக் குப்போயிருந்த செஞ்சோசபு என்கிற கப்பல் வந்தது. கப்பித்தான் மூசே புருயல் என்கிறவன் இறங்கிவந்தான். கப்பலிலே அரிசியும் மெரிகை மரமும் வந்ததென்று சொல்லுகிறார்கள். இந்தநாள் புதன்கிழமை சாயங்காலம் ஏழு மணி வேளையிலே நம்முடைய வீட்டுக்கு எதிரே இருக்கிற பாதிரி லொலியேர் தெரு வாசல்படியே வந்து நிண்ண சாடையை அறிந்து நான் கிட்டப்போய் ஆசர்சம் பண்ணின மாத்திரத்திலே அவரிருந்துகொண்டு உனக்கு சிறிது சந்தோஷ அதிசயம் சொல்லுகிற நிமித்தியமாகி நான் வந்தேனென்று சொல்லி நேயிலுக்குள்ளே அழைத்துக் கொண்டுபோய் மூசே லெனுவார் நமக்கு இந்த கப்பலிலே ஒரு கடுதாசி அனுப்பிவித்தார் அந்தக் கடுதாசியிலே உம்மண்டைக்குச் சிறிது சேதியும் சொல்லச்சொல்லி எழுதியிருக்கிறது. அதை நீர் கொஞ்சம் கேளுமென்று அவர் சாப்பிடுகிற சாலையிலே போட்டிருக்கிற மேசைப் பலகைமேலே மெழுகுதிரி கொளுத்திவைக்கச்சொல்லி அதைக்கிட்ட போட்டிருக்கிற நாற்காலியின்பேரிலே உட்காரச்சொல்லி தாமும் உட்கார்ந்துகொண்டு மூசே லெனுவார் அவர்கள் அனுப்பின கடுதாசியை எடுத்து விரித்து நம்முடைய சேதி எழுதியிருக்கிறது மாத்திரம் காண்பித்து என்னைப் படிக்கச்சொல்லி சொன்னார். அதைப் படித்துப் பார்க்குமிடத்தில் அதிலே எழுதியிருந்தவயணம் என்னவென்றால் உம்முடைய எதிர்வீட்டிலிருக்கிறவர் இரங்கப்பன் நமக்கு ஒரு கடுதாசி எழுதி அனுப்பிவித்தான். அந்தக் கடுதாசி நமக்கு வந்துசேர்ந்தது. அதற்கு மித்தியும் சந்தோஷமாச்சுது. அவனை நான் ஒருக்காலும் மறக்கிறதில்லே. அவனுடையபேரில் செய்தி அனுப்பிவிக்கிறதற்கு சமயம் பார்த்துக்கொண்டிருக்கிறேன். சமயம் வந்தபோது அந்தப்

படியே வாலாயம் செய்து அனுப்பிவிக்கிறேனென்று சொல்லச் சொல்லியும் நான் கடுதாசி எழுதினல் பின்னை ஒருத்தரைக் கொண்டல்லவோ தெரிந்து சொல்லவேணும். ஆனபடியினலே அவருக்குக் கடுதாசி எழுதவில்லையென்றும். இந்தச்சேதி நீர் அவருக்கு சந்தோஷம் வருத்திவைக்கும்படியாய்போய் சொல்ல வேணுமென்றும் எழுதியிருந்ததைப் படித்து மூசே லேனுவார் தம்முடையபேரிலே தயவு மறவாமலிருக்கிருர் என்றும் பாதிரி லோலியேநுடன் நான் சொன்னேன். அதற்கு அவர் சொன்னது என்னவென்ருல் மூசே லேனுவார் உம்முடையபேரிலே மிகுந்த பட்சமாயிருக்கிறபடியினலே அவர் நமக்கு யாதொரு பெரிய காரியங்கள் அவ்விடத்திலே இருந்து அனுகூலம்செய்து அனுப்பிவிக்கவேணுமென்கிற கருத்து அவருடைய மனதிலே என்னேரமும் குடியாயிருக்கிறபடியினலே இந்தச் சாடை எழுதினர் ஆனல் அவர் ஒரு காரியங்களை நேமகம்செய்து நடத்தவேணுமென்கிற புத்தி பரிபூரணமாயிருந்தால் இவ் வளவு சாடை எழுதுவாரே அல்லாமல் மற்றப்படி யல்லவென்றும் மற்றப்பேரைப்போல சொல்லி மறந்துபோகிறவரல்ல வென்றும் பின்னையும் அவருடைய சாமர்த்தியங்களை எனக்கு எழுதி தெரியப்படச்சொன்னர். அதின்பேரிலே எனக்கு மிகுதியும் சந்தோஷமுண்டானதை ஒரு முகாந்திரத்திலே சொல்லி முடியாது. அதன் பிற்பாடு மூசே வெஞ்சாம் M. Vincent உடைய காரியம் என்னமாயிருக்குதென்று கேட்டதுக்கு மூசே வெஞ்சாம் M. Vincent நிமித்தியம் மூசே துப்ளேக்ஸ் M. Dupleix தம்பி மிகுதியும் ஆவலாலே ஆண்ட அரணமரண சத்திமட்டுக்கும் பார்த்ததைக் காரியமில்லாமல் போச்சுது அதின்பேரில் மூசே வெஞ்சாம் M. Vincent மனசுப்படி உடனே பரீசு என்கிற பட்டணத்திலே தெருத்தெருவாய் உலாத்திக்கொண்டு திரிகிருர் என்று சொன்னர். அதின்பேரில் நான் அனுப்பிவித்துக்கொண்டேன். அவர் வாசற்படி மட்டுக்கும் வந்து வழிவிட்டார்.

வையாசி மீ க்கு மே மூ 11 உ ஞாயிற்றுக்கிழமை நாள்

மாயையிலே இருந்து சேன் பெனுவா (St. Benoit.) என்கிற கப்பல் மிளகு ஏலக்காய் இது முதலாகிய சரக்குகள் சீனத்துக்கு கொண்டு போகத் தக்கதாக ஏத்திக்கொண்டு வந்தது. இந்தக்கப்பல் சீனத்துக்குப் பயணம்போகிறப் கப்பலானபடியினலே இந்தச் சரக்கெல்லாம் கப்பலிலே தலை நிறுத்தி நூரு பாரம் மிளகு மாத்திரம் கரையிலே இறக்கினர்கள். இந்தக் கப்பல் கப்பித்தான் மூசே தீரடுதேன் (M. Desjardins.)

6 உ க்கு 1738 ஸ்ரீ மே மீ 16 உ

இந்த நாள் காலமே ஒன்பது மணி நேரத்துக்கு இந்த வருஷத்து கோந்துராத்து Contract க்கு பழய கும்பனீர் கையிலே மூவாயிரங் கட்டுக்கு கோந்துராக்த்து Contract லே கையெழுத்து போட்டுவிச்சுக்கொண்டு சகலாத்தும் வெகுமானம் பண்ணி கொலுசும் போட்டு பதிமூனு பீரங்கியும் போட்டார்கள் ஆனால் சகலாத்தும் பீரங்கியும் அவர்களுக்கு எப்போதும் கொடுக்கிற குஸாத் மாதிரிதான். ஆனால்கொலுசு மாத்திரம் அவரவர் வீட்டுகளிலே இருந்துகொண்டு போய்பிரதிஷ்டைக்காக போட்டுக்கொண்டு வந்ததே அல்லாமல் கும்பனியார் கொடுத்ததே இல்லே. எது நிமித்தியம் இப்படி செய்தார்கள் என்றால் சுங்குவாருக்கு சகலாத்தும் பீரங்கியுமாச்சுதே என்னும் தஙகளுக்கு பின்னையும் அதிசயமாய் வெகுமானம் கொடுத்து யிருக்கவேணுமென்கிறதைக் குறித்து முன்னாலே அஞ்சாறு வருஷத்துக்கு முன்பாக மூசே லெனுவாா் அவர்கள் துரைத்தனத்திலே ஒருதரம் இப்படி கொலுசுமாத்திரம் அதிசயமாய் தங்களுக்கு வெகுமானம் பண்ணச் சொல்லி கேட்டதுக்கு அவர் சொன்னது... .................... ...*நடக்கிறபடிக்கு கொடுக்கிறதேயல்லாமல்.............................*

காளயுக்தி ஸ்ரீ வையாசி மீ 6உ 1738 மே மீ 16உ

...தென்று தீர்மானமாய்ச் சொன்னபடியினாலே அவர் அப்போது அவரவர் தங்கள் வீட்டுகளிலே யிருந்துகொண்டு வருகிறோம். வெளிச்கு நீங்கள் கொடுத்ததா யிருக்கவேணுமென்று மனுவாய்க் கேட்டுக்கொண்டார்கள் அவசியம் அப்படியானால் பதினாயிரந்தரம் நாம்கொடுத்த தாய் வெளிக்கு எண்பிச்சுக் கொடுக்கிறோம். நம்முடைய வசத்திலே கொண்டுவந்து கொடுங்களென்று சொன்னார். அதின்பேரிலே அவரவர் வீடுகளிலேயிருந்து கொலுசுகள் கொண்டுபோய் கனகராய முதலியார் கையிலே கொடுத்து அவரதைக் கொண்டுபோய் துரையவர்கள் கையிலே கொடுத்து அதன் பேரிலே வர்த்தகருக்குக் கொடுப்பிச்சார்கள். இப்பவும் அந்தச் சாடையாய்த்தானே அவரவர் வீட்டிலேயிருந்து கொலுசுகள் கொண்டுபோய்க் கொடுத்து பிரதிஷ்டைக்கு துரையவர்கள் கையினாலே போட்டுவிச்சுக்கொண்டு வந்தார்கள். இந்த வருஷம் எப்போதும் நடவாத காரியம் நூதனமாய் நடந்ததென்னவென்றால் கோந்துராக்த்து contract கொடுத்து அனுப்பிவிச்சுக்கொண்டு வர்த்தகர் போகச்சே கோன்செல் conseil வீட்டிலேயிருந்து அவர்கள் கும்பனியாருக்குப் போகிறமட்டும் இட்டங்கைத்தேவடியாளும் விடங்கை மேளக்காரருடனே கூடக் கிடங்கு மட்

* கிழிந்திருக்கிறது.

டும் போனார்கள்............மத்தப்படி முன் பின் ஆராருக்கு யெந்தப்படிக்கு வெகுமானம் பண்ணுவர்களோ அந்தப்படிக்கு அவரவருக்குக் கொடுத்தார்கள்.

இந்த நாள் இராத்திரி ஊரிலே நடந்த அதிசயமென்னவென்றால் இமாம் சாயபு Imam Sahib. உடைய உத்திரவுப்படிக்கு அவர்கள் காரியம் சுப்பையரும், இரங்கப்ப செட்டிக்காரும் சீமைக் கப்பலுக்கு ஐம்பதினாயிரம் வராகன் வெள்ளி சேர் 1-க்கு 7 வராகன் 2 பணம் விழுக்காடு கொடுக்க ரூபாய் போட்டுக் கொள்ளச் சொல்லி பர்வானா எழுதி கொடுக்கிறபோது பண்ணிக்கொண்ட உடன்படிக்கைப்படிக்கு இவர்கள் ஐம்பதினாயிரம்வராகன் கொண்டுவந்தார்கள். அதின்பேரிலே துரையிருந்து கொண்டு இன்னம் ஒரு கப்பல் அஞ்சாறு நாளையில் வரும். அந்தக் கப்பலுக்கு கூட ஐம்பதினாயிரம் வராகன் அழைப்பியுங்கள். லக்ஷம் வராகனுக்கு வெள்ளி கொடுத்து விடுகிறோம் என்று சொன்னதிலே அதுக்கு சுப்பையரும் இரங்கப்பசெட்டியுமாயிருந்துகொண்டு நீங்கள் இப்போது வழங்குகிற ஆலம்புரவி வராகன் சத்து மாத்துயிளப்பமென்று பேச்சு வார்த்தை நடப்பிச்சதாக நாங்கள் சேதி கேட்டோம். இப்போது வரப்போகிற வராகன் எட்டு மாத்துக்கு சத்தேறவுமிருக்கும் குறையாமலும் இருக்கும். ஆனபடியினாலே அழைப்பித்து தமக்குக் கூடாது என்று சொல்ல கோட்டை கும்பனியின் வர்த்தகத்துக்குக் கொடுத்ததுக்கு ஆகவும் செலவுக்கும் வராகனில்லாததினாலே ராஜஸ்ரீ துரையவர்கள் இரண்டுமூனு நாள் மட்டுக்கும் இந்தப்பேச்சை தகரார் பண்ணி அதின்பேரிலே வராகன் அழைப்பிக்கச் சொல்லிச்சொல்ல அதின்பேரிலே சுப்பய்யரும், இரங்கப்பசெட்டியும் ஆலம்புரவிக்கு எழுதி அனுப்பிவிச்சுப் பின்னையும் அன்பதினாயிரம் வராகன் அழைப்பிச்சார்கள். அதின் பேரிலே துரையவர்கள் தங்கசாலையாரை அழைப்பிச்சு வராகனை உருக்கி மாத்து எத்தினிமாத்துயிருக்குதோ அதைப்பார்த்து வந்து சொல்லச் சொல்லி உத்தாரம் கொடுத்தார்கள் (..............*) ஆலம் புரவியிலிருந்து வந்த வராகனிலே 10 வராகன் எடுத்து உருக்கினார்கள்.

1738 ஜுன் மாதம் 10 உ க்கு காளயுக்தி ௵ வைகாசி மீ 31 உ செவ்வாய்க்கிழமை

இந்த நாள் சாயங்காலம் கொஞ்சம் 6 மணிக்கு முன்னாலே சீமையிலேயிருந்து சென்ஜெரான் (St. Geran) என்கிற கப்பல் வந்தது. அந்தக் கப்பல் கப்பித்தான் பேர் மூசே ஒப்பேன் (M Aubin). கப்பல் வந்து துறைபிடிச்சு கோட்டைக்கு 17

---

* கிழிந்திருக்கிறது

பீரங்கி போட்டான். பதிலுக்கு கோட்டையிலே அந்தப்படி பதினேழு பீரங்கிகள் போட்டார்கள். கப்பல் கப்பித்தான் இறங்கச்சே ஒன்பது பீரங்கி போட்டார்கள். இந்தக் கப் பலிலே வந்த சேதி பிறகே வருகிற கப்பலிலே மூசே தும்மா குவர்னர் துரை யவர்களுக்கு சேன் மிக்கேல் (St. Michael) என்கிற முத்திரை ராஜாவினுடைய உத்திரவுப்படிக்கு கோன்த்ரோலேர் ஜெனுரால் (Contrôleur Général) அவா கள் கொடுக்கிறோம் என்று சொன்னதாய் அந்த முத்திரையை கும்பனியர் பிறகே வருகிற கப்பலிலே அனுப்பிவிக்கிறோம் என்று சொல்லி மூசே தும்மா குவர்னர் துரை யவர்களுக்கும் எழுதி அனுப்பிவிச்சார்கள் அந்தக்கடுதாசியை மறுநாள்..
......

ஆனி மீ 1 உ க்கு ஜூன் மீ 11 புதவாரம்

காலமே எட்டு மணிக்கு கோன்சேல் கூடி படித்து அந்த சந்தோஷச் சேதிக்கு குவர்னர் துரையவர்களுக்கு சின்னதுரை மத்துமுள்ள கோன்சேல்பேர்கள் சந்தித்துப்பேசினது கோட்டையிலே இருபத்தோரு பீரங்கி போட்டார்கள் அவரவர்கள் துரை அவர்களுக்கு சந்தோஷக் கபுறு சொல்லி ஆசாரம் பண்ணினார்கள். ஊரிலே உண்டானவர்த்தகர் மகான்கள் அனைவரும்—துரையவர்களண்டைக்குப் போய் சந்தித்து சந்தோஷமான சேதிக்கு உபசாரம் சொல்லிப் போட்டு வந்தார்கள் இந்த முத்திரை ஏன் இவருக்கு வாங்கி அனுப்பிவிக்கிறார்களென்றால் இவர் ரூபா முத்திரை முப்பது வருஷமாய் பிரயத்தினம் பண்ணுகிற விடத்திலே அந்த துரைத்தனத்திலே ஆகாமல் இவர் துரைத்தனத்திலே ரூபாய் முத்திரைக்கு பிரயத்தனம் பண்ணினதிலே ரூபாய் போட்டுக்கொள்ளச் சொல்லி பர்வானா வந்தபடியினாலே இந்தச் சேதி சீமைக்கு எழுதிப்போனதிலே கும்பனியார் வெகு நாளாய் பிரயத்தனம் பண்ணி வெகுபணம் செலவிட்டுயிருக்கிறவர்களான படியாலேயும் இந்த ரூபாய் முத்திரையைத் தொட்டு கும்பனியாருக்கு வெகு பணம் செலவாகுது அதனாலேயும் கும்பனியாருக்கு வெகு சந்தோஷம் வந்து கோன்த்ரோலேர் ஜெனராலுக்கு மிகுதியும் தெரியப்படச் சொல்லிவிச்சு அவரைக்கொண்டு ராசாவுக்கும் அதுக்கொத்தபடிக்கும் ரொம்ப தெரியப்படச் சொன்ன விதத்திலே அதுக்கு ராசா என்ன நடப்பிக்க வேணுமென்று கேட்க மூசே தும்மா இதுக்கு முன்னே தானே தம்முடைய பெருக்குரேத்தருக்கு எழுதி அனுப்பிச்சு சென்மிஷெல் முத்திரைக்குப் பிரயத்தினம் பண்ணிக்கொண்டிருக்கிற சாடை கும்பனியார் அறிந்து அந்த முத்திரை கொடுக்கவேண்டுமென்று கோன்த்ரோலேர் ஜனராலுக்கு அறிக்கை பண்ணியிருந்தபடியினாலே ராசா கேட்ட

தற்கு கோன்த்ரோலேர் ஜெனரால் சென்மிஷெல் என்கிற முத்திரை கொடுக்கவேண்டுமென்று கேட்டார். அதுக்கு ராசாவும் அப்படித்தானே கொடுப்போம் என்று சொல்லி அதற்கு எந்த மத்தமுஸ்தீது பண்ணச்சொல்லி கோன்த்ரோலேர் ஜெனராலுக்கு உத்தாரங் கொடுத்தார்கள். அவரும் அந்தப்படியே முஸ்தீது பண்ணி பிறகு வரும் கப்பலிலே அனுப்பிவிக்கிறோம் என்று கும்பனியாருடனே சொன்னார். அந்தச் சந்தோஷமான வார்த்தை கும்பனியார் முசே தும்மா கவர்னர் துரையவர்களுக்கு கொன்சேலுக்கு கும்பனியார் எழுதின கடுதாசியிலே எழுதினார்கள். இந்த முத்திரைதொட்டு என்ன ஆதாயம் என்றால் இவருடைய பிள்ளைகள் வம்சமும் பிரபுவானார்கள். யாராவது பிள்ளைகள் பிரபுவாயிருந்தால் இவர் வம்சத்திலுண்டான பெண்கள் கலியாணம் செய்துகொள்ளலாம். இவருக்கு பிள்ளை பிறந்தால் மன்னவான்கள் வீட்டிலே கலியாணம் பண்ணிக்கொள்ளலாம். இந்த முசே தும்மா பிராஞ்சுக்காரர் எங்கே இருக்கிறார்களோ அந்தவிடத்திலே போனாலும் ராசா யிருக்கிற ராசதானிப்பட்டணத்துக்கு என்று ரூபாய் முத்திரைக்கு சகல பிரயாசைப்பட்டு அவர் அழைப்பிக்க ஒரு பிரயாசையுமில்லாத இவருக்கு சகல மேன்பாடும் வந்ததானால் இவருடைய அதிர்ஷ்டம் பெரியதோ அவருடைய அதிர்ஷ்டம் பெரியதோ. இதிலே பார்த்துக்கொள்ள வேண்டியது — இந்த ரூபாய் முத்திரை நிமித்தியம் முசே எலியாசு (M. Elias) பிரயாசைப் பட்டார் என்று கும்பனியார் அவருக்கு எழுதின கடுதாசியும் அனுப்பிவிச்ச வெகுமானமும் முசே தும்மா குவர்னர் துரை இவருக்குக் கொடுத்தவரல்ல இந்த ரூபாய் முத்திரை நிமித்தியம் பிரயாசைப்பட்டார் என்று கனகராய முதலியாருக்கு ஒரு மெதாலியே (Medalliée) என்கிற முத்திரை கும்பனியாரால் செய்வித்து அனுப்பிவிக்கிறோம் என்று கோன்செல் கடுதாசியிலே எழுதி வந்தது. ராசாவினாலே கொடுக்கப் பட்டதல்லாதபடியினால் இதுக்கு மேன்பாடு இல்லை. இவருக்கு அனுப்புகிற முத்திரை சட்டம் வங்காளத்திலே பெரியதுபாஷாயிருக்கிற (Dubash) இந்துல் நாராயண சவுத்தரிக்கு மூணும் வருஷம் மெதாலியே என்கிற முத்திரை முசே துப்பிளேக்ஸ் அழைப்பிச்சு கொடுத்தான். பாத்தபேருக்கு முத்திரை என்கிறதானபடியினாலே ஒண்ணும் தெரியாத தமிழர் இதை மேன்பாடு என்று சொல்லுவார்கள். வெள்ளைக்காரருக்குள்ளே இது ஒண்ணுத்துக்கும் ஆகாது. ஒரு மேன்பாடும் இல்லை. ஆனால் இவருடைய அதிர்ஷ்டம் நல்ல அதிர்ஷ்டம் குருவப்பிள்ளைக்கும் வந்த மேன்பாடும் ஆதலும் அது அடங்கலுக்குப் பிரீதி அதுதவிர முன்னே துரைத்தனம்பண்ணின முசே லெனுவார் என்கிறவர் பந்தருக்கு எழுதி அனுப்பிவிச்சு அவ்விடத்து பவீசுதாரைக்கொண்டு சிக்கிலீசுக்கானடைக்குக்கு காகித பத்திரங்களை எழுதிவிச்சு அவரைக் கொண்டுதானே அவ்விடத்

துக்கு மனுஷரை அனுப்பி இரண்டாயிரம் மூவாயிரம் வராக னுக்குள்ளாக செலவு பண்ணி பந்தரிலே இவர்கள் பெத்திரி விஸ்தாரகமாக கட்டிக்கொள்ளவும். இவர்கள் சென்னப்பட்டி னத்து வராகன் சட்டம் புதுச்சேரியிலிருந்து போகிற வரா கனை பந்தரிலே செலாவணியாய் நடக்கும்படியும் புதுச்சேரியி லேயே ரூபா முத்திரை போட்டுக்கொள்ளவும். இந்தப்படிக்கு அந்தந்தப்படி சங்கதிக்கு நிசாமுடைய பர்வானு அழைப்பிச்சு புதுச்சேரியிலே ரூபா போடுகிறதுக்கு ஆர்காட்டிலே இருக்கிற நவாபுடைய உத்தாரம் இவ்விடத்திலே எல்லாம் செலாவணி யாய் நடத்துகிறதற்கு அவருடைய பர்வானு வேண்டியதான படியினாலே இதற்கு மூசே லெனுவார் இமாம்சாயபுவை அழைப் பித்து அதுக்கு நவாபுக்கு நடக்கவேண்டிய சங்கதியெல்லாம் ஷவர் (charter) கேட்டுக்கொண்டுநடக்கவேண்டிய வயணத்துக் கும் * மூசே லெனுவாருக்கு துரைத்தனம் மாறிப்போய் இந்த மூசே தும்மா வந்துபர்வானு ஆற்காட்டு நவாபுவினால் வாங்கி அனுப்பு கிறேனென்று போன இமாம் சாயபு அந்தப் பர்வானு வருகிற நாளையிலே அனுப்பிவைக்க இவர் நாளையிலே ஆச்சுதென்று சகல முயற்சியும் இவருக்கு வந்துப்போனாலும் ஷெவல்லியே என்று ஒபிஷியேல் ஓடுதி பெற்றவரென்றும் எவர்களும் மேன் பாடான மரியாதை பண்ணுவார்கள்

ராசாயிருக்கிற பட்டணத்துக்குள்ளே மற்றுமுள்ள வெள்ளைக்காரருக்கு முற்றுமுள்ள செலவுமுண்டு. இவர் ராசாவினாலே ஷெவாலியேர் என்ற கியாதி பெற்றபடியினால் இவருக்கு ராசதானிப் பட்டணத்திலே போனால் ராசாக் களுக்குக்கொடுக்கிற வரி மற்றுமுள்ள செலவு கொடுக்க கவலை யில்லை. இந்த முத்திரை குருவப்பிள்ளைக்கு ராசா கொடுத் திருந்தார். அவருக்குப்பிள்ளை இல்லாதபடியினாலே அந்த ஷெவாலியேர் என்கிற கியாதியும் அந்த முத்திரையும் அவர் மட்டுக்கும் மாத்திரம் நடக்கப்போகிறது. மற்றப்படி இவர் அண்ணன் தம்பி மற்றுமுள்ள பேருக்கு நடவாது, ஆனால் இந்த முத்திரை இவருக்குக் கிடைத்தது இவருடைய அதிர்ஷ் டமே அல்லாமல் மத்தப்படி சாமானியமாயிருக்கிற பேர் களுக்கெல்லாம் கிடைக்கிறது மெத்த அரிது. இவருடைய அதிர்ஷ்டம் மற்றப்பேர் இவ்விடத்திலே துரைத்தனம் பண் ணினவருடைய அதிர்ஷ்டத்தைவிட பெரியதென்கிறதுக்கு ஒரு திருஷ்டாந்திரம் சொல்லுகிறேன். அதெப்படி யென்றால் இந்த ரூபாய் முத்திரைக்கு மெத்த கோப்பாய் உபாயமாய் முன் துரைத்தனம் பண்ணினவர்களெல்லாம் ஆற்காட்டிலும் இருக்கிற நவாபுவண்டைக்கு இவ்விடத்திலிருந்தும் ஒருத் தரை அனுப்பி வெகுபேர் எத்தனம் பண்ணி வெகுபணம் செலவழிஞ்சும் காரியமாகாதுபோச்சென்று இவருக்கு முன்

* இரண்டு வரிகள் கிழிந்துயிருக்கிறது.

துரை இருந்த துபாஷிகளுக்கு ஒருத்தருக்கும் இத்தனை நாள் துபாஷ்தனம் பண்ணதுமில்லை. இப்படி பண்ணி சம்பாதிச்சதுமில்லை. இப்படி • சீமை அறிந்து மேன்பாடு பெற்றவர்களுமில்லை ஆனபடியினாலே இவருடைய அதிர்ஷ்டம் பெரியது. இந்தக் கப்பலிலே வந்த வெள்ளிமார்க்கு சகலாத்துக்கட்டு 100 இதிலே கோட்டைக்கு புது கணக்கரும் வந்தார்கள். *

அதிலே நடந்த அதிசயம் என்னவென்றால முன்னாலே இவ்விடத்திலேயிருந்து ஓடிப்போன சோல்தாது (Soldier) ஒருவனைப் பிடிச்சு வந்து பதினைந்து நாள் கிடங்கிலே போட்டு வச்சிருந்து எல்லோருக்கும் பட்டம் வருகிற நிமித்தியமாய் அன்றைய தினம் இந்த சொல்தாதுவைக் கொண்டுபோய் கோட்டைக்குத் தென்பாரிசத்திலே கோட்டை அகழி ஓரத்திலே கொண்டுவந்து முழங்காலின் பேரிலேறியிருக்கச்சொல்லி லேஞ்சுவினாலேகண்ணைக்கட்டிப்போட்டுமூனுபேர் துப்பாக்கிக்காரர் எதிரே நின்று துப்பாக்கியில் மருந்து இடிச்சு சுட்டுத் தள்ளிப் போட்டார்கள். இந்த அதிசயம் இன்றைக்கு நடந்தது. †

1738 ஸு ஜுலை மீ 9௳ காளயுக்தி ஸு ஆனி மீ 29 க்கு பகன்கிழமை

இன்றைய மத்தியானம் பிரான்சிஸ்கோ பிரேரா சந்தா சாகிப்புவின் வைத்தியன், சந்தா சாகிப்பு குவர்னர் துரைக்கு அனுப்பிய வெகுமானத்தைக் கொண்டுவந்தான். முசே இங்கிராமும், முசே கோலாரும் மேளதாளம் நல்ல தட்டுமுட்டு இந்த வாத்தியங்களுடனே திருவேங்கடபிள்ளை அவர்கள் தோட்டத்திலே அந்த ஹக்கீம் இறங்கியிருக்கிறசமயம் அந்த மட்டுக்கும் போய் அந்த வெகுமானம் பிடிச்சுக்கொண்டு வழுதாவூர் கேட்டு வாசலிலே வரச்சே ஏழு பீரங்கி போட்டார்கள். அப்புறம் துரை வீட்டுக்குப்போய் படியின்மேலே ஏறிப்போய் மேலே போனவுடனே துரை எதிரே கட்டிக்கொண்டுவந்து நடு சாலே அழைத்துக்கொண்டுபோய் பாங்குமேல் உட்கார்ந்தவுடனே பதினேழு பீரங்கிபோட்டார்கள். இவர் கொண்டு வந்த வெகுமானம் என்னவென்றால் ஒருமுடிச்சுபட்டு சட்டமாய் மாட்டியிருக்கிறது, அது நூற்றுக்குமேலே பெறும் ஒரு பாகை பத்து வராகனும் பெறும். அதன்மேல் ஒரு கச்சையும் அப்படித்தான் இதுக்கு முன்னே ஒரு மாதத்திற்குமுன்கே வந்துகுவர்னர் துரைக்கு ஒரு துருக்கி குதிரையும் நான்கு நகை வெமனான

* (இங்கே ஒரு வரி கிழிந்துபோயிருக்கிறது).

† (இரண்டு வரிகள் கிழிந்து போயிருக்கின்றன. மூன்றாம் வரியிலிருந்து ஆரம்பித்திருக்கிறது.)

மும் சந்தா சாகிபுவினதென்று கொண்டுவந்ததல்லாமல் கோன்சேல்லியர்களுக்கெல்லாம் அவரவர்களுக்கு நாற்பது. அன்பது வராகனுக்கும் அதிகமாகத்தானே கொடுத்து பதினஞ்சு நாளும் இவ்விடத்திலிருந்து அவ்விடக்திற்குப்போனவர் சந்தாசாகிபு திருவண்ணுமலை மட்டும் வந்து அங்கேயிருந்து இந்த ஹுக்கிமை மறுபடி அனுப்பிவிச்சதென்னவென்று விசாரிக்குமிடத்தில் அவர் வராகன் லட்சம் கூட கொண்டுவந்து துரைக்கு கொடுத்தார், இதுக்கு வட்டி ஒரு வருஷம் மட்டுக்கும் கவையில்லை. அப்புறம் வருஷத்துக்கு மேல் யிருக்கிற வட்டியும் இதுக்குள்ளாகக் கொடுத்துவிட்டால் கவையில்லையென்றும் உடன்படிக்கை பண்ணிக் கொண்டதாய் ஊர்ச்சிதமான சேதியாய் சொன்னுர்கள் அந்தப்படி இவர்கள் கொண்டுவந்து கொடுத்துப் பின்னுல் லட்சம் வராகன் வியாபாரத்துக்கு ஆகும்படி போய்க்கொண்டு வரப்போகிருன் என்று சொன்னுர்கள்

இந்த நாள் சாயங்காலம் ஆறு மணிக்கு சீமையிலிருந்து துசெஷ் Duchesse என்கிற கப்பல் வந்தது. இந்தக் கப்பல் கப்பித்தான் பேர் மூசே மோனிக்த (M. Monique) இந்தக் கப்பல் சீமையைவிட்டுப் புறப்பட்டது. தெசம்பர் மாதத்திலே. இந்தக் கப்பல் மசுக்கரை (Mascarigne) பிடிச்சு அங்கேயே ஒரு மாதம் இருந்துவந்தது. (Mascarigne) மசுக்கரையின் சேதி என்னவென்று இந்தச் சீமைக் கப்பல் கப்பித்தானை கேட்க இவன் சொன்னது தான் கப்பலிலே மூசே லாபோர்தோனே (M de la Bourdonnais)வுக்கு(St. Louis)சென் லூயிஸ் என்கிற முத்திரை நான் கொண்டுவந்து மூசே லபோர்தனேவுக்கு கொடுத்தேன். நான் மசுக்கரை (Mascareigne)க்கு.......... * ............ அப்பொழுது மூசே லாபோர்தோனேயின் பெண்சாதி, மார்பு அடைப்பு வியாதியில் இறந்துவிட்டபடியாலும் அவள் எட்டு மாத கற்பமாயிருந்ததாகவும், பின்னை இரண்டரை வருஷமுள்ள ஆண் பிள்ளை இரண்டு மூணு நாளில் செத்துப் போச்சு ஆனதினுல் லபோர்த்தோனே ரொம்ப விசாரமாயிருக்கிருன் என்றுன்.

இந்தக் கப்பல் பங்காளத்துக்கு வந்த கப்பலானபடியினுலே இதில் வந்த வெள்ளியை இறக்கி ரூபாய் போட்டுக் கொண்டு மறுபடியும் பங்காளத்தக்குப் போகிறேமென்றும் சொன்னுர்கள்.

**1738 ஜூலை மாதம் 26 காளயுக்தி ஆடி மீ 14 உ சனிவாரம்**

காலை ஆறு மணிக்கு காரைக்காலும், கருக்கிளாச்சேரிக் கோட்டையும் திருமலைராயன் பட்டணம் இது முதலாகிய

* இங்கே கிழிந்திருக்கிறது.

அஞ்சு கிராமமும் வாங்குகிற நிமித்தியம் கோட்டை சுப்பைய நும் சேஷாசல செட்டியார் காரியக்காரர் அவசரம் கிருஷ்ணய்ய நும் சேஷாசல செட்டியாண்டையிலே இருக்கிற மூசே தூந்து மூஞ்சி வீரப்பய்யனும் இப்போ புதுசாய் பட்டத்துக்கு தஞ்சா வூரிலே போயிருக்கிற ராசாவினண்டையிலே இருக்கிற ரங்க பண்டிதரவர்களுடைய மனுஷன் பேர் விளங்கான் அய்யனும் ஒரு சேர்வைக்காரனும் இவர்கள் கூட கும்பனிர்--சேவகர் நாலு பேரும் இவாகள் தஞ்சாவூர் ராசாவுக்கு வெகுமானம் கொண்டு போகிறதுக்கு பயணப் பட்டு அப்ப ரம்ஙேகிப் போனூர்கள். கொண்டுபோன வெகுமான வயணம்:—

| | |
|---|---|
| ராசாவுக்கு அனுப்பின வெகுமான தினிசு மதிப்பு இரையம் வராகன் ... ... | 407 |
| மேற்படி அம்மான் சுத்தரோசி காட்டிகையிக்கு வெகு மானம் மதிப்பு வராகன் ... ... | 96 |
| மேற்படி அண்டையிலே இருக்கிற ரங்க பண்டித ருக்கு மதிப்பு வராகன் ... ... | 106 |
| அவ்விடத்து பேசுவாய் ஆனந்தராயர் குமாரன் திரியம் பகராயருக்கு மதிப்பு வராகன் ... ... | 96 |
| கோட்டை சையத்துகானுக்கு அனுப்பின வெகுமானம் மதிப்பு வராகன் ... ... | 120 |

இந்த பேசுவாயி ஆனந்தாராயர் குமாரனுக்கும் கோட்டை சையத்துக்கும் வெகுமானம் அனுப்புகிறதற்கும் மத்தியானம் யோசனை பண்ணி வெகுமானம்கொடுத்து இராத் திரி பயணம் பண்ணி அனுப்பிவிச்சார்கள் இந்த நாள் காரைக்காலுக்கு போகத்தக்கதாக மூசே ஸ்ரீநுவாஸ் பயணமாகிப் பேரார் என்று சொன்னூர்கள். 15 ந்தேதி ஆதிவார நாள் பகலுக்குமேல் மூணு மணிக்கு மூசே ஸ்ரீநுவார் காரைக்காலுக்கு கொம்மாந்தமார்களும் அவருக்கு இரண்டாவது மூசே மடுந் தேன் வில்லும் (M. Martinville) என்கிறவனும் கோட்டை மாத்திக்கட்ட மூசே ரெப்புட்டி (M. Rebutty) என்கிற வனும் இஞ்சினீராகவும் பயணம் புறப்பட்டு காரைக் காலுக்குப் போனூர்கள். அவ்விடத்து உத்தி யோகஸ்தராயிருக்கப்போன தமிழர் மூன் சாவடி மணியம் பண்ணின அருணுசல முதலி மகன் கெருடப்பார்வை பிரகாச முதலி பெரிய துபாஷ் இடத்துக்கும் பெக்தோர் கணக்குக்கு அரும் பாத்தைபிள்ளை தம்பி குமாரன் சின்ன பாசுராம் பிள்ளையும் தங்க சாலை மேலுகிரி பண்டிதர் குமாரன் சீனிவாச பண்டிதர் என் கிறவருமான அஞ்சாம்பிள்ளை என்கிற இவருக்கு என்ன உத்

தியோகம் என்றால் அவ்விடத்துக்குப்போன பிற்பாடு மூசே தீருவாருக்கு எந்த உத்தியோகத்திலே வைக்க சம்மதியோ அப்படிக்கு ஒரு உத்தியோகத்திலே வச்சுக்கொண்டு இருக்கவும் அவனுடன் இருபது சிப்பாய்களும் அனுப்பிவிச்சுப் போட்டு புறப்பட்டார்கள். இதல்லாமலும் மூசே தீருவாரு பிறகே போனார். இவர் சேவகர் இருபது பேர் இந்தப் பயண சன்னாகத்துடனே புறப்பட்டு காரைக்காலுக்குப் போனார்கள். தஞ்சாவூர் சமாச்சாரம் இவ்விடத்திற்கு வரவும் இவ்விடத்து சமாசாரம் காரைக்காலுக்குப் போகவும் அன்றுடம் கபுரு அறியத்தக்கதாக தஞ்சாவூருக்கும் புதுச்சேரிக்கும் காரைக்காலுக்குமாக தபால் வச்சார்கள்.

(1738 சூலை 28) காளயுக்தி ஞூ ஆடி மீ 16 உ திங்கட்கிழமை

காரைக்காலுக்கு அனுப்பத்தக்கதாக சென்சரான் (St. Geran) என்கிற சீமை கப்பலே பயணம் பண்ணி கப்பல் கப்பித்தான் மூசே ஒபென் என்கிறவனும் சோலாத்துக்கு கத்பித்தான் மூசே லத்தூரும் (M. de la Latour) பெரிய மய்யோர் மூசே நசெல்லும் லூத்தினந்து மூசே கோக்கலேனும் நூறு சோலுத்தும் காரைக்காலிலே கணக்கெழுதுகிறத்துக்கு மூசே திலார்சே (M. Delarche) என்கிற கணக்கனும் மூசே செஞ்சில் என்கிற மித்தீஸ் கணக்கனும் பயணம்பண்ணி இந்தக்கப்பலின் பேரிலே ஏத்தி இதல்லாமல் கொல்லுத்துக்காரர் வாள்காரர் இவர்கள் அறுபது எழுபது சனங்கள் மாத்திரம் கூட கப்பலின் பேரில் ஏத்தி இதல்லாமல் செங்கல் சுண்ணாம்பு கோடாலி கொடுவாள் மண் வெட்டி முதலாகியதும் ஏத்தி கப்பலே காரைக்காலுக்குப்பயணமாக பண்ணி இந்தநாள் சாயங்காலம் கணக்காய் பாயெடுத்து ஓடினான். காற்று இல்லாதபடியினாலே ஓசந்துனேயி வச்சுப்பிடிச்சு நங்கூரம் போட்டுக்கொண்டு கிடக்கிறான்.

1738 ஆகஸ்ட்டு மீ 3-ந் தேதி காளயுக்தி ஞூ ஆடி மீ 22உ ஞாயிற்றுக்கிழமை.

இந்த நாள் தஞ்சாவூர் தபாலிலே வந்த கடுதாசி சேதி என்ன என்று விசாரித்ததில் வெகுமானம் கொண்டு போனவர்கள் மாயவரத்தில்தானே நின்னு ரங்கோசி பண்டிதன் மனுஷன் பிராமணனும் சேருவக்காரனையும் முன்னே தஞ்சாவூருக்கு அனுப்பிவிச்சார்கள். ரங்கோசி பண்டிதனைப் போய்க்கண்டு பேசி அவனுக்குக் கொடுத்த கடுதாசியும் அவன் கையிலே கொடுத்துவிடத்திலே அவன் இவர்களுக்கு மறு கடுதாசி எழுதிக்கொடுத்து சொல்லி அனுப்பிவிச்ச சேதி என்ன

வென்றால் நாங்கள் எது நிமித்தியம் காரைக்காலும் அத்தோடே சேர்த்து அஞ்சு கிராமமும் கொடுக்கிறோமென்று சொன்னோமானால் அப்போது எங்களுக்கு கையில் பணமில்லாதிருந்ததை முன்னிட்டு அப்போதுஎங்களுக்கு செலவுக்கு வேணுமென்று சொல்லி உங்களுக்கு எழுதி அனுப்பி மனுஷரை அனுப்பிவிச்சதும் அந்த வேளைக்கு நீங்கள் அனுப்பிவியாமல் போனீர்கள். இப்போது எங்களுக்குப் பணத்துடனே சேத்துக்கஎன்ன கவையிருக்கிறது, நாங்களும் அப்போது ஒரு சமயம் குறிச்சல்லோ கேட்டோம் அப்போது கொடாமல் போனீர்கள் இப்போதுஎங்களுக்குவராகன் தேவையில்லை போங்கள் என்று சொல்லி கடுதாசியும் எழுதிக்கொடுத்து முகதாவிலேயும் சொல்லச்சொல்லி அனுப்பி விட்டார்கள். அந்தச்சேதி சுப்பையனும் கிருஷ்ணய்யனும் இவ்விடத்திற்கு எழுதி அனுப்பி விட்டு கிருஷ்ணய்யன் ரங்கோசி பண்டிதரைக்கண்டு பேசி வருகிறேன் என்று தஞ்சாவூருக்குப் போனான். அந்தச்சேதி புதுச்சேரிக்கு கனகராயமுதலி இடத்திற்கு வந்த உடனே அவர் பார்த்துக்கொண்டு துரையவர்களுக்குப் போய் இந்த சேதியைச்சொல்ல துரையவர்களும் மனஸ்தாபமாயிருந்துகொண்டு கனகராய முதலியாரும், சேஷாசல செட்டியாரும் இந்த யுக்தியான சேதியைக் கேட்டு துக்கமடைந்து இருந்தார்கள்.

1738 ஆண்டு ஆகஸ்டுமீ 3உ காளயுக்தி ஸ்ரீ ஆடி மீ 22 ந்தேதி

காரைக்காலுக்குப் போயிருந்த மலையப்பமுதலி என்கிறவனும் முத்துப்பிள்ளை என்கிறவனும் கனகராய முதலிக்கு ஓலை எழுதி அனுப்பிவிச்சார்கள். அந்த ஓலையிலே எழுதியிருந்த சேதி என்னவென்றால் நீங்கள் காரைக்காலுக்குப் போகச்சொன்னபடிக்கு நாங்கள் அவ்விடத்திலே யிருக்கிற சோளகர் மற்றுமுள்ளபேர் ஊர்க் குடியருக்குச் சொன்ன சேதி என்னவென்றால் இப்படிக்கு இந்த ஊர் பிராஞ்சுக்காரருக்காச்சுது நீங்கள் சுகமேயிருக்கலாம். கப்பலும் வெள்ளைக்காரரும் ஏழு எட்டு நாளையிலே வருவார்கள் என்று சொன்னோம் அவர்களும் மெத்த சந்தோஷமாச்சுது என்று சொல்லி அவர்களும் இந்தச் சேதி சுபேதாருக்கு எழுதி அனுப்பிவிச்சார்கள். அவர் தஞ்சாவூர் ராஜாவுக்கு எழுதி அனுப்பிவிச்சுவிட்டார். அதிலே நாமென்ன அவர்களுக்கு சீமை பூமி கொடுத்தோமா? அவர்கள் மனுஷர் யாராகிலும் வந்தால் அடிச்சுத் துரத்திவிடச்சொல்லியும் சுபேதாருக்கு எழுதியும் அனுப்பிவிச்சாராம். இதல்லாமல் நூறு குதிரையும் முன்னூறு பேர் ராணுவமும் போய் காரைக்காலிலே இறங்கியிருக்கச் சொல்லியும் இப்படியாக எழுதி அனுப்பி[illegible]ராம். அதின்

பேரிலே குதிரையும், ராணுவமும் வந்து இறங்கி எங்களையும் அழைச்சு அப்புறம் போய்விடச்சொன்னார்கள். நாங்களும் அப்புறத்திலே போய் இருக்கிறோம் என்று மலையப்ப முதலியும் முத்துப்பிள்ளை என்கிறவனும் கனகராயமுதலிக்கு எழுதி யனுப்பினார்கள். இந்தச் சேதியும் வந்தவுடனே மெத்தவும் மன மடிவாயிருந்தார்கள்.

1738 ஆகஸ்ட்டு மீ 10 உ காளயுக்தி ௵ ஆடி மீ 29 உ ஞாயிற்றுக்கிழமைக்கு.

இந்த நாள் மத்தியானத்துக்கு மேல் மூணு மணி வேளைக் குமேல், 1737 ஆ டிசெம்பர் மீ சீமையிலிருந்து புறப்பட்ட பினீக்ஸ், (Phenix) என்கிற கப்பல் இந்த நாள் மூணு மணிக்கு வந்து துறை பிடிச்சு கோட்டையில் இருபத்தோரு பீரங்கி யும் போட்டார்கள். பதிலுக்கு கோட்டையிலே இருபத்தொரு பீரங்கியும் போட்டான். அந்தக் கப்பல் மூணாவது கணக்கன் இறங்கிக்கொண்டு வந்த கடுதாசியைக் கொடுத்துப் போட்டு கப்பித்தான் நாளைக்கு இறங்குவான் என்று சொல்லிப்போட்டு மறுபடி கப்பலின் மேலேறிப்போனான்.

30 உ திங்கட்கிழமை காலமே எட்டு மணிக்கு நேற்றைய தினம் சீமையிலிருந்து வந்த பினீக்ஸ் (Phenix) என்கிற கப் பல் கப்பித்தான் முசீயோர் தெபுத்தலெர் (M. de la Butler) என்கிறவன் கப்பல் விட்டு இறங்கி கரையிலே இழிஞ்சு கோட்டை வாசலுக்கு நேராய் வரச்சே பதிமூணு பீரங்கி போட்டார்கள். அதின் பேரிலே துரையை வந்து சந்திச்சுக் கொண்டு அவனுக்கு ஒரு விடுதி விட்டு விட்டார்கள். அங்கே போயிருந்தான்.

இந்த நாள் மத்தியானத்துமேல் மூணு மணிக்கு பங்கா ளத்திலே........... திரெக்த்தராயிருக்கிற (Directar) முசே துப்பிளெயிக்ஸ்டைய அறும்சாகிய கப்பல் – கப்பல் சித்தவுக்குப் போய் அவ்விடத்திலே இருந்துவரச்சே மொக்கா பிடிச்சு அவ்விடத்து திரெக்த்தர் முசே கப்பிரியேல் தும்மாவுடைய கடுதாசியும் வாங்கிக்கொண்டு அவ்விடத்திலேயிருந்து சூலை மீ 7 உ புறப்பட்டு இந்த நாள் மூன்று மணிக்கு இந்த துறையிலே வந்து விச்சு பிடிச்சு கோட்டையில்.....பீரங்கி யும் போட்டு கப்பல் கப்பித்தான் —முசே போமோவும் (M. Beamonnt) சூபர்கார்க்கு முசே ஆல்பேர்ட்டும் இறங்கினார் கள்.

1738 ஆகஸ்ட்டு மீ 11 உ காளயுக்தி ஹூ ஆடி மீ 30 உ திங்கட் கிழமை

இந்த நாள் வந்த கப்பல் சேதி சொன்ன சேதி என்னவென்றால் சித்தாவிலே (Jeddah) கொண்டுபோன சரக்கில் அரையே அரைக்கால் வாசி வித்தது காலே அரைக்கால் வாசி விக்கவில்லை. என்றும் அது நிமித்தியம் அந்தச் சரக்கையும் அவ்விடத்திலே முசே துப்பாந்தே—(M. Dupati) என்கிறவனையும் வச்சுப் போட்டும் வந்துவிட்டோம் என்றும் மொக்காவிலே (Mocha) சரக்கு ஏத்தினார். விக்கயில்லை, என்றால் கைகொள்ளுகிறதுக்கு ஒருத்தரும் வராததினாலே பத்தக்கு (Dollars) வரத்து இல்லாதபடியினாலேயும் மொக்காவிலே துரைத்தனம் பண்ணுகிற அரபிக்காரர் பிரதேசத்து வர்த்தகரை ரொம்ப அன்னியாஷரம் பண்ணுகிறபடியினாலேயும் பத்தக்கு (Dollars) வரத்து இல்லை ஆனபடியினாலே மொக்கா வியாபாரம் இவ்விடத்திலே இருந்து போனதற்கு தே. பொர்போன் (Duc de Bourbon) என்கிற கப்பல் சீமை கப்பல் சரக்கும் புதுச்சேரி என்கிற ஊருக் கப்பல் சரக்கும் ஒரு கட்டாகிலும் நாங்கள் வருகிற மட்டுக்கும் வித்ததில்லை. இனிமேல் என்னமாயிருக்குமோ தெரியாது. என்றும் இந்தப்படி வியாபாரக் கணவி இல்லாத சேதியாய்ச் சொன்னான். மொக்காவில் இருக்கிறவர்கள் துரையவர்களுக்கு எழுதியனுப்பிவிச்ச கடுதாசியிலேயும் இந்த வயணம்தான் எழுதியிருந்தது துரையவர்கள் படிச்சுப்பார்த்துச் சொன்னார்கள். முசே மிராலுக்கு (M. Miran) எழுதிவந்த கடுதாசியும் அவர் படிச்சுப்பார்த்து அவரும் என்னுடனே இந்த வயணம்தான் சொன்னார்.

1738 ஹூ ஆகஸ்ட் மீ 12 உ காளயுக்தி ஹூ ஆடி மீ 31 உ செவ்வாய்க்கிழமை

காலமே எட்டு மணிக்கு ராஜஸ்ரீ துரையவர்கள் என்னை அழைச்சனுப்புவிச்சு தமக்குக் கூட்டுகிற இரண்டுமுழ அகலம் நெடுமுழம் 18 முழம், தொங்கல்கச்சை 18 முழ ரேக்கும், எட்டுக்கால நெடுமுழம் இதுகள் கவையில்லை. என்றும் மொக்காவிலே ஆனால் போன சரக்கு விக்க இல்லை என்றும் இனிமேல் இப்பவும் மற்றப்படி என்ன செய்கிறது. ஆனபடியினால் ஏத்தப்படத் தேவையில்லை என்றும் சொன்னார். அதுக்கு நான் சொன்னது பணம் காசு முன்னதாக அனுப்பி தறி இனிமேல் பூண்டு சட்டங்கட்டி நைசு சிறிது புடவைகளும் வந்தது இன்னும் வந்துமிருக்குதே இப்படி இருக்கச்சே எப்படி நிறுத்துகிறது என்று சொன்னேன் அதுக்கு அவர் சொன்னது எப்படி உண்டோ மார்க்கம் அப்படிப்பார் என்றும் சொன்னார். என்றாலே ஆனமட்டும் பார்க்கிறேன் அப்போதைக்கப்

போது நடக்கும் சேதிக்கு உம்மிடையிலே நான் வந்து சொல்லிக்கொள்ளுகிறேன் என்று சொல்லிப்போட்டு வந்துவிட்டேன். இத்தனை நாளுக்கு துலையாருக்கும் பரங்கிப்பேட்டைக்கும், சென்னமநாயக்கன்பாளையத்துக்கும் தரகர் அவரவர் பேருக்கும் சரக்கும் தேவையில்லை. கூட்டாக வேண்டாமென்று ஒரு பேக்காய் எழுதி அனுப்பிவிட்டேன்.

ஆவணி மீ 6 உ க்கு ஊத்து மீ 18 உ திங்கட்கிழமை

நான் பகல்மேலாய் மூணு மணிக்கு திருவதி பாலு செட்டியார் தஞ்சாவூரண்டையிலே சந்தாசாயபு இறங்கியிருக்கிற ஊட்டத்தூரிலே யிருந்து இவ்விடத்திற்கு வந்தார். அவர் வரச்சே எதிர்கொண்டுபோய் அழைத்துவருகிறதற்கு இவ்விடத்திலேயிருந்து கனகராய முதலியார் முத்தியாபிள்ளை சேஷாசலசெட்டியார் சத்திரமட்டுக்கும்போய் அழைத்துக்கொண்டுவந்து அவர்கள் வீட்டுவரைக்கும் போய் விட்டுப்போட்டு அவரவர் வீட்டுக்குப் போய்விட்டார்கள். ஒரு ஆனையும் அஞ்சாறு குதிரைகளும் அவருடைய வண்டியில் வந்திறங்கின.

ஆவணி மீ 8 உ 1738 ஆகஸ்டு மீ 20உ புதன்கிழமை

பகலுக்குமேல் சுமார் நாலரைக்குமேல் அஞ்சு மணிக்குள்ளாக திருவதி பாலுசெட்டியார் ராசஸ்ரீ துரையவர்களைப் பேட்டி காணப்போனார் போய் சந்தித்து உடனே கோட்டையிலே ஒன்பது பீரங்கிபோட்டார்கள். பிற்பாடு துரையவர்கள் வீட்டு நடுசாலையிலே போய் உட்கார்ந்து இரண்டு வார்த்தை லோகாபிசாரமாய் பேசிக்கொண்டுயிருக்கச்சே சந்தா சாயபு நன்றாயிருக்கிறாரா என்று ராசஸ்ரீ துரையவர்கள் பாலு செட்டியாரைக் கேட்க அதுக்கு அவர் சொன்னது அவர்கள் சிறிது சேதி உங்களுக்குச் சொல்லச்சொன்னார்கள் அது தனிச்சுக் கண்டு பேசிக்கொள்ளவேண்டுமென்று சொன்னார். அதின் பேரிலே துரையவர்கள்எழுதுகிற கபினெத்தைத்திறந்து அதுக்குள்ளே ராசஸ்ரீ துரையவர்களும் கனகராய முதலியாரும் திருவதி பாலு செட்டியாரும் சலத்து வேங்கடாசல செட்டியாரும் இவர்கள் நாலு பேரும் மூணு மூணரை நாழிகை நேரம்— பேசிக்கொண்டிருந்து இப்புறத்திலே வந்து நடுச்சாலையிலே உட்கார்ந்து உடனே திருவதி பாலுசெட்டிக்கு வெகுமானம் கொடுத்த வயணம்:—

சிவப்பு சகலாத்து கெஜம் எட்டு. ஒஸ்தி முருஷிபாகை ஒன்று. நடுக்கட்டு ஒண்ணு சீர்மைகாப்பு ஒண்ணு மணிலா குதிரை—1-க்கு விலை விபரம் 8 வராகன். சேஷாசல செட்டி தர்ம லட்சுமிபதி செட்டிக்கு சிவப்பு சகலாத்து கஜம் 2. சலத்து வேங்கடாசல செட்டிக்கு சிவப்பு சகலாத்து கஜம் 2. இந்தப் படிக்கு வெகுமானம் கொடுத்தார்கள் அதை வாங்கிக் கொண்டு வெளியே புறப்பட்ட உடனே முதலியாரும் முத்தையாபிள்ளையும் நாமும் மூணு பேரும் கூட அவர்கள் வீட்டு

மட்டுக்கும் போய் அவர்கள் வீட்டுக்குள்ளே கூடத்திலே போய் அவர்கள் உட்காந்து உடனே கனகராய முதலியாருக்கு ஒரு சாலுவையும் ஒரு நடுகட்டும் ஒரு மமோதியும் ஒரு முகுதிப் பாகையும் வெகுமானம் கொடுத்தார்கள். சாலுவை தவிர மத்த மூனு தகை வெகுமானம் முத்தையா பிள்ளைக்கும் நமக்கும் கொடுத்தார்கள். இதல்லாமல் சேஷாசல செட்டியாருக்கும் ஒரு சாலுவையும் கொடுத்தார்கள். இதல்லாமல் பாலு செட்டியார் வந்த தினம் கனகராய முதலியாருக்கும் நாலு நகை வெகுமானமும் முத்தையாப் பிள்ளைக்கும் நமக்கும் கொடுசாலையும் கொடுத்தார்கள். மற்றபடி மேலுகிரி பண்டிதர் மற்றபேர்—அவரவர் வந்திருந்தபேருக்கு அவரவர் தார தன்னிமம் அறிந்து வெகுமானம் கொடுத்தார்கள். திருவதி பாலிசெட்டி வந்தகாரியம் என்னவென்று விசாரிக்குமிடத்தில் திருவதி பாலுசெட்டிக்கும் சிதோஜி தாதாவுக்கும் சினேகமான படியினாலே இவருக்கு அவ்விடத்திலே இருக்கிறதற்குப் போகுங்கால் சந்தாசாயபு கையிலேஉத்திரவுவாங்கிக்கொண்டு புதுச்சேரிக்கு வந்தான். வந்தவன் சும்மா வரலாகாதென்று காரைக்காலுப் பேச்சுடனே சேர்ந்ததுக்கும் சந்தா சாயபு மத்தது பண்ணுகிறோமென்று முன்னாலே பேச்சு நடப்பிச்சுயிருக்கிறானே அந்தப் பேச்சுக்குத் தனுகுணமான பேச்சுக்கள் பேசி அது வார்த்தைகள் சந்தா சாயபு சொல்லச்சொன்ன சேதிகள் ராசஸ்ரீ துரையவர்களுடனே சொல்லுகிறதற்கு உத்தரவு அவர் சிறிதுசொல்ல இந்தப்படிக்கு நடந்துயிருக்கிற நிமித்தியம் இவன் வந்ததாக எண்பிச்சுக்கொண்டு உத்திரப் பிரதி உத்திரவுகளெல்லாம் வெளிக்குச் சொல்லுகிறதற்கு இவனிடத்திலே கொடுக்கிற குணமுண்டு இவனைப்போலே கொடுக்கிற புத்தி மற்றப்பேருக்கு வராதுதான் தர்மம் கொடுக்கிறதிலே இவனுக்குச் சமானமாக ஒருத்தரையுஞ் சொல்லமுடியாது. ........................*

அல்லாமல் யாதா மொருத்தராகிலும் விசேஷித்து பிரயோசனத்தை அபேட்சித்தாலும் யாதாமொரு உத்தியோகம் வேண்டினாலும் அவனவன் பெண்சாதியை யாகிலும் உடப்பிறந்தாள் ஆனாலும் அல்லது அதுக்கொத்த ஸ்ரீகள் கொண்டுவந்துவிட்டவர்களுக்கு நடத்துகிறதேயல்லாமல் மத்தப்படியில்லை அதனாலேமுன் எழுதியிருக்கப்பட்டநல்ல குணம் பாதியினாலே மறைந்து போகிறது. இதல்லாமல் இவன் நடத்தையும் அந்தச்சாடையின் பேரில்தானே இராத்திரி பகல் நினைப்பாயிருக்கிறதுமல்லாமல் அதுக்கொத்த கொஞ்சம் மனுஷரைச் சேர்த்துக்கொண்டு காலத்தை கழிக்கிறதேயல்லாமல் கனத்தநியாயமான புத்தியும் பெரியமனுஷருடைய சாவகாசமும் இல்லை. இந்தப்புத்தி இவனுக்கு ஏன் இல்லை என்றால் பரம்பரையாய் வந்த அயிசுவரியமல்லாததினாலே அந்த மேன்பாடான குணமில்லை.

---

* ஒரு வரி [illegible]

9உ வியாழக்கிழமை

காலமே ஏழு மணிக்கு சீமையிலே யிருந்து வந்த பினிசு (Phenix) என்கிற கப்பல் கப்பித்தான் மூசே துப்புதுலேர் (M. de Butler) இந்தக்கப்பலை காரைக்காலின் பேரிலே சண்டைக்குப் போகிறத்துக்குப் பயணம் பண்ணி இந்தக்கப்பலின் பேரிலே நாற்பது வெள்ளைக்காரரும் நாற்பது தொப்பாசுகளையும் ஏத்தி ஒரு மயோர் ஒரு லெயித்தினந்தும் (Major et Lieutenant) முன் கப்பலிலேயிருந்த பீரங்கி அல்லாமல் முப்பது நாற்பது பீரங்கியும் ஏத்தி, குண்டுகள் மருந்து தீக்கொடுக்கையறு முத லாகிய சண்டை முஸ்தீப்புகள் எல்லாம் ஏத்தி இதல்லாமல் தினி தட்டுமுட்டு வஸ்த்துகளுமாய் ஏத்தி பல கப்பித்தானுமாக கப் பலின் பேரில் ஏறி காலமே ஏழுமணிக்குப் பாயெடுத்து பயணப் பட்டு ஓடச்சே கப்பலிலே இருபத்தொரு பீரங்கிகள் போட் டான். பதிலுக்கு கோட்டையிலேயும் இருபத்தொரு பீரங்கி போட்டார்கள் அதின் பேரில் பாயெடுத்து ஓடிப்போனான்.

காளயுக்தி ஸ்ரீ ஆவணி மீ 31உ க்கு 1738 செப்தம்பர் மீ 12உ வெள்ளிக்கிழமை

காலமே முன் காரைக்கால் வாங்கத்தக்கதாகப்போயிருந்த இரண்டு சீமை கப்பலும் வந்தது. துறைபிடிச்சு சீனிப்போட்டு காரைக்காலுக்கு கொமாந்தமாய் துரைத்தனம் பண்ணப் போன மூசே திருவாரும் (M Dirois) அவருக்கு இரண்டாவது வேலைக்குப்போன மூசே மரிந்தோம்வில்லும் (M. Martiuville) படைத்துணையாப்போனகப்பித்தான்மார்களும் மற்றபேர்களும் பெரிய தொலப்பாசித்தனம் பண்ணப்போகணுமென்று மிகுந்த ஆசையுடனே போகப்பட்ட கருடபார்வை பிரகாசமுதலியா ரும் சோல்த்துகளும் சேவகரும் மற்றமுள்ள பேர்களும் கொல்லுத்துக்காரர் தச்சகர் முதலானபேர்களும் அனை வரும் இறங்கினார்கள். ஆனால் இவர்கள் போன காரியம் சபல மில்லாததினாலே மகாகின்னராய் வந்தார்கள். அப்பால் தஞ்சா ஊருக்குப்போன ராயசம் சினப்பயனையும் இவருக்கு முன் போயிருந்திருக்கிற அவசரம் கிருஷ்ணய்யனையும் காவல் வைக்கச் சொன்னவாக்கிலே அவர்கள் தப்பிச்சுக்கொண்டு சுங்குவாரசத்திரத்திலே மறைஞ்சிருக்கிற சேதியும் ரங்கோசி பண்டிதனைப்பிடிச்சு வெட்டிப்போடச் சொன்ன விடத்திலே அவன் தப்பிச்சுக்கொண்டு ஓடிப்போன சேதியும் கனகராய முதலிக்கு சின்னப்பய்யன் கொண்டுவந்த கடுதாசியில் தெரிந் தது என்று சொன்னார்கள்.

காளயுக்தி ஞு புரட்டாசி மீ 4 உ 1738 செப்தம்பர் மீ 16உ சவ்வோய்க்கிழமை

காலமே ஒன்பது மணிக்கு முன் பிங்கள ஞு அற்பிசி மீ த்திலே மொக்காவுக்குப்போன தூக்கு தெபூர் பொன் (Due de Bour bon) என்ற கப்பல் கப்பித்தான் மூசே மறக்கிசாக்கி (M. Marqusague) இந்தக் கப்பல் வந்துசேர்ந்தது. மூசே மறக்கி சாக்கி கரையை இறங்கிவந்து துரையைப்போய் சந்தித்தான். கப்பல் நிறைய ஏத்தும்பாரம் காப்பிக்கொட்டை ஏத்திவந்தது. இந்தக் காப்பிக்கொட்டை கப்பலுக்கு நிறைய ஏத்தும் பாரமாய் ஏத்தியிருக்கிறபடியினாலே இந்தக்கப்பலுக்கு இனி மேலே சரக்கு வேறே ஏத்த கவையில்லை இந்த ஏத்தும் பாரத்துடனே சீமைக்கு எடுத்துப்போவானென்று சொன்ஞர்கள். மொக்கா (Mocha) வியாபாரம் கெட்டுப்போச்சுதென்றும் இரண்டு வருஷமாய் இவ்விடத்திலேயிருந்து மொக்காவுக்குப் போன சரக்குகள் ஒன்றும் விக்கயில்லையென்றும் அந்தச் சரக்கு எல்லாம் சாடாவாயிராதாலே அல்லாமல்மற்றபடி ஒரு இழையாகிலும் அனுப்பப்போகாதென்றும் சொன்ஞர்கள். அங்கே யிருக்கிற மூசே லபர்யேல்தும்மா யிடத்திலே மூசே குவர்னர் துரைக்கும் அப்படித்தான் எழுதியனுப்பினூர்.

காளயுக்தி ஞு புரட்டாசி மீ 7-ந்உ 1738 செப்தம்பர் மீ 19உ வெள்ளிக்கிழமை

காலமே அஞ்சரைமணிக்கு ஆனந்தரங்கப்பன் பயணமாய் பரங்கிப்பேட்டைக்குப்போனுன். எது நிமித்தியம் என்றல் சீமை கப்பல் லபே (La Paix) என்கிற கப்பல் கப்பித்தான் மூசே லப்பேசியர் (M. de Foucheur) இந்தக்கப்பல் அச்சை (Acheen) யாத்திரைக்குப் போகிறதானபடியாலே இந்தக்கப்பலுக்கு கட்டுகள் பரங்கிபேட்டையிலே ஏறவேண்டியதானபடியினாலே கும்பனி கட்டும் மத்தக் கேள்விகள் கட்டும் ஏத்திவிச்சுக் கப்பலும் பயணம் பண்ணி அனுப்பத்தக்கதாக ரங்கப்பன் போனுன்.

1738 அக்டோபர் 1 உ காளயுக்தி ஞு புரட்டாசி மீ 19உ புதன்கிழமை

காலமே அச்சை (Acheen) பரங்கிப்பேட்டையிலிருந்து சீமை லபே என்கிற கப்பல் கப்பித்தான் மூசே லபேசியேர் அந்தக் கப்பல் அசை (Ache யாத்திரைக்கு கேள்விகட்டு மேத்திக்கொண்டு கும்பனீர் கட்டுகளும் ஏத்திக்கொண்டு சொபிர் கார்க்கு (Supercarqo) மூசே லெனுவாரையும் ஏத்திக்கொண்டு

திரெக்தோ மகம்மது சாலுர் பேகையும் அச்சை ராசர் காரியம் பரமானந்த பிள்ளையையும் கறுத்த மீருனையும் ஏத்திக்கொண்டு இந்த நாள் காலமே அச்சைக்கு யாத்திரையாய் பாயெடுத்து கப்பல் பயணமாக்கிப் போச்சுது. ஆனந்தரங்கப்பனும் 21௳ சனிவார நாள் மத்தியானம் புதுச்சேரி வந்து சேர்ந்தான்,

முன் *1738* செப்தம்பர் மீ 28௳ காளயுக்தி ௵ புரட்டாசி மீ **16** ௳ ஆதிவாரம் நாள்

மூணாஞ் சாமத்துக்கு சீமையிலிருந்து லப்பொலோர் Apollor) என்கிற கப்பல் வந்தது, இந்தக் கப்பலிலே முசே தூம்மா குவர்னர் துரைக்கு சேமிஷேல் என்கிற முத்திரை வந்தது. மறுநாள் திங்கட்கிழமை நான் சேன்மிகேல் என்கிற மகாத்மாவுடைய திருநாளானபடியினாலே மறு நாளாகிய திங்கட்கிழமை சேமிஷேல் எனக்கு முத்திரையைப் போட்டுக்கொள்ளுவார்களென்றுசொல்லுகிறார்கள். புரட்டாசிமீ 17௳க்கு தெசம்பர்மீ *30* ௳ திங்கட்கிழமை காலமே கறுப்பு மெத்தையிலே செமிஷேல் என்கிற முத்திரையைக் கோத்து கழுத்திலே இடது பாரிசமாய் பூணூல் போடுகிற சாடையாய்ப் போட்டுக்கொண்டு சமஸ்தமான கப்பல் கப்பித்தான்மாரும் சோலுது கப்பித்தான்மார், மயோர்மாரும் கோன்செயல்மாரனைவரும் பின்னையும் பட்டணத்திலுண்டான வெள்ளைக்காரரனைவரும் கூட கோட்டைக்குப்போய் கோட்டைக்கோயிலிலே பூசை கேட்க செய்தும் மூன்றுதரம் சோல்லுத்துகள் வரிசையில் சுட்ட.படிக்கு கோட்டையின்பேரிலே இருக்கிற பீரங்கிகளிலே இருபத்தொரு பீரங்கிகள் விழுக்காடு முக்காலும் சுட இந்தப்படிக்கு துறையிலே இருந்த ஆறேழு கப்பலிலேயும் மூன்றுதரமாய் இருபத்தோரு பீரங்கி விழுக்காடு சுட்டார்கள், அப்பால் கோயில் முடிந்த பிற்பாடு வீட்டுக்குப்போய் அனைவருடனேயும் சாப்பிடச்சே அப்போது மூன்றுதரம் கோட்டையிலேயும் கப்பல்களிலேயும் இருபத்தோரு பீரங்கி விழுக்காடு போட்டார்கள். பின்னையும் ஊரிலே மத்துமுண்டான வர்த்தகர் துபாசிகள் முதலிய சமஸ்தமான பேர்களும்போய் துரைக்கு மேன்பாடுடைய பிரதாபம் கிடைச்சுதென்று எல்லாரும் மொகப்போத ஆதரவான வார்த்தை சொல்லிப்போட்டுவந்தார்கள். இத்தனைநாள் பெரிய பண்டிகை கொண்டாடி துரைக்கும் ஷெவலியேர் முசே தூம்மா என்று எல்லாரும் அழைக்கத்தக்கதாக கிடைச்சுதென்று மிகுந்த சந்தோஷத்துடனே இருந்தார்கள். கனகராயமுதலி தனக்குவந்த பிராஞ்சு பதக்கம் சட்டமாயிருக்கிற பொன்னாலே பண்ணியிருக்கிற மொதாலியுவென்கிற முத்திரை கொடுப்பார்களென்று மிகுந்த சந்தோஷத்துடனேகூட கோட்டையைப்போனார். இத்தனை

நாள் கொடாதபடியினுலே முகத்தை சுளுக்கிக்கொண்டு வீட்டுக்குப்போனுர்.

செப்தெம்பர் மாதம் 20 ந்தேதிக்கு இந்த சீமைக் கப்பலுக்குமுன்னே ஒரு சீமை கப்பல் வந்தது நான் இவ்விடத்திலே இல்லாததினுலே அந்தக் கப்பல் பேர் தெரியவில்லே அந்தக் கப்பல் கப்பித்தான் பேர் மூசே லபிலான்ஷி என்றும் அவன் மூசே லெதூ சட்டமாய் குட்டையனுகையிருப்பான். இந்தக் கப்பல் பங்காளத்துக்குப் போய் அவ்விடத்திலேயும் கொஞ்சம் சரக்கு ஏத்திக்கொண்டு தை மாதத்திலே வரச்சொல்லி பங்காளத்துக்குக் கப்பலேப் பயணம் பண்ணி அனுப்பினுர்கள்.

**1738** ஒக்தோபர் மீ **14** உ காளயுக்தி ௵ அற்பிசி மீ **1** உ செவ்வாய்கிழமை நாள்

முன் தஞ்சாவூருக்கு வெகுமானம் கொண்டுபோன கோட்டை சுப்பய்யன் முன் இவ்விடத்திருந்து கொண்டு போனவர்களுக்கும் செலுத்தாமல் இவர்கள் போகவேண்டுமென்று போன தஞ்சாவூரும் போய்ச்சேராமல் நடுவழியிலே மிகுதியும் அவஸ்தைப்பட்டு தஞ்சாவூர் ரங்கோசி பண்டிதர் மனுஷர் வந்து இவர்களே நாச்சியார்கோயிலிலே இருக்கச் சொல்லி இருக்கச்சே, முன் கடுதாசியிலே எழுதிக்கொடுத்த கடுதாசியை அழைப்பிச்சு கொடுக்கச்சே இவர்களே மறியல் பண்ணினது மல்லாமல் சாப்பாட்டுக்கு விடாமலும் குளத்துக்குப்போக முடியாதபடியாகியும் நீர் கலங்கிறத்துக்கு கூடப் போக ஓயாமலும் அவர்கள் மிகுதியும் உபத்திரவம் பண்ணி அதின்பேரில் இராத்திரியிலே கேளிக்கை பார்க்கிறதுப்போலே இருந்துஅவர்கள் அயர்ந்து நித்திரை பண்ணுகிறவேளேபார்த்து வெகுமானத்தையும் பிடிப்பிச்சுக்கொண்டு அன்று இராத்திரி போட்டது போட்ட வாக்கில் விட்டு புறப்பட்டு வந்துவிட்டது மல்லாமல் அன்று இராத்திரி இவர்கள் பட்ட அவஸ்தையும் அங்கே நடந்ததையும் எழுதவேணுமென்ருல் அஞ்சாறு கடுதாசி செல்லும். ஆனபடியினுலே விஸ்தரிச்சு எழுத இல்லே. அப்படிப் புறப்பட்டு கொள்ளிடைக்கரைக்கு இக்கரையிலே உடையார் சீமையிலே புளியங்தோப்பு என்கிற அக்கிரகாரத்திலே வந்து சேர்ந்து அவ்விடத்திலே இருந்து கனகராயமுதலிக்கு எழுதி அனுப்பிச்சு அவ்விடத்திலிருந்து கனகராயமுதலி உத்திரவு வர இருபது நாள் மட்டுக்கும் சென்றது அந்த மட்டிலே அவ்விடத்திலே இருந்து உத்திரவு வந்த பிற்பாடு அவ்விடம்விட்டு புறப்பட்டு இவ்விடத்துக்கு இந்தநாள்கோட்டை சுப்பையர் வெகுமானமும் ஷை பிடிச்சுக்கொண்டு கோட்டை சுப்பையரும் தூங்குமூஞ்சி வீரப்பய்யனும் வந்துசேர்ந்தார்கள்.

இவர்கள் தஞ்சாவூருக்கு வெகுமானம் கொண்டுபோன நாள் முதல்கொண்டு நாளது வெகுமானம் கொண்டுபோனது முடியப் போய்ச்சேராமல் இந்த நாள் மறுபடி கொண்டுவந்த மட்டிலே நடந்த கதையை எழுதவேண்டுமென்றால் நூறு கடுதாசிக்குமேலும் அடங்காது. இதனால்இவர்களுக்குமி தமில்லாத வெட்கக்கேடுமல்லாமலும் பிராஞ்சுக்காரருக்கு இப்படிப்பட்ட அபகீர்த்தி வந்ததில்லை. இப்போது துரைத்தனம் பண்ணுகிற மும்சே ஷேவல்லியேர் தும்மா அவர்கள் துவக்கத்திலே காரைக் காலை தை மாதம் பிறந்தவுடன் பிடித்துக்கொள்ளவேணு மென்று யோசனை பண்ணியிருக்கிறார்கள். இவர்கள் அப்படி நடப்பித்தால் இவர்களுக்கு அந்தப்படிக்கு கைவசமாம், அதுக் குத் திருகுயில்லை. அதெப்படி என்றால் சந்தாசாயபு சோழ மண்டலமெல்லாம் பயிரிட்டுகொடுக்கிற அறுப்பெல்லாம் தன் மனுஷாளைவிட்டு அறுப்பு அறுத்து தானியத்தை எடுத்துக் கொண்டுபோகிறதுமல்லாமல் அந்தந்த ஊரைக் கொள்ளை யிட்டுசிறைகள்கூடபிடித்துப்போகிறபடியினாலே அந்தந்தகிரா மங்களிலேயிருக்கிற குடிசைகள் நீக்கி நாகப்பட்டணம், தரங் கம்பாடி இப்படி கரை துறைகளிலேயும் கொள்ளிடத்துக் கரை யிலேயும்வந்துவிடுகிறார்கள். இப்படி இராச்சியமெல்லாம்அளச் சகப்பட்டு போகச்சேயும் தஞ்சாவூர் இராசாவானவன் கோட் டைக்குள்ளே தன்னைக் காப்பாத்திக்கொண்டு பயந்து கையாலே ஆகாதவனாய் பதுங்கிக்கொண்டு கிடக்கச்சே அவனை இவர்கள் போய் இந்தச் சமயத்திலே காரைக்காலைப் பிடிச்சுக கொண்டால் தஞ்சாவூரான் என்ன செய்யப்போகிறான்; ஆன படியினாலே இவர்களுக்கு நல்ல சமயம்தான் இப்போயிருக்கிற யோசனை இப்படியிருக்கிறது. மனுஷன் எத்தனத்திலே அல்ல தெய்வரெத்தினத்தை ஒருத்தனாலே அறியப்போகாதென்று தெரியவருகிது

காளயுக்தி ஷு அற்பிசி மூ 4 உ க்கு 1738 அக்தோபர் மீ 17 உ க்கு வெள்ளிக்கிழமை

கேட்டை நடந்ததில் கால்மே சாமத்துக்கு கனகராய முதலியாருக்கு கும்பனியார் அனுப்பியிருந்த மெதாலியே என்கிறதை கொடுத்தார்கள் கோன்சேல் வீட்டிலே எல்லாரும் கூடிக்கொடுக்கச்சேபதினொருபீரங்கிபோட்டு தங்கப்பல்லக்கும் கொடுத்தார்கள். அந்த முத்திரையிலேமுன்பக்கத்திலே சீமையி லிருந்து வருகிற பத்தாக்கு (Dollars) எல்லாம்-போட்டிருக்கிற சுரூபத்தின்படி எழுத்தும் போட்டிருக்கிறது. பின் பக்கத்தில் கொம்பஞ் சீயர் முத்திரை போட்டிருக்கிறது அது கொடுக் கச்சே துரை சொன்னது கொம்பனீயார் நீ பட்ட பிரயாசைக் காகக் கொடுக்கப்பட்டது என்று சொல்லிக்கொடுத்தார் கள். அந்தப்படி நடந்த பிற்பாடு தந்தப்பல்லக்கின்பேரிலே

ஏறிக்கொண்டு மேளதாள சம்பிரமத்துடனே பிள்ளைவீட்டு தெருவாலே வந்து குளத்து பக்கமாய் திரும்பி வீட்டுக்குப் போனான். இப்படி போனதென்ன? வெள்ளாழத்தெருவே புறப் பட்டு சாவடித்தெருவே வராமல் போனதென்னவென்றால் இதிலே வரும்பொழுது மழை வந்தபடியினாலே ஓட்டமாய்குள த்து பக்கமாய் சீக்கிரமாய் வீட்டுக்குப்போய்விட்டார். ஆனால் முத்திரையிலே மெத்த சிரத்தையில்லாவிட்டாலும் சீமையிலி ருந்து வந்ததானபடியினாலே கனகராயமுதலியாருக்கும் அவரு டைய பந்துக்களும்சொல்லி மிகுதியான சந்தோஷமாயிருக்கும். வெளியேயிருக்கிற சனங்களுக்கும் இந்த முத்திரையினுடைய சேதி தெரியாதபடியினாலே அப்படித்தானே மெத்த மேன் பாடானதென்று தானே எண்ணுவார்கள். அர்ப்பிசி மாதம் 5 ந்தேதிக்கு இவ்விடத்திலிருந்து சீமைக்கு சரக்குகளேத்திக், கொண்டுபோன கட்டுக்கப்பல் 2 க்கு வயணம்.

தூக் தெ புர்பொன் (Dve de Bourbon) என்கிற கப்பல் கப்பித்தான் முசே மர்க்சாக்கி (M. Marquesac) இந்தக் கப்பலுக்கு ஏத்தி காப்பிக்கொட்டை மத்தப்படி புடவையுடனே கூடினது ஒன்றுமில்லை, செஞ்சராம் என்கிற கப்பல். கப்பல் கப்பித் தான் முசே ஓபென் (M. Aubin) இந்தக் கப்பலுக்கு ஏத்தும் புதுச்சேரி சரக்கு கட்டு 1230. மிளகு பாரம் 300. செம்மரம் 6 பாரம். இந்தப்படிக்கு அந்தக் கப்பலுக்கு சரக்குகளேத்தி இந்த நாள் சனிக்கிழமை இராத்திரி இரண்டு கப்பலும் சீமைக் குப் பாய் எடுத்து ஓடிப்போச்சுது. 10 வக்கு ஒக்தோபர் மீ 25 வியாழக்கிழமை காலமே சீமைக்குப் பயணமாய்பினிக்ஸ் Phenix என்கிற கப்பல் கப்பித்தான் முசே து. புத்லேர் (M. de Butter) இந்த கப்பல் ஆயிரத்தி நானூத்தி நாலு கட்டும் இரநூறு பாரம் மிளகும் ஏத்திக்கொண்டு சீமைக்குப் பயணமாய்ப் போனது.

அற்பிசி 24 உ 1738 நவம்பர் மீ 6 உ வியாழக்கிழமை

அம்மையப்பன் பாச்சக்கடை தேசத்தாருக்கு கோட்டை யிலே பவழம் நிறுக்கிறபோது கனகராயமுதலியார் முசே துலார்ழ (M. Dulaurens)டனே பவழம் சரக்கு முன்வாங்கி யிருந்தார்களே அத்த வராகனெல்லாம் சாடாவாய் கொடுத்துத் தீர்த்துப்போட்டு அவர்கள் சீட்டும் வாங்கிச்சென் றார்கள். என்று சொல்ல அவர்களின்பேரில் எப்போது தீர்த்துப் போட்டார்கள் அதுக்கு வட்டி கூட கொடுத்தார்கள் என்று கேட்க வட்டி கொடுக்கயில்லை என்று முசே துலார்ழ (M. Dulaurens) சொல்லாவிட்டால்என்ன கூடுமென்று கேட்கி றேன். திரள் பணம் கூடுமென்று சொல்ல அதின் பேரிலே வட்டி வாங்காமல்விட கவையில்லை என்று சொல்ல

அதற்கு அவர் என்னுடைய வேலையில்லை. அது மூசே பிலவா னுடைய(M. Pilavoine) வேலையென்று பயந்தாற்போல் சொன் னார், அதைக் கேட்டுப்போட்டு இவன் துரையண் டையிலேபோய் சொன்னான். மூசே துலாறீழ — என் னுடனே இப்படி கனகராயமுதலி என்னைக் கேட் டான். அதுக்கு நான் இப்படிச் சொன்னேன் என்று மேலே எழுதியிருந்தபடிக்குச் சொன்னான். அதுக்கு நானிருந்து கொண்டு முன் இரண்டு தெண்டகம் மூசே லெனுவார் நாளை யிலே நான் கொடுத்ததில்லை. அந்தக் கணக்கு வேணுமென்றால் நீங்கள் பார்க்கலாம். இந்தப் பவழம் வாங்கி கொடுத்ததுக்கு கஷ்டகாலமானபடியாலே அய்யாயிரம் 5000 வராகன் -மட் டுக்கும் பவழக்காரர்கள் செலுத்தாமல்போனாலும் கும்பனி யாருக்கு நான் — அசலிலே கடன் வாங்கிக்கொடுத்தேன். அப் படியிருக்க எனனை வட்டி கேட்கிறது என்ன ஞாயமென்று பின்னையும் அநேகவிதமானபடி தெரியச்சொல்லவேணுமோ அப்படியெல்லாம் தெரியச்சொன்னேன் அதன் பேரிலே மூசே துலாறீழ (M. Dulaurens) இருந்துகொண்டு நான் துரை யுடனே சொல்லட்டுமா வென்று கேட்டான். நானிருந்து யோசனைபண்ணி கனகராயமுதலி ஒருவேளை சொல்லுவானோ சொல்லமாட்டானோ தெரியாதே. அப்படியிருக்க இவனைக்கேட் கச்சொன்னதினால் நாம்தானே மறந்துபோனவனை ஞாபகம் பண்ணுகிறாப்போல் காணும் என்று யோசனை பண்ணிக் கொண்டு துரை அவர்களைக்கேட்டால் நீ அதுக்குத் தக்கதாப் போலே சொல்லும். அவன் எச்சரிக்காவிட்டால் நீ எச்சரிக்கத் தேவையில்லையென்று சொன்னேன் அதுக்கு அவரும் நல்லது தானென்று சொன்னார். அதன் பிற்பாடு மூசே துலாறீழ (M. Dulaurens) இருந்துகொண்டு உனக்கு கனகராயமுத லிக்கு இத் தினத்திலே பவழம் வருவானென்று கேட்க அதற்கு நானிருந்துகொண்டு அவருக்கு நாங்கள் எத்தனை மனது வர நடந்தாலும் அவர்முன் மூசே எபேர் (M Hebert) நாளையிலே எங்கள் பேரிலே அனியாயமாய் மார்ச்சரியம் அடைந்துவச்சு அநேகம் காரியங்கள் நடப்பிச்சாரே அதை நீங்களும் அறிந்து இருப்பீர்களே. அந்த வயிரம் இப்போதும் பாராட்டிவருகிறா ரென்று சொன்னேன். அதுக்கு அவரும் மெய்தானென்று சொன்னார். அதன் பிற்பாடு அவர் கையிலே அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டேன்

காளயுக்தி ஸு கார்த்திகை மீ 12 உக்கு 1738 ஸு நவம்பர்மீ 24 உ திங்கட்கிழமை

காலமே எட்டு மணிக்கு இப்போது குவர்னராயிருக்கிற மூசே மோலந்தேன் (M. Mollandin) வீட்டிலே நான் போயிருக் கச்சே காப்பி குடிக்கத்தக்கதாக கோன்சேல்காரரும் மற்று முள்ள வெள்ளைக்காரரும் எல்லோரும் கூடியிருக்கச்சே

மூசே துலாரீமு (M. Dulaurens) கோட்டையிலே இருந்துவந்து பல்லக்கு விட்டிறங்கி கோன்சேல் அறைக்குப் போகிறவன் என்னை அழைத்துப் பவழக்கணக்குக்கு வட்டி போடச்சொல்லி குவர்னர் துரை உத்தாரங் கொடுத்தார் அவருக்கு நானும் தெரியப்படச்சொன்னேன். அதற்கு அவர் பவழக்காரன் கையிலே இவன் வட்டி வாங்கியிருக்க வட்டிவிட காரிய மென்ன என்று சொன்னார் ஆனபடியினாலே நீ அவரை சீக்கிற மத்துக்குப்போய் கண்டு பேசவேண்டும். அதற்கு எப்படி பக்குவப்படச் சொல்லவேணுமோ அப்படி பக்குவப்படச்சொல்லு என்று சொல்லிப்போட்டு கோன்சேல் அறைக்குப்போனார். அப்போது எனக்கு மனதுக்குள்ளே தோன்றின விசாரத்தை கடுதாசியில் எழுதிமுடியாது. அதன் பிற்பாடு ராஜஸ்ரீ துரை அவர்கள் தனிமையாகக் கண்டு பேசவேண்டுமென்று யோசனை பண்ணி இவ்விடத்திலே இருந்தோமேயானால் இவர்கள் கோன்சேல் கூடியிருக்குமட்டும் இந்தப் பிரஸ்தாபம் ஒரு வேளை நடந்தாலும் நடக்கும். நாமே இங்கே யிருக்கவேண்டும் என்று துரை வீட்டுக்குப் போகிறமட்டும் சாராயக் கிடங்குக்குப்போய் அங்கேயிருந்து துரை வீட்டுக்கு வந்தபிற்பாடு அவரைக்கண்டு பேசவேண்டுமென்று போனேன். அவரும் அவர் கணக்கு எழுதுகிற கபினெத்திலே யிருந்தார் அப்போது அவர் சொந்த கணக்குப் பார்த்து நிலுவையிட்டுக்கொண்ட கணக்கைக் கையில் வைத்துக்கொண்டு அவர் எழுதுகிற கபினெத்துக்குள்ளேபோய் ஆசாரம் பண்ணினேன் அதுக்கு அவர் என்ன கவையாய் வந்தீர் என்று கேட்டார். அதற்கு நானிருந்துகொண்டு உம்முடனே சொந்த கணக்கு உடனே சேர்த்து தீர்த்து நிலுவையிட்டுக்கொண்டேன் என்று சொன்னேன் அந்தக் கணக்கு நானும் பார்த்தேன் கணக்குச் சரியாயென்று கேட்டான் கணக்கு சரிதான் என்று சொன்னேன். அய்யா தேவரீர் மூசே பில்லாவனை (M. Pilavoine) அழைத்து வட்டிபோடச் சொல்லிச் சொன்னீராம். நீர் அந்தப் படிக்குப் போடச்சொன்னால் என்னாலே நிருவாகம் பண்ண மாட்டேன். ஏனென்றால் இந்தப் பவழக்காரருக்கு வாங்கிக் கொடுக்கிறத்திலே விசேஷித்த பிரயோசனமில்லை. கும்பனிர் சரக்கு விற்கவேண்டுமென்கிறத்தை குறிச்சு இந்தக் கொஞ்சப்பிரயோசனத்துக்காக வெகு பணத்துக்குமேல் வாங்கிக் கொண்டு இதனாலே எனக்கு வெகு பணம் கஷ்டம் வந்திருக்குது இப்போது கும்பனிருக்கு கொடுக்கவேண்டிய பணமெல்லாம் அசலிலே வட்டிக்கு வாங்கி கொடுத்துவிட்டேன். அவர்கள் எனக்கு முதலிலே மூவாயிரம் வராகன்மட்டும் கொடுக்கவேணும் இதல்லாமல்செத்துப்போனவர்கள் கெட்டுப்போனவர்கள் பேரிலே அய்யாயிரம் 5000 வராகன் மட்டும் வரவேணும். இப்படியெல்லாம் மிகுதியும் நஷ்டம் வந்திருக்க இதல்லாமல் முன் இரண்டு தண்டகம் முன் லெனுவார் நாளையிலே கணக்கு

தீர்த்துப்போட்டு இருக்கிறேன். நான் வட்டி கொடுத்ததில்லை அப்படியிருக்க இப்போதுதேவரீரவர்கள்கொடுக்கச்சொன்னால் நான் எங்கே இருந்து கொடுக்கப்போறேன் மெத்த நஷ்டப்பட்டுப்போவேன். தேவரீர் அவர்கள் வட்டிக்கொடுக்கச்சொல்லிச் சொல்லிவீர்கள் என்றுகண்டால் நான் இந்தப்பவழச்சம்மதிக்கு மேல் வாங்கிக்கொள்ளுகிறதில்லை. எனக்கு பதினாயிரம் ரூபாயம் இருந்தாலும் தேவரீரவர்கள் சொல்லுகிற உத்திரவுக்கு என்னாலே ஞாயம் சொல்லமாட்டேன். நீர் தயவுபண்ணி வேண்டுமென்று மிகுதியும் வருந்தி அநேக விதமாய்ச் சொன்னேன். அதற்கு துரையவர்கள் என்பேரிலே மிகுந்த ஓய்வு பண்ணிச் சொன்ன தென்னவென்றால் இந்த வட்டி உன்னைச் சேரும் என்று அறிந்தால் நான் இந்தப்பிரசங்கமே எடுக்கிறதில்லை. பவழக்காரருக்குக் கொடுக்கிறது என்று கேள்விப்பட்டேன். அதினாலே இந்த எத்தனம் பண்ணினேன். நீயாகிலும் ஒரு மித்தைக்குமுன்னே இரண்டு மாதத்துக்குமுன்னே சொன்னால் இந்தப்பேச்சு நடவாதபடிக்கு மார்க்கம் பண்ணிப்போடுவனே இப்போது கோன்சேலிலே இந்தப் பேச்சைப் பிரஸ்தாபம் பண்ணிப் போட்டேன். இனிமேல் ரொம்ப பிரயாசையாயிருக்கும் என்று சொன்னார். அதுக்கு நானிருந்து கொண்டு தேவரீர் எப்பொழுதும் கணக்குப்பார்த்துக் கொண்டிருக்கிறதாச்சுதே முன் இரண்டு தெண்டகம் நான் கொடுத்ததில்லையே. அந்த கணக்கிலே விசதமாய்த் தெரிந்திருக்குமே சொல்லவேண்டிய தென்ன என்று சொன்னேன் அதுக்கு அவர் நீர் கணக்கில் தீர்த்து எழுதியிருக்கிறதென்று சொல்லுகிறீர். ஆனால், கணக்கிலே அப்படி தீர்த்து இருக்கயில்லை, கணக்குப்பார்த்தால் எப்போதும் உன்பேரிலே சிமைந்துலேயாய் நக்கிறது. முன் துரைத்தனம் பண்ணவர்கள் அப்படித் தீர்த்து எழுதி வைக்கயில்லையே என்றும் அந்த வட்டிகூட உன் பேரிலே கணக்கு எழுதியிருக்கிற தென்றும் இப்படியாகச் சொல்லிவந்தான். அதுக்கு நான் அதெல்லாம் நான் அறிவேன். அந்தந்த தடவைக்கு உண்டான பணம் உண்டானது செலுத்திப்போட்டு என் சீட்டும் வாங்கிக் கொண்டேன். நான் சொல்லவேண்டியிருக்கிறது என்ன இருக்கிறது. நீர் தயவு பண்ணித்தீரவே வேண்டும் என்றும் மிகுதியும் வருந்திக்கொண்டு சொன்னவிதத்திலே நீர் ஒருமாசத்திற்கு முன்னே சொன்னால் ஒரு பிரயாசையுமில்லை இப்போது எனக்கு ரொம்பபிரயாசை இருக்கிறது என்று சொன்னார். நீர் பிரயாசப்பட்ட நன்றி நான் மறக்கிறதில்லை. அதறிந்து நடந்துகொள்ளுவேன் என்று மிகுதியும் வருந்திச்சொன்னேன். அதுக்கு நான் கோன்சேயிலே நேராய்த் தானே தீர்த்துப்போடுறேன். நீர் ஒன்றும் யோசனைபண்ண வேண்டாம் என்று சொன்னார். அதுக்கு உம்முடைய தயவு இருக்கச்சே சிந்தையென்ன இருக்கிறது என்று பின்னையும் உபசாரமாய்ச் சொல்லிப்போட்டு வந்துவிட்டேன்.

காளயுக்தி ஷு கார்த்திகை மீ 13உ 1738 நவம்பர் மீ 25 உ செவ்வாய்க்கிழமை

காலமே சூரிய உதையவேளைக்கு முன்னே குவர்னர் துரை வீட்டுக்குப்போனேன். அவர் நித்திரைவேளை ஆனபடியினாலே வெளியே இருந்து அவர் எழுந்திருந்தவுடனே மேல் வீட்டு மேலே போய் அவர் கபினெத்திலே யிருக்கச் செய்கையிலே கொண்டுபோன பிராஞ்சை மேசைமேல் வைத்து உபசரணை யான வார்த்தை சொன்னேன். அதற்கு அவரிருந்துகொண்டு இந்தக்காரியமானதின் பிறகு அப்படியே கைக்கொள்ளுகி றேன். இப்போது உன் வசத்திலே இருக்கட்டும் ஆனால் நீர் ஒரு மாசத்திற்கு முன்னே சொன்னால் எனக்குப் பிரயாசையில்லை. கோன்சேயிலே உனக்கு யார் சிநேகிதம். மூசே தீருவார் (M. Dirois) உடனே போய் நீர் தெரியப்படச் சொல்லிக் கொள்ளும் நானும் கோன்சேலிலே நேராய் உனக்கு பழுவில் லாமல் தீர்த்துப்போடுறேன் என்று சொன்னார். அதுக்கு நான் மூசே தீருவார் (M. Dirois) அவர்களுக்கும் எனக்கும் சிநேகம் என்று சொன்னால் இவர் மனத்திலே என்னமாய்த் தோத் துமோவென்று யோசனை பண்ணி மூசே தீருவார் (M. Dirois) க்கும் எனக்கும் சிநேகம் இல்லை அவர் வீட்டுக்கு ஒரு காலும் போனதில்லை அப்படியிருக்க இது முன்னிலை யாய்ப் போனால் அவர் என்ன சொல்லுவாரோ தெரியாது மூசே துலார்முக்தும் (M. Dulaurens) மூசே கோலாருக்தும் எனக் கும் கொஞ்சநஞ்சம் சிநேகமுண்டு. அவர்களுக்கு வேணுமென் றால் போய் சொல்லிக்கொள்ளுகிறேன் என்று சொல்லி அவர் கள் தொட்டு காரியம் என்ன இருக்கிறது தேவரீரவர்கள் கிருபை பண்ண வேண்டுமென்றும் காரியம் ஆகவேண்டும். அவர்கள் தொட்டு என்ன காரியம் இருக்கிறது என்று சொன் னன்னு அதுக்கு அவரிருந்துகொண்டு நல்லது நீர் ஆலோசித் துக்கொண்டுவந்த பிரசாஞ்சை தேவாள் காப்பாற்றவேண்டும் என்று ரொம்பவும் வருந்தி சொன்ன விதத்தில் அவர் முகத்தை கடுகடுத்துக் கொண்டு கோபமாய் நீர் இந்த பிரசாஞ்சை கொண்டுபோகா விட்டால் உம்முடைய காரியம் நான் அனுகூலம் பண்ணிக் கொடுக்கிறதில்லை என்று சுருக் காய் சொன்ன மாத்திரத்திலே, ஆனால் உம்முடைய அடிமை யாய் இருக்கிற என் பேரிலே கிருபை பண்ணிக்காட்டி நடப் பிக்கிற காரியம் பாரம் உம்மது என்று பின்னையும் அநேக வித மாய் உபசாரம் எப்படிச் சொல்லவேணுமோ அந்தப்படி எனக்குதோத்தினப்படிக்குச் சொல்லிப் போட்டு வைத்துவந்து விட்டேன். இப்புறம் வந்து நான் யோசனை பண்ணினதும் எனக்குத்தோற்றின தென்னவென்றால் வட்டித்தொகை விவ ரம் விஸ்தாரமாச்சுதே நாம் கொண்டுபோன gift (பிர சாஞ்சு) கொஞ்சம் என்று காரியத்திலே நம்முடைய பிர யாசையைக் காண்பித்து அதனால் விஸ்தாரமாய் வரப்பெற

லாம் என்று யோசனை பண்ணினுப்போலே காணுது என்று தோன்றினது.

**1738 நவம்பர் மீ 27உக்கு தமிழ் காளயுக்திஸு கார்த்திகை மீ 15உ வியாழக்கிழமை**

குவர்னர் துரை முசே திமா அவர்கள் கோன்சேல் வீட்டிலே யிருந்து வீட்டுக்கு அவர் போகச்சே ரங்கப்பா வா, கண்டு பேசவேண்டியிருக்கிறது என்று சொல்லிப்போட்டு வீட்டுக்குப்போனுர் நானும் அவர் பிறகேதானே வீட்டுக்குப் போனேன். அவர் கபினெத்திலே போய் என்னை அழைத்து. பவழத்துக்கு வட்டிபோட்டு பார்த்தாயா என்ன கூடுமென்று கேட்டார். அதற்கு நான் அய்யா வட்டிபோட்டு பார்த்ததில் நான் பார்க்கவேண்டியது என்னயிருக்கிறது நீர் தயவுபண்ண வேணும் என்று சொன்னேன். அதுக்கு அவர் முசே பிலவான் (M. Pilavoine) எழுதிவந்த வட்டி கணக்குப் பாரென்று சொல்லி அந்தக் கணக்கு எடுத்து காண்பித்து இந்த நாற்பத்தி எட்டு பெட்டி சம்மதிக்கு மாத்திரம் கூடின வட்டி மூவாயிரத்தி எழுநூற்றிமூன்றே சில்லரை வராகன். இதல்லாமல் முன் இரண்டு தண்டகம் சம்மதி இரண்டாயிரத்தி அறுநூற்றுசில்லரை ஆக ஆராயிரத்துநாலுாத்தி சில்லரையாகிறது. வெகு பணம் கொடுத்தது என்று சொல்லலானுர் அதற்கு நானிருந்துகொண்டு வட்டி சம்மதியைப் பார்த்தீர்களேயல்லாமல் எனக்கு முதல் பணத்திலே வெகு தாட்சிவந்து இருக்கிறது என்று உபசாரமாய் எப்படிச் சொல்ல வேணுமோ அந்த மார்க்கமெல்லாமும் சொல்லி ஆசை வார்த்தையுடையவாறு சாடையுஞ் சொன்னேன். அவருக்கு அவரிருந்து கொண்டு இது உன்னை அடைகிறதென்று ஒரு மீத்துக்கு முன்னே சொன்னுல் இத்தனை பிரயாசம் எனக்கில்லை. ஆனுல், இனிமேல் எனக்கு ரொம்ப பிரயாசம். ஆனுல் உன் நிமித்தம் எப்படியும் காரியம் அனுகூலம் பண்ணித் தருகிறேன். நீர் ஒன்றுக்கும் சிந்தனை பண்ணவேண்டாம். வீட்டுக்குப் போ வென்று சொன்னுர். அதின் பேரில் அவருக்கு மிகுந்த உபசரணையான வார்த்தைகள் சொல்லி அனுப்பிவைத்து கொண்டுவந்து விட்டேன். ஞாயம் சொல்லாமல் பிரிய வசனம் சொன்னது எது நிமித்தியம் என்றுல் அவர் கொடுக்கவேணும் எது நிமித்தியம் விட்டுவிடச் சொல்லுவீர் என்று அவர் சொல்லாதபடிக்கு தயவுபண்ணுகிறேம் என்று அவர் சொல்லச்சே நாம் என்ன ஞாயம் சொல்ல வேணும் என்று சொல்லவில்லை. மூன்று நாளைக்கு முன்பாக கோட்டையிலே பிளவ பார்க்-கச்சே முசே கோலார் (M Gaulard) என்னைப் பார்த்து உன் முத்தைப் பார்த்தால் நீர் பவழ சம்மதி வட்டி சொல்லி நிமித்தியம் மனதிலே விசா

ரம் தோத்தியிருக்கிற சாடையாய் காணுது என்று நகைச்சு சொன்னதுக்கு நானிருந்து கொண்டு என் சம்பாத்தியம் என்ன? என் செலவென்ன? இந்தக் காரியத்துக்கு வட்டிக்குச் சொன்னால் நானெப்படி கொடுக்கப்போறேன் என்று பவழக் காரர்களுக்கு வாங்கிக்கொடுக்கிறதிலே வருகிற பிரயோசன மும் அதினால் வந்திருக்கிற கஷ்டமும் இதுகளெல்லாம் விசதப் படச் சொல்லிவைக்க வேண்டுமென்று உம்முடையவளவுக்கு நேத்தும் வந்தேன் நீர் இல்லாமல் போனீர் துரைக்கு எந்த விதம் தெரியப்படச் சொல்ல வேணுமோ அப்படிச் சொல்ல வேணுமென்று சொன்னதுக்கு நல்லதென்று சொன்னான்.

*1738* நவம்பர் மீ *29* உ-க்கு காளயுக்தி ஸ்ரீ கார்த்திகை மீ *17* உ சனிக்கிழமை

காலமே நான் மூசே எலியாசு வீட்டுக்குப்போய் அவ ருடனே பேசியிருக்கச்சே கும்பனி சேவகன் வந்து கோன்சேல் கூடியிருக்கிறார்கள் துரை உங்களை அழைத்துக்கொண்டு வரச்சொன்னார் என்று சொன்னான். அதின் பேரிலே மூசே எலியாசு கையிலே அனுப்பி வைத்துக்கொண்டு கோன்சேல் வீட்டுக்கு வந்த யிடத்தில் அங்கே கனகராயமுதலி-சேஷாசல செட்டி வாசுதேவபண்டிதர் மேலுகிரி பண்டிதர் பிறதும் அநேகம்பேர் வர்த்தகர் துபாசிகள் இருந்தார்கள். நான் கோன்சேல் விட்டுக்குள்ளே போக வேணுமென்று வாசல் படியிலே போய் மூசே கோலாருந்து (M. Golard.) சைகை காண்பித்தேன். அவர் வெளியிலே இருக்கச்சொல்லி சாடை சொன்னார். அதின்பேரிலே சாலையிலே வாசுதேவ பண்டித ருடனே கூட உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கச்சே கோன் சேல் வீட்டிலேயிருந்து மூசே பொயேலா-(M. Boyelleaw) வெளியே புறப்பட்டு என்னை கோன்சேல் விட்டுக்குள்ளே போகச்சொல்லிச் சொன்னான். நானும் கோன்சேல் விட்டுக் குள்ளே போய் துரையவர்களுக்கு ஆசாரம் பண்ணி மற்ற கோன்சேலியோரவர்களுக்கும் ஆசாரம் பண்ணி நின்றேன் அப்போது துரை அவர்கள் என்னை கிட்டவரச்சொல்லி ரங்கப்பா உன் பேரிலே மூசே பிலவுவான் (M Pilavoine) மூவாயிரத்து எழுநூத்து சில வானம் வராகன் வரவேணு மென்று கணக் கெழுதிக்கொண்டு வந்து கொடுத்திருக்கிறான் என்று சொன் னார் அதற்கு நானிருந்துகொண்டு நான் கொடுக்க வேண்டிய தில்லை. எந்தச் சம்மதி என்று கேட்டேன். அதுக்கு அவரிருந்து கொண்டு 1734 வருஷத்தில் நாற்பத்தெட்டுப் பவழப் பெட்டி வாங்கின சம்மதிக்கு கெடுவுபோக நின்ற நாளுக்கு வட்டி வர வேண்டியதென்று சொன்னார் அதற்கு நான் அய்யா பவழ சம் மதி வட்டி நான் கொடுக்கமாட்டேன். இதற்குக் கும்பனிக்கு பெரிய காரியமல்ல நான் இந்தப் பவழச் சரக்குக்கு நான்பிணை

இருந்ததற்கு நாலாயிரம் அய்யாயிரம் வராகன் மட்டுக்கும் முழுகிப்போனது மல்லாமல் சிறிதுபேர் மானுஷமாய் செலுத்த தவறினவர்கள் பேரிலே மூவாயிரம் வராகன் மட்டுக்கும் வர வேணும். அதற்குக் கணக்கும் தஸ்தாவேசுகள் சீட்டுகள் எல்லாம் இருக்குதென்று சொல்லி இப்படி யெல்லாம் இருந்தாலும் உங்களுக்குக் கொடுக்கவேண்டிய பணம் வைக்கிறது நியாயமல்லவென்று, பிரத்தியிலே வட்டிக்கு வாங்கி உங்களுக்குச் சம்மதி பண்ணித் தீர்த்துப்போட்டேன். இதல்லாமல் பவழக்காரர் செலுத்துகிறது நாற்பதும் அன்பதும் பத்தும் அஞ்சும் இப்படியெல்லாம் கொண்டுவந்து செலுத்துகிறது. இதையெல்லாம் சேர்ப்பித்து உங்களுக்கு வகுப்பு வகுப்பாய் செலுத்துகிறது இதல்லாமல் உங்களுக்குச் சரக்கு செலவழிக்கிறதுக்கு பிரயாசமாயிருக்கிறது. இப்படியெல்லாமிருக்கிறது. இதல்லாமல் முன் இரண்டு தண்டகம் நான் வட்டிசேர்த்து செலுத்தியிருக்கிறேனே. நான் வட்டி கொடுத்தில்லை அந்த கணக்கும் நீங்கள் பாருங்கள். இப்படி யெல்லாமிருக்கச்சே என்னை வட்டிகொடுக்கச் சொல்லுகிறது ஞாயமில்லையான நினுலும் நான் மெத்த நஷ்டமிட்டுப்போவேனே என்றும் இப்படியெல்லாம் சொல்லி ஆசாரமாயிங்கு அது விசேஷம் சொல்லி நீங்கள் தயவு பண்ணவேணுமென்று சொன்னேன். அதுக்கு துரையவர்கள் யிருந்துகொண்டு அதைத் தொட்டு எங்களுக்கு கவை என்ன. நீர் பின்னைச்சொன்னமட்டுக்கும் எங்களுக்கு உம் முடனைகயிலே வாங்குகிறதேஞாயம். நாங்கள் எதிர்வட்டிபவழத்திற்கு கூட்டிக்கொடுக்கயில்லையா ஆனபடியால் நீயும் கொடுக்க வேணும் என்று சொன்னார். அய்யா கும்பனீர் சரக்குக்கு எந்தச் சரக்குக்கு வட்டி வாங்குகிறீர்கள். எந்தப் பவழச் சம்மதியில் எம்மாத்திரம் எதிர்வட்டி கொடுத்தீர்கள். நீங்கள் ஓத ஞாயமில்லை தயவு பண்ணவேண்டும் என்று சொன்னேன். நாங்கள் ஆலோசனை பண்ணவேண்டும் நீர் அப்புறத்திலே போயிருக்க வேண்டுமென்று சொன்னார்கள். ஆசாரம் பண்ணிப்போட்டு கோன்சேல் வீடுவிட்டு வெளியே வந்து வாசுதேவ பண்டிதருடனே சாலையிலே பேசி கொண்டிருந்தேன். முன் எழுதப்பட்ட துப்பாசிகள் வர்த்தகர் சமஸ்தமான பேரும் இருந்தார்கள். அப்போது கோன்சேல் கலைஞ்சு வெளியே வந்தார்கள். சின்ன துரை அவர்களை மாத்திரம் முன்னே வீட்டுக்குப் போய்விட்டார். பெரிய துரையவர்களும் முன்னேயும் இவர் பிறகே மூசே துலாரீழ (M. Dulaurens.) மூசே கோலாரும் (M. Gollard) மூசே மீரானும் (M Meran) மூசே எங்குராமும் (M. Ingrand) கோன்சேல் வீட்டு விட்டு சாலைக்கு வந்தார்கள்.—முன் சொல்லப்பட்ட துபாசிகள் உத்தியோகஸ்தர் வர்த்தகர் சகலமான பேரும் நானும் நின்று துரை இவர்களுக்கும் மற்ற கோன்சேல்லியரவர்களுக்கும் ஆசாரம் பண்ணினோம். துரை அவர்கள் கனகராய முதலியை கபுறு

கேட்க நடுச்சாலே வாசல்படியே போனார். பிறகே வந்த முசே கோலார் (M. Colard) ரும் முசே துலோர்மும் என்னைப் பார்த்து நகைச்சார்கள். அதிலே முசே கோலார் என்னைப் பார்த்து கை சைகையாய் உன்னை கொடுக்கச் சொல்லித் தீர்த்தோம் என்கிற சாடை காண்பிச்சான். அதைப் பார்த்து முசே துலோர்மும் (M. Dulaurens) முசே கோலார் பரியாசம் பண்ணுகிறான். அதை நீ மனதிலே எண்ணவேண்டாம் சந்தோஷமாய்த் தானே இரு என்று சொல்லி இவர்கள் துரையவர்கள் வீட்டைப்போன பிறகு சொல்லுவோமென்று நின்றார்கள். துரையவர்கள் வீட்டுக்குப் போகிறதுக்குப் பின்னையும் நாலு இரண்டு நாழிகை செல்லுமென்கிற சாடையாயிருக்கிறத்தினாலே நான் கூட நிற்கச்சே முசே துலார்மும் (M. Dulaurans) முசே கோலாரை (M. Gollard)ப் பார்த்து எனக்கு கவையிருக்கிறது ஆனபடியினாலே நான் போகிறேன். ரங்கப்பனுக்கு சந்தோஷ கபுறு சொல்லென்று சொல்லிப் போட்டு முசே துலார்மும் வீட்டுக்குப்போனார். எனக்கு சாடை தெரிந்தது. பவழச் சம்மதி வட்டி கவையில்லையென்று தீர்த்தார்கள் என்கிறது எனக்குச் சந்தேகமில்லையென்று தோன்றி நான்-சந்தோஷமடைந்தேன். இந்தச் சாடையெல்லாம் கனகராயமுதலியும் பார்த்துக்கொண்டிருந்தான் அவனுக்குச் சாடை தெரிந்தது. ஆனாலும் நன்றாய் தெரியாது அதன் பேரிலே துரையவர்கள் வீட்டுக்குப்போனார் அப்பொழுது முசே கோலார் (M. Gollard) என்னை கிட்ட அழைத்து நீ கொஞ்ச ஆதாயத்தைப் பார்க்கப்போய் அய்யாயிரம் ஆராயிரம் வராகன் மட்டுக்கும் சேதம்வந்ததே. ஸ்ரீ குவர்னர் துரையிடம் நான் மிகுதியும் அடிச்சுவிட்டுப் பேசினேன். கடைசியிலே ஒன்று விட்டுவிட்டேன் என்று குவர்னர் துரை சொன்னார். இனிமேல் அப்படியே குரோஸ்ம் உன்னுடைய காரியங்கள் வந்தால் நான் பேசுகிறதில்லையென்று சொன்னான். நானும் அய்யா இனிமேல் அப்படிப்பட்ட சோலிகளுக்குப் போகிறதில்லை. எல்லாம் நீர் நிர்வாகம் பண்ணினீர், உம்மைப் போலே நிர்வாகம் இப்ப நடத்ததக்கபேர் யார் இருக்கிறார்கள் என்று பின்னையும் சிறிது உபசாரமான வார்த்தையாக சொல்லிப்போட்டு அவனை அனுப்பிவிச்சுக்கொண்டு ஸ்ரீ குவர்னர் துரை அவர்கள் வீட்டுக்கு வந்து அவர் காம்பிராவிலே தனிச்சு இருக்கச்சே போய் ஆசாரம் பண்ணினேன், அவர் அதுக்கு போம் சூர-ரங்கப்பா என்று சொன்னமாத்திரத்திலே தேவரீரவர்கள் என்பேரிலே கிருபை வைத்து இந்தப் பவழ சம்மதிவட்டி தீர்த்த சம்மதிக்கு நான் உமக்கு நன்றி அறிந்து நடந்துகொள்ளப்போகிறேனா நான் எவ்வளவு மனுஷன். என் பேரில் தயவு பண்ணி பவழ சம்மதிவட்டி கவையில்லாமல் தீர்த்துப் போட்டீர்கள் என்று சொன்னேன். அதுக்கு அவரிருந்துகொண்டு இப்படி கோன்சேல் அறிய

தீர்ந்துபோமல் எனக்கு என்றைக்கும் சங்கையில்லை என்றும் பின்னேயும் அநேக விசேஷம் ஆதரித்த விசேஷங்கள் சொன்னார் அதற்கு நான் தேவரீர் பண்ணின உபகாரத்துக்கு நான் சொல்லத்தக்கதும் செய்யத்தக்கதும் ஒன்றையும் காணேம். நான் எப்போதும் உமக்கு அதிசய மேன்பாடும் கீர்த்தியும் ஆரோக்கியமும் ஆயுசும் நீடிச்சு வாழ்கவேணுமென்று பிரார்த்திக்கிறேன் என்று நன்றியறிந்த உபசரணை சொல்லி வீட்டுக்கு வந்து ஸ்னனம் பண்ணி சுகிதனுக இருந்தேன். மறுநாள் கோன்சேல்காரர் வீட்டுக்குப்போய் நன்றியறிந்த உபசரணை சொல்லிவந்தேன். மற்றப்படி இப்போது சத்துகள் விர்த்தியாயிருக்கிறதற்கு சர்வ ஜீவ தயாபரனுய் ஆண்டவருடைய கிருபையினுலே அனுகூலமானதே அல்லாமல் மனுஷ எத்தனத்துக்குள்ளே ஆனதல்ல. சுவாமியினுடைய கிருபை எந்த மட்டுக்கும் இவன் பேரில் இருக்குதோ அந்த மட்டுக்கும் மனுஷரைத் தொட்டு வரப் பட்ட விஷகாதம் ஒண்ணும் செய்யமாட்டாது என்று விவேகிகளாக யிருக்கப்பட்டவர்கள் எண்ணுவார்கள்.

1739 பிப்ரவரி யாதம் 8 உ க்கு காளயுக்தி ஹு தை மீ 30 ௳ ஞாயிற்றுக்கிழமை தினம்

கோன்சேல் கூடி பத்து நாளைக்கு முன்பாக சீமையிலே இருந்து கும்பனியார் அனுப்பின கடுதாசி கரைவழியிலே பாரீசுக்கு வந்து (Paris) பாரிசிலே இருந்து கரைவழியே சூரத்துக்கு வந்து சூரத்திலே இருந்து கரைவழியே புதுச்சேரிக்கு வந்த பிராஞ்சுக் கும்பனியாருடைய கடுதாசியிலே எழுதி இருந்த சம்மதி பார்த்துக்கொண்டு அதிலே மூசே தீருவாரை (Dirois) பங்காளத்துக்கு திரெக்தராய் போகிறதுக்கு மூசே திப்பிளேக்சு (M, Dupliex) பங்காளம் விட்டு சீமைக்குப் போகிற மட்டுக்கும் மூசே தீருவாரை மாயே (Mahe) க்கு திரெக்தராகப்போயிருக்கச் சொல்லி எழுதி வந்தபடியினுலே அந்தப்படி கோன் சேலிலே மூசே தீருவாரை மாயே (Mahe) க்கு திரெக்தேராய் போகச் சொல்லி கோன்சேலிலே தீர்த்து உத்தியோகம்— கொடுத்தார்கள். மூசே மோரேவை (M. Morean) அவ்விடத்திற்கு கோன்சேலியராய் போகச் சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அவர்களும் பங்காளத்திலேயிருந்து புதுச்சேரிக்கு வந்திருக்கிற செந் சோசேப்பு (St. Joseph) என்கிற கப்பலின் பேரிலேறி அஞ்சாறு நாளைக்குள்ளாக மாயே (Mahe) க்குப் போக வேணுமென்று பயணசன்னுகமாயிருக்கிறார்கள்.

இந்த நாள் காலமே மொக்காவுக்கு மோர் (Maure) என்கிற கப்பல் பயணமாய் கப்பல் கப்பித்தான் மூசே சோல்மினியாக (M. Solminiac) இந்தக் கப்பல் பாயெடுத்து மொக்கா

வுக்கு ஓடிப்போனான் இந்தகப்பலின்பேரிலே—மூசே மருத்னாவில் (M. Martiville) பரிசு (Paris) க்கு எசமானராக போகத் தக்கதானதாய் ஏறி, மாயை Mahe. லேயிறங்கி பரீசுக்குப் போகத்தக்கதாக பங்காளத்திலேயிருந்து வருகிற கப்பலின் பேரிலே போகத்தக்கதாக இந்த நாள் இந்த கப்பலிலே ஏறிப் போனான். மூசே எலியாசு (M. Elias) குமாரனும் இந்தக் கப்ப லின் பேரிலே மாயிலே (Mahe) போயிறங்கி பங்காளத்திலே யிருந்து பரீசுக்குப் போகத்தக்கதாக வருகிற கப்பலின் பேரிலே ஏறிப்போகிறதுக்காக இந்தக் கப்பலிலே பயணமாய்ப் போனார்கள்.

இந்த நாள் பின்னையும் என்ன சேதி என்றால் சந்தாசாயபு லசுக்கரிலேயிருந்து (Camp) பிரான்சிஸ்க்கு பிரெயிரா (M. Francisco Pereira) என்கிறவன் இந்த நாள் காலமேவந்தான். வந்த சேதி என்ன என்றால் காரைக்கால் பிராஞ்சுக்காரருக்கு வாங்கிக்கொண்டு அந்த துரைக்கு பர்வானாவும் தஞ்சாவூர் இராசாவினுடைய கையெழுத்துக் கடுதாசியும் வாங்கிக் கொண்டு சந்தா சாயபுனுடய கடுதாசியும் வாங்கிக்கொண்டு கிரையம் லக்ஷம் (100000) பொன்னாகத் தீர்த்து வாங்கிக் கொண்டு வந்தனன் என்று சொல்லுகிறார்கள்.

**1739**-பிப்ரவரி மூ **9**-ந் தேதிக்கு காளாயுக்தி ௵ மாசி மீ முதல் தேதி திங்கட்கிழமை.

காலமே கோன்சேல் கூடின பிற்பாடு வெள்ளைக்காரர் சொல்லிக்கொண்ட வயணம் காரைக்காலுக்கு மூசே கோலார் (M. Gollard) திரெக்த்தராகிப்போகிறார் என்றும் சிறிது சொல்த்தாக்களும் (soldats) சேவகரும் பயணமாய்ப் போகிறார் களென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். பத்து நாளைக்கு முன்பாக சீமையிலே இருந்து கரைவழியே பெரிசியா (Persia)-க்கு வந்து இவ்விடத்திலே இருந்து கரை வழியே இவ்விடத்திற்கு வந்த கடுதாசியிலே பின்னையும் என்ன எழுதி வந்தது என்றால் மூசே துளோர்மு (M. Delorme) மூசே பிவேரியர் அவர் பெண்சாதி (M. Febvrier) இவர்கள் சீமைக்குப்போய்ச் சேர்ந்து ஆரோக்கியததுடனே இருக்கிறார் கள் என்கிற சேதி எழுதி வந்ததாய் மூசே கோலார் (M. Gollard) மற்றப்பேர் சொல்லத்தக்கதாக கேள்விப்பட்டோம் மூசே துளோருமு (M. Delarme) இவ்விடத்திலே இருக்கச்சே மெத்த பலவீனமாயிருந்தாரே அவ்விடத்திற்குப்போன பிற்பாடு நாற் பது வயது ஆன பின்னைக்கும் எம்மாத்திரம் பலத்திருக் குமோ அந்தப்படியாய் மகா ஆரோக்கியத்துடனே இருக்கிறார் என்கிற செய்தி ராசஸ்ரீ துரையவர்கள் சொன்னார்கள். மூசே லேனுவாரவர்களும் சீமைக்குப்போனபிற்பாடு அவ்விடத்திலே

மகா ஆரோக்கியத்துடனே சரீரம் பூரிச்சு நல்ல அழகிட்டு இவ்விடத்திலே இருந்துபோன பேருக்கு அவர் அடையாளம் தெரியாமே மெத்தவும் பூரிப்புடனே ஆரோக்கியமாயிருக்கிறார்கள் என்கிற சேதியும் ராசஸ்ரீ துரையவர்கள் சொல்லச்சே கேள்விப்பட்டோம்.

1739 பிப்ரவரி மீ 10 உ காளயுக்தி ஸ்ரீ மாசி மீ 2உ-க்கு இந்த நாள் செவ்வாய்கிழமை

காலமே ஒன்பது மணிக்கு கோட்டையிலே வரிசை வச்சு வரிசையிலே ராசஸ்ரீ துரையவர்கள் வந்து நின்னு முசே புரி (M Bury) கையிலே ஒரு கடுதாசி எழுதிக்கொடுத்துப் படிக்கச்சொல்லிச் சொன்னார். அவர் அந்தக் கடுதாசியைக் கொண்டுவந்து எல்லோரும் அறியத்தக்கதாக முசே கோலார் (M. Gollard) காரைக்காலுக்கு கொமாந்தமாகிப் போகிறார் என்று படித்துக் காண்பிச்சார். படிச்சவுடனே ராசஸ்ரீ துரையவர்கள் முசே கோலாரைக் கட்டிக்கொண்டு முத்தமிட்டுக்கொண்டார் மத்த ஆலோசனைக்காரர் எல்லாரும் வந்து அவரவர் வினவிக்கொண்டார்கள். அதின் பிற்பாடு இவரும் சாயங்காலம் ஆதி சுலுப்பிலேறி இவருடைய தட்டுமுட்டு எல்லாம் ஏத்திக்கொண்டு பயணப்பட்டார். அந்த சுலுப்பிலே அருணசலமுதலி குமாரன் பிரகாச முதலி-துபாசியிடத்துக்கும் வந்தவாசி வேங்கடபதி பிள்ளை மகன் திருவேங்கடம் அரும்பாத்தை பிள்ளை உத்தியோகத்துக்கும் சந்தாசாயபு சண்டையிலிருந்து வந்த முசே பிரான்சிஸ்பிரோா (M. Francisco Periera) என்கிற தொடுத்தும் கூட ஏறிப்போனார்கள். ஐம்பது சொல்தாக்களும் ஏறி ஏழுமணிக்கு பாயெடுத்து பயணமாய் ஓடிப்போனார்கள். மேலுகிரி பண்டிதர் குமாரன் சின்னபரசுராமபிள்ளையும் இத்தியாதிபேர்களும் பயணமாய்ப் போனார்கள்.

1739 பிப்ரவரி மீ 23 உ காளயுக்தி ஸ்ரீ மாசி மீ 3 உ புதன்கிழமை

மறுபடியும் ஒரு குராபும் பேரிலே (Native craft) கொல்லுத்துக்காரர்களும் கருமார் முட்டாள்கள் தச்சர் பின்னையும் அந்தந்த வேலை செய்யத்தக்க யோக்கியமான பேர்களும் அவரவர்களுடைய ஆயுதங்களையும் சிறிது பீரங்கியும் மருந்துகள்—குண்டுகள் பின்னையும் சண்டை முஸ்த்தீதுகளுக் கொத்த ஆயுதங்களும் இப்படிப்பட்ட குரூப்புகளும் மூணும் இரண்டும் சாரியேப் போச்சுது.

1739 ஆ பிப்ரவரி மீ 23 ந்தெ காளயுக்தி ஸு மாசி மீ 15 உ க்கு

இந்த நாள் திங்கள்கிழமை இராத்திரி இமாம் சாயபு வருகிறுனென்று கனகராயமுதலி முத்தியாபிள்ளை சேஷாசல செட்டி இவர்கள் மூவரும் பிரம்பூர் திருவேங்கடப்பிள்ளை சாவடியிலே போயிருந்தார்கள்

மாசி மீ 16 உ செவ்வாய்க்கிழமை

காலமே அஞ்சு மணிக்கு இமாம்சாயபு சாவடிக்கு வந்து சேர்ந்தார். அவ்விடத்திலேயிருந்து இமாம்சாயபும் நேற்று இராத்திரி எதிர்கொண்டு போயிருந்த மூனுபேரும் கூட சேஷாசல செட்டி சாவடிக்கிட்ட வந்தவுடனே மூசே ஏங்குராம் (M. Ingrand) மூசே மீராவும் நட்டுமுட்டுக்காரர் நாடகசாலையாருடனே எதிர்கொண்டு போய் அழைத்துக்கொண்டு வரச்சே தெருவாசலிலே வந்தவுடனே சுத்திலேயிருக்கிற கொத்தளங்களிலேகூட இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அங்கே இருந்துவந்து சேஷாசல செட்டி கும்பனிர் கிடங்கிலே இறங்கினுன். அவன் வந்தவுடனே எதிர்கொண்டு அழைக்கபோனவர்கள் அவரவர் அனுப்பிவிச்சுக்கொண்டு அவரவர் வீட்டுக்குப் போய்விட்டார்கள்.

மாசி மூ 17உ பிப்ரவரி மீ 25உ புதன்கிழமை

காலமே பத்துமணிக்கு இமாம்சாயபு ராசஸ்ரீ துரையவர்கள் பேட்டிக்கு வருகிறதுக்கு மூசே மீராவும் மூசே ஏங்குராமும் கனகராய முதலி முத்தியாபிள்ளையும் மற்றப்படி மேளதாளங்களுடனே கூடப்போய் அழைத்துக்கொண்டுவந்து ராசஸ்ரீ துரையவர்கள் பேட்டி கண்டார் பேட்டிகண்டவுடனே கோட்டையிலே இருபத்தோரு பீரங்கி போட்டார்கள். துரையும் அவரும் ஒரு நாற்காலியின் பேரில் உட்கார்ந்துகொண்டார்கள். மீயான் சாயபு மற்றப்பேர் எல்லாருமாய் சுத்துலே உட்கார்ந்தார்கள் துரையும் அவருமாக இஷ்டலாபமாய் இவருடைய யோக க்ஷேமம் அவர் கேட்க அவருடைய சுப க்ஷேமம் இவர் கேட்க ஒண்ணுக்கொண்ணு சந்தோஷமாய்ப் பேசிக்கொண்டிருக்கிற வேளையிலே ராசஸ்ரீ துரையவர்கள் இமாம் சாயபுவைப்பார்த்து சொன்னது என்னவென்றுல் கும்பனியாருடைய காரியங்களிலே நீர் எப்போதும் பிரயாசைப்படுகிறீர் என்று கும்பனியார் மிகுந்த சந்தோஷத்துடனே உம்மைப் பார்க்கவேணுமென்று அபேக்ஷை மிகுதியுமாயிருக்கிறுர்கள். ஆனுலும் உங்களுக்கும் அவர்களுக்கும் இருக்கிற அன்னேன்னியத்தை யிட்டு உமக்கு ஒரு கடுதாசியும் எழுதி

சிறிது வெகுமானமும் கொடுத்து அனுப்பி விச்சார்கள் என்று சொல்லி அந்தக் கடுதாசியை எடுத்து இமாம்சாயபு கையிலே கொடுத்தவுடனே கோட்டையிலே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள் அந்தக் கடுதாசி பாரீசிலே எழுதிவந்ததான படியினாலே அவர் தானே பிரிச்சுப்பார்த்து தம்மிடபிறகே வந்திருக்கிற துலுக்கர் எல்லோரும் கேட்கத் தக்கதாகப் படிச்சு காண்பிச்சார். படிச்சு மகா சந்தோஷத்துடனே இருக்கச்சே கும்பனியார் அனுப்பிவிச்ச வெகுமானமெல்லாம் கொண்டுவந்து கொடுத்த நகை (ா) 1000 தினுசுகளுக்கு வயணம்.

| | வராகன். |
|---|---|
| வெள்ளி தொப்புதோர்—சிப்பம் 1 க்கு கிசம் 21 வீதம் 10 வராகன் ஆக ... ... ... | 210 |
| பொன் தொப்புதோர்—சிப்பம் 1க்கு கிசம் 22¼ வீ வீதம் 15 வராகன் ஆக ... ... ... | 334 |
| கிரமோசிவில்லூரு — சிப்பம் 1 கக்கு கிசம் 40 வீ வீதம் 5 வராகன் ஆக ... ... ... | 200 |
| பச்சைவில்லூரு — சிப்பம் 1 க்கு கிசம் 40 வீ வீதம் 4 வராகன் ஆக ... ... ... | 160 |
| வெள்ளி கலாம் — மார்க்கு 14 இஞ்சு 7 க்கு வீ வீதம் ஆக ... ... ... ... | 187 |
| பொன் கலாம் — மார்க்கு 16 இஞ்சு 7 க்கு வீ வீதம் ஆக ... ... ... ... | 274 |
| சகலாத்து—சிப்பம் 15 க்கு ஆக ... ... | 604 |
| பன்னீரு—மெருவை 12 க்கு ஆக ... ... | 24 |

இந்த நாள் புதன்கிழமை மாசி மீ 17 உ பிப்ரவரி மீ 25 உ

| | வராகன் |
|---|---|
| இமாம்சாயபுக்குக் கொடுத்த வெகுமானம் வயணம் அந்த பக்கத்தில் எழுதிவைக்கப்பட்ட தினுசுகள் தொகை 8 க்கு கூடின வராகன் .. ... | 1993 |
| கபெக்கொட்டை கட்டு 2–க்கு 547 பவுண்ட் ... | |
| ஆகுமெலிசு எயோல்—12 க்கு வராகன் ... | 4 |
| ஆங்குரி எயோல் —24 க்கு வராகன் .. ... | 6 |
| குதிரை—1 க்கு வராகன் ... . ... | 400 |
| குதிரை—1 க்கு வராகன் ... ... ... | 150 |
| ஓர்லோசு—1 க்கு வராகன்... ... ... | 100 |
| பொன் சிமிள்—1 க்கு விலை .. ... ... | |

| | | |
|---|---|---|
| | | வராகன். |
| பாங்கு மேலே மூடியிருக்கிற முகமல்லிலே பொன்னூலாலே பூவுகள் தச்சுயிருக்கிறதும் அதன் பேரிலே போட்டிருக்கிற நாலு தலைக்காணிக்கும் பொன்னூல் தைச்சு இருக்கிறதுள்பட விலை கிரயம் வராகன் ... ... ... ... | | 1200 |
| ரொக்கம் மாத்திரம் வச்சது வராகன் ... ... | | 3000 |
| ஆக இமாம் சாயபுக்குக் கொடுத்த வெகுமான கிரயம் கூடின வராகன். ... ... ... | | |

ஆலம்புரிவிக் கோட்டைக்கில்லே தாருடய குமாரனுக்குக் கொடுத்தது

| | | | |
|---|---|---|---|
| சகலாத்தும் சிப்பம் 1 க்கு கிசம் 25¼ க்கு | | | வராகன் |
| சீனு லம்பாசு சுருட்டி 2 க்கு ... | | வீ 16 | ... |
| ஆலம்புரவை தங்கசாலை துரைக்கு சகலாத்து கிசம் 5 க்கு ... ... ... | | | வராகன் |
| ஆரம்புரவை பவுனுசுதாருக்கு சகலாத்து கிசம் 4 .... | | | வராகன் |
| மகம்மது காதருக்கு ... | சகலாத்து கிசம் 5 | வீ | ... |
| மகம்மது யார்கானுக்கு ... | சகலாத்து கிசம் 5 | வீ | ... |
| ஈஸ்வரதானுக்கு ... | சகலாத்து கிசம் 3 | வீ | ... |
| காமசல்லிகானுக்குருவுக்கு ... | சகலாத்து கிசம் 5 | வீ | ... |
| சில்லரைசனம் 3 க்கு ... | சகலாத்து கிசம் 12 | வீ | ... |
| ஆக சகலாத்து ... ... | கிசம் 39 க்கு | வீ | ... |
| ஆக வெகுமானம் இமாம்சாயபு பிறகேவந்த துலுக்கருக்குக் கொடுத்தானபடி கூடின | | வீ | ... |

மேலே எழுதியிருக்கப்பட்ட வெகுமானங்களெல்லாம் கொடுத்தபிற்பாடு அனுப்பிவித்துக்கொண்டு புறப்படும் சமயம் இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அங்கே இருந்து இமாம்சாயபு தம்மிட வீட்டுவிடுதி சுங்குவார் கிடங்குக்கு வந்துவிட்டார்.

காளயுக்தி ௵ மாசி ௴ 1739 பெப்ரவரி ௴ மறுநாள் 18 உ க்கு 26 உக்கு வியாழக்கிழமை

மத்தியானம் இமாம் சாயபு துரையவர்கள் வீட்டுக்குப் போய் துரையுடனே கண்டு பேசிக்கொண்டு இருக்கச்சே இமாம் சாயபுவை துரையவர்கள் இரண்டு லட்சம் வராகன் பரப்பத்தியம் கேட்டார்கள். அதுக்கு அவர் சொன்னது அந்த மட்டுக்கும் ஒத்திக்கைப்படாது. ஐம்பதினு

யிரம் வராகன் மாத்திரம் தருகிறோம் என்று சொன்னார். அதுக்கு துரையும் சம்மதிச்சுக்கொண்டு கையிலே இருபதினாயிரம் வராகனும் கொடுத்து மற்ற முப்பதினாயிரம் வராகனும் ஆலம்புரவி போனவுடனே அனுப்பிவிக்கிறோம் என்று சொல்லி அனுப்பிவிச்சுக்கொண்டு 18 உ க்கு 26 உ இமாம் சாயபு துரைக்கையிலே அனுப்பிவிச்சுக்கொண்டு வரச்சே துரையை ஒரு மனுவு கேட்டுக்கொண்டது என்னவென்றால் தெற்கத்தி பிராமணன் ஒருத்தனை கிடங்கிலே வச்சுருக்குதாம் அந்த வியாச்சியம் வெளிச்சீமை வியாச்சியானபடியாலே அவனைக்காவல் விட்டு என் பிரத்தே ஆலம்புரவிக்கு அனுப்பிச்சால் அவ்விடத்திலேதானே நான் ஒரு ஒருசு பண்ணி தீர்த்துப்போடுகிறோம் என்று அந்தப் பிராமணனை விட்டுவிடச்சொல்லி கேட்டுக்கொண்டார். துரையவர்களும் அந்தப்படித்தானே அனுப்பிவிக்கிறோம்என்றுவார்த்தைப்பாடு கொடுத்தார். அந்தப்படியே துரையவர்கள் கையிலே அனுப்பிவிச்சுக்கொண்டு சாயங்காலம் கனகராய முதலி வீட்டுக்குப் போய் அங்கேயிருந்து அனுப்பிவிச்சுக்கொண்டு................ சேஷாசல செட்டி வீட்டுக்குப் போய் அவர் கையிலே அனுப்பிவிச்சுக்கொண்டு அப்படித்தானே ஆலம்புரவிக்குப் பயணமாய் போய்விட்டார்.

இமாம் சாயபு இவ்விடத்திலே வந்திருக்கச்சே கனகராய முதலியாருடனே சொன்ன விசேஷம் சந்தா சாயபு காரைக்கால் உங்களுக்கு கொடுத்தார் என்று மிகுதியும் சந்தோஷமாய் அவருக்கும் உங்களுக்கும் வெகு சிநேகமாய் நடக்குதே இனி மேல் நடக்கப்போகிறது.

காளயுக்தி ஹூ மாசி மீ 25 உ 1739 மார்ச்சு மீ 5 உ வியாழக்கிழமை நாள்

காலமே சந்தா சாயபு அவர்களுக்கு வெகுமானம் கட்டி இவ்விடத்திலே இருந்து அனுப்பின தினுசுகள் வயணம்.

தொவுதோரு பொவாந்தோர்ரு சிப்பம் ஞெம்ரா 1-க்கு சிப்பம் சிரயம் $10\frac{1}{8}$ கிரயம் 1-க்கு லீவுரு 110 ஆக வராகன் 1113—15—0.

தோப்புதோரு சீனு பொன்செயே லீவருக்கு ஞெம்பர் 4. சிப்பம் 1-கக்கு $10\frac{3}{8}$ கிசம் 1-க்கு கிரயம் 66, ஆக கூடின விலை வராகன் ... ... ... 684—15—0

தொப்புதோரு சீனு பொகுசா அருசா ஞெம்பர் 5. குப்பம் 1-க்கு கிசம் $10\frac{3}{8}$ க்கு கிசம் 1-க்கு லீவர்—60—சு 10. ஆக லீவரு—627—13—9—க்கு வராகன்

ஆக தொப்புதோரு சிப்பம் 3-க்கு கிசம் 30½க்கு லீவரு 2426—3—9. வராகன் 1-க்கு வீ—எழு—7—10-0 ஆக கூடின கிரயம் வராகன் வீ 323-12—0.

வில்லுகிற மோரி—அரபுமுகமுல்—நெம்பர் 32 சிப்பம் 1-க்கு கிசம் 40½க்கு கிசம்—1-க்கு லீவரு-27, ஆக கூடின லீவுரு—1096—சு. 17—6.

புளு வில்லூரு நீல வர்ணம் மொகமுல்—நெம்பர் 77. சிப்பம்—1-க்கு கிசம் 40½ வராகன் கிசம் 1-க்கு லீவரு 22—சு. 11—0 ஆக கூடின லீவரு 914—11—10.

ஆக மொகமல் சிப்பம் 2-க்கு கிசம் 81¼ க்கு லீவரு 2011—சு 9—தி—4-க்கு விலை வராகன் 1-க்கு லீவரு 7—சு. 10-0. ஆக கிரயம் கூடின வராகன் 268—11—0

மொய்குவோரே ஒரு சிப்பம் 1-க்கு கிசம் 34½க்கு கிசம் 1-க்கு விலை 2¾ வராகன் விதம் கூடின 95—5—16.

கலந்தோரு அசோரு—(மார்கு) மணங்கு—8 ஓன்ஸ் 5. குரேய்ன்ஸ் 6-க்கு வராகன் விலை—(மார்கு) மணங்கு 1-க்கு விலை 96—சு. 16 ஆக கூடின லீவரு 843—19—6.

வெள்ளி கலோன் தொகு ஆசுக்கு (மார்கு) மணங்கு 6' ஓன்ஸ் 6 கு 7-க்கு வராகன் (மார்கு) மணங்கு 1-க்கு லீவரு 55 ஆக கூடின லீவர்ரு 377—5—11க்கு.

விலை கிரயம் ஆக கலைம் 2-க்கு (மார்கு) மணங்கு 15, ஓன்ஸ் 4-கு 5 க்கு லீவருர் 1221—5-5. அல்லது லீவரு 1-க்கு 7—10—0 ஆக கிரயம் கூடின வராகன் 162—20—0.

மிர்வாரு கண்ணடி 1-கக்கு நீளம் புல்காத்து 60. அகலம் புல்காத்து 40-க்கு கிரயம் லீவரு 627—0—0.

மிருவாரு கண்ணடி 1-க்கு நீளம் புல்காத்து 50 அகலம் புல்காத்து 36-க்கு கிரயம் கூடின லீவரு 460-6—0 க்கு வராகன்.

**1739** அவ்ரில் மீ" 9உ க்கு காளயுக்தி ஸ்ரீ பங்குனி மீ" 30 உ வியாழக்கிழமை

இராத்திரிக்கு எட்டு மணிக்கு வந்து விச்சுப்பிடிச்சு மறு நாள் காலமே மூசே சீஞோர் (M. Signard) மூசே செந்சாவூர் (M. St. Sauveur) மற்றுமுண்டான பேரும் எல்லோரும் இறங்கினார்கள் இந்த கப்பலிலே வந்த தினுசுகள் வயணம் துத்தனுகம்—ரசம்—பரங்கிசக்கை—ஆலத்திக் கற்பூரம் படிகாரம்—சிங்கான்—பட்டுச்சுருட்டுகள்—பொன் இது முதலாகிய சரக்குகள் வந்தது. இறக்கி கொட்டகை கிடங்கிலே

சேர்த்து வைத்தார்கள் இந்தச் சரக்குகள் ஏலம் போடுகிற தற்கு தீர்த்து அவ்ரீல் மீ 22 உ புதன்கிழமை காலமே எட்டு மணிக்கு கோட்டையிலே ஏலம் போடப்போகிறோம் தேவை யானவர் வந்துகொள்ளுகிறது என்று கடுதாசி எழுதி கோட்டையிலே பிடவை பார்க்கிற சாலையிலேயும் கோவி லிலேயும் சாவடியிலேயும் ஒட்டினார்கள்.

1739 ௵ அவரில் ௴ 11உ சித்தார்த்தி ௵ சித்திரை ௴ 2-ந் தேதி க்கு சனிக்கிழமை நாள்.

காலமே மணிலாவுக்கு யாத்திரைபோகிற......................... கப்பலின் பேரிலே மூசே தீபுவாயி நாலலியே மூசே நாலலியே மற்றுமுண்டான பேர் எல்லாம் பயணமாகி ஏறி சாயங்காலம் மணிலாவுக்கு கப்பல் பாயெடுத்தார்கள்.

சித்நார்த்தி ௵ சித்திரை 4 உ-க்கு 1739 அவ்ரில் மீ 13 உ திங்கட்கிழமை நாள்.

காலமே பத்துமணிக்கு சுங்கு சேஷாசலசெட்டிக்கு கோந்தராத்தும் (Contract) கொடுத்து சகலாத்தும் கிசம் ......வெகுமானம் கொடுத்து பதிமூன்று பீரங்கியும் போட்டார்கள். இவருக்குக் கொடுத்த கோந்தராத்து கட்டு 2500. இந்தப்படிக்கு உடன்படிக்கை பண்ணிக்கொண்டு கோந்த்ராத்து கொடுத்தார்கள். இதுக்கு முன்பாக கோந்தராத்து கொடுக்க இருக்கச்சே சேஷாசலசெட்டியார் பேரிலே நிலுவையென்னவென்று குவர்னர்துரை விசாரிக்குமிடத்தில் இவர் பேரிலே 43 ஆயிரம் வராகன் நிலுவை யென்று சொன்னமாத்திரத்திலே குவர்னர்துரை மிகுதியும் கோபம்பண்ணி நிலுவை சம்மதிபண்ணலே அல்லாமல் கோந்தராத்து கொடுக்கிறதில்லையென்றும் நிலுவையை சுருக்கிலே சம்மதி பண்ணச்சொல்லி கண்டிப்புமாக கோன்சேலிலே நடத்தினார். அதின்பேரிலே, குவர்னர்துரை யண்டைக்கு கனகராயமுதலியை அழைத்துக்கொண்டு போய் அந்தரங்கவிசேஷமாய் நடந்து, வார்த்தைகளும் எப்படி சொல்லவேணுமோ அந்தப் பேச்சும் நடத்தி, இவைகள் கையிருப்பிலே பதினாயிரம் வராகனும் நிலுவைகளிலே இருபத்தொன்றுயிரம் ஆக நாற்பத்து நாலாயிரம் வராகன்களுக்குள்ளேயேயிருக்குதென்றும் இப்படியாக பின்னையும்சொல்லத்தக்க பேச்சுகள் சொன்னதிலே நட்புச் சொன்னேன். அந்தச் சாடையிலே துரையும் அதற்குட்பட்டு பின்னையும் அஞ்சாறு நாளைக்குப் பிற்பாடு நல்லது பதினாயிரம் வராகன் கொண்டுவந்து ரொக்கமாய் முதலியார் கோந்தராத்து தருகிறோம் என்று சொன்னார் அதின் பேரிலே துரையும்

க்னகராய முதலியாரும் அய்யாயிரம் வராகன் கொடுத்தார்கள். மத்ததுக்கு தட்டுமுட்டுகள் அடகுவைத்தும், கடன் வாங்கியும் பதினாயிரம் வராகன் சரியாக சேர்ப்பிச்சு கொண்டுபோய் முதலியவர்கள் அதின் பேரிலே கும்பனியர் தஸ்தாவேசுகள் .. .....கொடுத்ததினால் மறுபடியும் கொடுத்து விட்டார்கள்.

சித்தார்த்தி ஷு வைகாசி மீ 1உ-க்கு 1739 மே மீ 11 உ நாளது திங்கட்கிழமை

காலமே புத்துமணிக்கு கோன்சேல் கூடி தீர்த்து கோன்சேலிலே எல்லாரும் கையெழுத்துப்போட்டு கோட்டையிலே பிடவை பார்க்கிறசாலையிலும் கோவிலிலேயும் சாவடியிலேயும் வாசப்படியிலேயும் கடுதாசி ஒட்டி தமுக்கும் போட்டுவிச்சு வயணம் என்னவென்றால்.....இராசாவினுடைய உத்தாரவுத்திரவுப்படியேகோன்சேல் சுப்பேரியார் அவர்கள் கட்டளை பண்ணினதாவது. இந்தப்பட்டணத்திலே இருக்கப்பட்டவர்த்தகரும் மற்றனைவரும் உண்டானபேரும் வியாபாரங்களும் பல பல ஸ்தானங்களிலே போடப்பட்ட மாத்துக்குறைச்சல் வராகனைத் தொட்டு அநேக சேதங்கள் வருகிறபடியினாலே அப்படி சேதம் வராதபடிக்கு தக்கபடி தள்ளத்தக்கதானதாய் இந்தப்பட்டணத்திலே செல்லுகிற வராகன் $8\frac{1}{16}$ மாத்து திட்டமானம் பண்ணி அதுக்கு குறைஞ்சமாத்து வராகன் எல்லாம் வழக்கம்பண்ணத் தேவையில்லை என்று முன் 1738 ஆண்டு மே மீ 6 உ க்கு கோன்சேலிலே உத்தாரம் கொடுக்கப்பட்டிருந்தது. அப்படி உத்தாரம் பண்ணியிருக்கச்சேயும் முன்னே மாத்துக் குறைச்சலாயிருந்த வராகனைப் பார்க்க இப்போது பின்னையும் பல பல இடங்களிலுள்ள தங்கசாலையிலே போடப்பட்ட மாத்துக் குறைச்சல் வராகனை வழக்கம் பண்ணினபடியினாலே அதைத்தொட்டு சகலமான வியாபாரத்துக்கும் சகலமான பேருக்கும் சேதம் வருகிறபடியினாலே அப்படிச் சேதம் வராதபடிக்குகோன்சேலிலே உத்தாரங்கொடுத்தது என்னவென்றால் இனறு முதல் கொண்டு இந்தப் பட்டணத்து தங்கசாலையிலே போடப்படுகிறவராகனெல்லாம், வராகன் ஒண்ணுக்கு மாத்து யெட்டும் நிரைசேர் 1-க்கு எடை $8\frac{1}{4}$ வராகன் மச்சியுமாயிருக்கத்தக்கதாக திட்டம் பண்ணினோம் கொடுக்கல் வாங்கல் தொழில் துறைக்கும் இந்தவராகன்செல்லுகிறது. பின்னையும் $7\frac{3}{4}$ மாத்து வராகன் மட்டும் கொள்வினை விற்பனை கொடுக்கல்வாங்கலுக்கும் வி. 100-க்கு வட்டம் 4 வராகன் கூட்டிக்கொடுத்து செல்லத்தக்கதாக உத்தாரங் கொடுத்தோம். இதை மகா கெட்டியான உத்தரவாய் எண்ணி இந்தப் பட்டணத்திலே இருக்கப்பட்ட வர்த்தகர்களும் குடியானவர்க

ளும்வெளியிலேயிருந்து வரப்பட்ட சகலமானபேர்களும் வெள்ளைக்காரரிலேயும் தமிழரிலேயும் எப்பேர்ப்பட்ட.வர்களும் சகல வியாபாரங்களிலேயும் இந்த 7¾ மாத்துக்குக் குறைச்சலாகிய வராகன் வச்சிருக்கிறவர்களெல்லாரும் அந்த வராகன்களை தங்கசாலையிலே கொண்டுபோய்க் கொடுக்கிறது. தங்காசாலைக்காரர் அந்த வராகனை நசிக்கிப்போட்டு அந்தவராகனுக்கு மாத்துக்கு உள்ள விலைகொடுத்து விடுவார்கள். இந்தக்கட்டளைப் படிக்கு நடந்து கொள்ளாதவர்கள் அகப்பட்டதே உண்டானால் அவர்கள் முன் 1738 ஆண்டு மே மீ 6உ கோன்சேலிலே தீர்க்கப்பட்ட அபராதம் கொடுக்கக்கடவார்கள் காசுக்காரும் பொன் வெள்ளி தொழில் பண்ணுகிற வர்த்தகரும் இந்தக் கட்டளை மகா தாக்கீதாய் எண்ணி 7¾ மாத்துக்குக் குறைச்சலாகிய வராகன் எவர்களாகிலும் கொண்டு வந்தார்களேயானால் அந்த வராகன்களைப் பிடுங்கிக்கொண்டு சாவடி ஞாயம் விசாரிக்கிற சின்ன துரையவர்களிடத்திலும் தங்கசாலைக்கு எசமானனாயிருக்கிற கோன்சேலர் அவர்களிடத்திலேயும் கொண்டு போய்விட்டு சொல்லவேண்டியது. அப்படிச் சொல்லாதவர்களுக்கும் மாத்துக்கட்டை வராகன் வச்சிருக்கிற வராகனுக்கு முன் தீர்க்கப்பட்டிருக்கிற அபராதம் இவர்களும் கொடுப்பார்கள். இந்தக் கட்டளையைச் சகலமானபேரும் அறியத்தக்கதாகப் பட்டணம் எங்கும் எல்லாரும் வாசிக்கத்தக்கதாகப் பட்டணத்திலே அங்கங்கே ஸ்தாபிக்கப்பட்டது. இந்தப் பிரகாரம் கோன்சேல் சுப்பேரியார் தங்கசாலையிலே 1739 ஆண்டு மே மீ 11உ பேசி தீர்ந்தது இந்தக் கட்டளையிலே கையெழுத்துப் போட்டவர்கள் ஸ்ரீ குவர்னர்துரை மூசே துய்மா, மூசே லெது, மூசே துலோராம், மூசே சிநோசார், மூசே ஆங்தாம், மூசே மீரா இந்தப்படிக்கு எழுதி அங்கங்கே ஸ்தாபித்தார்கள்.

1739 ஆம் மே மீ 23உ சித்தார்த்தி ஆம் வைகாசி மீ 13உ சனிக்கிழமை

மத்தியானம் சூரத்திலிருந்து மூசே துப்ளேக்சுடைய கப்பல் சந்திரநாகூர் என்கிற பேருடைய கப்பலும் வந்தது...... ..... இந்தக் கப்பலிலே வந்த சேதியென்ன என்றால் பெர்சி (Persia) இராச்சியத்துக்கு பாச்சாவாக இஸ்பகானிலே இருக்கப்பட்ட ஈரானிச்சாதி தாமசு கோல்விகான் என்கிற பார்ச்சாவுக்கு சுவாமியுடைய கிருபையினாலே அதிக பாகமாயிருக்கப்பட்ட இராச்சியபாரம் வேண்டியிருக்கச்சே அவனுக்கு சூரத்துவ மிஞ்சிதுருக்கி பாச்சாபேரிலே போய் சண்டைபண்ணி செயம் கொண்டான். அதன்பேரிலே டில்லிபாச்சாவின் பேரிலே சண்டைபண்ணவேண்டுமென்று யோசனைபண்ணி அவருக்கு

கடுதாசி எழுதி யனுப்பிவிச்சான் அதுக்கு அவர்கள் சண்டைக்கு வரலாம் என்று எழுதியனுப்பிச்சார்கள். அதின்பேரில் இஸ்பகான் என்கிறதான இருக்கப்பட்ட பட்டணம் விட்டு காளியுக்குத்திலத்தில் டில்டி பாச்சாவின்பேரிலே சண்டைக்கு முஸ்தித்தாக அறுபதினாயிரம் குதிரையுடனே வரச்சே துராணி பாச்சா முதலானபேர்களைச் செயம்பண்ணி, அதின் பேரிலே அவரவர் கையிலே கப்பங்கட்டிவிச்சுக்கொண்டு டில்லிக்கும் பிரயத்தனமாக இருக்கப்பட்ட லாகூர் கோட்டையை செயிச்சுகட்டிக்கொண்டவிதத்திலே, அதின்பேரில் பாச்சா மிகுதியும் கோபிச்சுகொண்டு நிஜாம் மற்றுமுள்ள உமர்களை அனுப்பிச்சு சண்டை பண்ணச்சொல்லி அனுப்பின விதத்திலே, அவர்களெல்லாம் அவசரப்பட்டுப் போனார்கள். அதின் பேரிலே பாச்சா மிகுதியும் கோபிச்சுக்கொண்டு சமஸ்தமான உமர்களையும் மறுபடியும் சண்டைக்குப் போகச்சொல்லி சொன்னதிலே சுவாமியிட கடாக்ஷத்தில் பெரிதானபடியினாலே வரப்பட்ட தமசு கொல்லிகான் முன்னே நிற்கமாட்டாமல் போனார்கள், அதின்பேரிலே டில்லியைப்பிடிச்சுக்கொண்டு மகம்மதுஷா என்கிறப்பாசாவையும் மற்றமுள்ள உமர்களையும் பிடிச்சுக்கொண்டு காவல்பண்ணினான் என்றும், அதின்பேரிலே பிற்பாடு காவல்பண்ணியிருந்த மகம்மதுஷா பாசாவையும் 20 25, உமர்களேயும் ஒருநாள் நடைத்தெருவிலே சகலமான சனங்களும் பார்த்துக்கொண்டிருக்கச்சே மகம்மதுஷா பாச்சாவையும் மேலே எழுதப்பட்ட உமர்களையும் தலையை வெட்டிப்போட்டான். அதன் பிற்பாடு சமீபத்திலே யிருக்கப்பட்ட இராச்சியங்களிலே போடப்பட்ட சிகாயிலே மகம்மதுஷா பாச்சா பேரல்லோ எழுதியிருந்தது. அதை வாங்கிப்போட்டு தன் பேர் போடச்சொல்லி உத்தாரங் கொடுத்தபடிக்கு சூரத்து நவாபுக்கு எழுதிவந்த ஓடுதி என்னவென்றால்:—

ரூபாய் முத்திரையிலே போட்டிருக்கப்பட்ட முத்திரையை வாங்கிப்போட்டு இனிமேல் போடப்பட்ட ரூபாய் முத்திரை மற்ற கடுதாசிகளிலே போடப்பட்ட சிகாயிலே எழுதியிருக்கப்பட்டதென்னவென்றால்: சுவாமியுட கிருபையினாலே வந்து துக்கதேர்யிட்ட நாதுருஷா வென்கிற வெண்குர பாச்சா என்றெழுதி இந்தபடிக்கு ரூபாயிலே மற்ற சன்னத்துகளிலேயும் போடப்பட்ட முத்திரையிலே எழுதி சிகா போடச்சொல்லியும், முன்பேர் தமாஷ் கொல்லிகான் என்கிற பேர் சொன்னால் அறுநூறு ரூபாய் அபராதம் வாங்கச்சொல்லியும், சமஸ்தமானபேருஞ் சுவாமியுட கிருபையினாலே வரப்பட்ட நாதுருஷா பாச்சாவென்று சொல்லச்சொல்லியும் இப்படியாக சூரத்துக்கு நவாபா யிருக்கப்பட்டவருக்கு எழுதி வந்து அவரும் மேலே எழுதியிருக்தப்பட்ட நாதுருஷா

பாச்சா கட்டளைப்படிக்கு பட்டணமெல்லாம் பறை சாத்திவிச்சு துக்காலம் போடவேண்டியிருக்கிற ரூபாய் எல்லாம் மேலே எழுதியிருக்கப்பட்ட சிகாப்படிக்கு முத்திரையும் போட்டுவிச்சார்கள். இதல்லாமல் அந்த ரூபாய் முன்னே வட்டமாக அல்லோ போட்டிருக்கிறது. இப்போ போட்ட ரூபாய் அப்படியல்ல. ஒரு புது கூர்ச்சாய்ப் போட்டார்கள். இதிலும் இப்போது. வந்த பாச்சாவினுடைய உக்கிரத்தானும் இந்தப்படிக்கு சேதி வந்ததாய் 10 100 துரையவர்களும் கோன்செலியேர்கள் முசே எலியாசு இவர்கள் எல்லாரும் சொன்னார்கள். சூரத்திலிருந்து வரப்பட்ட தினுசுகள் எல்லாம் வந்தது மேலே எழுதியிருக்கப்பட்ட டில்லி பாச்சாவினுடைய கதை இப்படி நடந்தால் மற்றப்பேருடைய அயிசுவரியமும் அவர்களுடைய அதிகாரமும் போகிறதுக்கு சந்தேகம் என்னயிருக்கிறது. ஆனபடியினாலே லோகத்திலேயிருக்கப்பட்ட இராசாக்களுடைய வாழ்வும் அவர்களுடைய அயிசுவரியமும் எம்மாத்திரம்; அதுகள் எல்லாம் அழிஞ்சு போகிறதே ஒன்றேனும் நிற்கப்போகிறதில்லை சர்வ ஜீவ தயாபரனுடைய மோக்ஷமாகிய வாழ்வுமாத்திரமே அழியாமலிருக்கிறதே அல்லாமல் மற்றப்படி சகலமும் அழிகிறதும் உண்டாகிறதுமா யிருக்கிறதுதான்.

மேலே எழுதப்பட்ட பாச்சாவை வெட்டிப்போட்டதாய் அல்லவோ எழுதியிருக்கிறது. டில்லியிலேயிருந்துவந்த சேதி ஆனால்......பாச்சாவை மாத்திரம் வெட்டயில்லை. சும்மா காவல் வச்சிருக்கிறது என்றும் மற்ற காரியங்களெல்லாம் நடந்ததாகச் சொல்லுகிறார்கள். இதுகளெல்லாம் நிசாம் வந்த தமாசு சொல்லிகானுக்கு உள் கையாயிருந்து நடந்த சேதியாகச் சொன்னார்கள்.

பின்னேயும் ஒரு மாதத்திற்குப் பிறகு சொல்லிக்கொண்ட சேதி என்னவென்றால்: மகம்மதுஷா பாச்சாவை எப்போதும் போலே தாக்கிதிலேவச்சு அவருடைய குமாரத்தியை தமாசு சொல்லிக்கான் மகனுக்குக் கலியாணம் பண்ணிக்கொண்டு டில்லியிலே முன் பழைய பாச்சா சஜானா பொக்கிஷத்திலேயிருந்த நவரத்தினங்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டும், டாச்சாவினுடைய அயிசுவரியம் அடங்கலும் இவன் எடுத்துக்கொண்டு அட்டக்கு நதிக்கு அப்புறம் டில்லிக்கு செல்லுகிற காபூல் தேசமும், முலுத்தான் என்கிற தேசமும் இந்த இரண்டு தேசமும் தமாசு சொல்லிக்கான் தான் கட்டிக்கொண்டு, மறுபடியும் தன்னுடைய இராச்சியத்துக்கு தான் போக வேண்டுமென்று பயணம் புறப்பட்டுப்போனான். ஆனால் டில்லி பட்டணத்தில் அநேகம் வர்த்தகர்கள் கெட்டுப்போனார்கள். அநேகம் சனங்கள் பலவந்தமாய் உயிர் போக்கிக்

கொண்டார்கள். சிறிது சனங்கள் வெட்டுப்பட்டுச் செத்தார்கள். இப்படி அநேகம்பேர் ஸ்ரீ சாதியாரும் புருஷனுமாய் லட்சம் லட்சத்தன்பதினாயிரம் பேர் 1948 பேர் சேதப்பட்டுப் போனதாக ஊர்ஜிதமாய் அருமுனிக்காரவர்களுக்கு எழுதி வந்து உத்த சேதியாய்ச் சொன்னார்கள்

**1739–ஜூன் மாதம் 6 உக்த தமிழ் சித்தார்த்தி ஹூ வைகாசிமீ 27-உ சனிக்கிழமை**

மத்தியானத்துக்குமேல்சுமார் நாலுமணிக்குப் புதுச்சேரியிலிருந்துசென்னபட்டணத்திற்குப்போகிறதுக்குப் புறப்பட்டு பாயெடுத்தான். அதற்கு கட்டுமரம் விட்டார்கள் கப்பல் கப்பித்தான் பேர்... ...கப்பித்தான் மூசே தும்மா அவர்களுக்கு ஒரு கடுதாசியும் நம்மிட வீட்டுக்கு எதிராக இருக்கிற பாதிரி லொலியேர் (Lolière) க்கு ஒரு கடுதாசியும் அவன் கையிலே பிரான்சாவிலிருந்து இவ்விடம் வந்திருக்கிறவருக்கு கொடுக்கச் சொல்லி கொடுத்தபடியினாலே அவன் அந்த இரண்டு கடுதாசியையும் கட்டுமரக்காரன் கையில் கொடுத்தான். அந்தக் கடுதாசியை கட்டுக்காரன் கொண்டுவந்து துரையவர்கள் கையிலே கொடுத்தவுடன் தமக்கு சீமையிலேயிருந்து வந்த கடுதாசியைப் பார்த்துகொண்டு சீக்கிரமாய் பல்லக்கு முஸ்தீதுபண்ணச் சொல்லி அவர் கூட மூசே மீார, மூசே தெபோன் இவர்கள் மூணு பேரும் பாதிரி லோலியேரண்டைக்கு வந்து அவர் பேருக்கு வந்த கடுதாசியைக் கொடுத்து சந்தோஷ வார்த்தையும் சொல்லி மெனவி உமக்கு சியாமுக்கு பிசப்பு விடமிருந்து வந்ததென்று சொல்லி உபசாரமான வார்த்தைகளும் சொல்லி கட்டி முத்தமிட்டுக்கொண்டு சாரி போனார்கள். மூசே தும்மா அவர்கள் பேருக்கு சீமையிலேயிருந்து வந்த கடுதாசியிலே பின்னை என்ன அதிசயங்கள் எழுதிவந்ததோ அந்தச் சேதி தெரியாது. மறுநாள் 28உ ஞாயிற்றுக்கிழமை காலமே நாமும், முத்தியாப்பிள்ளையும் போய் லொலியேர் அவர்களை விசாரித்து சந்தித்தோம். சந்தித்து சந்தோஷமான வார்த்தைகளும் சொல்லி மெனவி உபசாரமான விசேஷங்களும் சொல்லி அனுப்பிவித்துக்கொண்டு வந்துவிட்டோம்

**1739 ஜூன் மாதம் 8உ சித்தார்த்தி ஹூ வைகாசி மீ 29உ திங்கட்கிழமை**

சாயங்காலம் நான் துரைவீட்டுக்குப்போய் பார்க்க வேண்டுமென்று துரைவீட்டு வாசல்படி சென்டினேர், கார்க்கிறவிடம் மட்டுக்கும்போனேன். அவ்விடத்திலே மூசே தும்மா, துபாசி எல்லப்பன் என்னிடம் வந்து உங்களுடன் ஒரு

வார்த்தை சேதி சொல்லவேணுமென்று பேசிவந்தேன் என்று சொன்னான். அதென்னவென்று கேட்குமிடத்தில் அவன் சொன்னவயணம், இந்த நாள் துரையவர்கள் உடம்பு குளிக்கச்சே புதுச்சேரியிலே இருக்கிற சனங்கள் சீமைக்கப்பல் சேதி என்ன சொல்லுகிறார்கள் என்று கேட்டார். அதுக்கு நானிருந்துகொண்டு சீமைக் கப்பல் அஞ்சாறு நாளையிலே வருமென்று சொல்லிக்கொள்ளுகிறார்களென்று சொன்னேன். மூசே துமேலியார் துரையைப்பற்றி என்ன சொல்லுகிறார்கள் என்று கேட்டார். ......................*

அதுக்கு நானிருந்துகொண்டு வெள்ளைக்காரத் தெருவிலுள்ளவர்களும் தமிழ் சனங்களுக்கும் நகரம் முழுதும் மூசே லெனுவாருடைய குமாரன் மூசே துமேலியாரும், மூசே பிப்வேரியாரும் மூசே...................... ......வருகிறார்கள் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இந்தச் சேதி ரங்கப்பன் பிறப்பிச்சான் நீ அறியாயா நீ கேள்விப்படவில்லையா? என்று கேட்கலானான். அதுக்கு நானிருந்துகொண்டு ரங்கப்பன் வீட்டிலே இந்தச்சேதி சொல்லிக் கேட்டதுமில்லை. ரங்கப்பன் இந்தப் பேச்சு பார்த்ததேயில்லை அவன் சொன்னானெனக்கு துரையிருந்து கொண்டு மூசே துமேலியர் என்ன உத்தியோகமாய் வருகிறான்; மற்றப் பேர் என்ன உத்யோகமாய் வருகிறார்களென்று கேட்டான் அது மூசே துமேலியேர் சின்ன துரையிடமும், மூசே லெனுவார் மகன் மத்துள்ள பேர்கள் கோன்சேலராய் வருகிறார்களென்று சொல்லிக்கொள்ளுகிறார்களென்று சொன்னேன். இவர்கள் சேதி வருமென்றும் அது எது நிமித்தியம் என்றால் நீர் உத்தியோகத்துக்கு வந்த பிற்பாடு கும்பனியார் வெகு நாளாய் பிரயத்தினம் பண்ணின விதத்திலே ஆகாதப்போய் நீர் ரூபாய் முத்திரை அனுப்பினதற்கு வெகு சந்தோஷப்பட்டு முத்திரை அனுப்பிவைத்தார்கள். இப்போது காரைக்காலாச் சுது இவர் ஆயிசு பரியந்திரம் உத்தியோகம் போகிறதில்லை. நாளுக்குநாள் மேன்மேலும் அதிசயம் வரும். இப்போது இருக்கிற உத்தியோகத்தைவிட இந்த ஞ-க்கு அதிசயமாய் வருமென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள என்று சொன்னேன். அதுக்கு துரை யிருந்துகொண்டு இதுக்குமேல் என்ன அதிசயமான உத்தியோகம் இருக்கிறது. பிஷப்பு பட்டந்தான் அதுவும் புகுத்திக்கீசு சாதிக்குக் கொடுக்கிறதே அல்லாமல் பிராஞ்சுக்காரருக்குக் கொடுக்கிறதில்லை என்று சொன்னான். அப்போதானே இது கனகராயமுதலி உம்மிட பேரிலே துரை அவர்களுக்கு அசுவாரிசம் பிறப்பிக்கத்தக்க

---

* இரண்டு வரிகள் கிழிந்துபோயிருக்கிறது.

தாகச் சொன்னப்போலே காணுது என்று சொன்னுன். இப்படிச் சொன்னபிற்பாடு நான் மனசிலே எண்ணிக்கொண்டது நமக்கென்ன சீமையிலிருந்து—மனுஷர்-மக்கள் கடுதாசிகள் அனுப்புகிறுர்களா. கனகராயமுதலிக்கும் நமக்கும் இருக்கிற துவேஷத்தை அறிந்து மிருந்தும் இவன்பேரிலே பொருமையாய்ச் சொன்னுர்களென்று எண்ணுமல் சொன்னதாய் எண்ணிக்கொண்டு .........................*

இந்த அவதூறு நமக்குச் சேராது என்றும் நான் பச்சாதாபத்துடன் இருக்கவேண்டுமென்றும் சர்வசீவநாயகர் இதுகளையெல்லாம் கண்டிப்பார் என்றும் நினைந்துகொண்டும் மற்றப்பேருக்கு மனுஷருக்குத் தெரியாதே. ஆனுல் நம்முடைய வாக்கினுலே பிறப்பித்தபடி உம்முடையபேரிலே சொன்ன பேருக்கு அதைத்தொட்டு ஒரு குற்றமில்லையே! நம்முடைய மனது தேத்திக்க என்னைத் தொட்டுவந்ததல்லாதபடியினுலே என்பேரிலே துரையுடனே அசுவாரிசியம் பிறக்கத்தக்கச் சொன்ன கனக்ராய முதலிக்கு கொஞ்ச நாளையிலே சிறிது சர்வசீவதயாபரனு யிருக்கப்பட்ட ஆண்டவன் ஆக்கினை கொடுப்பான் அதுக்குச் சந்தேகமில்லை. அதெப்படியென்ருல் ஒருத்தருக்கும் என் மனத்திலிருந்து பொல்லாப்பு பண்ணவேணுமென்று நினைக்கிறவனல்லாதபடியினுலே சுவாமி அவர்களுக்கு ஆக்கினை கொடுப்பார் என்கிறதற்குச் சந்தேகமில்லை, நாம் ஒருத்தருக்கு பொல்லாப்பு நினையாததினுல் சுவாமி நமக்கு ஒரு காலும் குஷிவர வோட்டுகிறதில்லை இது சகலமான சனங்களும் அறிவார்கள். என் பேரிலே இப்படி அபாண்டமாய்ச் சொல்லப்பட்ட பேர்கள் அனுபவிக்கப் போகிற கஸ்தியையும் லோகத்துக்குள்ளே இருக்கபட்ட சனங்கள் அறியத்தக்கதாக சுவாமி வெளிப்படுத்துவான்.

1739 ஜூன் மாதம் 8-ந்உக்கு சித்தார்த்தி ஸு ஆனி மீ 18உ ஞாயிற்றுக்கிழமை தினம்

மத்தியானத்துக்கு மேல் இரண்டு மணிக்கு முன் காளயுத்தி ஸு-த்தில் மாசி மீ த்தில் மொக்காவுக்குப் போன மோரா என்கிற கப்பல் மத்தியானம் ஒரு மணிக்கு வந்து சேர்ந்தது கப்பல் கப்பித்தான் மூசே சோலிமினியாக்கு இந்தக் கப்பலில் போன சரக்கும் சேதம்போயில்லாமலிருக்கிற சரக்கெல்லாம் சாடாவாய் வித்துப்போச்சுதா என்று கேட்குமிடத்தில் ராசஸ்ரீ துரையவர்கள் மற்றுமுண்டான கோன்சேலியேர்கள் சொன்னது முன் சேதம்போயில்லாமலிருந்த லட்சத்திப் பதினுயிரம் வராகன் சரக்குக்காக ஏழு எட்டு

* மூன்று வரி கிழிந்திருக்கிறது.

மாதத்துக்குள்ளாக விற்ற சரக்கு—நாட்டுப்பத்தாக்கு ஆன படியினலே அன்பதினயிரம் பத்தாக்கு வித்ததென்றும் அதென்ன கிரயம் இருபதினயிரம் இருபத்திநாலாயிரம் வராக னச்சுதென்றும், இதல்லாமல் அவ்விடத்திலிருந்து எழுதிவந்த சேதி என்னவென்ருல் இனிமேல் அவ்விடத்திலிருந்து சரக்கும் மற்றது அனுப்பிவித்தால் இவ்விடத்திலே இருக்கிற சரக்கு விற்கமாட்டாதென்றும் இதல்லாமல் சரக்கு அனுப்ப வேண்டாமென்றும் இப்படியாக எழுதிவந்ததாய் எல்லோரும் சொன்னர்கள் என்றும் நாம் கொடுத்திருக்கிற சரக்கு மொக் காவிலே முசே கோர்பிசெத்ரே (M. Courbezatre) வசமா யிருப்பித்துப் போட்டுவந்தபடியினலே அவர் எழுதியனுப்பின கடிதத்திலே தம்மிடம் சரக்கு ஒன்றும் விற்கவில்லையென்ப தாகக் கடுதாசியும் படித்துக் காண்பித்தார்கள். ஆனபடியி னலே மொக்காவிலே—வியாபாரம் இந்த வருஷம் நடக்கிற தாய்க் காணவில்லை

சித்தார்த்தி ஹூ ஆனி மீ 19௳ 1739 ம் ஆண்டு ஜூன் மீ 29௳ திங்கட்கிழமை நாள்

சாயங்காலம் ஐந்து மணிக்கு சீமையிலிருந்து ஒரு கப்பல் ஓடிவந்தது. துறையிலே வந்து பிடித்தான் கப்பல் பெயர் தூக் தெ ஓர்லியான்ஸ் (Duc de Orleans) கப்பல் கப்பித்தான் பேர் முசே லஷினியே (M. de Lachenaye) இந்தக் கப்பல் பிராக் குக்கு போகிறதற்காக நொவெம்பரிலே லோரியாம்மைவிட்டு இந்தநாள் புதுச்சேரிக்கு வந்துசேர்ந்தது. இந்தக் கப்பலிலே வந்த சேதியின் முன்னலே இவ்விடத்திலே சொலுத் தாது கப்பித்தானயிருந்த தெக்குபௌாம் முசே வொல்சு (M Wolchs) நிமித்தியம் வியாச்சியப்பட்டு சீமை போயிருந்த தெக்குபௌாம் இந்த நாள் இந்தக் கப்பலிலே வந்து இறங்கினன். மற்றப்படி கப்பல் கப்பித்தான் மற்றமுள்ளபேர் எல்லாரும் இறங்கினர்கள் இந்தக்கப்பலிலே நாலு லக்ஷம் (Dollars) பத்தாக்கும் வந்ததென்றும் சொல்லு கிருர்கள். இதுக்கு முன் கரைவழியாய் வந்த கடுதாசியிலே முசே பெப்ரியே (M. Febevrier) வருகிருர் என்று சொன்ன சேதியைக் கேட்கப்போனல் அவர் பெண்சாதி கர்ப்பிணியாயி ருக்கிருள். ஆனபடியினல் வரவில்லை. வருகிற வருஷத்துக்கு வருவார் என்றும் இந்தக்கப்பலிலே வந்தபேர் அவர் வரச் சொல்லுகிருர்கள். இதுவே யல்லாமல் பின்னை வேறே ஒன்றும் விந்தை சேதியினைக்காணேம் இன்னம் இவ்விடத்துக்கு நாலு கப்பலும் பங்காளத்துக்கு மூணு கப்பலும் வருமென்று சொல்லுகிருர்கள். இதுக்கு முன்னே காணமலே கண்ட பிலிப்போ என்கிற கப்பல் பலத்த காத்துசுருக்காக அடிச்சபடி யினலே வந்து துறைக்கு வந்து சேரமாட்டாமல் பங்காளம் போய் வைத்துபிடிக்கிருன் என்று சொன்னர்கள் என்று

சொல்லிக்கொள்ளுகிறார்கள். சிறிது பேர் அவ்விடத்துக்குதான் போனார்கள். சிறிது பேர் சில கப்பல் காத்திலே அடிச்சுக் கொண்டுபோனவிடம் தெரியவில்லை என்றும் சொல்லுகிறார்கள்.

1739 ஜூன் மீ 11 உ சித்தார்த்தி ஸு ஆனி மீ 1 உ வியாழக்கிழமை

இந்த நாள் பட்டணத்தில் என்ன அதிசயம் என்றால் புதுச்சேரி பட்டணத்தில் ஆட்சி செலுத்தப்பட்ட மூசே ஷெவல்லியேர் தும்மா அவர்கள் ஊரில் எங்கும் தெரிவித்த சேதி என்னவென்றால் இந்தப்பட்டணத்துக்குள்ளே கடற்கரையோரம் முதலாய் பட்டணத்துக்குள்ளே சம்பாகோவிலுக்கு தெற்காகப் போகிற உப்புக்கழியோரம் பட்டணத்து வீதிகளுக்குள்ளே கூட ஆராகிலும் மல ஊபாதைக்கு போகிறதென்றிருந்தால் ஆறுபணம் அபராதம் வாங்கிறது அந்த ஆறு பணத்தில் மல உபாதைக்குப் போகிறவனை பிடிச்சுக் கொண்டு வருகிறவனுக்கு இரண்டு பணமும் கொடுக்கிறது. மற்ற நாலு பணம் சாவடியாரால் பங்கெடுத்துக் கொள்ளுகிறது என்று திட்டம் பண்ணி தமுக்குப் போட்டுவித்து கட்டளை இட்டார். அநேகம் பேர் தெரியாமலே மல உபாதை இருந்ததற்கு மேலே எழுதப்பட்டபடி பணமும் வாங்கப்பட்டது. இதனால் ஊருக்குள்ளே அங்கலாயித்த சனங்கள் கணக்கில் அகப்படயில்லை. அதிகாரம் பண்ணிப் பார்க்குமிடத்தில் மிகுதியும் கடினமாக யிருக்கிறதாக மனதில் எண்ணினவர்கள் கணக்குக்கு அகப்படவில்லை........... .....*

1739 ஜூலை மாதம் 8 உ சித்தார்த்தி ஸு ஆனி மீ 28 உ புதன்கிழமை நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு வெள்ளைக்காரர் ஒருத்தனை கோட்டைக்கு தென்னண்டை இருக்கப்பட்ட வெளியிலே கொண்டுபோய் கண்ணைக்கட்டி முழங்காலிலே நிக்கவச்சு நாலுபேர் துப்பாக்கியிலே இரட்டைக்குண்டு போட்டு சமீபத்திலே நின்னு நாலுபேரும் ஒருமிக்க துப்பாக்கியை மாருக்குப்பிடிச்சு சுட்டுப்போட்டார்கள். அவனை அப்படி சுட்டுப்போடத்தக்கதாக என்ன நோக்கமென்றால் ..........

1739 ஜூலை மீ 15உ சித்தார்த்தி ஸு ஆடி மூ 3உ புதன்கிழமை

கோன்சேல் கூடி கோன்செல்லியோரவர்கள் உத்தாரமாவது சகல சனங்களுக்கும் பிரசித்தமாக தெரிவிக்கிறதாவது சகலமான வர்த்தகர்களும் ஷராப்புக்காரர்களும் மற்றுமுள்ள

* இரண்டு வரி கிழிந்திருக்கிறது

குடியானவர்களும் கொடுக்கல் வாங்கல் கொள்வினை விற்பனை பண்ணுகிறது ஆற்காட்டு ரூபாய் அந்தவராகன் மாத்து வழங்கிறது எட்டுமாத்து வராகன் 100-க்கு ரூபாய் 320 ஆகவும் ரூபாய் ஒண்ணுக்கு பணம் ஏழரை ஆகவும்வழக்கமாக நடத்திக்கொள்ளுகிறது இந்தக் கட்டளையின்படிக்கு விலையினிமேல் வித்தியாசமில்லாமல்நடந்துகொள்ளவும் இந்தப் படிக்கு மேலான கோன்சேல் அறையிலே 1739 சூலை 15-க்கு பேசி தீர்த்து, இன்று இந்தப்படிக்கு பிராஞ்சிலே நாலு கடுதாசியும் தெலுங்கு நாலுகடுதாசியும் தமிழிலே நாலுகடுதாசியும் எழுதிக்கொண்டு கோட்டையிலே பிடவைப்பார்க்கிற சாலையிலே முத்திரைச்சாவடியிலே வாசல்படியிலே கோவிலிலே இந்த நாலு இடங்களிலும் ஸ்தாபிச்சு பட்டணத்திலே தமுக்கும் போடுவிச்சார்கள். தமுக்கும் பிறகே சாவடி மணியக்காரன் வந்தவாசி ரங்கப்பன் கூடப்போய் மேலே எழுதியிருக்கப்பட்ட வயணமெல்லாம் அங்கங்கே நின்று சகலமான சனங்களுக்கும் படிச்சுக்கொண்டு பட்டணம் எல்லாம் தட்டி அறை சாவிவச்சார்கள்.

**1739 சூலை மாதம் 20-ட சித்தார்த்தி ஹூ ஆடி மீ 8-ட திங்கட் கிழமை**

இந்த நாள் சாயங்காலம் அஸ்தமித்து நாலு நாழிகைக்கு மேல் சந்திர கிரணம் பதினொரு மணிக்கு விட்டுப்போச்சுது ஆனால் இந்தக் கிரணம் 9/10 கிரணம் முக்காலே மூணுவீசம்.

**1739 ஹூ அக்டோபர் மீ 22 உ க்கு தமிழ் சித்தார்த்தி ஹூ ஐப்பசி மீ 9 உ வியாழக்கிழமை**

இந்நாள் புதுச்சேரி பெரிய துபாஷி கனகராயமுதலி குமாரன் வெல்வேந்திர முதலி என்கிறவன் நாளது இராத்திரி பதினஞ்சு நாழிகைக்கு மேல் பதினாறு நாழிகைக்குள்ளாக மரணத்தை அடைஞ்சான். இவனுடைய ஜன்ம தினம் விளம்பி ஹூ ஆவணி மீ 31உ திங்கட்கிழமை இராத்திரி 23 நாழிகைக்கு மேல்தாமச வேளையில் கடக லக்கினத்தில் செனனமானபடியினாலே. மரணமான நாள் மட்டுக்கும் அவன் லோகத்துக்குள்ளே இருந்த வயசு எத்தனை யென்றால் வருஷம் 21 மாசம் 1 நாள் 9. இவன் பிறக்கச்சே சனன காலத்திலே கேது திசையானபடியினாலே இவன் சனனமானவுடனே தகப்பனுக்கு உத்தியோகம் போனதும்மான ஆனி வந்ததும் ஊரை விட்டு அப்புறம் குடிபோனதும் பின்னை கிலேசத்துக்கு என்ன காரியம் நடக்கவேணுமோ அந்தப்படியெல்லாம் கிலேசம்நடந்தது. அந்தக் கேதுதிசை போய் சுக்கிர திசை வருங்காலம் இவனுக்கு நடக்கவேண்டிய சுக்கிர திசையினுடைய நன்மையான அதிசயங்கள் எல்லாம் இவன்

சிறு பிள்ளையானபடியினாலே இந்தப் பலன் எல்லாம் இவன் தகப்பன் கனகராய முதலிக்குநடந்தது. அந்தச்சுக்கிரன் லக்ன கேந்திரத்திலே ஒருத்தனாக சுபக்கிரகங்கள் பார்க்கப்பட்டிருந் தபடியினாலே இவனுக்கு இந்த யோகம் வருகிறதுக்கு முன் னமேதானே பனவூர் நாராயணசோசியர் சொல்லி இருந்தபடி க்கு சுக்கிரன் சுபீக்ஷத்துடனே லக்னகேந்திரத்திலே இருக்கிற படியினாலே சத்துருக்களெல்லாம் நாசப்பட்டுப்போய் இந்தப் பட்டணத்துக்கு அமுலுக்களெல்லாம் இவன் கைக்குள்ளே அடங்கி மகாதிரவியவந்தனாய் மகாயோகத்தை அனுபவிப் பான் என்றும் இந்தச் சுக்கிர திசைபோய் சூரிய திசைவருங் காலம் சரீரத்துக்கு நாசம்வந்து திரவியத்துக்கும் சேதம்வந்து ரொம்பவும் கஷ்டப்படுவார் என்று சொன்னார். அவர் அப்போது சொல்லி இருந்தபடிக்குத் தானே சுக்கிரதிசை எல்லாம் ஆய் சூரிய திசை வருவதென்னச்சே சாதகனும் மரணத்தை அடைஞ்சான். .இனிமேல் அவர்களுக்குக் கஷ்டமான காலம் வருகிறதுக்கு எதுக் காரணம் என்னவென்றால் மறுநாள் வெள் ளிக்கிழமை 23 க்கு அற்பிசி மீ 10 உ க்கு மூணுஞ் சாமத்துக்கு மேல் இவனைக் கொண்டு போய் கல்லறையில் அடக்கம் பண் ணச்சே இவன் போட்டிருந்த சரிகைப் பூப் போட்ட அங்கி இரண்டு கிசம் சகலாத்தும் காதிலே ஒரு முத்து கடுக் கன் கையிலே ஒரு மோதிரம் இதுகளுடனே ஒரு பெட்டியிலே வச்சு அடக்கம் பண்ணிப் போட்டார்கள். அதின் பிற்பாடு வீட்டுக்கு வந்தபிற்பாடு கனகராய முதலி பெண்சாதி முந்தாலி வெந்து போனதினாலேயும் பின்னையும் இரண்டு நாழிகை பொறுத்து அவர்கள் வீட்டுக்கு மேலண்டைவீடு பத்திக்கொண்டு அதிலே நூறு வராகன் மட்டுக்கும் சேதப்பட்டுப்போனபடியி னாலேயும் இப்படியெல்லாம் நடந்தது — அவனைக்கொண்டு போகையில் [ கல்லறையிலே அடக்கிப்போட்டு வந்தமாத்திரத் திலே இப்படியாக சமீபமாக வந்தபடியினாலே கனகராயமுத லிக்கு இனிமேல் கஷ்டகாலத்துக்கு ஆரம்பமென்று பட்ட ணத்திலுள்ள சனங்களெல்லோரும் சொல்லிக்கொள்ளுகிறார் கள். ஆனால்-இவன் தகப்பனிடத்துக்குள்ளே குருசிஷ மரியாதை யாய் நடந்துகொண்டபடியினாலேயும் வேறே பிள்ளையில்லா மல் ஒரு பிள்ளை—ஆனபடியினாலேயும் கைக்கு ஒத்திகையான பிள்ளையாயிருந்து விழுந்துபோனபடியினாலும், அவரவர் தாபதப்பட்டார்கள்.

1739 நவம்பர் மீ 1உக்கு சித்தார்த்தி ஸு அர்ப்பிசி மீ 19உ ஞாயிற்றுக்கிழமை

இந்த வருஷம் சீமைக்கு பிராஞ்சாவுக்கு நவம்பர் மாதம் 1 ம்தேதி பயணமாய்ப்போன கப்பல் மூன்றுக்கு கப்பல் பேர்

வயணம். புளெரி (Fleury) என்கிற கப்பல் 1. இந்த கப்பலின் பேரிலே ஏத்தின புடவைக் கட்டு 1800. சில்லரை. இந்தக் கப்ப லிலே மதாம் பெரியேர்கூட ஏறிப்போனுள்.

இதன் பிற்பாடு போன கப்பல்பேர் திரித்தோம் (Tritoin) இதன்பேரிலே காப்பிக்கொட்டை மூவாயிரங்கட்டு ஏறினது. இதன் பிற்பாடு போன—கப்பல் பேர் பிராஞ்சி தெகோந்தி (Prince de conde) இந்தக் கப்பலின்பேரிலே ஏத்தின புடவைக்கட்டு எண்ணூறுகட்டு இவ்விடத்திலே ஏத்தி மாயேக்கு (Mahe) ப்போய் அவ்விடத்திலே இருந்து மிளகு ஏத்திக்கொண்டுப் போகச் சொல்லி உத்தரமானபடியினாலே பயணப்பட்டுப் போச்சுது. மசுக்கரையிலிருந்து (Mascareign) வந்த சுபித்தேர் (Jupitre) என்கிற கப்பலின் பேரிலே மசுக் கரைக்கு சிறிது கட்டுகளும் ஏத்தி பின்னையும் அவ்விடத்திற்கு வருஷா வருஷம் ஏத்தி அனுப்பப்பட்ட சரக்குகளும் ஏத்தி மூசே தும்மா குவர்னர் துரையவர்களுட தம்பி மூசே செப்ரியேல் தும்மாவும் மதாம் கிரிங்துவாம் மதாம் பாதில் இவர்கள் ஏறிப் போனார்கள்.

இந்த நாள் மூசே வெஞ்சாம் (M. Vincens) சித்தாவிலி ருந்து (Jaddah) இவ்விடத்திற்கு வந்து இவ்விடத்திலே இருந்து சென்னப்பட்டணத்துக்குப் போய் சென்னப்பட்டணத்திலே இருந்து வங்காளத்துக்குப் பயணமாய் போய் இரண்டு மூனு நாளைக்குப் பிற்பாடு பங்காளத்துக் காச்சல் கண்டு அந்த காச் சலினாலே மூசேவெஞ்சாம் (M. Vincens) செண்ணு போனதாகச் சென்னப்பட்டணத்திலே இருந்த பாதிரி தொமாசா அவர் கள் இவ்விடத்துக்கு எழுதி அனுப்பிவிச்சதாக துரையவர்கள் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

1739 ஸு நவம்பர் மீ 21 உ சித்தார்த்தி ஸு கார்த்திகை மூ 9 உ சனிவாரம்

சாயங்காலம் அஞ்சு மணிக்கு இந்தப் புதுச்சேரி பட்ட ணத்திலே நடந்த அதிசயம்: முன்னாலே பழய நயினார் இருந் தாரே அவருட மனுஷனை விட்டு தங்களுடைய காவலில் முத்தியா பிள்ளை இவர்களுக்கு கொடுக்கலாமா என்று அங்கலாய்ப்பினாலே பட்டணத்திலே திருடச் சொல்லி ஒருத்தனை அனுப்பினார்களாம். அவன் வந்து வெகு நாளாய் திருடிக்கொண்டே திரிஞ்சான். இப்படி திருடச்சே நாலஞ்சு மாசத்துக்கு முன்னே ஒரு நாள் வேளையிலே அகப்பட்டான். அதின்பேரிலே அவனைப்பிடித்து வந்து அடிச்சுப்பிடிச்சு கேட்கிறபோது தான் பூருவோத்திரமும், இவ்விடத்திலே

திருடி அவரவர் வீட்டிலே வச்சதும் இதுகளெல்லாம் வயணமாய்ச் சொன்னதின் பேரிலே கண்டவன் கேட்டவன் தட்டுமுட்டு வாங்கிவச்சவன் இந்தத் திருடனுக்கு இடம் விட்டவர்கள் இவர்களை எல்லாம் பிடிச்சுக் கொண்டுவர பதினஞ்சு பதினறுபேர் ஆச்சுது இவர்கள் எல்லோரையும் கூட கிடங்கில் போட்டு வச்சிருந்து கோன்சேலிலே கேட்டு அவரவர் பேரிலே கொஞ்சநேரமானபடியினுல் எல்லாரையும் விட்டு விட்டு திருடனுடனே கூட ஓடவி வீரப்பமேஸ்திரி, ஒரு தட்டான், சாந்திபிர்மன், குமரப்ப நயினர், இவர்கள் அஞ்சு பேரையும் கூட கிடங்கிலே போட்டிருந்து கோன்சேலிலே தீர்த்து ஆக்கினையிட்ட வயணம் நடுப்பட்டணத்திலே கடைத்தெருவிலே முத்திரைச் சாவடிக்கு எதிரே தூக்குமரம் கொண்டுவந்து நட்டு இன்றைய தினம் சாயங்காலம் அஞ்சு மணிக்கு சாவடியிலே மூசே துளோராம் வந்திருந்து திருடனை மாத்திரம் தூக்கிப்போடச்சொல்லி உத்தாரங் கொடுத்தார். அப்படியே சகலமான சனங்களும் பார்க்கத்தக்கதாக தூக்கிப்போட்டார்கள். மற்ற அஞ்சு பேரிலே ஓடவி வீரப்பமேஸ்திரியும் தட்டானையும் பேருக்கு ஐம்பது ஐம்பது அடியடித்து பேருக்கு இரண்டிரண்டு காதையும் அடியோடே அறுத்து குண்டுக்கு வெளியே துரத்திவிட்டார்கள் மற்ற மூன்றுபேர் சாந்திபிர்மன், குமரப்பநயினர் இவர்கள் மூன்று பேரையும் வரிசையாய் கட்டி இருபத்தைந்து அடி அடித்து மறுபடி கிடங்கிலே போட்டுவைத்தார்கள். இன்னும் இரண்டு மூன்று ஞாயத்துககு அடித்து சும்மா விட்டுவிடுவார்கள். இவர்களுக்கு வேறே ஆக்கினையில்லை.

1739 நவம்பர் மீ 25 உ சித்தார்த்தி ஹு கார்த்திகை மீ 14 உ வியாழக்கிழமை

இந்த நாள் காலமே பிராஞ்சீசுகோ பிரேர்ரா (Francisco Pereira) சந்தா சாயபு அவர்களண்டை இருந்துவந்தார், இவர் வந்ததேது என்றல் திரிச்சிராப்பள்ளி தட்டுமுட்டுகள் ரத்தின நகைகள்—விற்றதற்காக சந்தா சாயபு அனுப்பிவித்ததின்பேரில் வந்ததாகச் சொல்லுகிருர்கள்.

1739 டிசம்பர் மீ 8உ சித்தார்த்தி ஹு கார்த்திகை மீ 26உ செவ்வாய்க்கிழமை

இந்த நாள் இராத்திரி நடந்த அதிசயம் என்னவென்றல் -சவரிமுத்துமுதலி மகனுக்கு ஆச்சாரப்பனுக்கு சரீரம் சுவஸ்தமில்லாமலிருந்தபடியினுல் அந்த வீட்டிலே அந்த வியாதியஸ்தனுடனே கூட படுத்துக்கொண்டிருந்தபேர் ஐயா மேஸ்திரி. கனகப்பமுதலி, அம்பலயப்பமுதலி மைத்துனன்பேர் பினங்கன் வெள்ளாழப்பிள்ளையாண்டான் ஒருத்தர் ஆக நாலு பேர் படுத்திருக்கும்போது இராத்திரி பதினேந்து நாழிகைக்கு மேல் நாலுபேர் தடிக்காரரும் ஒருவன் சேருவைக்காரன்—

போலேயும் ஆக அஞ்சு பேருமாய் வந்ததாய் தலைக்கடையிலே படுத்திருந்தவன் சொர்ப்பனம் கண்டானும் அப்படியிருக்கச்சே தானே அந்த அஞ்சுபேரும் மெய்யாக வந்ததாய் அவன் கண்ணுக்கு தோத்தப்பட்டு அதின்பேரிலே . அவனை ஒரு தடிக்காரன் ஓங்கி ஒரு அடி போட்டானும். அவன் அந்த மட்டிலே திண்ணைமேல் படுத்திருந்தவன் தாழ விழுந்து பயந்து பயந்து குப்புரப்படுத்துக்கொண்டு விட்டானும். அப்படி இருக்க அவனை விட்டுப்போட்டு உள் கட்டுக்குப்போய் கதவை இடிச்சார்களாம். உள்ளே படுத்திருந்தபேர் ஆரோ தெரியாது என்று பேசாமல் இருந்தார்கள். அப்படியிருக்க நாலுதரம் ஆறுதரம் மறுபடியும் கதவை இடிச்சார்களாம். அதின்பேரிலே அய்யாமேஸ்திரி என்கிறவன் எழுந்திருந்து ஆரடா அது கதவை இடிக்கிறது என்று கதவைத் திறந்து பார்த்தான். ஒருத்தரையும் காணேம். அந்தமட்டிலே போய் படுத்துக்கொண்டான். பின்னையும் சத்து நேரத்துக்குள்ளே எல்லாம் சரீர சுஸ்தமில்லாமலிருக்கிற ஆசாரப்பனுக்கு சலவைபோலே கண்டு, பேச்சு மூச்சு இல்லாமல் பிராண அவஸ்தை கண்டது. அப்படி கண்ட உடனே இந்த வயித்தியன் அய்யா மேஸ்திரியை எழுப்பி பார்க்கச்சொன்னார்கள். இவன் எழுந்திருந்து கிட்டப்போய் கையைப் பிடிச்சு பார்த்தமாத்திரத்திலே இவனுக்கு சொர்னை தெரியாமல் அந்த மட்டில் மல்லாக்க விழுந்து இவனும் பேச்சு மூச்சுயில்லாமல் போகிறது வருகிறதுமாய் தலையும் நாணிப்போய் காங்கையெல்லாம் சோந்துபோச்சுது. அந்தமட்டில் இரண்டு மூணு பேராய் கூடிகைலாகிலே எடுத்துக்கொண்டுபோய் அய்யா மேஸ்திரி வீட்டிலே கொண்டுபோய் போட்டுவிட்டு வந்துவிட்டார்கள். உள்ளே படுத்திருந்த பேருக்குள்ளே இரண்டு பேர் பேச்சு பிறள இப்படி ஆச்சுதே பின்னை ஒருத்தன் வெள்ளாழப் பிள்ளையாண்டான் பெட்டிமேலே படுத்திருந்தவனை அழைத்து அழைக்க பேச்சு மூச்சில்லாமல் கிடந்தவன் கிடந்தபடியே சுறணை தெரியாமல் பிடவையுடனே மூத்திரம் பேஞ்சுக்கொண்டு அவன் பேச்சும் ஆயிப்போனதாய் தீந்தது. அதின் பிறகும் மந்திரவாதியான சோனகன் இப்படிப்பட்ட பேர்களை அழைப்பிச்சு பார்க்கச் சொன்னார்கள். அவர்கள் வந்து பார்த்து அதுக்கொத்தபடிக்கு கோழிகொண்டுவந்து சுத்தியும் சோறு சுத்திப்போட்டும் கழிப்பு கழிக்கிறதென்று சொல்லியும் தமிழ் ஞாயத்துக்குள்ளே எப்படி நடக்குமோ அதைப் பார்க்க பின்னையும் பத்துப்பங்கு அதனமாயும் மந்திரவாதயன் நடப்பிச்சார்கள். அதுகளுக்கெல்லாம் அவர்களும் சம்மதிச்சு இவர்கள் கேட்டதெல்லாம் கொண்டுவந்து கொடுத்து சம்மதியானபடிக்கு பார்க்கச் சொன்னார்கள். எப்படி நடப்பீர்கள் என்று பிராது பண்ணினார்கள் அதின் பேரிலே கனகராய முதலி சொன்னது இப்படியெல்லாம் பார்த்தபடியினாலே இந்தப்பிள்ளை பிழைச்சுது இப்படிப் பாராமல் உங்கள்

பேச்சைக் கேட்டல்லவா முன்னே என் பிள்ளை விருதாவிலே செத்துப்போச்சுது என்று ரொம்பவும் நிந்தையாய்ச் சொன்னார் அதின்பேரிலே அவர்கள் பேசாமலிருந்தார்கள்.

1740 ஆ ஜனவரி மீ 8 உ க்கு தமிழ் சித்தார்த்தி ஆ மார்கழி மூ 28 உ வெள்ளிக்கிழமை

காலமே...மணிக்கு தூக்குதெ ஓர்லியான் (Duc de Orleans) என்கிற அச்சை கப்பல் ஓடிவந்து துறையிலே வச்சு பிடிச்சு ஏழு பீரங்கியும் போட்டான். இந்தக் கப்பலிலே வந்த சேதி என்னவென்றால் இந்த வருஷம் அச்சையிலே சூரத்து கப்பல் இரண்டு மூணு கப்பல் வந்தபடியினாலே பிடவை புகையிலே மெத்த சவுக்கையாயிருக்குதென்று சொன்னார்கள். இதல்லாமால் இந்தக் கப்பலிலே ஏத்திவந்த சரக்கு வயணம் கும்பனிருக்கு:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கர்ப்பூரக்கட்டி சாம்பிராணி வகையரு பாரம் | | | | ... | ... |
| குதிரை | ... | ... | ... | ... | 123 |

இதுவல்லாமலும் வங்காளத்துக்கு என்று ஏத்திவந்தது

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பஞ்சு கட்டு | ... | ... | ... | ... | 148 |
| குந்திரிக்களும் | ... | ... | பாரம், | ... | 20 |
| சாம்பிராணி | ... | ... | பாரம் | ... | 10 |
| சப்பங்கிகட்டை | ... | ... | பாரம் | ... | 30—35 |
| குங்கிலியம் | ... | ... | பாரம் | ... | 10—15 |

இப்படிப்பட்ட சரக்கெல்லாம் ஏத்திக்கொண்டு வந்தது.

1740 ஆ பிபுறவரி மீ 13 உ க்கு தமிழ் சித்தார்த்தி ஆ மாசி மீ 5 உ சனிக்கிழமை

சாயங்காலம் பிராஞ்சீசு இப்பிரேக்கு (Francisco Pereira) ராமாராயர் பாபு மற்று மூண்டான பேர் அனைவரும் அவர் பிறகே வந்திருந்த பேர் எல்லாருங்கூட பயணப்பட்டு சாயங்காலம் நாலுமணிக்கு இவ்விடம் விட்டு புறப்பட்டு திருச்சிராப்பள்ளிக்குப் போகத்தக்கதாக பயணமாகிப்போனார்கள் இவன் இவ்விடத்துக்கு வந்த பிற்பாடு இவ்விடத்திலே நடந்த சேதி யாவும் நடக்கப்பட்ட மரியாதைகளையும் இவன் சொல்லப்பட்ட பொய்களையும் இவ்விடத்திலே எழுதுகிறதுக்கு இக்கடுதாசியிலே விஸ்தாரமில்லாதபடியினாலே இந்தக் கடுதாசிக்கு மூணாங்கடுதாசியிலே சவிஸ்தாரமாய் எழுதினோம்.

*1740*-ம் ஆ பிப்ரவரி மீ 15உக்கு தமிழ் சித்தார்த்தி ஆ மாசி மீ 7உக்கு திங்கட்கிழமை

இந்தநாள் இராத்திரி தூக் தெ ஓர்லியான் என்கிற சீமை கப்பல் கப்பித்தான் மூசே நசிலேயு (M. Lachenaye) இராத்திரி சாப்பிட்டு கப்பலின்பேரில் ஏறிப்போய்,சீமைக்குப்போகிறதுக்கு வழியிலே ஒரு துறையிலும் பிடியாமல் செவ்வாய்க்கிழமைக்குப் போகத்தக்கதாக உத்தாரங்கொடுத்தபடி கப்பல் இராத்திரிக்குப் பயணமாய் பாயெடுத்துப்போனான். இந்தக் கப்பலிலே ஏறின கட்டு பறங்கிப்பேட்டையிலே இருந்துவந்த மெல்லீசு நூல் சின்னகட்டு ஒன்று உள்பட ஆயிரத்து முன்னூத்து யெண்பத்தைந்து கட்டு ஏற்றப்பட்டது. இதல்லாமல் சில்லரைக்காரரது பத்துபதினைந்து சிப்பமாத்திரம்கூட ஏத்திக் கொண்டு சீமைக்குப் பாயெடுத்து ஓடிப்போனான் இதல்லாமல் இதற்குப் பத்து நாளைக்கு முன்பாக மாயே (Malie) லேயிருக்கிற சுப்பித்தேர் (Jupitre) என்கிற கப்பலை சீமைக்குப் பயணம்பண்ணி அனுப்பத்தக்கதாக இவ்விடத்திலிருந்து செஞ்சோசப் (St. Joseph) என்கிற கப்பலிலே நானூறு கட்டு ஏத்தி மற்றதுக்கு மிளகு ஏத்தி சீமைக்குப் பயணம்பண்ணி அனுப்பச்சொல்லி—இவ்விடத்திலேயிருந்து கட்டுமாத்திரம் ஏத்தி இந்தக் கப்பலை சீமைக்கு அனுப்பினார்கள். இதல்லாமல் இந்த விசை சீமைக்கு இரண்டு கப்பல் போகவேண்டியதுக்கு ஒரு கப்பல் மாத்திரம் போய் முராபா (Maurepas) என்கிற ஒரு கப்பல்—மாத்திரம் இவ்விடத்திலே நின்றது இந்தக் கப்பல் எது நிமித்தம் போகாமல் நின்றதென்றால் கப்பலுக்கு கட்டு கூடாததினாலே நின்றது. இப்போது போகப்பட்ட கப்பலுக்குத்தானே கட்டுப்போதாமல் கிடங்கிலே கையிருப்புக் கட்டுகளில்லாமல் தவக்கப்பட்டது. பரிச்சதம் கட்டுகள் கையிருப்பு இல்லையா—யென்றால் ஏனத்து (Yanam)ப் புடவையும், சுங்குவார் புடவையும், வர்த்தகர் புடவையுமாக பலவிதமும் எழுநூறு எழுநூத்தைன்பது கட்டுக்கு மாத்திரம் உண்டு. இருக்கிற புடவைகள் இதுகளெல்லாம் வண்ணான் துறையிலே சலவை அரைகுறையாயிருக்கிறபடியினாலே சத்தியாய் கட்டுப்போடுகிறதற்கு இல்லாமல் தவக்கப்பட்டது. அல்லவென்று இந்த எழுநூறு எழுநூற்றைன்பது கட்டையும் முஸ்தீது பண்ணி இத்தோடேகூட (இ. நு.) 200, 250 கட்டும் கூடப்போட்டு ஆயிரம் கட்டும் இந்தக் கப்பலிலே ஏத்தி பயணம் பண்ணி அனுப்புவோமென்றால் இந்தக் கப்பலுக்கு ஆயிரத்து எழுநூறு கட்டு ஏத்த வேண்டியதானபடியினாலேயும் மற்ற எழுநூறு கட்டும் கூடி முஸ்தீது பண்ணுகிறதற்கு ஒரு மாதம் நாற்பதுநாள் செல்லும் என்றபடியினாலேயும் அப்பால் மோசம் தப்பிப்போகுதென்கிறபடியினாலேயும் இந்த முரப்பா (Maurepas) என்கிற கப்

பலே இந்த விசை பயணம் பண்ணுமல் நிறுத்திப்போட்டார்கள். இந்தக் கப்பல் குலசேகரன் பட்டணத்துக்குப்போய் அங்கேயிருந்து மையி (Mahe) க்குப் போகத்தக்கதாக கோஞ்செல் பண்ணி தீர்த்தார்கள். இந்த விசை கும்பனியாருக்கு ஒரு கப்பல் கட்டுக்கூடாமல் இவ்விடத்திலே நின்னுபோனபடியினுலேயும் ஒரு கப்பல் வங்காளத்திலேயும் கட்டுகூடாமல் பயணம் நின்னுபோனபடியினுலேயும் பிலிப்போ (Phelipeaux) என்கிற கப்பல் உடைஞ்சு போனதானபடியினுலேயும் அவர்களுக்கு ரொம்ப தாபந்தமாயிருக்கும்.

**1740** ஞு பிப்ரவரி மீ **17**உ க்கு தரிஷ் சித்தார்த்தி ஞு மாசி மீ 9 உ புதன்கிழமை

இந்த நாள் காலமே இமாம் சாயபு ஆலம்புரவியிலேயிருந்து இவ்விடத்துக்கு வந்தார். இவ்விடத்திலே இருந்து எதிர்கொண்டு போனவர்கள் மூசே துளோராம் மூசே எங்குராம். கனகராயமுதலியார் சேஷாசலசெட்டியார் முத்தியாபிள்ளை ரங்கப்பன். இவர்கள் மேளதாளத்துடனே பொம்மயாபாளையம் மட்டுக்கும்போய் எதிர்கொண்டுபோய் அழைத்துக் கொண்டு வந்தார்கள்—கெவுனி வாசலிலே வரும்பொழுது வரிசை வைத்து சின்ன துரைக்கு அடிக்கிற தம்பூரடித்து கொத்தளத்தின்பேரிலே பதினேழு பீரங்கியும் போட்டார்கள். அவரும் வந்து சுங்குவார் கிடங்கிலே இறங்கினுர். இந்த நாள் சாயங்காலம் துரையவர்களுக்கு இரண்டு கீம் காப்பும் ஒரு சரிகை நடுக்கட்டும் ஒரு சரிகைப் பாகையையும் கொண்டு போய் வெகுமானம் கொடுத்தாராம் மதிப்பு விலை எண்பது வராகனுக்குமேல் நூறு வராகனுக்குள்ளாக என்று சொன்னுர்கள்.

*1740* பிப்ரவரி மீ **18**உக்கு சித்தார்த்தி ஞு மாசி மீ **10**உ வியாழக்கிழமை

மறுநாள் காலமே கனகராயமுதலியார் கோன்சேல் வீட்டுக்கு வந்திருக்கச்சே துரையும் மற்றுமுள்ள கோன்சேல்காரர் பின்னையும் வெள்ளைக்காரர் முத்தியாப்பிள்ளை, ஆனந்தரங்கப்பிள்ளை, சேஷாசலசெட்டியார் பின்னையும் சகலமான வர்த்தகரெல்லாருங்கூட யிருக்கச்சே கோட்டையிலேயிருந்து வரிசை தம்பூறு பின்னே புல்லாங்குழல் வெள்ளைக்கொடியுடனே கூடவந்து குவர்னமாலிலே வாசல்படி மட்டுக்கும் இரு புறமும் இரண்டு வரிசையாய் நின்று படைத்தலைவரும் லியித்துனங்கு (Lientenants) மார்களும் அவரவர் இருக்கும் தானங்களிலே இருந்தார்கள். இப்படி இருக்கிறபோது துரையவர்கள் கனகராயமுதலியை அழைத்து மேளதாளத்துடனே

போய் இமாம்சாயபுவை அழைத்துக்கொண்டு வரச்சொல்லி உத்தாரங் கொடுத்தார், அதுக்கு கனகராயமுதலியா ரிருந்து கொண்டு அழைக்கப்போகிறதற்கு இங்கேயிருந்து வெள்ளைக் காரர் கூடப்போகத் தேவையில்லையா, என்று கேட்டார். அதுக்கு துரை இருந்துகொண்டு வெள்ளைக்காரர் கூடப் போகிற வாடிக்கை எனக்கு ஞாபகமில்லை உமக்கு ஏதாகிலும் ஞாபகமாயிருக்கிறதா என்று கனகராய முதலியைக் கேட்ட தற்கு அவர் தமக்கும் ஞாபகமில்லை என்று சொன்னார். அதின்பேரிலே ரங்கப்பனுக்கு ஏதாகிலும் ஞாபகமிருக்குதா என்று கேட்டார் அதுக்கு நான் சொன்னது அவர் ஊரிலே இருந்து வரச்சே இவ்விடத்திலே இருந்து வெள்ளைக்காரர் கூட எதிர்கொண்டுபோகிறதே அல்லாமல் விடுதியிலே வந் திறங்கின பிற்பாடு இப்போது அழைக்கப்போகிறதற்கு கனக ராயமுதலியார் முத்தியாப்பிள்ளையும் பின்னையும்—நாலைந்து இரண்டுபேருமாய் மேளதாளத்துடனே போய் அழைத்துக் கொண்டு வருகிறதேயல்லாமல் வெள்ளைக்காரர் கூடப்போகிற வாடிக்கை இல்லையென்று சொன்னேன். அதுக்கு துரையு மிருந்து கொண்டுமேதான் எனக்கும் அப்படித்தான் ஞாபகம் இருக்கிறதென்று சொன்னார். அதன்பேரிலே கனகராயமுதலி இருந்துகொண்டு வெள்ளைக்காரரும் கூடப்போகிறபோலே காணுதென்று சொன்னார். அதன்பேரிலே மூசே புலோவை (M. Boyelleau) அழைப்பித்து போனவருஷம் இமாம்சாயபு வந்தபோது நடந்த சமாச்சாரம் எழுதியிருக்கிற தஸ்ரத் திரத்தை எடுத்துக்கொண்டு வரச்சொல்லி பார்த்தார். அந்த தஸ்ரத்திலே நான் சொன்னபடிக்கு எழுதியிருந்தபடியினாலே கனகராயமுதலியை அழைத்து வெள்ளைக்காரர் கவையில்லை. நீங்கள்மாத்திரம் போய் அழைத்துக்கொண்டு வாருங்கள் என்று சொன்னார். அதன்பேரிலே அழைக்கப்போனவர்கள் கனகராயமுதலியார் முத்தியாப்பிள்ளை சேஷாசலசெட்டியார் இவர்கள் மேளதாளத்துடனே போய் அழைத்துக்கொண்டுவந் தார்கள். ஒன்பது மணிக்கு குவர்ன மாளிகையிலே வரும் பொழுதுவரிசைக்குள்ளே வருகிறபோது தம்பூர்அடியாமல்சும் மாயிருந்து துரை நாலடி இப்புறம் நடந்தபடி மட்டுக்கும் வரு கிறபோது துரைக்கு அடிக்கிற தம்பூர் அடித்தார்கள் இதுக் குள்ளே இமாம் சாயபு படித்துக்கொண்டு கிட்டவந்தார். அதின்பேரிலே இரண்டுபேரும் சந்திப்பு ஆகச்சே கோட்டை யிலே பதினேழு பீரங்கி போட்டார்கள் அவன் பிற்பாடு குவர்ன மாளிகையிலே நடுச்சாலையிலே கீழண்டை பக்கத் திலே போட்டிருக்கிற பாங்குமேலே உட்கார்ந்தார்கள். அவர் பிறகே வந்த குதிரைகளும் பின்னையும் வரப்பட்ட பெரிய மனுஷர் சின்ன துரை மற்றுமுண்டான பேர்கள் அனைவரும் நடுச்சாலையிலே இருக்கிற இருபுறமும் நாற்காலியின் பேரில் உட்கார்ந்தார்கள். இப்படி ஒருவருக்கொருவர் நவாபு சுகமா

யிருக்கிற சேதியும் ராசகாரியங்களுமாக ஒருத்தருக்கொருத்தர் முகச்சட்டைவார்த்தைகளாய் கனகராயமுதலியார் துபாசித்தனம் பண்ணத்தக்கதாக பேசிக்கொண்டிருந்தார்கள். இப்படியிருக்க சிறிது அந்தரங்கம் பேசவேணுமென்று யெழுந்திருந்து ..............

**1740** ஆம் ஹு பிப்ரவரி மூ 20-ந் தேதி சித்தார்த்தி ஹு மாசி மீ **12** ந் தேதி

இந்த நாள் சனிவாரம் சாயங்காலம் பசுரா (Bassorah) விருந்து முசே மருந்தேன் வில் (M. Martinville) அனுப்பிவித்த கடுதாசி கரைவழியாய் தலைச்சேரிக்கு வந்து அங்கேயிருந்து மாயை (Mahé)க்கு வந்து அவ்விடத்திலிருந்து இந்த நாள் சாயங்காலம் முசே சேவல்லியேர் தும்மா குவர்னர் துரை அவர்களுக்கு கடுதாசி வந்தது. அந்தக் கடுதாசியுடனே கூட பிரான்சிலேயிருந்து பசுராவுக்குக் கரைவழியாக (ா) துரையவர்களுக்கு அவ்விடத்திலே யிருக்கிற சிநேகிதர் இருவருக்கு அனுப்பின கடுதாசியுமான போனவருஷம் ஆனி ஆடி மீ எழுதின கடுதாசி வந்ததை படித்துப்பார்த்து அவர் சின்னதுரை பின்னையும் இரண்டு மூன்று வெள்ளைக்காரர் கூட இருந்த பேர்களுடனே....

**1740** பிப்ரவரி **21**-ந் உ சித்தார்த்தி ஹு மாசி மீ 13உ ஞாயிற்றுக்கிழமை

காலமே ஏழு மணிக்கு (ா) குவர்னர் துரையவர்கள் வீட்டுக்கு சின்ன துரையும் பின்னையும் கூட வந்த இரண்டு மூன்று வெள்ளைக்காரருக்கு அந்த கடுதாசியைப் படித்துக்காண்பித்துச் சொன்ன சேதி யென்ன என்றால், பிரான்சு ராச்சியத்திலே முன்னாலே இப்போது ஆறு வருஷத்துக்கு முன்பாக பிரான்சு ராசாவுக்கும் எம்பர் துரை ராசாவுக்கும் சண்டைகளாய் இரண்டு மூன்று வருஷமாய் சண்டைகளாயிருந்து அதன் பிற்பாடு சண்டையில்லாமல் சமாதானப்பட்ட சேதியின் வயணத்திலே சமாதானப்பட்டதென்று ஒருத்தருக்குமே வெளிப்படாமலிருந்த காரியத்தை சென்ற 1739 ஹு வெளிப்படுத்தி சகலமான சனங்களுக்கும், சகலமான ராச்சியங்களுக்கும் விசிதப்படுத்தின சேதி யென்னவென்றால் பிரான்சு ராசாவும், இசுப்பாஞ்சு ராசாவும் எம்பரதோறும் தூக்கிதே—சாவாய் என்கிற ராசாவும் இந்த நாலு ராசாக்களும் மகா சிநேகத்துடனே இனிமேல் எந்தக் காரியத்துக்கும் ஒரு ஆலோசனையா யிருக்கத்தக்கதாக உடன்படிக்கை செய்துகொண்டதாகவும் முன்னாலே பிரான்சுக்காரர் எம்பர் துரை ராச்சியத்திலே சிறிது ராச்சியங்கள் பிடித்ததை மறுபடி அவர்களுக்குத்தானே விட்டுவிடத்தக்கதாகவும் அந்த ராச்சியங்களிலே இரண்டு ராச்சியம் மகா பெரிதானது. அந்த எம்பர் துரை ராச்சியத்துள்ளே எல்லாம் பெரிதான

இரண்டு ராச்சியம் பிரான்சு ராசாவுக்கு உசிதமாகக் கொடுக்கவும் இவர் அவருக்கு நூத்திருபது லக்ஷம் வீவுரு வெள்ளி உசிதமாய்க்கொடுக்கவும் இந்தப்படிக்கு உடம்படிக் கையாய் இருவருக்கும் ராசிப்பட்டு இவர் அந்தப்படிக்கு நூத் திருபது லக்ஷம் வெள்ளி அவருக்குக் கொடுத்து அந்த இரண்டு ராச்சியமும் இவர் வாங்கிக்கொண்டார் அந்த இரண்டு ராச் சியத்துக்கு பெயர் பார்மா என்று ஒரு ராச்சியமும், பிளே சான்சு என்று ஒரு ராச்சியமும் இந்தப் பெயரையுடைய இரண்டு ராச்சியமும் பிரான்சு ராசாவைச்சேர்ந்தது. மேலே எழுதியிருக்கப்பட்ட நாலு ராசாவும் மகா அன்னோன்னிய சினேகிதராய் ஒருமித்து யிருக்கிறார்கள் என்றும் இனிமேல் மேலே எழுதியிருக்கப்பட்ட நாலு ராசாக் களும் ஒருமித்து இங்கிலீஷ் ராசாவுடனே சண்டைக்கு எத்தனம் செய்து சண்டைக்குப் போவார்கள் போலே இருக்கு தென்றும், இந்தப்படியாக எழுதி வந்தது. இங்கிலீஷ் காரருக் கும் பிரான்சுக் காரருக்கும் சண்டை வரக்காரியமேதென்றால் 1713ஆம் லூசு கத்தோர்சி (Louis XIV) என்கிற பிரான்சு பெரிய ராசா சகலமான பேருக்கும் இனிமேல் சண்டை களவையில்லை. ஒன்றுக்கொன்று சினேகிதமாய் அன்னோன் னியமாய் நடக்கவேண்டுமென்று உடன்படிக்கை செய்து இசுப்பாஞ்சு ராசா பிரான்சு ராசாவுக்கு சொன்னது இங்கி லீஷ் ராசா கரைத்தொறையிலே போர்தேம்கோம். (Port Mahon) என்று ஒரு தீவு என்றும் ஷிபிரத்தார் என்று ராச்சியமும் ஆக இந்த இரண்டு ராச்சியமும் நம்முடை ராச்சி யத்தை இங்கிலீஷ் ராசா பிடித்துக்கொண்டிருக்க எனக்கும் அவர்களுக்கும் எந்தடுக்கிலே சமாதானமாவென்று இசுப் பாஞ்சா. ராசா கேட்க அதற்கு பிரான்சு ராசா சொன்னது இந்த வேளைக்கு எல்லோரும் சமாதானமாய்ப் போவோம் இனி மேல் அந்த இரண்டு ராச்சியமும் வாங்கி உங்களுக்குக் கொடுக் கத்தக்கதாக நாம் பிணையிருக்கிறோம் என்று சொன்னார் அப் போது இசுப்பாஞ்சா ராசாவும் இவர்பேச்சு தட்டயாட்டாம லும் இதல்லாமல் இசுப்பாஞ்சு ராசா பிரான்சு ராசாவுக்குசாக்ஷ ரத் மகனுடைய பிள்ளையானபடியினாலேயும் இவர் பாட்டனார் ஆகச்சே இவர் சொன்ன பேச்சு கேட்கவேண்டிய கடனான படியினாலேயும் நல்லதென்று சம்மதித்துக்கொண்டார். அதன் பிற்பாடு அந்த லூயிசு கத்தோர்சு (Louis XIV) என்கிற பெரிய ராசா இங்கிலீஷ் ராசாவுக்கு எழுதி அனுப்பிவித்து இசுப்பாஞ்சு. ராசாவினுடைய சீமையை அவருக்கு வாங்கிக் கொடுக்கிறதற்கு முன்னமே லூயிசு கத்தோர்சி என்கிற பெரிய ராசா காலம் பண்ணிப்போய் விட்டானனபடியினாலே இந்த மட்டுக்கும் இருபத்தேழு வருஷமாய் அதை வாங்கிக் கொடாமல் அலட்சியமாயிருந்தபடியினாலே இனிமேல் அந்த இரண்டு சீமையும் வாங்க வேண்டிய நிமித்தியம் சண்டை

நடக்குமென்று சீமையிலே சொல்லிக்கொள்ளுகிறார்களென்றும். ..........

1740 ஸு மார்ச்சுமீ 4உ சித்தார்த்தி ஸு மாசி மீ 24உ வியாழக்கிழமை

சாயங்காலம் ஊரிலே நடந்த சேதி என்னவென்றால் எலவாணிய சோலையப்பன் தம்பி ரெட்டிப்பாளையத்திலே குடியிருக்கிறவன்— அவனுடைய மகன் பனிரண்டு பதிமூன்று வயதுப்பிள்ளையாண்டான் அவனை அங்கேயிருக்கிற கிறிஸ்துவ ரெட்டியார் புது சம்பார்கோவிலிலே கொண்டுபோய் ஞான ஸ்தானம் செய்துவிட்டு இரண்டு நாள் கோவிலிலே தானே வைத்துக்கொண்டுயிருந்தார்கள். அப்படி யிருக்கச்சே அந்தப் பிள்ளையினுடைய தாய் தகப்பன் எல்லாருமாய் ஊர் நாலுமூலையும் தேடி எங்குங் காணாமல் இந்தநாள் காலமே கோவில் வாசல்படியிலே நிற்கக்கண்டார்கள்.

1740 ஸு மார்ச்சு மீ 15உக்கு சித்தார்த்தி ஸு பங்குனி மீ 5உ திங்கட்கிழமை நாள்

நம்முடைய ஆனந்தப்புரவிபாரு பரங்கிப்பேட்டை துறையிலிருந்து கொழும்புக்கு யாத்திரை போகத்தக்கதாக பாய்யெடுத்துப் பயணமாய் ஓடிப்போனார்கள். அந்தப் பாரிலிலே ஏற்றப்பட்ட சரக்கு வயணம்

1740 மார்ச்சு மீ 16உ சித்தார்த்தி ஸு பங்குனி மீ 6உ செவ்வாய்க்கிழமை

இந்தநாள் சாயங்காலம் நாலு மணிக்குமேல் நம்முடைய வீட்டிற்கு எதிரான கோவிலிலே யிருக்கிற பாதிரியார் மூசே லோலியோராவர்கள் சியாமுக்கு விசரப்பாய் போகிறபடியினாலே விஸ்பு பட்டந் தரித்துக்கொள்ளத்தக்கதாக மயிலாப்பூரிலே இருக்கிற பரங்கிமலைக்குப் பயணமாய்ப்போய் அவ்விடத்திலே ...... ......

1740. மார்ச்சு மீ 29-உ சித்தார்த்தி ஸு பங்குனி மீ 19-உ திங்கட்கிழமை

இந்த நாள் சாயங்காலம் நாலரைமணிக்குப் பாதிரியார் மூசே லோலியோாவர்கள் வந்தார்கள்.

1740ஸு மார்ச்சு மூ 31உ சித்தார்த்தி ஸு பங்குனி மீ 21உ புதன்கிழமை

இந்தநாள்காலமேபத்துமணிக்கு தஞ்சாவூரிலேயிருந்து ா துரையவர்களுக்கு தஞ்சாவூர் ராசா பிரதாபசிங்கு வெகுமான

மும் செய்யதுனுடைய வெகுமானமும் ராயசம் சீனப்பய்யர் ஆறு மாதத்துக்கு முன்னே தஞ்சாவூருக்குப் போயிருந்து வெகுமானம் வாங்கிக்கொண்டு இந்த நாள் வந்து புதுச்சேரி சேர்ந்தார். மேலே யெழுதியிருக்கப்பட்ட இரண்டு பேருடைய வெகுமானமும் வருகிறதுபோது கெவுனிக்கு வெளியிலே தானே நிறுத்தி வைத்து கோட்டையிலேயிருந்து (ா) துரையவர்களுடைய பல்லக்கும் கொடியும் மூசே துளோராம் மூசே...... ......கனகராயமுதலி, முத்தியாபிள்ளை, சேஷாசல செட்டியார் மேளதாளத்துடனே யெதிர்கொண்டுபோய் அந்த வெகுமானத்தை பல்லக்கின் பேரில் வைத்துக்கொண்டு சகல சம்பரமத்துடனே கொண்டுவந்து (ா) துரையவர்கள் முன்பாக வைத்தார்கள்.

1740 ௵ அவ்ரீல் ௴ 9 ௳ ரௌத்திரி ௵ சித்திரை ௴ 1 ௳ சனிவாரம்

நான் 9 மணிக்கு மேல் பழய கும்பினீர் வர்த்தகருக்கு ஒப்பந்தம் மூணு லக்ஷத்து அன்பதுனாயிரம் வராகனுக்கு ஒப்பந்தம் கொடுத்து வெகுமானமும் பண்ணி பதிமூணு பீரங்கியும் போட்டார்கள்.

1740 ௵ அவ்ரீல் ௴ 11 ௳-க்கு ரௌத்திரி ௵ சித்திரை ௴ 3 ௳ திங்கள் கிழமை நாள்

காலமே 9 மணிக்கு சீமையிலே யிருந்து ஒரு கப்பல் ஓடிவந்து வச்சுப் பிடிச்சு பீரங்கியும் போட்டார்கள். அந்தக்கப்பல் பேர் செஞ்செருய் (St. geran) என்கிற கப்பல். கப்பல் கப்பித்தான் பேர்...... ......நாளது 3-ந் தேதி அவ்ரில் ௴ 11 ௳ திங்கள் கிழமை நாள் மத்தியானத்துக்கு மேல் மூணு மணிக்கு மணிலாவிலே இருந்து ஒரு கப்பல் ஓடிவந்துப் பிடிச்சு... ...... பீரங்கியும் போட்டார்கள். கப்பல் பேர்... ........கப்பித்தான் பேர்.............யிந்த கப்பலிலே 19 குதிரையும்.

1740 அவ்ரீல் ௴ 2 ௳ ரௌத்திரி ௵ சித்திரை ௴ 14 ௳ வெள்ளிக்கிழமை.

இந்த நாள் மணிலாவுக்கு சின்ன சுங்குராம் (Chinna Sunguram) என்கிற கப்பல்...........மணிக்கு மேல் பாயெ

டுத்து மணிலாவுக்கு ஓட்டிப்போனுன். அந்தக் கப்பல் கப்பித்தான் முசே திசேருதேன் (M. Desardins)

*1740* அப்ரீல் மீ *22* ரௌத்திரி ஷு சித்திரை மீ *14* உ வெள்ளிக்கிழமை

காலமே திருவீதியிலேயிருந்து (ா) துரையவர்களுக்கு அசரத்து அசனல்லி சாயபு (Hasarat Hasanali Sahile) நாலு நகை வெகுமானமும் கொடுத்து நம்முடைய ஸ்தானுபதி பாளோசி பண்டிதருங்கூட வந்தார், அதை இவ்விடத்திலேயிருந்து கனகராயமுதலியார், முத்தியாப்பிள்ளை, சேஷாசல செட்டியார் பின்னையும் கோன்சேல்காரர்கூட மேளதாளத்துடனே எதிர்கொண்டுபோய் வெகுமானத்தை பல்லக்கிலே வைத்துக்கொண்டுவந்தார். பீரங்கி... ..போட்டார்கள்,

நாளது வெள்ளிக்கிழமை நாள் சாயங்காலம் டக்கே சாயபு குமாரன் வந்தான்.

*1740* ஷு மாசிமீ *15*உக்கு தமிழ் ரௌத்திரி ஷு வைசாசி மீ *6*உ ஞாயிற்றுக்கிழமை நாள்

மேற்கேயிருந்து சமாச்சாரம் வந்ததென்னவென்ருல் மராட்டியர் நாற்பதினுயிரம் அன்பதினுயிரங் குதிரையுடனே கந்தனூருமேலே வந்து இறங்கி அவ்விடத்தில் அறுபதினுயிரம் எழுபதினுயிரம் ரூபாயாக தீர்த்துக்கொண்டு சமாதானமாய் இப்புறம் கடப்பைமேலே வந்திறங்கி, அவ்விடத்திலே ஒரு நாளையச்சண்டை நடந்து, அதிலே அபுதுல் நபியினுடைய மனுஷரிலே சிறு குதிரைகள் விழுந்துபோய் அதின்பேரிலே அப்துல் நபிகானும் தங்களுடைய பெண்டுகள் குஞ்சுகள்யெல்லோரையும் வடபெண்ணை யாற்றிலோடுவே யிருக்கிற கெண்டிக்கோட்டைக்கு அனுப்பிவிட்டு அவ்விடத்திலே கலாபம் தாமதமாயிருக்கிற தென்பதாயும் இப்புறம் கணவாய் மேலே வந்து இறங்கப்போனுர்கள் என்னும் அந்தச்சேதி கேட்டு நபாபு தொஸ்ரத்தல்லிகான் அசனல்லி சித்திசோறு மீர்சத்து யிவர்களெல்லாம் தங்கள் குதிரை ராணுவம் எல்லாரையுங் கூட்டிக்கொண்டு கணவாய் கட்டப்போனுர்களென்னுமுன் 4 உ வெள்ளிக்கிழமை இராத்திரி ஆதிய செட்டி ஆனந்த செட்டி நமக்கெழுதின ஓலையிலேயும் எழுதிவந்து ஈமாம் சாயபும் ா) துரையவர்களுக்கு எழுதியனுப்பிவிச்சான். ஊரெல்லாம் பட்டணம் நாலு மூலையும் வசந்தையாய்ச் சொல்லிக்கொள்ளுகிருர்கள். இதல்லாமல் வெளியே

யிருந்து செஞ்சி வாலிகொண்டாபுரம் வந்தவாசி, இந்த வடடங்களிலே யிருக்கிற கோட்டை கில்லேதார் மத்துமுண்டாகிய பெரிய மனுஷர் அவரவர் கடுதாசி ஓலே மத்ததுகள் நமக்கு யெழுதின வயணம்; மராட்டியர் கலாபமானுல் துருசாயிருக்கிறத எங்களுக்கு புதுச்சேரியிலே வீடும் தந்து மத்தது அமைத்து வைக்கவேணும், என்றும் தங்களுடைய பெண்டுகள் பிள்ளைகளை அனுப்பிவைக்கிறோம் என்றும் இப்படியாக அவரவர் எழுதி அனுப்பிவித்தார்கள். இதின்பேரிலே ஆற்காட்டிலே இருக்கிற நம்முடைய சரக்கு சகலாத்து மத்ததுகளெல்லாம் எடுத்துக்கொண்டு வரத்தக்கதாக ராயலய்யரைப் பயணம் பண்ணி கும்பனி சேவகர் இரண்டுபேரை (ா) துரையவர்களைக்கேட்டு உத்தாரம் வாங்கி அவர்களுடனேகூட நம்மிட சேவகர் ஐந்தாறுபேரைக் கூட்டி ராயல்லய்யரையும் ஆற்காட்டுக்கு அனுப்புவித்தோம்.

1740 ஸு மே மீ 16 உக்கு ரௌத்திரி ஸு வைகாசி மீ 7 உக்கு திங்கட்கிழமை

காலமே துவக்கி சாயங்காலபரியந்தரம் ஆற்காடு வேலூர் வந்தவாசியிலேயிருந்தும் பின்னேயும் சுத்துப்பட்டிலேயிருந்தும் பிராம்மணரும், கோமுட்டிகளும், தத்துவாதிகளுமாய் வந்தபேர் ஆயிரம் சனத்துக்கு அதிகமே உண்டு. அதியசெட்டியார் ஆனந்தசெட்டி மனுஷன் வெள்ளைச்செட்டியும் நம்மிட சகலாத்து மத்ததுகளை எடுத்துக்கொண்டு வந்துசேர்ந்தார். அவர் சொன்னசேதி என்னவென்றால்: நிசாம் பின்னே இருபதினயிரங் குதிரையுடன் பிரகாலே வருகிறதாகவும் முன்னே நாற்பதினயிரம் ஐம்பதினயிரம் குதிரையை அனுப்பிவைத்தாரென்றும் அந்தக் குதிரைகள் கணவாய்க்கிட்ட வந்திருக்கிறதென்றும் கணவாயிலே அப்துல் நபியினுடைய பிள்ளைகளுடனே சண்டைசெய்து அப்துல் நபியினுடைய பிள்ளைகளையெல்லாம் முறிஞ்சுபோய் அதன்பேரிலே அப்துல் நபிகான் சமாதானம் பேசி லக்ஷத்தைம்பதினயிரம் ரூபாய் தீர்த்துக்கொண்டு திரமத்துகளெல்லாம் கொடுத்து பேட்டி பண்ணிக்கொண்டதாகவும், மராட்டியர் இப்புறம் வருகிறது ஊர்ச்சிதமாய்த்தானே சொன்னுர்கள் என்று சொன்னுர் நவாபு அசனல்லி—டக்கோ சாயபு இவர்களெல்லாம் இரண்டாயிரங் குதிரையுடனேபோய் கணவாய் மகா பத்திரமாய் கட்டிக்கொண்டிருக்கிறுர்கள் என்றும், இப்படிப்பட்ட சேதிகளாய்ச்சொன்னுர். இருக்கிறதானுல் காரியமோ பாதியாயிருக்கிறதென்று சொன்னுர்.

*1740* ஞு மே மீ *17* உ-க்கு ரௌத்திரி ஞு வைகாசி *மீ* **8** உ செவ்வாய் கிழமை

*இந்த நாள் சபத்தரல்லிகான் சாயபு அவர்கள் இண்டாயிரங் குதிரையுடனே தெற்கேயிருந்து ஆற்காட்டிற்கு நேராய் வருகிறார் என்றும் பிறகு கணவாயிக்குப் போகிறார் என்னும் கபுறு வந்தது பட்டணத்துக்கும் சனங்கள் கொஞ்சங்கொஞ்சமாய் வந்துகொண்டு யிருந்தார்கள். சென்னப்பட்டணத்துக்கு வெகுப்பிரயாசையுடன் போய்ச் சேர்ந்தார்கள் என்றும் வெகு திரவியம் போய்சேந்திருக்குதென்றும் அவ்விடத்திலே யிருந்து கடுதாசியால் எழுதிவந்தது.*

*1740* ஞு மே மீ **18** உ-க்கு நமிழ் ரௌத்திரி ஞு வைகாசி *மீ* **9** உ புதன்கிழமை நாள்

*துறையன் சொல்லிக்கொண்டது: மராட்டியர் சமீபத்திலே வந்துவிட்டார்களென்றும் வெகு கலாபமாம் என்னும் சொன்னார்கள். பட்டணத்துக்கு சனங்கள் விஸ்தாரமாய் வந்தார்கள். சந்தா சாயிபு இண்டாயிரங் குதிரையுடனே திரிச்சிராப்பள்ளி விட்டுப் புறப்பட்டு ஊட்டத்தூர் வந்து சேர்ந்து அவ்விடத்திலே யிருந்து துரையவர்களுக்கு கடுதாசி எழுதி அனுப்பின வயணம் அசரத்து நபாபு சாயபு சப்தரல்லி, அசனல்லி சாயபு அவர்களும் நம்மை வரச்சொல்லி எழுதி அனுப்பினார்கள். நாமும் கணவாயிக்குப் போனோம் மராட்டியர் இப்புறம் வருகிறதில்லை ஆகிலும் நாங்கள் போய் பந்துபஸ்து பண்ணிக்கொண்டு கணவாயிலே பத்திரமாய் இருக்கவேணுமென்றும் இப்படியாக எழுதி அனுப்பினார்கள்.*

*1740* ஞு மே மூ **19**உ க்கு ரௌத்திரி ஞு வைகாசி*மீ 10*உ வியாழக்கிழமை நாள்

*முதல் 14 உ வரைக்கும் அந்தந்த சனங்களும் அவரவருடைய தட்டுமுட்டுகளுமாய் இரண்டாயிரம் மூவாயிரம் சனங்களுடன் கொண்டுவந்து சேர்ந்தது.*

*1740* ஞு மே *24* உ-க்கு ரௌத்திரி ஞு வைகாசி மூ **15** உ செவ்வாய்கிழமை

*காலமே பத்துமணிக்கு நடந்த அதிசயம் என்னவென்றால் 7½ மணி எட்டுமணிக்கு ஆற்காடு வேலூரிலேயிருந்து சேவகர் இரண்டு மூன்றுபேர் ராயி கோட்டைக்குக் கடுதாசி கொண்டு வந்தார்கள் அவர்களைக்கேட்டால் அவர்கள் சொன்ன வாயி*

விசேஷக்காரியங்கள் மிஞ்சிப்போச்சுது. பெரிய மனுஷரெல்லாம் விழுந்துபோனார்கள். மருட்டியர் புறப்பட்டு கணவாய் தாண்டி வந்துவிட்டார்கள் என்று சொன்னார்கள். அதின் பிற்பாடு பத்துமணிக்கு கோன்செலிலே ஆலோசனைபண்ணி கெவுனிக்கு கெவுனி இருநூறுபேர் வெள்ளைக்காரரை அனுப்பிவிச்சு பத்திரப்படுத்தி பட்டணத்திலே உள்ளே ஒருத்தரையும் விடாமல் ஊரைச்சுத்தியுமிருக்கப்பட்ட கெவுனிகளெல்லாம் சாத்திப்போட்டு மேற்குவழி கெவுனியிலே திட்டி மாத்திரம் விட்டு, திட்டிக்குள்ளாக வருகிற சனங்களை விட்டுக்கொண்டே இருந்தார்கள் சாயங்காலம் ஆற்காட்டிலே யிருந்து ராயல்லய்யர் வந்தார். அவர் சொன்ன சேதி என்னவென்றால்...

1740 ஹு மே மீ 2 உ க்கு ரௌத்திரி ஹு வைகாசி மூ 16 உ புதன்கிழமை

இந்த நாள் காலமே பத்து மணிக்கு ஆலம்புரவியிலிருந்து இமாம் சாயபு பெண்சாதி வந்தாள். அவள் பிறகே இரண்டு மூன்று பல்லக்கும் பத்து பதினைந்து குதிரையும் ஏழெட்டு காடியும் கூட வந்தது. வரச்சே இவ்விடத்திலேயிருந்து இரண்டொரு குஞ்செல்காரரும் கனகிராய முதலியார் முத்தியா பிள்ளை பின்னையும் நாலத்து இரண்டுபேர் கூட மேளதாளத்துடனே எதிர்கொண்டு போய் அழைச்சுக்கொண்டு வரச்சே வாசல்படியிலே 15 பீரங்கிபோட்டார்கள். வந்து சுங்குவார் கிடங்கிலே இறங்கின உடனே கோட்டையிலேயும் பீரங்கி போட்டார்கள் அதின் பேரிலே இறங்கி விடுதி சுங்குவர் கிடங்குக்குள்ளே முஸ்தீது பண்ணியிருக்கிற அறைவீட்டுக்குள்ளே அந்த அம்மா போன உடனே கட்டிலின் பேரிலே படுத்துக்கொண்டாளாம். கட்டில்கிட்ட வைத்திருந்த உக்காவிலே நெருப்பிருந்து அங்கி தவறி பத்திக்கொண்டு கோரமாய் பத்திக்கொண்டது அவிக்க அவிக்க அவியாமல் சரீரமெல்லாம் அங்கங்கே அனல்பட்டு வெந்துபோச்சுது அதின்பேரிலே மங்களமென்ற ஸ்திரிவந்து அதுக்கேற்ற பரியாரம்பண்ணிக்கொண்டிருந்தாள், அந்தமட்டிலே யிருந்தது.

1740 ஹு மே மீ 26 உ க்கு ரௌத்திரி ஹு வைகாசி மீ 17 உ வியாழக்கிழமை நாள்

காலமே 11 மணிக்கு நவாபு தோஸ்த்து அலிகான் பெண்சாதி வந்தவாசிக் கோட்டையிலிருந்து புதுச்சேரிக்கு வந்தாள். அந்தம்மாள் பிறகே பத்துபதினஞ்சு காடியும் மூணு நாலு பல்லக்கும் 20-30 குதிரையும் நாலஞ்சு ஆனையும் பத்துபனிரண்டு ஒட்டகையும் நூறுபேர் ராணுவமுமாய் வந்தார்கள்'

வரச்சே எதிர்கொண்டு போய் அழைச்சு வந்தார்கள். கெவுனி வாசலிலே வரச்சே 21 பிரங்கியும் போட்டு துரையவர்கள் தோட்டத்திலே வந்து இறங்கினார்கள் இறங்கின உடனே கோட்டையிலே 21 பீரங்கி போட்டார்கள் அந்த மட்டிலே அவர்கள் தோட்டத்திலே தானே இருந்தார்கள்.

1740 ஞு ஜூன் மீ 3உ சித்ரெளத்திரி ஞு வைகாசி மீ 24உ வியாழக்கிழமை

இந்த நாள் காலமே பத்துமணிக்கு முன் வந்து இறங்கி நெருப்புப்பட்டு வெந்து போயிருந்த இமாம் சாயபு பெண் சாதிக்கு எத்தனை விதத்திலே பரியாரம் பார்த்தும் சொஸ்தப் படாமல் மரணமடைஞ்சு போனாள் அந்நேரம் முதல் சாயங் காலம் மட்டுக்கும் கொடி சுருக்கிப்போட்டு பொறுத்துப் பொறுத்து ஒருமணிக்கு எட்டு பீரங்கி விழுக்காடு சுட்டுக் கொண்டே இருந்தார்கள். சாயங்காலம் அஞ்சு மணிக்கு இவ்விடத்திலே இருந்து பெட்டிபண்ணி அதிலே வச்சு எடுத்துக்கொண்டு ஆலம்புரவிக்கு இமாம் சாயபு அண் டைக்கு எடுத்துக்கொண்டு போனார்கள். போகச்சே வடக்கு வழியாலே போனார்கள் போகச்சே பீரங்கி சுட்டுக் கொண்டேயிருந்து குண்டுத்தாழைக் கடக்கிறமட்டுக்கும் சுட்டார்கள்.

1740 ஞு ஜூலை மீ 6உ சித்ரெளத்திரி ஞு ஆனி மீ 26உ புதன்கிழமை

இந்த நாள் சாயங்காலம் 6 மணிக்கு வேலூர் கோட்டை யிலே இருந்து சப்பித்தரல்லிகான் சாயபு பெண்சா தியும் அவருடப்பிறந்தாள்மார் அக்பர்சாயபு பெண்சாதி ஒருத்தி திவான்சாயபு பெண்சாதி ஒருத்தி...........பெண்சாதி ஒருத்தி ஆக மூணுபேர் உடப்பிறந்தாளும் நபாபு தொஸரத் தல்லிகான்சாயபு உடப்பிறந்தாள் ஒருத்தியும் சப்பித்தால்லி கான்சாயபு குமாரன் இரண்டரை வருஷத்துப்பிள்ளை ஒன் றும் போனார்கள் மமுதல்லிசாயபு குமாரனும் இவர்கள் பிறகே பின்னையும் நாலத்துரெண்டு பெரியமனுஷருமாய் இவர்கள் பிறகே வந்த குதிரை 300, யானை 10, ஒட்டை 20, 0 கரடி 30, 35, ராணுவம் 500 பேருமாக வந்தார்கள் வரச்சே எதிர் போனவர்கள் கனகராயமுதலியார் முத்தியாபிள்ளை ஒரு கோன்செல்காரனும் பின்னையும் இரண்டொருத்தர் கூட மேளம் கொம்பு தமுக்குடனே குண்டுதாழை மட்டுக்கும் போய் அழைச்சுக்கொண்டுவரச்சே, பட்டணத்தை சுத்தியிருக் கிற கெவுனியெல்லாம் சாத்திப்போட்டு வில்லியனூர் வாசல் மாத்திரம் திறந்து விட்டு அந்த வாசலிலே இரண்டு புறமும்

இரண்டு ஸ்தாங்கி நூறுபேர் சொல்தாதுகள் வரிசை நிற்க (ா) துரையும் மற்றக்கோஞ்செல்லியர்களும் நின்று அவர்கள் வந்த உடனே தம்பூரடிச்சு கொத்தளத்தின்பேரிலே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள் இப்புறம் வந்து அவர்களுக்கு விடுதி விட்ட முத்தியாபிள்ளையவர்கள் மேல் வீட்டின்பேரிலே சப்பித்தரல்லி அவர் பிள்ளையும் மத்தப்பேரும் இறங்கினார்கள் இறங்கச்சே கோட்டையிலே இருபத்தோரு பீரங்கி போட்டார்கள். சப்பித்தரல்லி பெண்சாதியும் மத்தப் பெண்டுகளும் கூட நபாபு தொஸரத்தல்லிகான் சாயபு பெண்சாதியிறங்கியிருக்கப்பட்ட துரை தோட்டத்திலே வந்து இறங்கி எல்லாரும் கட்டிக்கொண்டு காச்சு மூச்செண்ணு குய்யோ மொரோவென்று ஒரு சாமமட்டுக்கும் கூவினார்கள்.

1740 ஸு தூலை மீ 7 உ ரௌத்திரி ஸு ஆனி மீ 27 உ வியாழக்கிழமை.

காலமே பத்து மணிக்கு வேலூரிலே இருந்து அசரத்து சப்பித்தரல்லிகான் சாயபு அவர்களுடன் வெகுமானம் (ா) துரையவர்களுக்குவந்து இவ்விடத்திலேயிருந்து பூசே துளோரம் கனகராய முதலியார், சேஷாசல செட்டியார் முத்தியா பிள்ளை இவர்கள் மேளதாளத்துடனே எதிர்கொண்டு போய் அழைச்சுக்கொண்டு வெகுமானத்தை பல்லக்கிலே வச்சுக்கொண்டு வரச்சே கெவுனியிலே 15 பீரங்கி போட்டார்கள். இப்புறம் துரை வீட்டிலே நுழைஞ்ச உடனே கோட்டையிலே பதினைந்து பீரங்கி போட்டார்கள் அதன் பேரிலே வெகுமானத்தை துரை முன்னே வச்சு அசரத்து சப்பித்தரல்லிகான் சாயபு அவர்கள் எழுதி அனுப்பின கடுதாசும் கொடுத்தார்கள். இந்த வெகுமானம் கொண்டுவந்த குலா முசேன்கானை உட்காரச் சொல்லி வெகுமானத்தை அவிழ்த்துப் பார்த்தார்கள் நகை வயனம் பொன்சரிகையினாலே செய்திருக்கப்பட்ட அத்தலாசு 2 சரிகைப் பூப்போட்டு முழுச் சரிகையாயிருக்கிற தகட்டிசுனுட்டி 1 முகக்கிஷிபாகை 1 நடுக்கட்டு 1 இதிலே பதிஞ்சு இருக்கப்பட்ட வச்சிரம் 12 துராயி 1 இதிலே பதிச்சிருக்கிற வச்சிரம் 24. முத்து 27 பெரியபச்சை 1 பெரிய கெம்பு 2 இதல்லாமல் இரண்டு பட்டை முழு கெம்பு நுனியிலே தொங்குகிற பருமுத்து 1 ஆக துராயி 1 இந்த நகையின் மதிப்பு விலை வராகன்.............. இந்தப்படிக்கு...

1740 ஸு தூலை மீ 7உ ரௌத்திரி ஸு ஆனி மீ 27 உ வியாழக்கிழமை

இதுகளெல்லாம் பார்த்துக்கொண்ட பிற்பாடு அவர் அனுப்பின கடுதாசியைப்பார்த்தார்கள். அதிலே எழுதியிருந்த

வயணம இந்த சமயத்திலே எங்களை நீங்கள் காப்பாற்றி ரக்ஷித்தீர்கள் இந்த உபகாரத்திற்கு நாங்கள் என்ன உபகாரம் செய்தாலும் ஈடில்லை முன்னாலே பெரிய நவாபு அவர்களிருக்கச்சேயும் அதன் பிறகும் உங்களுக்கும் எங்களுக்கும் சிநேகமாய் நடந்து இனிமேல் நீரும் நாமும் அண்ணன் தம்பி போல் இருக்கிறோம். என்ன காரியம் வேணுமோ அது காரியங்களுக்குத் தடையில்லாமல் செய்து கொடுப்போமென்றும்நவாபு தொஸ்த்தல்லிகான் சாயபு அவர்கள் முன்னாலே மராட்டியர் வருகிறார்களென்று கணவாய்கிட்டப்போய் கணவாயைக் கட்டிக்கொண்டு தம்முட பிறகேபோன பீரங்கி துப்பாக்கி ராணுவமெல்லாம்கணவாய்மேலே ஒசரவச்சுக்கொண்டுமராட்டியர் வருகிறார்களென்று எதிர் நாடிக்கொண்டிருக்கச்சே மராட்டியர் பிறகாலே வந்து சுத்திக்கொண்டு சண்டைபண்ணினார்கள். அதுக்கு முன்னே எங்களை யெல்லாரையும் வரச் சொல்லி எழுதியிருந்தார். அவரவர் பயணப்பட்டுக்கொண்டிருக்கச்சே நான் பொன்மலை மட்டுக்கும் போனேன், மற்றப்பெரிய மனுஷர்யெல்லாரும் ஆற்காடுவிட்டுப் புறப்படவில்லை. அப்படியிருக்கச்சே நவாபு எண்பது குதிரையுடனே மராட்டியர் கையிலே அகப்பட்டுக்கொண்டு சண்டைபண்ணி விழுந்து போனார். தெய்வ எத்தனம் அப்படி யிருந்துபோச்சுதென்று சொல்லி நம்மிடமிருந்த குதிரையை அங்கங்கே யிருக்கப்பட்ட கோட்டை ஸ்தானங்களுக்கு தயினாத்துபண்ணி அனுப்பிவிட்டு நாம் வேலூர் கோட்டையிலே வந்திருந்துகொண்டு, சந்தா சாயபுக்கு எழுதி அனுப்பி அவரையும் அழைப்பித்துக் கொண்டு, குதிரை ராணுவமெல்லாம் முஸ்தீது பண்ணிக் கொண்டு சண்டைக்குப் போகவேணுமென்றிருக்கச்சே, நாசர் சிங் சமாதானம் பேசி ராசி பண்ணிப்போட்டார். அந்தமட்டிலே யிருக்கிறது என்றும் பின்னையும் உபசாரவார்த்தைகளாய் அசரத்து சப்பித்தரல்லி சாயபு எழுதி அனுப்பினார். அதைப் பார்த்துக்கொண்டு (ஈ) துரையவர்களும் பிரதி உத்தாரம் தங்களுடைய வீடுயிருக்கிறது தங்களுக்குட்பட்டதாமிருக்கிறது. தங்கள் வீட்டிலே தாங்கள் வந்திருக்கிறதற்கு சங்கை என்னயிருக்கிறது என்று உபசாரம் சொன்னார்கள். அதின்பேரில் வெகுமானம் கொண்டுவந்த—குலாமுசேன்கான் அனுப்பிவித்துக்கொண்டு இறங்கிவரும்போது துரையவர்கள் வாசலிலே இருபுறமும் வரிசை சொலுதாதுகள் நிற்கச்சே தம்பூறும் அடித்தார்கள். வரிசைக்கு நடுவே வைத்திருந்த பல்லக்கின்பேரிலே ஏறிக்கொண்டு வெளியேவந்து அவர்கள் விடுதிக்குப்போனார்கள். கனகராயமுதலியாருக்கு, வெகுமானம் முக்கிஷிபாகை 1 மாமோதி 1 நடுக்கட்கு 1 ஆகமூணு உருப்படி கொண்டுவந்து கொடுத்தார்கள்,

1740 ௵ சூலை ௴ 8 உ க்கு ரௌத்திரி ௵ ஆனி ௴ 28 உ வெள்ளிக்கிழமை

காலமே 11 மணிக்கு திரிச்சிராப்பள்ளியிலே இருந்து சந்தாசாயபு பெண்சாதி புதுச்சேரிக்கு வந்தாள் அந்த அம்மாள் பிறகே ........................................ ...... ..................

1740 ௵ சூலை ௴ 21-க்கு ரௌத்திரி ௵ ஆடி ௴ 10 உ வியாழக்கிழமை இந்த நாள்

காலமே 10 மணிக்கு மசுக்கரையிலே இருந்து (Mascareigne) ஒரு கப்பல் ஓடிவந்து வச்சு பிடிச்சான். அந்த கப்பல் பேர்........................ ..கப்பித்தான்பேர்.......................இந்த கப்பலிலே வந்த சேதி என்னவென்றால் சீமையிலே இருந்து இரண்டுகப்பல் மசுக்கரைக்கு வந்திருக்கிற தென்றும் அந்த கப்பலிலே வந்தசேதியானால் மூசே தீர்வார் (M. Dirois) வங்காளத்துக்கு துரைத்தனத்துக்குப் போகிறதாகவும் வங்காளத்திலே இருக்கிற மூசே திப்ளேக்சு இவ்விடத்துக்கு துரைத்தினமாய் வருகிறதாகவும் இவ்விடத்திலே இருக்கப்பட்ட மூசே தும்மா குவர்னர் துரையவர்கள் சீமைக்குப்போகிறதாகவும் இந்தப்படி அந்த சீமைக்கப்பலிலே சேதிவந்ததாய் இந்தக் கப்பலில் வந்த கப்பித்தானும் மத்தப்பேர்களும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

1740 சூலை ௴ 24 உ ரௌத்திரி ௵ ஆடி ௴ 13உ ஆதிவாரம் நாள்

காலமே பத்துமணிக்குமேல் முன்னே மசுக்கரைக்கு வந்திருந்த சீமைகப்பல் இரண்டுகப்பலிலே ஒரு கப்பல் புதுச்சேரிக்கு ஓடிவந்து வச்சுபிடிச்சு பதினைந்து பீரங்கியும் போட்டார்கள். அந்த சீமைக்கப்பல்பேர் மூசே புவிவி கப்பித்தான் மூசே ஷெஞ்ஜோரிஜ் (M. de St George) இந்தக் கப்பலிலே வந்த சேதி என்னவென்றால் மாயேயிலே துரைத்தனம் பண்ணுகிற மூசே தீர்வார் பங்காளத்துக்கு துரைத்தனத்துக்குப் போகிறதாகவும், வங்காளத்திலே இருக்கிற மூசே தூப்ளேயிக்ஸ் இவ்விடத்துக்கு துரைத்தனத்துக்கு வருகிறார் என்றும், இவ்விடத்து துரை மூசே ஷெவல்லிம்யர் பெனுவாய் தும்மாவை சீமைக்குப் போகிறரென்னும் இந்தப்படிக்கு கும்பனியார் எழுதி அனுப்பினதாக அவரவர் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள் மூசே துளோராமை மாயைக்கு துரைத்தனமாய்ப் போகிறார் என்றும் சொன்னார்கள். நான் சாயங்காலம் துரையவர்கள் அண்டைக்குப்போனவிடத்திலே அவர் என்னை அழைப்பிச்சு பட்டணத்துக்குள்ளே என்ன சொல்லுகிறார்கள் என்று கேட்

டார் அதுக்கு நான் சொன்னது அய்யா நீங்கள் சீமைக்குப்
போறீர்கள் மூசே துப்ளேக்சு புதுச்சேரிக்கு குவர்னர் துரை
வருகிறார் என்றும் சொல்லிக்கொள்ளுகிறார்களென்று சொன்
னேன். அதுக்கு அவரிருந்து கொண்டு சொன்ன உத்தாரம்
அப்போது தமக்கு ராசாவினுடைய மினிஸ்தர் மோன்சிஞ்ஞோர்
ஒறி என்கிறபேரை உடையவர் தமக்கு எழுதின கடுதாசியை
யையும் கும்பனியார் தம்முட சொந்தத்துக்கு எழுதின கடுதா
சியையும் எனக்குக் காண்பிச்சுப் படிக்கச்சொன்னார் படிச்ச
விடத்திலே அதுகளிலே எழுதி இருந்த வயணம் உமக்கு சரீ
ரம் அந்த இராச்சியத்திலே ஆரோக்கியமாயிருக்கவில்லை யென்
றும் இந்த இராச்சியத்துக்கு வரவேணுமென்று நாலு மூணு
தரம் மிகுதியும் எழுதிக்கொண்டீர் ஆனால் நீர் கும்பனிர் காரி
யத்திலே வெகு பிரயாசைப்பட்டு கும்பனிருக்கு வெகு காரி
யத்திலே கூடிவரத் தக்கதாக சகாயம்பண்ணி இருக்கிறபடியி
னாலே இராசாவுக்கும் கும்பனியாருக்கும் உம்முட பேரிலே
மிகுந்த பக்ஷத்துடனே இருக்கிறார்களென்று பின்னையும் சத்து
உபசாரமாய் எழுதி இப்போதும் நீர் வரவேணுமென்றால்
மூசே தீநுவாரை மாயையிலே இருந்து வங்காளத்துக்கு துரைத்
தனத்துக்குபோகச் சொல்லியும் பங்காளத்திலே துரைத்தனம்
பண்ணுகிற மூசே துப்ளேக்சை புதுச்சேரிக்கு குவர்னர்துரை
ராய் போகச்சொல்லியும் இரண்டுபேருக்கும்......... ..

ரௌத்திரி ௵ ஆடி ௴ 13 ௳ 1740 ஜூலை ௴ 24 ௳ ஆதி
வார நாள்

கொமிசியோம் எழுதி உம்மிட கடுதாசிலே வைத்து
அனுப்பிவிச்சோம் அது உமக்கு எத்தனைநாள் துரைத்
தனம்பண்ண சம்மதியோ அந்த மட்டுக்கு மிருந்து
அப்பால் நீர் வரவேணுமென்றால் மூசே தீநுவாரை அழைப்
பிச்சு வங்காளத்துக்கு அனுப்பி மூசே துப்ளேக்சை
அழைப்பிச்சு புதுச்சேரி குவனர் துரையாய் வச்சுப்
போட்டு வரச்சொல்லியும் பின்னையும் மெத்தவும் மேன்பா
டாய் எழுதி இருந்தது. இப்படி எழுதியிருக்கப்பட்ட கடுதாசி
யைப் படித்தவுடனே பாத்திமர் எழுதி இருக்கிற வயணம்
நான் எசமானன், எசமானன் மனதுக்கு எப்படி சம்மதியோ
அப்படி நடப்பிப்பேன் ஆனபடியினாலே நீயொன்றும் சிந்தை
பண்ணலாகாதென்று எனக்குத் தைரியஞ் சொன்னார். அதின்
பேரிலே நானிருந்து கொண்டு அய்யா உங்களுடைய சித்தந்
தெரியவில்லையே அது சொல்லவேணுமென்று சொன்னத்
துக்கு இன்னும் யோசனை பண்ணி நான் பிரிச்சதில்லை நான்
நல்ல, யோசனைதானே பண்ணுவேன் அதன் பிற்பாடு
சொல்லுகிறேன் என்று சொன்னார். அதின்பேரிலே நான்
அனுப்பிவிச்சுக்கொண்டுவந்தேன்.

1740 ஆகஸ்டு மீ 24வ ரௌத்திரிஸு ஆவணிமீ 12வ புதன் கிழமை

இந்த நாள் இராத்திரி (ரா) சமானிய மகா இராசா அவர்கள் பிறந்த தினம் பண்டிகை கொண்டாடின சம்பிரமம்.

1740 ஆகஸ்டுமீ 27வக்கு ரௌத்திரி ஸு ஆவணி மீ 15வ சனிக்கிழமை நாள்

சாயங்காலம் 5 மணிக்கு கானுபாதூர் வந்து கெவுனிக்கு வெளியிலே நல்லதம்பி பிள்ளைதோட்டத்திலே இறங்கி துரையவர்களுக்குச் சொல்லி அனுப்பினார். அவர் வருகிற கபுறு அறியாதபடியினாலே துரை அவர்கள் வெளியே சவாரி போயிருந்தபடியினாலே துரை வருகிறமட்டும் வெளியேதானே இருந்து ஆறு மணிக்கு பிற்பாடு துரை வந்து உத்தாரங்கொடுத்து கெவுனிக்குள்ளேவிட்டார்கள். பீரங்கி மத்தது போடவில்லை.

1740 ஆகஸ்டு மீ ரௌத்திரி ஸு ஆவணி மீ 16வ ஆதிவார நாள்

காலமே பத்து மணிக்கு கானுபாதூறு (ரா) துரையவர்கள் பேட்டிக்குப்போனார்கள். பேட்டியானவுடனே 21 பீரங்கி போட்டார்கள்.

1740 ஆகஸ்டுமீ 30வ ரௌத்திரி ஸு ஆவணி மீ 19வ புதன் கிழமைநாள்

காலமே 6 மணிக்கு (ரா) பிள்ளையவர்கள் அச்சைக்கு யாத்திரை போகிற சீமைக் கப்பல்.........பயணம் பண்ணி கட்டுகளேத்தி அனுப்பிவிக்கத்தக்கதாகப் பரங்கிப்பேட்டைக்குப் பயணமாய்ப்போனார்கள்.

1740 ஸு செப்டம்பர் மீ 1 வ ரௌத்திரி ஸு ஆவணி மீ 20 வியாழக்கிழமை நாள்

சாயங்காலம் ஐந்து மணிக்கு அசரத்து நவாபு சப்பிதரல்லிகான் சாயபு அவர்களும் சந்தா சாயபு—டக்கே சாயபு பின்னையும் பெரிய பெரிய மனுஷரெல்லாம்கூட வருகிறார்களென்று சொல்லி மேற்கு கெவுனி வாசல் தோட்டத்துகடைத்தெரு சந்துமட்டுக்கும் இரண்டுபுறமும் பானுவைத்து கெவுனிக்குமேலே வடபாரிசத்திலே—பந்தல்போட்டு அந்தப் பந்தலுக்குள்ளே வெள்ளைக்காரச்சிகள், துரைத்தனத்தார் பெண்

சாதிகளெல்லாம் நின்றுகொண்டிருக்க கெவுனிக்கு அடுத்தாப் போல் போட்டிருக்கப்பட்ட துரையவர்கள் கூடாரத்திலே சுத்தி நாற்காலியைப்போட்டு (ா) துரையவர்களும் மற்று முள்ள கோன்சேல்காரரும் சகலமானபேரும் அந்தக் கூடா ரத்திலே இருந்துகொண்டு சின்னதுரையவர்களும் அவர் பிறகே ஒரு இஸ ாத் தாங்கி ஐம்பது பேர் சொலுதாதுகளும் கொடி யும் புள்ளாங்குழல் தம்பூறு கொம்புதமுக்கு மேளதாளம் தாசி யள் கூட இதல்லாமல் கனகராயமுதலியார் முத்தியாப்பிள்ளை யவர்களுமாய் சகல சம்பிரமத்துடனே எதிர்கொண்டு குண்டு தாழைமட்டுக்கும் போய் அழைத்துக்கொண்டுவந்தார்கள். வந்தவுடனே கெவுனிக்கு வெளியிலே போட்டிருக்கப்பட்ட கூடாரத்திலே இறங்கி துரையவர்கள் எதிரே வந்து கட்டிக் கொண்டு கூடாரத்திலே உட்கார்ந்த உடனே அலங்கத்தின் பேரிலே 21 பீரங்கிபோட்டார்கள்.

**1740** ௵ செப்தம்பர் ௴ 1௳ ரௌத்திரி ௵ ஆவணி 20௳ வியாழக்கிழமை

சற்றுநேரம் பேசிக்கொண்டு இருந்து எழுந்திருந்த உடனே மறுபடி 21 பீரங்கிபோட்டார்கள் அந்த மட்டிலே அவரவர் பல்லக்கின்பேரிலே ஏறிக்கொண்டு கெவுனிக்குள்ளே வரச்சே நவாபு பல்லக்கு முன்னேயும் அதின் பிறகே துரை பல்லக்கும் அதன்பிறகே சந்தாசாயபு பல்லக்கும் அதின்பிறகே மற்றப்பேர் 'பல்லக்குமாய் பார்க்கு நடுவே வரச்சே தம்பூறு அடித்துக்கொண்டிருந்தார்கள். இந்தப்படியாக சகல சம்பிர மத்துடனே நவாபு தொஸத்தல்லிகான்சாயபு அவர்கள் பெண் சாதி இருக்கப்பட்ட துரை தோட்டத்திலே வந்து இறங்கினார் கள். அந்த மட்டுக்கும் துரையவர்களும் கூட வந்து அவர் இறங்குகிறபோது கோட்டையிலே 21 பீரங்கி போட்டு அப் பால் துரையவர்கள் அனுப்பிவிச்சுக்கொண்டு தம்மிட வீட்டுக் குப்போய் விட்டார்கள். ஆனால் அசரத்து நவாபுசப்பித்தரல்லி கான்சாயபு அவர்கள் பிறகாலே வந்த பெரியமனுஷர் ஆரா ரென்றால் சந்தாசாயபு டக்கேசாயபு போளூர் மமுதல்லிசா யபு மமுத்தயார் குமாரன் உசேன்சாயபு நவாபு செயன்தல்லி கான் வேலூர் பக்கி அல்லிகான் குமாரன் மிரித்திகுசல்லிகான் சந்தாசாயபு மருமகன் செரீபுசாயபு பின்னையும் சமேதா ாக ளும் முசத்தியன் காளுக்கோய் கிருஷ்ணாசிபண்டிதர் அப்பாசி பண்டிதர் நரசன்னபண்டிதர் சங்கரபாரிக்கு குமாரன் செம்பு தாசு.

**1740** ௵ செப்தம்பர் 4 ௳ க்கு தமிழ் ரௌத்திரி ௵ ஆவணி ௴ 23 ௳

ஆதிவார நாள் சாயங் காலம் நாலு மணிக்கு சின்ன துரை யவர்களும் கனகராய முதலியாரும் முத்தியாபிள்ளை யவர் களும் பின்னையும் நாலத்து இரண்டு பேர் வெள்ளைக்காரும்

கொடியும் கொம்புதமுக்கும் மேளதாளம் தாசியனுடனே கூட துரையவர்கள் தோட்டத்திலே இறங்கியிருக்கிற அசரத் சப்பித்தரல்லிகான் சாயபு அவர்களை பேட்டிக்கு வரத்தக்கதாக போய் அழைச்சுக் கொண்டுவரச்சே, முத்தியாபிள்ளையவர்கள் வீட்டுத் தெருகோடியிலே வந்த உடனே பல்லக்கை நிறுத்தி கெட்டினைக் கூடத்திலே இறங்கியிருக்கிற சந்தா சாயப்பை அழைச்சனுப்பி விச்சார். அவர் மனதிலே ஒன்றை நினைத்துக்கொண்டு தனக்கு ஒரு சம்பிரமும் இல்லாமல் இவர் சந்திலேபோகிறதென்ன என்கிறத்தினுல்தனக்கு சரீர சொஸ்தமில்லை என்று சொல்லி அனுப்பிவிட்டார். அந்த உத்திரவு வருகிற மட்டுக்கும் அங்கே தானே நின்றுகொண்டிருந்து சேதி வந்து சொன்ன பிற்பாடு அப்புறம் நடந்தார்கள். இன்றைய தினம் இரண்டு மணிக்கு பட்டணத்தை சுத்தி இருக்கப்பட்ட கெவுனி வாசலெல்லாம் சாத்திப்போட்டு சொலுதாதுகளெல்லாரும் வந்து துரையவர்கள் வீட்டுக்கு எதிரே பெரிய வரிசையும் வரிசைக்கு முன்னே பத்து வெங்கல பீரங்கியும் வச்சுக்கொண்டு ஆசீலாயிருந்தார்கள். இப்பால் நவாபு பேட்டிக்கு போகிறபோது இஞ்சினீர் கோணத் தண்டையிலே கட்டியிருக்கிற பாலத்தண்டையிலே போன உடனே அது முதல் துரை வீட்டுக்குப் போகிற மட்டுக்கும் ......

**1740** செப்தம்பர் மீ **4** உ ரௌத்திரி ஞு ஆவணி மீ **23** ஞாயித்துக்கிழமை

21 பீரங்கி போட்டு —— தம்பூரடிச்சார்கள். அப்பால்......

**1740** செப்டம்பர் மீ 5உ ரௌத்திரி ஞு ஆவணி மீ **24** உ திங்கட்கிழமை

டக்கே சாயபு இவ்விடத்திலே யிருக்கப்பட்ட நபாபு சப்பித்தரல்லிகான் சாயபு நவாபு தொஸ்ரத்தல்லிகான் பெண்சாதி இவர்களுடனே கோபித்துக்கொண்டு வந்தவாசி கோட்டைக்குப் போகத்தக்கதாக பயணம் புறப்பட்டுபோனுர்கள். போகச்சே வழுதாவூர் கெவுனியிலே 21 பீரங்கி போட்டார்கள். அதன் பிறகு வந்தவாசிக்குப் போய்விட்டார்கள்.

ஆவணி **25**உ க்கு செப்டம்பர் மீ 6 ந்தேதி செவ்வாய்க்கிழமை

மத்தியானம் இரண்டு மணிக்கு (ா) துரையவர்கள் நவாபு சப்பித்தரல்லிகான் சாயபு அவர்கள் பேட்டிக்கு அவர் இறங்கி இருக்கப்பட்ட தோட்டத்துக்கு வந்தார். ஆனுல் அவர் பிறகே யார் யார் கூடப் போனுர்களென்றுல்.......

**1740** ஞு செப்தம்பர் மீ **6** உ-க்கு ரௌத்திரி ஞு ஆவணி மீ **25** உ செவ்வாய் கிழமை

நாலு மணிக்கு கானுபாதூர் சந்தா சாயபும் கன்டக்கே சாயபுகுமாரன் பின்னையும் நாலு இரண்டு பேர் கூட கப்பல்

பார்க்கப் போனார்கள். கப்பலின் பேரிலே ஏறினவுடனே கப்பலிலே 21 பீரங்கி போட்ட உடனே கப்பலுக்குள் கப்பல் பீரங்கி போட்டார்கள். அதின் பிற்பாடு கப்பல் பார்த்து இறங்கிவரச்சேயும் மறுபடியும் 21 பீரங்கி போட்டார்கள்.

நாளது தினம் உசேன் சாயபு அவர்கள் துரையவர்களுக்கு ஒரு யானையும் சிரெப்பாவும் வெகுமானம் அனுப்பினார்கள். அந்த வெகுமானம் துரையவர்கள் வீட்டண்டை வந்த உடனே கோட்டையிலே 21 பீரங்கி போட்டார்கள்.

1740 செப்தம்பர் மீ 8 உ ரௌத்திரி ஷு ஆவணி மீ 27 உ வியாழக்கிழமை நாள்

பதினொரு மணிக்கு சந்தா சாயபு (ரா) துரையவர்கள் பேட்டிக்குப் போனார்கள். அவர் போனபோது நடந்த சம்பிரமம்......

1740 செப்தம்பர் மீ 9 உ 28 ஆவணி மீ ...வெள்ளிக்கிழமை

இந்த நாள் காலமே ஏழு மணிக்கு துரையவர்கள் சந்தா சாயபு அவர்கள் பேட்டிக்கு கெட்டி வீணைக் கூடத்துக்கு வந்தார்கள்; அவர் பிறகே வந்தவர்கள்......

1740 செப்டம்பர் மீ 10 உ ரௌத்திரி ஷு ஆவணிமீ 29 உ சனிக்கிழமை

காலமே ஏழு மணிக்கு அசரத்து நவாபு அசரத்து சப்பித்தரல்லிகான் சாயபும், அசரத்து சந்தா சாயபு அவர்களும் பின்னையும் கூட இருக்கப்பட்ட பெரிய மனுஷரும் கூட கோட்டை பார்க்கப்போனார்கள். உள்ளே நுழையச்சே 21. பீரங்கி போட்டு பிறகு உள்ளே போய் எங்கும் சுத்திப் பார்த்து மறுபடி வெளியே வரச்சே—பீரங்கி போட்டார்கள்.

1740 ஷு செப்தம்பர் மீ 17 உ ரௌத்திரி ஷு புரட்டாசி மீ 5 உ சனிவாரம் நாள்

காலமே 10 மணிக்குமேல் நவாபு சப்பித்தரல்லிகான் சந்தாசாயபு மற்றுமுள்ள சத்தியன்கூட செஞ்சிக்குப்போக வேணுமென்கிறதாகப் பயணமாகி, சுக்கிரவார நாள் இராத்திரி இரண்டு சாமத்திற்குமேல் ஒரு நகராவும் வெடிய சாமமென்னச்சே ஒருநகராவும் அடிச்சார்கள் காலமே ஏழுமணிக்கு (ரா) துரையவர்களும் கோன்செல்காரும் பல்லக்கின்பேரிலே ஏறிக்கொண்டு ஒரு இஸ்த்தாங்கி அன்பதுபேர் சொலுதாது

மாக வரிசைவச்சுக்கொண்டு நவாபு இருக்கப்பட்ட கோட்டினைக் கூடத்துக்கு எதிரான வீட்டுற்கு வந்து நபாபு அவர்களை பேட்டி பண்ணிக்கொண்டு சற்று நேரம் பேசிக்கொண்டிருந்து அனுப்பிவிச்சுக்கொண்டு புறப்பட்டுப் போய்விட்டார்கள். அதன்பேரிலே சாப்பிட்டு பத்து மணிக்கு பயணம் புறப்பட்டுபோனார்கள். போகச்சே கொத்தளத்தின்பேரிலே பீரங்கி போட்டார்கள். அன்றையதினம் ஆனந்தரங்கப்பிள்ளையவர்கள் பரங்கிப்பேட்டையிலேயிருந்து காலமே எட்டரை மணிக்கு புதுச்சேரிவந்து சேர்ந்தார்கள்.

அசரத்து நவாபு சப்பித்தல்லிகான்சாயபு அவர்களும் சந்தா சாயபும் செஞ்சிக்குப்போக வேணுமென்று புறப்பட்டவர்கள் அவ்விடத்துக்குப் போகாமல் ஆற்காடு போய்ச் சேர்ந்து அவ்விடத்திலே இருந்து நவாபு சந்தாசாயபு கையிலே அனுப்பிவிச்சுக்கொண்டு தமுடைய ராணுவுக்கு திரையுடனே புரப்பட்டு திரிச்சிராப்பள்ளிக் கோட்டைக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

இப்படி இருக்கச்சே மருட்டியர் அற்பிசி கார்த்திகை இரண்டு மாசமும் தாங்களிருக்கிற இடத்திலேயேதானே சத்துப்பண்ணுமல் சப்பித்தரல்லி சாயபு அவர்களுக்கு இராசாவிடம் விடுகிறதுபோலேயும் பணத்துக்கு உடன்படிக்கை பேசுகிறதுபோலேயும் யிருந்து திருச்சிராப்பள்ளி கோட்டையின்பேரிலே சந்தாசாயபுடனே சண்டைக்குப்போகிறோம் என்கிறதாய் எண்பித்துக்கொண்டு. கார்த்திகைக்கு திருவண்ணுமலைக்கு சுவாமி தெரிசனத்துக்கு வருகிறார்களென்கிற அவர் சாவாய் பிறப்பிச்சுக்கொண்டு அசரப் போட்டுக்கொண்டிருந்தார்கள். இதன் பிற்பாடு கார்த்திகை நக்ஷத்திரம்—திருவண்ணுமலைக்கு 5000 குதிரையுடனே பத்தெசிங்கு வந்திறங்கி அந்த வட்டமெல்லாம் கொள்ளையடிச்சு இப்புறம் நூறு குதிரையும் அன்பது குதிரையுமாய் சிதறி துண்டு துண்டாய் புறப்பட்டு வெள்ளிமேடு திண்டிவனம் கலசபாக்கம் இந்த பிராந்தியங்களிலே கொள்ளையடிக்கிறார்களென்று அவ்விடத்திலேயிருந்து பிரசைகள்வசை வாங்கிவந்துகொண்டே யிருந்தார்கள் கூடலூருக்கு வந்த சனங்கள் மிதமில்லை இப்படியிருக்கச்சே வரவர கலாபம் துருக்காய்தானே இருக்கிறது.

1740 டிசம்பர் மீ 1ం வ மார்கழி மீ 2ந் தேதி

நவாபு சப்பித்தால்லிகான்சாயபு இரண்டாயிரங் குதிரையுடனே முஸ்தீதுபண்ணி மீருகுலாம் உசேனை தணிபண்ணி மருட்டியர்பேரிலே அனுப்பிவிச்சார் அவர் வந்து திரு

வதி—திருவொத்தியூரிலே இறங்கி அங்கேயிருந்து திருவண்ணுமலைக்குச் சமீபம் 'மங்கலமென்றிருக்கிறதாம். அந்த ஊரிலேபோய் இறங்கி புதிர்பாளையம் போட்டுக்கொண்டிருக்கிறுர் என்கிறசேதி தெரிகிறது.

*1740* டிசம்பர் மீ 15 உ ரௌத்திரி ஞு மார்கழிமீ 4உ வியாழக்கிழமை நாள்

நான் இவ்விடத்திலே இருந்தது நவாபு அவர்கள் பெண்சாதி ஆற்காட்டுக்கு சப்பித்தரல்லிகான் சாயபு அண்டைக்கு லக்ஷம், லக்ஷத்தன்பதினுயிரர் வராகன் அனுப்பிவிச்சான். அந்தப்பணம் சேத்துப்பட்டுக் கோட்டை வந்து சேர்ந்த கபுறு மருட்டியர் கேட்டு ஒரு நாள் இராத்திரியிலே மேலே இருக்கப்பட்ட மீருகுலாம் உசேன் இறங்குகிறபாளையத்திலே போய் விழுந்து அவனையும் முறியடிச்சு சிறிது குதிரைகளும் பிடிச்சுக்கொண்டு சேத்துப்பட்டுக் கோட்டையை வந்து சுத்திக்கொண்டிருக்கிறுர்களென்கிறதாய் பிறக்கிறது.

அங்கே வந்திறங்கி யிருக்கிற குதிரையன் செஞ்சிக்கு அடுத்தாற்போலே தாயனூர் மலையனூர் பத்தேப் பேட்டை கலசப்பாக்கம் திண்டிவனம் இந்த மட்டுக்கும் வந்து கொள்ளையடிச்சார்களென்று வலசை வாங்கி வருகிறுர்கள்.

*1740* டிசம்பர் டைரி 17 உ ரௌத்திரி ஞு மார்கழிமீ 6 உ சனிக்கிழமை நாள்

வெங்கிட்டம்மாள் பேட்டைக்கு மேற்கே பத்து நாழிகை வழிக்கு அப்புறம் கரடிகல்லடாவி பாலக்கொல்லை அந்த வட்டத்திலே மருட்டியர் குதிரை வந்து கொள்ளையடிச்சார்கள் என்று அந்த ஊருக்கு கிழக்கு தெற்கு வடக்கு இருக்கப்பட்ட பேர் முதலாக பண்ணுருட்டி திருவதி பரியந்தம் இருக்கப்பட்ட பிரசைகள் அனைவரும் வலசை வாங்கி கூடலூருக்கு வந்தார்கள். இந்தச் சேதி பரங்கிப் பேட்டை அமுல்தாரனுக்கு எழுதி வந்து பரங்கிப் பேட்டையிலே இருக்கப்பட்ட சனங்கள் சகலரும் குஞ்சு குழந்தைகளை அழைச்சுக்கொண்டு கூடலூர் வந்து சேர்ந்தார்கள். இதன் பிற்பாடு எட்டு நாள் மட்டுக்கும் மருட்டியர் இன்னவிடத்தில் இருக்கிறுர்களென்கிற சேதியுமில்லாமல் கொள்ளை இட்டார்களென்கிற பேருமில்லாமல் அசந்து இருந்தது. அதன் பேரிலே பரங்கிப்பேட்டையிலே யிருந்து கூடலூருக்கு வந்திருந்த பேர் நாலத்து இரண்டு பேர் பரங்கிப்பேட்டைக்குப் போகவும் வரவும் அவரவர் கொஞ்ச நஞ்சம் தொழில் துறை பார்க்கவும் இப்படியிருந்தார்கள். இப்படியிருக்கச்சே 14 தேதி ஆதிவார நாள் காலமே இவ்விடத்திலேயிருந்து கூலிச்சேன்

அய்யன் பெருமாளென்கிறவனை பரங்கிப் பேட்டைக்கு அனுப்பிவிச்சோம். அவன் இன்றையதினம் சாயங்காலம் நாலு மணிக்கு பரங்கிப் பேட்டைக்குப் போய்ச் சேர்ந்தானும் இவன் போகிறபோது மருட்டியர் (500) குதிரைக்காரர் வந்து பரங்கிப் பேட்டை நாலு முலையும் சுத்திக்கொண்டு கொள்ளை யடிக்கிறார்களாம். அவன் சின்ன ஊரண்டை போனஉடனே புடவைசீலை எல்லாம் ஒரு செடியின் கிழேவச்சுப்போட்டு உலாந்தகாரன் பெத்திரியைக்கிட்டப் போனும் இவன் போகச்சே மருட்டியர் பெத்திரிக்கு பிறகாலே வந்து சுவரை இடித்து உள்ளே புகுந்து உலாந்தரகாரன் சின்ன கப்பித்தான் அவர் பெண்சாதி அவர் பிள்ளைகள் அனைவரையும் பிடித்துக்கொண்டு கழிகளிலே கயிறுகளைக்கட்டி கையிலே பிடித்துக்கொண்டிருக்கச்சே நம்மிட சேவகன் கண்டு இப்புறம் ஓடிவரச்சே எதிரிலே இருந்த பிராமணர் இரண்டொருத்தரை காயப்படுத்தி விட்டு விட்டார்களாம். அவர்களையும் கண்டானும் இந்தப்படிக்கு ஊரிலேயும் கொள்ளையடிக்கிறார்களாம். அந்த வேளையிலே இராத்திரி யெல்லாம் இந்தச்சேவகன் ஒரு செடியின் கிழே பதுங்கியிருந்து இந்த தமாஷ் எல்லாம் கண்ணாலே கண்டு பொழுது விடிய சாமமென்னச்சே புறப்பட்டு 15 உ திங்கட்கிழமை நாள் விடிஞ்சு பத்து நாழிகைக்கு புதுச்சேரி வந்து சேர்ந்து இந்த கபுறுகளைச் சொன்னான் அந்தச்சேதி அன்னேரமே (ா) பிள்ளையவர்கள் (ாா) துரையவர்களண்டைக்குப் போய் எச்சரிச்சுப் போட்டு வளவுக்கு வந்து இவ்விடத்திலே இருந்துகொண்டு மூணுபேர் சேவகரைப் பரங்கிப்பேட்டைக்கு அனுப்பினார்கள். கபுறு தெரிஞ்சுகொண்டு வரத்தக்கதாய் போயிருக்கிறார்கள.

1740 டிசம்பர் 22 ரௌத்திரி ஞூ மார்கழி மீ 12உ முன் 12 உ வியாழக்கிழமை நாள்

இந்த புதுச்சேரி பட்டணத்திலே பிறந்த அன்னியாய மென்ன வென்றால் ஒரு காலாகாலங்களிலே நடவாத காரியங்களை இப்ப தூபாசித்தனம் பண்ணுகிற கனகராயமுதலி நூதனமாய் பட்டணத்திலே உள்ள வர்த்தகர் பெரிய மனுஷர் சில்லரைவர்த்தகர்க்கும் கும்பனிர்வர்த்தகர் இதல்லாமல் மராட்டியர் கலாபத்துக்கு பயந்து ஓடிவந்திருக்கிற ஆற்காட்டுவர்த்தகர்கோமுட்டியன் குஜஜராத்திக்காரர் சகலமான சனங்களுக்கும் அவரவர் ஆஸ்த்தியும் ஒட்டும் பிடுகும் பார்த்துப்பார்த்து தெண்டம் பிடிக்கத்தக்கதாக யோசனை பண்ணி (ா) துரையவர்களுடனே எச்சரிச்சு இந்தப்படிக்கு அவரவர் பேரிலே வரிபோலே எழுதி தண்டினால் உமக்கு வெகுபணம் ஆசிலாமென்று சொல்லி ஊரார்குடியைக் கெடுத்து வரியெழுதி வாங்கின பேர்வழி வயனம் கும்பனியர் வர்த்தகர் 1000 வராகன் சேஷாசல செட்டியார் 500 வராகன் மூத்தியா

பிள்ளை யவர்கள் 300 வராகன் நம்பிடபேரிலே 400 வராகன் பரசுராமபிள்ளை 200 வராகன் பாலுசெட்டி குமாஸ்தா 300 வராகன். இப்படி வெகுபேர் கையிலே தெண்டம் பிடிச்சார்கள். சவுளிக்கடை அம்பலசெட்டி பேரிலே 61 வராகன் எழுதி அவனை விராகன் கேட்டால் அவன் கொடுக்கிறதில்லை என்று தகரூர் பண்ணினதால் அதன்பேரில் அவனைப்பிடிச்சு கிடங்கிலேபோட்டு ஓட்டிக்கிரெட்டியாகி 122 வராகனுய் அவன் கையிலே வாங்கி எல்லாரும் வந்து கொடுத்துவிட வேணுமென்று சொல்லி ஊரெல்லாம் தெண்டம் பிடிச்சு சாடாவருகிற மட்டும் அவனையும் பின்னையும் இரண்டொரு செட்டியினையும் கிடங்கிலே வச்சு வச்சு இந்தப்படியாக வராகன் தெண்டம் பிடிச்சார்கள்.

1740 ஶு டிசம்பர் மீ 26 உ-க்கு ரௌத்திரி ஶு மார்கழி மீ 15 உ திங்கட்கிழமை நாள்

காலமே பத்து நாழிகைக்கு மேலே பரங்கிப் பேட்டையிலே யிருந்து சேவகன் வந்து பரங்கிபேட்டை கொள்ளை யடிச்ச சேதிசொன்ன அன்னேரம் முதல் சாயங்கால பரியந்தரம் இந்த பட்டணத்துக்குள்ளே பண்ணவேண்டிய மூஸ்தீதுகளும் பண்ணிவிச்சுக்கொண்டு கெவுனிக்கு வெளியிலே குடியிருக்கிற சனங்களையெல்லாம் கோட்டைக்குள்ளே வரச் சொல்லி தமுக்கு போடுவிச்சு ஆறு மணிக்கு கெவுனியெல்லாம் சாத்திப்போட்டார்கள்.

1740 டிசம்பர் மீ 27 உ ரௌத்திரி ஶு மார்கழி மீ 16 உ செவ்வாய்க்கிழமை

இந்தநாள் காலமே பிறந்த சேதி: மருட்டியர் குதிரை நேத்தையதினம் கூடலூருக்கு மேற்கே அஞ்சாறு குதிரையைக்கண்டு கூடலூரிலே இருந்த ஒரு வேவுகாரனை அனுப்பினுர்களாம். அவன் போரத்துக்குள்ளே சமீபிச்சு வருகிறுர்களென்று சொல்லி திருப்பாதிருப்புலியூர் கொத்தளத்தின் பேரிலே இருந்து இரண்டு பீரங்கி போட்டார்களாம். அதின் பேரிலே ஓடிப்போனதாகவும், வேவு பார்க்கப்போன சேவகனைக்கண்டு ஒரு குதிரைக்காரன் துரத்திவந்து வெட்டினதாகவும், இந்தச் சேவகன் அந்த மருட்டியனை தடியினுலே அடிச்சு அவன் கத்தியைப்பிடிங்கிக்கொண்டு தேவனும்பட்டணத்து கோட்டைக்கு வந்துசேர்ந்து துரையுடனே சொன்னதாகவும், அவர் சந்தோஷப்பட்டு இரண்டு கிசம் சகலாத்தும் ஏழு வராகனும் 20 படி அரிசியும் கொடுத்தாரென்றும் சொன்னுர்கள். இதன் பிறகு அன்றையதினம் அந்த குதிரையின் 50, 60 குதிரையுடனே வாகூருக்குச் சேய்மை

யிலே கண்டு வாகூரிலே யிருக்கிற சேவகர் இருபது முப்பது துப்பாக்கிவெடிச் சுட்டார்களாம். அதைக்கண்டு மருட்டியார்கள் ஒதுங்கிப்போனவுடனே வாகூர் துரை புரப்பட்டு நேற்று சாயங்காலம் ஓடிவந்து புதுச்சேரி சேர்ந்தார் அதன்பேரிலே வாகூர் அந்த வட்டங்களிலே கொள்ளையடிச்சார்களென்று சொல்லுகிறார்கள். அப்படி யிருக்கச்சே எட்டு மணிக்கு தெண்ணலிலேவந்து கொள்ளையடிச்சு வில்லியனூர் ஊசுட்டேரி, அரும்பாத்தைபிள்ளைசாவடி, ஒழுகரை இந்த மட்டுக்கும் குதிரையில்வந்து பரவி வாரபேர் போரபேர்களை அடிச்சு பறிக்கிறதும் அவரவரை சிலாரப் பண்ணுகிறார்களென்று அவரவர் பறிகொடுத்துப்போட்டு வந்து விழுந்தார்கள். அதன்பேரிலே (ா) துரையவர்கள் இவ்விடத்திலேயிருந்து (9) மணிக்கு ஒரு ஈயிஸூதாங்கி சொலுதாதுகளும் முத்தியப்பிள்ளையவர்களையும் அவர் பிறகே (50) பேர் சேவகரையும் இதல்லாமல் இவ்விடத்திலே வந்திருக்கப்பட்ட துலுக்கரண்டை யிருக்கிற தயினுத்துக் குதிரைகளையும் சேவகரையும் கூட்டி ஒழுகரைக்கு அனுப்பினார்கள். அவர்கள் ஒழுகரைக்குப் போகிறதற்குள்ளே மருட்டியர் அப்புறப்பட்டு வழுதாவூர் போய்ச்சேர்ந்தார்கள் என்னும் கபுறு தெரிந்துகொண்டு இவ்விடத்திலே யிருந்து போனவர்கள் சாயங்காலம் 4 மணிக்கு வந்துவிட்டார்கள்.

*1740*-ம் ஹு டிசம்பர் மீ *27* உ ரௌத்திரி ஹு மார்கழி மீ *16* உ செவ்வாய்க்கிழமை நாள்

பரங்கிப்பேட்டையிலே இருந்து எழுதிவந்த சேதி மாருட்டியார் வந்து கொள்ளையிட்டது ஆதியோடந்தமாய் எழுதின விபரம் (*13*) உ சனிவார நாள் காலமே திருவண்ணுமலையிலேயிருந்து பயணப்பட்டு *2000* குதிரை புறப்பட்டு திரிச்சிராபள்ளிக்குப்போறோம் என்கிறதாகப்பேர் எண்பிச்சு நேர் தெற்கே தியாகதுர்கமட்டும் போய் அவ்விடத்திலேயிருந்து கிழக்கே திரும்பி இராத்திரிக்கு விருத்தாசலம் வந்து சோர்ந்தார்கள் திருவண்ணுமலைக்கும் விருத்தாசலத்துக்கும் ஐங்காதம் அவர் தெர்கொத்தி சுத்தினது ஒரு காதம். ஆக ஆறுகாதம் வழி ஒரு நாளைய பயணமாய் வந்து காலமே அவ்விடத்திலேயிருந்து புறப்பட்டு மத்தியானம் *18* நாழிகையளவில் பரங்கிப்பேட்டை வந்து தாக்கலானுர்கள். பரங்கிப்பேட்டைக்கும் விருத்தாசலத்துக்கும் அயிங்காதவழி உண்டு. இந்த பதிங்காதவழி தூரமும் ஒருநாளும் மறுநாள் மத்தியானத்துக்கு வந்து சேர்ந்தார்கள். அவ்விடத்திலே நடந்த சேதி பரங்கிப்பேட்டைக்குமேலண்டை இரண்டு மூணு நாழிகை வழியிலே சித்திரச்சாவடி யென்றி

ருக்கிறது. அவ்விடத்திலே வந்து போக்கு வரத்துக்காரரை அடித்துப்பறிச்சார்கள் அப்படியிருக்கச்சே உலாந்தாக்காரன் பெத்திரியிலேயிருந்து இரண்டுபேர் சேவகர் நாகப்பட்டணத்துக்குப்போகிற நிமித்தியம் கடுதாசி வாங்கிக்கொண்டு பயணப்பட்டு போகச்சே அவர்களும் சித்திரசாவடிக்கிட்ட வரச்சே இந்த மருட்டியர் குதிரையைக் கண்டு பயந்து மறுபடியும் பரங்கிப்பேட்டைக்கு ஓடி வந்தார்கள். அவர்கள் ஓடி வரச்சே அவர்களுக்கு எதிர்ப்பட்டபேர்களுடனே எல்லாம் சொல்லிக்கொண்டு கூவிக்கொண்டு ஓடிவந்து ஒலாந்தாகாரன் பெத்திரியிலே சொன்னார்கள். அந்க மட்டிலே அவர்களும் ஆலோசனைப்பட்டுக் கொண்டிருக்கச்சே ஊரு நாலு மூலையும் கெட்டு முறிஞ்சு யெல்லாரும் அவரவருடைய தட்டு முட்டு பணங்காசு புடவை சீலைகளை எடுத்துக்கொண்டு ஓடிவந்து பெத்திரியிலே அடைஞ்ச சனங்கள் மிதமில்லை இதல்லாமல் பெத்திரி அடங்காமல் பின்னையும் வெகு சனங்கள் ஆத்தங்கரையிலே வந்து அவ்விடத்திலே இருக்கிற தோணியின் பேரிலேஏறினார்கள். படகு நாற்பது ஐம்பதுபேர் ஏறுகிற தோணியிலே ஆபத்து வேளையானபடியினாலே படகு ஒண்ணுக்கு 200, 250, 300 இந்தப்படியாக ஒன்றமேலே ஒன்று ஏறினார்கள். ஆனபடியினாலே படகு தங்காமல் தரையிலே தட்டிப்போய் கிடக்கிறது அப்புறம் அசையவில்லை இதல்லாமல் சக்கரயப்பமுதலி புடவை சீலை கட்டுகள் ஒரு சலங்கு, நாச்சியப்ப முதலி புடவைக்கட்டுகள் ஒரு சலங்கு, ஆண்டியப்பமுதலி புடவை கட்டு ஒரு சலங்கு, ஆனந்தரங்கப்பிள்ளையவர்கள் புடவைகட்டு ஒரு சலங்கு குஞ்சாபிள்ளை சலங்கு இதல்லாமல் சில்லறை வர்த்தகரது இரண்டு சலங்கு மேலே கட்டுகளேத்தி ஆத்திலே கட்டிவைத்திருந்தது இப்படியிருக்கிற சமயத்திலே மருட்டியர்களின் இரண்டாயிரங் குதிரை வந்தது. ஊருக்கு தென்பக்கம் ஆத்தோரமாய் 500 குதிரையும் ஊருக்கு வடக்குமாய் ஐநூறு குதிரையும் செவ்வையாய் 1000 குதிரையும் இப்படியாக அந்தண்டைக்கிந்தண்டை ஒரு மனிதரைத்தப்பவிடாமல் சுத்திவலை விசிறிப்போல் சுத்திக்கொண்டு பட்டணத்திலே புகுந்து ஒரு வீடு தப்பாமல் வீட்டுக்கு மூணு குதிரையும் நாலு குதிரையும் ஆகப்புகுந்து கொள்ளையிட்டு சனங்களை யெல்லாம் கொரடாவினாலே அடிச்சு ஒரு முழத்துணி கொடுத்து சறுவ சோபாரமும் பிடுங்கிக்கொண்டு அவர்கள் தலையிலே மூட்டைகளை வைத்து குதிரை பிடிக்கச்சொல்லி, ஓரண்டையிலே தாம் தூமாய்க் கிடக்கிற அந்த வேளையிலே ஆத்தோரமாக வந்த குதிரையன் வந்து தனிப்பட்டு தோணியின் பேரிலே ஏறிக்கொண்டுயிருக்கிற சனங்களை எல்லாம் வெளியிலே இழுத்து தட்டுகள் முட்டுகள் புடவை சீலைகள் அடங்கலும் பறிச்சுக்கொண்டு வெகு பேரைக்காயப்படுத்தி வெகு பேரை கொரடாவினாலே சக்கை பிளந்து போட்டார்கள். அந்த வேலை

யிலே ஓடிப்போவோமென்று ஆத்திலே விழுந்த பேருக்குள்ளே பனிரெண்டு பேர் செத்துப்போனார்கள். இதல்லாமல் ஆத்திலே கட்டியிருந்த சலங்குகளெல்லாம் கரையிலே இழுத்து அதிலே இருந்த புடவை கட்டுகளெல்லாம் கொள்ளையிட்டுக்கொண்டு போனார்கள். ஆனால் ஆனந்தரங்கப்பிள்ளையவர்கள யோகத்திலே அந்த ஒரு சலங்கு மாத்திரம் அப்புறம் சேத்திலே கிடந்தபடியினாலே தப்பி அவர்கள் காரியக்காரரும் தப்பினார்கள். மத்தப்பேர் சகல சனங்களும் மராட்டியன் கையிலே அகப்பட்டு சகலமும் பறிகொடுத்து இம்சைப்பட்டார்கள். அவ்விடத்தில் வந்த 500 குதிரையின் உலாந்தாகாரன் பெத்திரி மேலே திரும்பிச்சு. திரும்பி உடனே பெத்திரி கதவை மூடிக்கொண்டார்கள். அந்த வேளையிலே பட்டணத்துக்குள்ளே கொள்ளையிட்ட குதிரையிலே அன்னூறு குதிரை வடபக்கமாய் வந்து ஆக ஆயிரம் குதிரைக்காரரும் கூடி பெதத்தி சன்னலை சிறிதுபேர் இடிக்கச்சே, சிறிது பேர் நூலேணியை வீட்டின் பேரிலே எறிஞ்சு அதைப்பிடிச்சுக்கொண்டு தொத்திவீட்டின் பேரிலேறி உள்ளே குதிச்சு இதுக்குள்ளே வந்து புகுந்து சகல சனங்களையும் நிர்வாணமாய் உறிஞ்சு கொண்டு சிறிது பேருக்கு வெட்டு காயமும் சிறிது பேருக்கு கொறடா அடியும் இப்படியாக இரண்டு முழுத்துணியினைக் கொடுத்து வெளியே துரத்திவிட்டு வெள்ளைக்காரர் சின்னக்கப்பித்தான் ஒஸ்திரால் பெண்சாதி அவன் பெண்கள் மூணு பேர், ஒலாந்தக்காரர் ஏழு எட்டுபேர் இவர்களை மாத்திரம் பிடிச்சுக்கட்டிக் கொண்டு பெத்திரி அடங்கலும் கொள்ளையிட்டுக்கொண்டு பெரிய பெரிய மனுஷர் மத்தப்பேர் அவரவர் தலையின் பேரிலே சுமைகளை வைச்சு அடிச்சுக்கொண்டு சாயங்காலம் 6 மணிக்கு அப்புறப்பட்டுப்போய் ஊருக்கு மூணு நாலு நாழி வழியிலே மைதான வெளியிலே இறங்கி மூட்டை எடுத்துக்கொண்டு போன பேர்களை எல்லாம் விட்டுத்துரத்திவிட்டு வெள்ளைக்காரரை மாத்திரம் இராத்திரி முப்பது நாழிகையும் பாளையத்திலே போட்டுவச்சு இருந்து மறுநாள் காலமே 60 குதிரைக்காரர் புறப்பட்டு ஒலாந்தாக்காரரை அழைச்சுக்கொண்டு வந்து பெத்திரியிலே விட்டுப்போட்டு, பின்னையும் ஒட்டினது ஒழிஞ்சது சரக்குகள் இருந்ததெல்லாம் கொள்ளையிட்டுக்கொண்டு போய்விட்டார்கள். ஆனால் பெத்திரியிலே போனது சகல தட்டுமுட்டுகளும் வெள்ளைக்காரனுக்குண்டு. இதல்லாமல் ஊருக்குள்ளே கொள்ளை போனது ஐம்பதினாயிரம் வராகனுக்கு உண்டு. ஆக லக்ஷத்தன்பதினாயிரம் வராகனுக்கு உண்டு ஊரிலே கொள்ளை போனது என்று எழுதிவந்தது.

1740 டிசம்பர் மீ 30 உ ரௌத்திரி ஹ மார்கழி மீ 19 உ வெள்ளிக்கிழமை

காலமே 8 மணிக்கு அச்சைக்குப் போயிருந்த சீமை கப்பல் கோந்தேதிலுஸ் Comte de Toulouse என்கிற கப்பல் வந்து துறைபிடிச்சான். கப்பித்தான் மூசே போடுதேபேர் (Porte-Barre) இந்தக் கப்பலிலே வந்த சரக்கு அச்சைக்குதிரை 4250 கஞ்சாக்கட்டு கெந்தகம் ⅛.

1741 ஜனவரி மீ 1உ ரௌத்திரி ஹ மார்கழி மூ 21உ

ஆதிவாரம் ஜனவரி பண்டிகை கொண்டாடினார்கள்.

ஜனவரி மீ 8உ மார்கழி மீ 28உ ஆதிவாரம்

இந்நாள் காலமே 10 மணிக்கு பைகோவிலிருந்து ஒரு கப்பல் ஓடிவந்தது. அந்தக் கப்பல் பேர் ............கப்பித்தான் பேர் மூசே புயெல் (M. Puel) இந்தக் கப்பலிலே வந்த சரக்கு குதிரை 4.

1741 ஜனவரி மீ 9 க்கு ரௌத்திரி ஹ மார்கழி மூ 29 உ

மெருகையிலே இருந்து இரண்டு கப்பல் ஓடி வந்தது. அந்தக் கப்பலிலே வந்த தினுசுகள்.

ஜனவரி மீ 10 உ மார்கழி மீ 30 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே 9 மணிக்கு சீமையிலே இருந்து ஒரு கப்பல் ஓடி வந்து வச்சுப் பிடிச்சு 21 பீரங்கி போட்டார்கள். கோட்டையிலேயும் 21 பீரங்கி போட்டார்கள். அந்தக் கப்பல் பேர் பென்தேல் (Penthievre) கப்பித்தான் மூசே திபுவாயி (M. Dubois) இந்தக் கப்பலில் வந்த வெள்ளிப் பெட்டி 200.

ஜனவரி மீ 12 உ க்கு தை மீ 3 உ வியாழக்கிழமை நாள்

காலமே 11 மணிக்கு யிமாம் சாயபு... ... .. ..கப்பலின் பேரிலே வந்து துறை பிடித்தது. அந்தக் கப்பலிலே இமாம் சாயபு வரவில்லை. அவருடைய தட்டுமுட்டு மாத்திரம் வந்தது

தை மீ 5 உ ஜனவரி மீ 14 உ சனிவார நாள்
சாயங்காலம் ஆற்காட்டிலேயிருந்து தொஸ்ரத்தலிகான் சாயபு அவர்கள் பெண்சாதி, சப்பித்தரல்லிகான் பெண்

சாதி அசனல்லிகான் பெண்சாதி, சந்தா சாயபு பெண்சாதி பின்னையும் இவ்விடத்திலே யிருக்கப்பட்ட பெரிய மனுஷர் பெண்டுகளையெல்லாரையும் வேலூர் கோட்டைக்கு அழைத்துக் கொண்டு போகத்தக்கதாக மீருகுலாம்உசேனும் கானு பிராதரும் இரண்டுபேருப் ஐந்துமணிக்கு இவ்விடத்திற்கு வந்தார்கள். அவர்கள் வரச்சே எதிர்கொண்டு போய் அழைத்துக் கொண்டுவரச்சே முன்னே காலமே வந்த கானு பிராதருக்கு கெவுனியிலே 7 பீரங்கி போட்டார்கள். சாயங்காலம் வந்த பீரு குலாம் உசேனுக்கு 9 பீரங்கிபோட்டார்கள்.

**1741** ஜனவரி மீ 15உ ரௌத்திரி ஸு தை மீ 6உ

சாயங்காலம் 4 மணிக்கு மீருகுலாம் உசேன் (ா) துரையவர்கள் பேட்டிக்குப்போனார் அவ்விடத்திலே நடந்த மரியாதைகள்....

**1741** ஜனவரி மீ 16 உ ரௌத்திரி ஸு தை மீ 7உ சோம வாரம் நாள்

காலமே 12 மணிக்கு புதுச்சேரியிலே இருந்துநவாபு அவர்கள் பெண்சாதி, சப்பித்தரல்லிகான் பெண்சாதி, அசனல்லிகான் பெண்சாதி மற்றுமுள்ள பெண்டுகள் அனைவரும் கூட சந்தா சாயபு பெண்சாதியும் படேசாயபு பெண்சாதியும் இரண்டு பேரும் தவிர மத்தப்பேரெல்லோருமாக சப்பித்தரல்லிகானும் சின்ன பேர் நூர் முதல்லிசாயபு குமாரன் மீருகுலாம் உசேன் சகலமானபேர்களும் பயணமாய் புறப்பட்டு இரண்டுமணிக்கு கெவுனிவாசல் தாண்டி வேலூர்கோட்டைக்கு பயணமாய்ப் போனார்கள். போகச்சே கெவுனியிலே 2 பீரங்கிபோட்டார்கள்.

**1741** ஜனவரி மீ 18 உ க்கு ரௌத்திரி ஸு தை மீ 9 உ புதன்கிழமை நாள்

மத்தியானத்துக்கு மேல் மூன்று மணிக்கு சின்னதுரையவர்கள் வீட்டுக்குள்ளே கோவில் பாதிரிமார், சம்பாகோவில் பாதிரிமார், கப்புசேன் கோவில் பாதிரிமார் பின்னையும் கொம்சேல்காரர் மூசே லிகு (M Legue) மூசே துளோராமு, மூசே, சிந்நோர், மூசே போலேமூம் மீரா. பின்னையும் ஒப்பிசியேல் மார்களும் சொசேந்துகள் அனைவரும் பெரியதுரை தவிர மற்றுமுண்டாகிய ஆலோசனைக்காரர் பாதிரிமார்கள் கூடக் கூடி ஆலோசனை பேசி சாயங்காலம் ஆறு மணிக்குக் கலைந்து வெளியே புறப்பட்டார்கள். அவர்கள் கூடி ஆலோசனை பண்ணின வயணம் என்னவென்றால்,...

**1741** ஞு ஜனவரி மீ **20** உ க்கு ரௌத்திரி ஞு தை மீ **11** உ வெள்ளிக்கிழமை நாள்

காலமே பதினொரு மணிக்கு மராட்டியரண்டையிலே யிருந்து மூணுபேர் அறுக்கார்கள் கடுதாசி கொண்டு வந்தார்கள். அவர்கள் யாரென்றால் மராட்டியருக்கெல்லாம் எஜமானாயிருக்கிறவா இப்போது திரிச்சிராப்பள்ளிக்கோட்டை மேலே வந்திறங்கியிருக்கிற ரகோசி போன்சலேவண்டையிலே இருந்து இரண்டு பேர் மராட்டியரும் ஒரு அறுக்காரய்யனும் ஆகமூன்றுபேரும்வந்தார்கள அவர்கள் ரகோசிபாசுரு(Ragoji Bhonsala) வுடைய கடுதாசி கொண்டுவந்து ராசஸ்ரீ துரையவர்களுக்கு ஒரு கடுதாசியும், விட்டல் பண்டிதரவர்களுக்கு ஒரு கடுதாசியும் கொடுத்தார்கள். அந்தக் கடுதாசியிலே எழுதிவந்த வயணமென்னவென்றால் நடந்த சேதியும் என்னவென்றால் கடுதாசியன் வந்த உடனே வீட்டில் பண்டிதரை துரையவர்கள் அழைப்பிச்சு இந்தக் கடுதாசிகள் யாராருக்கு வந்திருக்கிறது பாருமென்றார் அவர் அந்தக் கடுதாசியில் பார்த்து ரகோசி பாசுரு, துரைக்கு அனுப்பிய கடுதாசி ஒன்று, பண்டிதர் குமாரன் துரைக்கனுப்பின கடுதாசி ஒன்று இந்த இரண்டுகடுதாசிகளையும் துரைகையிலே கொடுத்து தம்முடைய பேருக்கு வந்த கடுதாசியை தாமெடுத்துக்கொண்டு மத்தப்படி சென்னப்பட்டணம், தேவனாம்பட்டணம், நாகப்பட்டணம சதுரங்கப்பட்டணம் இதுகளுக்குவந்த கடுதாசிகளை புறம்பாய் எடுத்து இந்த வயணத்தையும் சொன்னார். அதன் பேரிலே துரையவர்கள் யோசனை பண்ணி கடுதாசி கொண்டுவந்த அறுக்காருகளை அழைச்சு மத்தப்பட்டணங்களுக்குப் போகிற கடுதாசியில் நாங்கள் அனுப்பிவிப்போமா நீங்கள் தானே கொண்டுபோகிறீர்களாவென்று கேட்டார். அதுக்கு அவர்கள் சொன்ன உத்திரவு வீட்டில் பண்டிதர், எப்படி சொல்லுகிறாரோ அந்தப்படி நடந்துகொள்ள எங்கள் எசமான் உத்திரவென்று சொன்னார்கள் அதன் பேரிலே காகிதங்களை யெல்லாம் வாங்கிவச்சுக்கொண்டார். துரை வந்து கடுதாசியிலே எழுதிவந்த வயணம் ...

**1741.** ஞு ஜனவரி மீ 22 உ ரௌத்திரி ஞு தை மீ **13** உ ஆதிவார நாள்

புதுச்சேரி பட்டணத்திலே நடந்த அதிசெய மென்னவென்றால்................... வீட்டில் பண்டிதரையும் அவருடைய குமாரன் இளையவன் ................... யும் இவர்கள் இரண்டுபேரையும் கோட்டைக்கு அழைப்பிச்சு கோட்டையிலே தானே காவல் பண்ணிவச்சார்கள் இன்றையதினம் புதிதாய் ஒரு தூக்குமரத்திலே இரண்டுபேரையும் போடத்

தக்கதாய் நூதனமாய் ஒரு மரம் செப்பனிட்டு சாயங்காலம் ஐந்து மணிக்கு மூத்திரைச்சாவடிக்கெதிரே கொண்டுபோய் நட்டார்கள். இன்றையதினம் பின்னையும் நடந்த அதிசயம் விட்டல் பண்டிதர் வீட்டிலே கும்பனிர் மனுஷர் திருவேங்கட பிள்ளை, தானியப்பமுதலியார், மூத்தியாபிள்ளை இவர்கள்போய் சோதிச்சு வீட்டிலே இருக்கிற காயிதம் ஓலை தானியம் இதுகள் மாத்திரம் எடுத்துக்கொண்டு வீடு வாசலெல்லாம் முத்திரிச்சுப்போட்டு கடுதாசிகளையும் கோட்டையிலே கொண்டு போய் சோதிச்சார்கள்.

1741 ஆண்டு ஜனவரி மீ 23 உ ரௌத்திரி ஹு 14 உ சோம வாரம் நாள்

நடந்த சேதி யென்னவென்றால் காலமே எட்டுமணிக்கு ஊரிலே தமுக்குப்போடுவிச்ச வயணம்: கெவுனிக்கு வெளியே பட்டணத்தைச் சுத்தியிருக்கப்பட்ட முத்தாலுபேட்டை, வழுதாவூர் வாசல்படிக்கு எதிரே இருக்கப்பட்ட பேட்டை வில்லியனூர் வாசலுக்கு நேராய் வெளியிலே இருக்கிற பேட்டை கூடலூர் வாசல்படிக்கு வெளியிலேயிருக்கிற பேட்டை இதுகளையெல்லாம் பட்டணத்து அலங்கத்தை சுத்தி எங்கும் வெளியாயிருக்கிற நிமித்தியம் வீடுவாசல்களெல்லாம் இடித்து நிரவி தோட்டம் துரவுகள் மரமட்டைகள் அடங்கலும் வெட்டிப் போடச்சொல்லி தமுக்குப் போடச்சொன்னார்கள். பிற்பாடு சாயங்காலம் ஒரு தமுக்கு போடுவிச்சார்கள்; அது என்னவென்றால் பட்டணத்திலே உள்ள சனங்களெல்லாம் சகலபேர்களும் எப்பேர்பட்டவர்களும் யாதொரு கடுதாசி, ஓலை வெளியிலேயிருக்கிற மனுஷருக்கு அனுப்ப வேண்டியிருந்தாலும் வெளியிலேயிருந்து யாதாமொருத்தருக்கு கடுதாசிகள் ஓலைகள் வந்தாலும் கனகராய முதலியாருக்குக் காண்பிச்சு அதன்பேரிலே நடத்துகிறது. இந்த உத்தாரத்தை யாதொருத்தர் தள்ளி நடத்துகிறார்களோ அவர்களுக்கு ஆக்கினையும் அபராதமும் என்று தமுக்கு போடுவிச்சார்கள். இதல்லாமல் சாயங்காலம் ஆறு மணிக்கு ஒரு தமுக்கு போடுவிச்சார்கள்; அந்த வயணமென்னவென்றால், இராத்திரி பத்து மணிக்கு மேல் ஒருத்தரும் வெளியே புறப்படலாகாதென்றும் யாராகிலும் புறப்பட்டால் அவர்களைக் கொண்டுபோய் சாவடியிலே வைத்துதெண்டனையும் அபராதமும் வருமென்று தமுக்குப் போடுவிச்சார்கள்.

1741 ஹு ஜனவரி மீ 29உ ரௌத்திரி ஹு தை மீ 20உ ஆதிவாரநாள்

காலமே 7 மணிக்கு (ஈ) ஆனந்தரங்கப்பிள்ளையவர்களும் அரியப்பமுதலியாரும்கூட திருவேங்கடபுரத்திலே அக்கினி

திருவிழா பண்ணிவர நிமித்தியம் புறப்பட்டு சாவடிக்குப் போனார்கள். மத்தியானம் இரண்டு மணிக்குப் பிறந்த சேதி மருட்டியர் குதிரை தெற்கேயிருந்து 1000 குதிரை புறப்பட்டு வந்தவர்கள் வரச்சே வழியிலே திருப்பாதிரிபுலியூருக்குள்ளே முப்பது நாப்பது குதிரை ஊருக்குள்ளேயும் கொள்ளையிட்டு சிறிது குதிரைகள் திருப்பாதிரிபுலியூரிலேயிருந்து தேவனாம் பட்டணத்துக்குப் போகிறவழியிலே கெடிலத்திலே வந்து வழிக்கட்டி வருகிறபேர் கையிலே யிருக்கிறதை பரிச்சுக் கொண்டு மஞ்சகுப்பத்திலே வந்து, அங்கேயும் நாலத்து இரண்டு வீட்டிலே புகுந்து கொள்ளையிட்டுக்கொண்டு தெண்ணல் கிருஷ்ணரெட்டியாரையும் பின்னையும் நாலத்து இரண்டு பேரைப் பிடித்துக்கொண்டு ரொம்பவும் அங்கீதை பண்ணி விட்டு இப்புறம் வருகிறபோது மேலே எழுதியிருக்கிற இரண்டு மணி நேரத்திற்கு ஒழுகரை யண்டையிலே நாலஞ்சு குதிரை காண்பிச்சு, அவ்விடத்திலேயிருக்கிற பேரெல்லாரும் ஓடி வந்தார்கள். இந்தக்கபுறு (ா) துரையவர்கள் கேள்விப் பட்ட உடனே பட்டணத்தைச் சுத்தியிருக்கப்பட்ட கெவுனி வாசலெல்லாம் சாத்திப் போடுவிச்சார்கள். அந்தச் சனம் நம்மிட சாவடிக்குப் போயிருக்கிற பிள்ளையவர்களண்டைக்கு படிப்படியாய் ஆளை ஓடவிட்ட உடனே அந்த கபுறு கேட்ட அந்தக்ஷணம் புறப்பட்டு கடலோரமே வந்து சாயங்காலம் ஐந்து மணிக்கு வந்து சேர்ந்தார்கள், மருட்டியர் ஆயிரங் குதிரைக்காரரும் வடக்கே போய் விட்டார்கள்.

1741 ஸு பிப்ரவரி மீ 2 உ க்கு ரௌத்திரி தை மீ 24 உ வியாழக்கிழமை நாள்

முன் வடக்கே போன குதிரைகள் மறுபடியும் திரும்பி வந்தது தெற்கே போய் விட்டார்கள். அவர்கள் வடக்கே என்ன நிமித்தியம் போனார்களென்றால் சதுரங்கப் பட்டணத்துக்குப் போய் பட்டணத்திலே கொள்ளையிட்டு உலாந்தாகாரன் பெத்திரியைக் கிட்டப்போனவுடனே உலாந்தாக்காரர் மெலுக்கு வைக்கப்பட்டிருந்த சேவகரைச் சேரப் பிடிச்சு இருநூறு பேர் துப்பாக்கிக்காரராயிருந்து துப்பாக்கிகளெல்லாம் ஒருமிக்கச் சுட்டு, பீரங்கிகளிலேயும் குண்டு போட்டு சுட்டு தீக் குடுக்கைகளையும் கொளுத்தி எறிஞ்சார்கள். அதனாலே மருட்டியர் குதிரை பத்து எட்டு ஓடிவந்து விட்டார்கள். வருகிறபோது வழியிலே நேரிட்ட ஊருகளெல்லாம் கொள்ளையிட்டுக்கொண்டு வெகு பேரை பெண்டுகளைக் கெடுத்துப் போட்டு, வெகு சேதம் பண்ணிக்கொண்டு இந்தப்படியாக வழி முடிய கொள்ளை இட்டுக்கொண்டு தெற்கே போகிறவர்கள் மறுபடியும் மஞ்சக்குப்பம் திருப்பாதிரிப்புலியூரின் பேரிலே புறப்பட்டு போனார்கள்.

1741 ௵ பிப்ரவரி மீ 18 உ-க்கு ரௌத்திரி ௵ மாசி மீ 11உ சனிவார நாள்

இந்தப் பட்டணத்திலே பிறந்த அதிசயம் என்ன வென்றால் நவாபு சப்பிதரல்லிகான் சாயபு அவர்கள் ஆற்காட்டிலே இருக்கிறதற்கு மனது சமாதானமில்லாமல் செட்டிகோட்டைக்கு வருகிறதற்கு எத்தனமாயிருக்கிறாரென்றும் எசமான் தானே ஓடிப்போகிறதாயிருந்தால் மற்றப்பேர் பட்டணத்திலே ஒருவருமிருக்கப் போகிறதில்லை என்றும் திரிச்சிராப்பள்ளி சமாசாரம் எதுவும் தெரியாதென்றும் ஊரிலே வதந்தையாயிருக்கிறது

1741௵ பிப்ரவரி மீ 19 உ-க்கு ரௌத்திரி௵ மாசிமீ 12உ ஆதிவார நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு தஞ்சாவூர் இராசாவினிடமிருந்து வெகுமானம் வந்தது. அந்த வெகுமானத்தின் பிறகே முன் இவ்விடத்திலே வந்திருந்து போன காடவராயனென்றவன் ஒரு பல்லக்குமீது ஏறிக்கொண்டு கூட வந்தான். அதின் பேரிலே இவ்விடத்திலே இருந்து (ா) துரையவர்களுடைய பல்லக்கும் ஒரு கும்பி செலக்காரனும் கனகராய முதலியார், சேஷாசலசெட்டியார், கொடி மேளதாளத்துடனே நமது தோட்டமட்டுக்கும் எதிர்கொண்டுபோய் அழைச்சுக் கொண்டு வந்தார்கள். வந்த உடனே வெகுமானம் (ா) துரையவர்கள் வீட்டிலே கொண்டுபோனவுடனே கோட்டையிலே பதினொரு பீரங்கி போட்டார்கள்.

1741 ௵ பிப்ரவரி மீ 21 உக்கு ரௌத்திரி ௵ மாசி மீ 14 உ செவ்வாய்க்கிழமை நாள்

சாயங்காலம் மூன்று மணிக்குப் பட்டணத்திலே தமுக்குப் போட்டார்கள். அதென்னவென்றால் கூலிவேலை செய்கிற பேர் ஊரிலே எங்கேயும் வேலைக்குப்போகத் தேவையில்லை சகலமானக் கூலிக்காரரும் ஐந்து மணிக்கு கும்பனி வேலைக்கு வருகிறது. வராமல் ஊரிலே வேலைசெய்த பேருக்கு ஆக்கினையும் அபராதமுமென்று தமுக்குப் போட்டார்கள்.

1741௵ பிப்ரவரிமீ 22உக்கு ரௌத்திரி௵ மாசிமீ 15உ புதன்கிழமை நாள்

காலமே 11 மணிக்கு தமுக்குப்போட்ட வயணம் புகையிலைக் கிடங்கிலே (புக) பணம் ஒன்றுக்கு பத்து பலம் புகை

யிலே விற்கிறது. கடைக்காரர் கொண்டுபோய் பணம் 1 க்கு ஏழு காசு விழுக்காடு விற்கிறது, என்று தமுக்குப் போட்டார்கள்.

பிப்ரவரிமீ 23உ மாசிமீ 16உ வியாழக்கிழமை நாள் .........

மணிக்கு மூசே சிஞ்ஞோர் மாயைக்கு (Mahe) துரைத்தனமாய் கப்பலின்பேரிலே ஏறி பயணமாய்ப்போனார். இன்றைய தினம் காலமே ஏழு மணிக்கு பிள்ளையவர்கள் போய் கண்டு பேசி பயணம் அனுப்பிவித்துக்கொண்டு வந்தார்கள்.

பிப்ரவரிமீ 27உ மாசிமீ 21உ செவ்வாய்க்கிழமை நாள்

சாயங்காலம் ஐந்து மணிக்கு தமுக்கு போட்டுவிச்சார்கள். அதென்னவென்றால், சாராயம், கள்ளு முதலாகிய லாகிரி வஸ்து விற்கத் தேவையில்லையென்றும் விற்றவர்களுக்கு—அபராதமென்றும் தமுக்கும் வியாபாரிகள் கள்ளும் விற்கலாகாது

1741ஹு பிப்ரவரிமீ 27உ மாசிமீ 21உ செவ்வாய்க்கிழமை நாள்

மத்தியானம் மூன்று மணிக்கு திருச்சிராப்பள்ளியிலே மருட்டியர்கள் ரகோசிபோசுருவண்டையிருந்து மூன்றுபேர் மருட்டியர் அர்க்கார்கள் கடுதாசி கொண்டுவந்து (ா) துரையவர்களுக்குக் கொடுத்தார்கள். அதிலே வந்த வயணம். ...

1741ஹு பிப்ரவரிமீ 28உக்கு ரௌத்திரிஹு மாசிமீ 22உ புதன்கிழமை நாள்

காலமே உப்பாத்திலே மனைவிட்டவிடத்திலே அவரவர் கட்டிக்கொள்ளுகிற விடத்திலே ஒரு சேவகன் மனையிலே கூலிக்காரனும், கொலுத்துக்காரனும் ஆறு மணிக்குமேல் வேலைக்குவைத்துக்கொண்டானென்று அந்தக்கூலிக்காரனையும் வேலைக்கு வைத்துக்கொண்ட சேவகனையும் காவலிலே வைத்தார்கள். இன்றையதினம் புதன்கிழமை நாள் கோன்சேலிலே தீர்த்து கடுதாசியில் எழுதிவிச்சு கோட்டையிலேயும், சாவடியிலேயும், கெவுனியிலேயும், கோவிலிலேயும் ஒட்டின வயணம் .........இராசாவினுடைய கட்டளைப்படிக்கு புதுச்சேரி பட்டணம் மேலான கோன்சேல்லியேர் உத்தரவுப்படி.

1741 ஆண்டு பிப்ரவரிமீ 27 உக்கு ரௌத்திரிஹு மாசிமீ 21 உ

பிரசித்தமாக சகல சனங்களாகிய வெள்ளைக்காரர் தமிழர் மற்றுமுள்ள கருத்த சனங்களுக்கு அறிவிக்கிறதாவது:—

லாகிரி வஸ்துவாகிய பலவித சாராயவகைகள் கோடை காலமாகிய உஷ்ண காலங்களிலே வாய் கட்டாமல் மிகுதியாய் குடிக்கிறவர்களுக்கு மிகுதியும் வியாதி சம்பவிக்கிறபடியால் இந்த அவசரமான வேலையிலே எங்களாலே ஆனமட்டும் விலக்கினோம். நிற்க உத்தாரமாக கட்டளை இட்டதாவது எந்தச் சாதியிலே எப்பேர்ப்பட்டவர்களாகிலும் மார்ச்சு மாதத்துடக்கி செப்தம்பர் மாதம் வரைக்கும் பிராந்தி சாராயம், லிக்கர் சாராயம், பத்தாவி சாராயம், கொழும்பு சாராயம், கோவை சாராயம், பட்டை சாராயம் மற்றுமுள்ள சுளுக்காகிய சாராயங்கள் விற்றாலும் விற்பித்தாலும் கொஞ்சமானாலும் ரொம்பவானாலும் பின்னை எந்த மார்க்கத்திலேயாவது வழக்கம் பண்ணி இந்த உத்தாரத்தை மீறி நடந்தவர்கள் ஆயிரம் வராகன் அபராதமும் கொடுத்து ஒரு வருஷம் காவலிலே கிடக்கிறது. அபராதம் வாங்கின வராகனில் பிச்சைக்காரருக்கு ஒரு பங்கும் கொடுத்துவிடுகிறது. இந்த உத்தாரத்தை பயமுறுத்தி பிரட்டுகிறதாக எண்ணத்தேவையில்லை. மெய்யாக இந்தக் கட்டளைப்படிக்கு நடத்துவோம் தமிழராவது பறையராவது துரிதாப்பில்லாதவர்களாவது இவர்கள் சொலுதாதுகளுக்காவது பின்னை யாதொருத்தருக்காவது விற்றாலும் கொண்டு வந்து கொடுத்தாலும், கூலிக்கு எடுத்துப் போனாலும் இது சாக்ஷி சாதகத்துடனே அகப்பட்டால், அவர்களை சாவடியிலே கட்டி அடிச்சு வலது தோளிலே சுணக்கி முத்திரை போட்டு குண்டுக்கு வெளியே துரத்திவிடுகிறது. தோட்டங்களிலே வீட்டுக் கொல்லைகளிலே, தென்னமரம் வைத்திருக்கிறவர்கள், எவர்களுக்காகிலும் தோட்டங்களிலேயாவது, வீடுகளிலேயாவது மற்றவிடங்களிலேயாவது கள்ளு ஒரு காசளவிலே வித்தாலும் விற்கச்செய்தாலும் யாரொருத்தர் குடிச்சாலும் குடிக்கச்செய்வித்தாலும் அவர்களுக்கும் முன்னே எழுதியிருக்கிற ஆக்கினையும், அபராதமும்நடக்கும். கள்ளு இறக்கிறவர்கள் காடியாக்கிவித்துக்கொள்ளலாம். பின்னையும் கொம்பினியிலே கட்டளை இப்படியிட்ட உத்தாரமாவது சகலமானவர்களும் அவரவர் வீட்டிலே வைத்துக்கொண்டிருக்கிற முன்னெழுதப்பட்டிருக்கிற பலபலவித சாராயங்களை மூன்று நாளைக்குள்ளாக கிரேபுக்கு வந்து மூசே திமிரேன் கையிலே (M. Desmarets) இவ்வளவு இருக்கிறதென்று வெளியாகச் சொல்லி எழுதுவித்து கையெழுத்துப்போட்டுக் கொடுக்கிறது. இந்த மூன்று நாளைக்குள்ளாக வந்து சொல்லி வெளிப்படுத்தாமல் வைத்துக்கொண்டிருந்தால் அதை எடுத்து இசுப்பித்தாலும் ஷ பிரயோசனப்படுத்தி பின்னையும் இருநூறு வராகன் அபராதமும் வாங்குகிறது கிரேபிலே சொல்லி எழுதி வச்சவர்களுக்குக் கொடுக்கத்தக்கது கொடுத்து மற்றதை கும்பினீர் மங்செனிலே எடுத்துக்கொண்டு அதுக்குள்ள கிரை

யம் கொடுத்துவிடுகிறது. இப்படி சகல சனங்களும் அறிந்து கொள்ளவும், இந்தப்படிக்கு கடுதாசி எழுதி முன்னெழுதப் பட்டிருக்கிற ஸ்தானங்களிலே அங்கங்கே ஓட்டிப்போட் டார்கள்.

1741 ௵ மார்சு ௴ 1 உ-க்கு ரௌத்திரி ௵ மாசி ௴ 23 உ வியாழக்கிழமை நாள்

காமன் பண்டிகை கொண்டாடினார்கள்.

1741 ௵ மார்ச்சு ௴ 2 உ-க்கு ரௌத்திரி ௵ மாசி ௴ 24உ வெள்ளிக்கிழமை நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு முன் 22 உ கொம்சேலிலே தீர்த்து எழுதி சாவடியிலேயும் கோவிலிலேயும் ஓட்டின கடுதாசிப்படிக்கு ஒரு பிரதி கடுதாசி எழுதிக்கொண்டு இன் றையதினம் ஒரு குதிரை மேலே ஒரு வெள்ளைக்காரன்......... ஏறிக்கொண்டு அவர் பிறகே சாவடி மணியக்காரன் அழகப் பிள்ளையும் தமிழிலே எழுதியிருக்கிற கடுதாசியை கையிலே பிடிச்சுக்கொண்டு ஒரு தம்பூறுக்காரனும் கூட இவர்கள் மூணு பேருமாக புறப்பட்டு தெருவுக்கு தெருவு வெள்ளைக்காரத்தெரு கெவுனி எங்கும் திரிஞ்சு அங் கங்கே நின்று குதிரையின் பேரிலே இருக்கிறவன் வெள்ளைக் காரன் பிராஞ்சிலே முன்னே படிக்கிறது பிற்பாடு தமிழிலே எழுதி இருக்கிற கடுதாசியைக் கணக்கப்பிள்ளை படிக்கிறது. பிற்பாடு தம்பூரடிக்கிறது இந்தப்படியாக சாராயம் கள்ளு விற்கலாகாது என்று பட்டணம் எங்கும் தட்டிப் பறை சாத்தினார்கள்.

1741௵ மார்ச்சு௴ 3உ-க்கு ரௌத்திரி௵ மாசி௴ 2 உ சனிவார நாள்

காலமே பதினேரு மணிக்கு குளச்சை இராசாவினண்டை யிருந்து ஸ்தானாதிபதி நாராணப்பய்யன் என்கிறவன் குளச் சையிலிருந்து கலைவழியே வந்து காரைக்காலிலே படகின் பேரிலே ஏறி இன்றையதினம் இராசாவினுடைய வெகு மானம் கொண்டுவந்து (ா) கவானர் துரையவர்களுக்கு கொடுத்து கடுதாசியும் கொடுத்தார். கொடுத்த உடனே கோட்டையிலே ஏழு பீரங்கி போட்டார்கள். அந்த வெகு மானத்தையும் வாங்கிக்கொண்டு கடுதாசியும் படிச்சுக் கொண்டு பேசவேண்டிய பேச்சும் பேசிக்கொண்டு வெகு மானம் கொண்டுவந்த நாராணப்பய்யனுக்கு ஒரு கைப்பாகை யும், சாலுவையும் வெகுமானம் கொடுத்து அனுப்பிவிட்டார்

கன். அவரும் அனுப்பிவிச்சுக்கொண்டு அவ்ருடைய விடுதிக குப் போய்விட்டார். இன்றையதினம் சென்னப்பட்டணத்தி லிருந்து தாண்டவராயப்பிள்ளை வந்தார்.

1741 ஞு மார்ச்சு மூ 4உக்கு ரௌத்திரி ஞு மாசி மீ 26உ ஆதிவார நாள்

மத்தியானம் பதிஞெரு மணிக்கு திரிச்சிராப்பள்ளியிலே மருட்டியரண்டையிருந்து ஒரு அரக்காரமருட்டியன் (ா) துரை யவர்களுக்குக் கடுதாசி கொண்டுவந்தான். அந்தக் கடுதாசியைக் கவுனிவாசலிலே கண்ட உடனே அவனை அழைச்சுக்கொண்டு போய் துரையவர்கள் முன்பாக விட்டார்கள். விட்ட உடனே அந்தக் கடுதாசியைக் கொடுத்தான்.

1741 ஞு மார்ச்சு மீ 15 உ-க்கு தமிழ் ரௌத்திரி ஞு பங் குனி மீ 6 உ புதன்கிழமை நாள்

இந்தப் பட்டணத்திலே நடந்த சேதி என்னவென்றால் திரிச்சிராப்பள்ளி கோட்டைக்குள்ளேயிருந்த கிசுமத்துக் காரர் ஊழியக்காரர் செவிச்சபேர்கள் மசால்சிகள் பின்னை யும் வெகு சனம் கோட்டைக்குள்ளே இருக்கிறதுக்கு நிரு வாகமில்லாமல் வெளியே புறப்பட்டு வந்து அவரவர் தங்க ளுக்குச் சம்மதியான இடங்களிலே சேவகம் எழுதிக்கொண் டார்கள் அதிலே அஞ்சாறுபேர் கிசுமத்துக்காரரும் மசால்சி களும் அவ்விடத்திலே இருக்கிற சந்தா சாயபு மாலுக்கு வந்து இன்றையதினம் சேந்தார்கள். அவர்கள் சொன்ன சேதி என்னவென்றால் கோட்டைக்குள்ளே ஆனால் நிருவாகமில்லை. ரஸ்துக்களுமில்லை; அரிசி கிடையாமல் பட்டினியே கிடக் கிறார்கள். அப்படியிருந்தும் அப்பட்டணத்துக்குள்ளே யிருக் கப்பட்ட வீடுகளெல்லாம் ஆராய்ந்துயிருந்த தானியமெல்லாம் சாடாவாய்ப் போச்சுது. இதின் பிறகு ஒரு பட்டாணியன் வீட்டிலே கொஞ்சம் தானியமிருந்தது எடுத்து வெளியே போட்டு ரூபாய்க்கு பக்கா சேர் 1 அரிசியும் வித்து தீர்த்து அதுவும் இரண்டுநாளுக்கு கண்டது. இருக்கிற எசமானகளும் தீர்த்துக்கொண்டார்கள். இனிமேலானால் நிருவாகத்திற்கு வருகிறதில்லை. பீருலுபண்டி ஒன்பது நாளும் கழிச்ச மறு நாள் வெளியே புறப்பட்டு சண்டைபண்ணி சாகிறதொண்ணு பிழைக்கிறதொண்ணு என்றும் அதுவே அல்லாமல் வேறே நிருவாகமில்லை என்கிறதாய் கெட்டியாய் தீர்க்க யோசனை யாயிருக்கிறார்கள் என்று வந்து சொன்னார்கள்.

இந்தச் சேதி சந்தா சாயபு மகலிலே கேட்ட உடனே ரொம்பவும் அங்கலாச்சுக்கொண்டு தாபந்தப்பட்டுக்கொண்டு

யிருக்கிறார்கள். இதல்லாமல் இதுக்குமுன் அஞ்சாறு நாளைக்கு முன்னே நடந்த சேதி திரிச்சிராப்பள்ளி கோட்டைக்குள்ளே யிருக்கிற சந்தா சாயபு தமக்கு நிருவாகமில்லாமல் ஒரு கடுதாசி எழுதி சப்பித்தரல்லிகான் மோரசாவிலே போட்டாராம். அந்தக் கடுதாசியை அவர்கள் எடுத்துக்கொண்டு போய் சேர்த்துப் பட்டிலேயிருக்கிற சப்பித்தரல்லிகான் கையிலே கொடுத்தான். உடனே அவர் அதை வாசித்துக் கொண்டார். அதிலே எழுதியிருக்கிறசேதியானால் மருட்டியர் கோட்டை நெருங்கிவந்துபோனார்கள் வெகு முத்திக்கையாயிருக்கிறது இனிமேலே இனி என்னாலே ஒன்றும் நிருவாகத்துக்கு வருகிறதில்லை. இந்த வேளை நீங்கள் அவர்களுக்கு உபேக்ஷயாயிருந்தால் இனிமேல் என்னைக் காணமாட்டீர்கள். என்றும் கண்டிதமாய் எழுதியிருந்ததாம். அவர் அதைப் பார்த்துக் கொனார் மமுதலியை அழைத்தனுபவித்து காரியமானால் இப்படி நிருவாகம் தப்பியிருக்குதே, சிறிது திரவியமாகிலும் கொடுக்க உடன்படிக்கை பண்ணிக்கொண்டே அவர்களை பிராணத்தோடே வெளியே விட்டுவிடத்தக்கதாக ஆகிலும் யேற்படுத்துவோம் என்று யோசனைபண்ணி இருபத்து இரண்டு லக்ஷம் ரூபாய் கொடுத்தால் அந்தப்படிக்கு மருட்டியர் சம்மதிப்பார்களென்று பேசிக்கொண்டு இதுக்கு சப்பித்தரல்லி 5 லக்ஷமும் சப்பித்தரல்லிகான் தாயார் 5 லக்ஷமும் சந்தா சாயபு பெண்சாதி 5 லக்ஷமும் படே சாயபு பெண்சாதி 5 லக்ஷமும் போனார் மமுதலி ஒரு லக்ஷமும் அல்லினக்கிப் சாயபு ஒரு லக்ஷமும் ஆக இருபத்து இரண்டு லக்ஷம் பிரிவு எழுதிக்கொண்டு இந்தப்படிக்கு இவ்விடத்திலே யிருக்கிற சந்தா சாயபு பெண்சாதி படே சாயபு பெண்சாதி இரண்டு பேரும் எழுதி அனுப்பினார்கள். அதுக்கு இவர்கள் எழுதின உத்திரவு எசமான் உத்தாரமில்லாமல் கொடுக்கிறதில்லை என்று எழுதிவிட்டார்கள். இந்த மட்டிலே இருக்கிறது இராசகாரியம்

1741 ஹு மார்ச்சு மீ 16 உ ரௌத்திரி ஹு பங்குனி மீ 7 உ வியாழக்கிழமை நாள்

மணிக்குமேல் துரையவர்கள் ஒரு கரைக்கு போனார்கள். அவ்விடத்திலே நடந்த சேதி என்னவென்றால்.....

1741 ஹு மார்ச்சுமீ 21உ ரௌத்திரி ஹு பங்குனிமீ 12 உ செவ்வாய்க்கிழமை நாள்

மத்தியானம் மூன்று மணிக்கு வேலூரிலே யிருந்து போனார் மமுதல்லியும் டக்கே சாயபு குமாரன் அல்லினக்கீம்

சாயபும் இரண்டு பேரும் வந்தார்கள். வரச்சே கோட்டை யிலேயிருந்து கனகராய முதலியார் ஒரு கும்மிசெல்காரன் முத்தியா பிள்ளையும் கொம்பு தமுக்கு மேளத்துடனே எதிர்போகச்சே அவர்களுக்கு நிண்ணு மெதுவிலே வருகிற துக்கு கூடயில்லாமல் அவதிப்பட்டு ஓடி வருகிறாப்போலே எதிர்கொண்டு போனவர்கள் கெவுனிக்கு வெளிப்படுகிற துக்கு முன்னமே அவர்கள் உள்ளே வந்துவிட்டார்கள். அவர்கள் என்ன காரியமாய் வந்தார்கள் என்றால் சந்தா சாயபு திருச்சிராப்பள்ளி கோட்டைக்குள்ளே அகப்பட்டுக்கொண்டு மருட்டியர் முத்திக்கையினாலே ரொம்ப அவதிப்பட்டு பிராணனை போக்கடிச்சுக்கொள்ளுகிறதா யிருக்குதென்றும், மருட்டியருக்குப்பணங்காசுஎவ்வளவாகிலும் கொடுத்து சமாதானம் பேசினால் பிராணன் மாத்திரமாகிலும் தப்பவிட்டார்களாயென்று சந்தா சாயபு படேசாயபு இரண்டு பேர் பெண்டுகளையும் பணம் கேட்டனுப்பிவிச்சதுக்கு இவர்கள் கொடுக்கிறதில்லையென்று சொன்னபடியினாலே இவர்கள் இரண்டுபேரும் வந்தார்கள் என்று சொன்னார்கள்.

1741 ௵ மார்ச்சு ௴ 22௳ ரௌத்திரி ௵ பங்குனி ௴ 13 ௳ புதன்கிழமை நாள்

சாயங்காலம் எட்டு மணிக்கு போளூர் மமுதல்லியும் அல்லினக்கிம்சாயபுர் இரண்டுபேரும் பயணம் புறப்பட்டு வேலூர் கோட்டைக்குப் போய்விட்டார்கள்.

1741 ௵ மார்ச்சு ௴ 25௳ ரௌத்திரி ௵ பங்குனி ௴ 16௳ சனிவார நாள்

காலமே பத்து மணிக்கு சென்னப்பட்டணம் தாண்டவ ராயப்பிள்ளை சென்னப்பட்டணத்துக்குப் போகிறதுக்குப் பயணப்பட்டு நம்முடைய பாறுவத்தலின்பேரிலே ஏறி பயண மாய்ப்போனார்.

மார்ச்சு ௴ 26௳ பங்குனி௴ 17௳ ஆதிவார நாள்

மத்தியானம் சீனமக்கா கப்பல் ஒன்று வந்தது.

1741 ௵ மார்ச்சு ௴ 27௳ ரௌத்திரி ௵ பங்குனி ௴ 18௳ திங்கள்கிழமை நாள்

காலமே பத்துமணிக்கு திரிச்சிராப்பள்ளி மருட்டியர் லசுக்கரிலேயிருந்து பிராஞ்சுக்காரருடை வக்கீல் இவ்விடத் திலே யிருக்கிற (ா) துரையவர்களுக்கு எழுதியனுப்பின கடு தாசி வயணம் என்னவென்றால் மதுரையிலேயிருந்த படே சாயபு கோட்டைவிட்டு புறப்பட்டு திண்டுக்கல் கோட்டை யிலே நாலாயிரங்குதிரையுடனே வந்து இறங்கி இருந்தார்

என்றும், ஒரு நாள் மருட்டியர் இரண்டாயிரங்குதிரையுடனே சண்டைக்குப்போன விடத்திலே படேசாயபு வெளியே புறப்பட்டு சண்டை பண்ணினவிடத்திலே மருட்டியர் முறிஞ்சு ஓடிவந்து விட்டார்கள் என்றும், அதன் பேரிலே படேசாயபு வந்து 11 உ திங்கட்கிழமை நாள் மணல்பாறையண்டை வந்து இறங்கினதாகவும் அந்த கபுறு மருட்டியர் ரகோசி போசுருவும் பதினாயிரங்குதிரையும் புறப்பட்டு திரிச்சிராப்பள்ளிக்கு மேற்கே முக்காதவழியிலே இருக்கிற மணப்பாரையிலே இறங்கி இருந்த படேசாயபை சுத்திக்கொண்டு 12 உ செவ்வாய்கிழமை நாள் காலமே சூரியனுதயம் துவக்கி மூன்று சாமமட்டுக்கும் சண்டைபண்ணினார்கள். மருட்டியரிலேயும் இரண்டாயிரம் மூவாயிரங்குதிரை விழுந்தது படேசாயபு தளத்திலேயும் 2000, 3000 குதிரை விழுந்துபோய் படேசாயபும் மருட்டியரும் நல்ல சண்டை பண்ணி படேசாயபுக்கு துப்பாக்கி காயம் இரண்டும் அம்புக்காயம் இரண்டு கத்திக்காயம் ஒன்றும் பட்டு விழுந்துபோனான். அவனுடைய அக்காள் மருமகன் சாதக்கசாயபு என்கிறவனும் ஒரு சமேதார் ஒருத்தன பெரிய மனுஷனும் இவர்கள் விழுந்த உடனே துலுக்கனுடைய படைமுறிஞ்சு ஓடிப்போனதின் பேரிலே மருட்டியர் ரணகளம் சோதிக்கச்சே முன் எழுதப்பட்டிருக்கிறமூன்று பேரும் செத்துப்போய் கிடக்கிறதைக்கண்டு படேசாயபை மாத்திரம் எடுத்து பல்லக்கின்பேரிலே போட்டு ரகோசி போசுரு திருச்சிராப்பள்ளி கோட்டைக்கு சந்தாசாயபு அண்டைக்கு அனுப்பிவிட்டார் என்று இப்படியாக (ா) துரையவர்களுக்கு எழுதிவந்து இந்தச் சமாசாரத்தைப் படேசாயபு மாலிலேயும் சந்தாசாயபு மாலிலேயும் போய்ச்சொல்லிப் போட்டு வரச்சொல்லி கனகராய முதலியாரையும் முத்கியா பிள்ளையும் இரண்டு பேரையும் அனுப்பிவிச்சார். அவர்கள் வந்து இந்தச் சமாசாரம் சொன்னவுடனேபடேசாயபுமாலிலே துலுக்கச்சிகள் எல்லாருமாய்க்கூடி கூக்குரல் போட்டு அழுது அங்கலாச்சுக்கொண்டிருந்தார்கள். சந்தாசாயபு பெண்சாதியும் படேசாயபு மாலுக்கு வந்து அழுதாள். மற்றப்படி பெரியமனுஷர் வீட்டுப்பெண்டுகள், இவ்விடத்திலே இறங்கி இருக்கப்பட்டபேர் சகலமானபேரும் வந்து மௌனவினார்கள். துலுக்கரெல்லாம் வந்து தெருவிலே கும்பல் கூடிக்கொண்டு யேக சப்தமாய் கூவி அழுதார்கள். இன்றயதினம் இப்படி நடந்தது

**1741.** ஹு மார்ச்சு மீ **28** உ ரௌத்திரி ஹு பங்குனி மீ **19** உ செவ்வாய்க்கிழமை.

இந்த நாள் சேத்துப்பட்டிலேயிருந்து சந்தாசாயபு மாலுக்கு கடுதாசி வந்தது அந்தச்சேதி என்னவென்றால் படே சாயபுக்கு காயம் மாத்திரம் பட்டு பிழைச்சுயிருக்கிறார் என்று எழுதிவந்தது என்று சொன்னார்கள்.

**1741** ௵ மார்ச்சு மீ˘ **29** உ ரௌத்திரி ௵ பங்குனி மீ˘ **20**உ புதன்கிழமை நாள்

*சாயங்காலம் மீராபள்ளியிலே ஒரு கிலாசுக்காரன் சாராயத்தைக் குடிச்சுப் போட்டு தன்பெண்சாதியை கத்தியினலே குத்திக் கொன்றுபோட்டான். அவனைப் பிடிச்சு காலுக்கும் கைக்கும் விலங்குபோட்டு கோட்டைகிடங்கிலே போட்டு விச்சார்கள்.*

மார்ச்சு மீ˘ **30** உ பங்குனி மீ˘ **21** உ வியாழக்கிழமை

*மத்தியானம் 11 மணிக்கு திரிச்சிராப்பள்ளியிலே மருட்டியர் தண்டியிலேயிருந்து பிராஞ்சுக்காரருடைய வக்கீலும் நாம் அக்கீழும் Roman Physician எழுதின கடுதாசி (ா) துரையவர்களுக்கு வந்தது. அந்த கடுதாசியிலே எழுதி இருந்த வயுணமென்னவென்ருல் பங்குனி மீ˘ 16 உ சனிவார நாள் ரகோசி போசுரு பாளையக்காரர் மறவன் தொண்டைமான் மனுஷர் கள்ளர் பெண்டியள். இவர்களை அழைச்சு கோட்டையின்பேரிலே லக்கை ஏறச்சொல்லி உத்தாரங் கொடுத்தஉடனே அவர்கள் எல்லாரும் ஒரு மிச்சு லக்கை ஏறிஞர்கள். அதின்பேரிலே கோட்டைக்குள்ளே இருக்கிற சந்தா சாயபு யோசனைபண்ணி இனிமேலிருந்தால் பிராண சேதம் வருமென்று சொல்லி பட்டாணியன் பெரிய மனுஷன் முன்னிலையாய் சந்தா சாயபு இராசாவிடம் பேசி சந்தாசாய்பு பனிரெண்டு லக்ஷம் ரூபாய் மருட்டியருக்கு கொடுக்கவும், சந்தாசாயபை பிராணசேதமில்லாமல் வெளியிலேவிடவும் உடன்படிக்கை பண்ணிக்கொண்டு அன்றையதினம் சனிவார நாள் இராத்திரி பதினைந்து நாழிகைக்கு கோட்டையைவிட்டு வெளியே சந்தா சாயபும் அவர் குமாரன் அபீத்து சாயபும் அவருட மருமகன் கான்பகதூரும், செரீபுசாயுபும் இவர்கள் நாலுபேரும் புறப்பட்டு மருட்டியன் தண்டிலேபோய் ரகோசி போசுருவை சந்திச்சார்கள். அவரும் இவர்களைக்கண்ட மாத்திரத்திலே பின்னே ஒன்றும் சொல்லாமல் அவர்கள் கையிலேயிருந்த கத்திகளை வாங்கி வைத்துக்கொண்டு தண்டிலே தானே மரியாதைக் காவலாய்த்தானே வைத்துக்கொண்டு இருக்கிருர்களென்றும், மருட்டியர் திருச்சிராப்பள்ளிக் கோட்டையிலே சண்டைப்போடடார்களென்றும் இப்படியாக உத்த கபுரு எழுதிவந்தது. இந்தக் கடுதாசியைப் பார்த்துக்கொண்டவுடனே (ா) துரையவர்களும் ரொம்பவும் அங்கலாச்சுக்கொண்டு அந்தக் கடுதாசியை கனகராய முதலியார் கையிலே கொடுத்து சந்தாசாயபு மாலிலே கொண்டுபோய் படிச்சுக காண்பித்துவரச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அந்தப்*

படியே கனகராய முதலியார் போய் படித்து காண்பித்திருந்த சமாசாரம் சொன்ன உடனே அவர் பெண்சாதி கேட்டுமெத்தவும் அழுது அங்கலாய்த்துக்கொண்டிருந்தாள். இன்றைய தினம் சாயங்காலம் நாலுமணிக்கு சேத்துப்பட்டலேயிருந்து சந்தாசாயபு மாலுக்கு பயண ஒட்டகம் ஒன்று வந்தது. அந்த ஒட்டகம் வந்த சேதி என்னவென்றால் சந்தா சாயபு மருட்டியர் கையில் அகப்பட்டு போனார் என்றும் மருட்டியர் திரிச்சிராப்பள்ளிக் கோட்டையைப் பிடித்துக்கொண்டு சண்டைப் போட்டார்களென்றும் இப்படி எழுதி வந்ததாகச் சொன்னார்கள்.

இன்றை தினம் சப்பித்தரல்லிகானண்டையிருந்து (ா) துரையவர்களுக்கு கடுதாசி அருக்காருகள் கொண்டுவந்து கொடுத்தார்கள்.

*1741* மார்ச்சு மீ *30* உ. ரௌத்திரி ஹு பங்குனி மீ *21* ௳. வியாழக்கிழமை

இந்தநாள் சாயங்காலம் *4* மணிக்கு மணிலா விலே இருந்து சின்ன சுங்குராம் என்கிற கப்பல் ஓடி வந்துவிச்சுப் பிடிச்சான்.

**1741** ஏப்ரல் மீ **3** உ ரௌத்திரி ஹு பங்குனி மீ **24** உ ஆதிவார நாள்

மத்தியானம் இவ்விடத்திலேயிருந்து நாலு பேர் கும்பனி சேவகர் (ா) துரையவர்களுடைய கடுதாசி ரகோசி போசுறுவண்டைக்கு கொண்டுபோனார்கள்.

துர்மதி ஹு சித்திரை மீ ௱கல் தேதி ஆதிவாரம் நாள்
*1741* ஏப்ரல் மீ *10*, உ
ஏப்ரல் மீ *13* உ க்கு சித்திரை மீ **4** உ புதவார நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு சிதம்பரம் மமுதுகான் சாயபு அவர்களுடைய குமாரன் ........ சென்னப்பட்டணத்துக்குப் போகிறதுக்காக இவ்விடத்துக்கு வந்தார். முத்திய பிள்ளையவர்கள் எதிர்கொண்போய் அழைத்துக்கொண்டு வந்து முத்தியபிள்ளையவர்கள் வளவிலே இறங்கினார்கள்.

ஏப்ரல் *14* உ க்கு சித்திரை மீ **5** உ

மமுதுகான் குமாரன் சென்னப்பட்டணத்துக்கு போய் விட்டான்.

1741 ஹு ஏப்ரல் மீ 14உ துர்மதி ஹு சித்திரை மீ 5உ

கனகராய முதலியாருக்கு உசேன் தாயார் ஒரு பல்லக்கு கொடுத்தனுப்பினார். அந்தப்பல்லக்கின் பேரிலே ஏறிக் கொண்டு (ா) துரையவர்களண்டைக்குப் போனார். அவர் பார்த்து நல்லது ஏறிக்கொள்ளும் என்று உத்தாரம் கொடுத் தார்கள். அந்தப் பல்லக்கு வெள்ளி முஸ்தீது சகல சாமான் கள்கூட விலை வராகன் 100 – 150 பெறுமென்று சொன்னார் கள். அவரே துயிலருக்கு கொடுத்த தென்றால் அவர்கள் வீட்டு பெண்டுகள் இவருடைய வீட்டிலே குடியிருக்கிறபடி யினாலே குடிக்கூலிக்குப்பதிலாய் இப்படிச் செய்தார்கள்.

ஏப்பல் 15உ சித்திரை மீ 6உ வெள்ளிக்கிழமை நாள்

சாயங்காலம் ஐந்து மணிக்கு கான்பகதூரும் அக்கீம் சாயபும் இரண்டு பேரும் மருட்டியர் குதிரை 200 - 250 குதிரையுடனே வந்து மருட்டியர் குதிரைகளெல்லாம் வெளி யிலே வில்லியநல்லூரண்டை வச்சுப்போட்டு கான்பகதூரும் அக்கீம்சாயபும் இரண்டுபேரும் கெவுனிக்குள்ளே வந்தார் கள். வரச்சே கெவுனியிலே பதினஞ்சு பீரங்கி போட்டார் கள்:

1741 ஹு ஏப்ரல் மீ 18 உ துர்மதி ஹு சித்திரை மீ 9உ திங்கட்கிழமை நாள்

சாயங்காலம் ஐந்துமணிக்கு திருச்சிராப்பள்ளியிலே இருந்து மருட்டியர் ரகோசிபோசுருவுடைய வெகுமானம் சீர்ப்பாவும் பத்தெசிங்குனுடைய வெகுமானம் சீரொப்பாவும் பர்வாணாவும் வந்து நம்மிட தோட்டத்திலே இறங்கியிருந்து (ா) துரையவர்களுக்குச் சொல்லி அனுப்பினார்கள். அதின் பேரிலே இவர்களும் வெகு சந்தோஷத்துடனே கோட்டை யிலே இருந்து கொடியுடனே இரண்டுபேர் கொம்பி செல்க் காரர் இரண்டு பல்லக்கின்பேரில் ஏறிக்கொண்டு வெகுமானம் வைத்துக்கொண்டுவர இரண்டு பல்லக்கும் இதல்லாமல் கனக ராயமுதலியார்,ஆனந்தரங்கப்பிள்ளையவர்கள்,முத்தியாபிள்ளை திருவேங்கடபிள்ளை, சேஷாசலசெட்டியாரும் அக்கீம், பின்னை யும் வர்த்தகர் பத்துப்பனிரெண்டு குதிரையுடனே கூட மேள தாளம் கொம்பு தமுக்கு சகலசம்பிரமத்துடனேயும் புறப்பட்டு எதிர்கொண்டுபோய் வெகுமானத்தை இரண்டு பல்லக்கிலே யும் வைத்துக் கொண்டுவரச்சொல்லி வரச்சே கெவுனியிலே 9 பீரங்கிபோட்டு அப்புறம் (ா) துரையவர்களண்டையிலே

கொண்டுபோன உடனே 11 பீரங்கியும் போட்டார்கள். வீட்டில் பண்டிதரையும் அவருடைய குமாரனையும் விட்டு விடச் சொல்லி வெகுமானம் கொண்டுவந்ததை தஸ்தானுமதி கேட்டுக்கொண்டார். அதின்பேரிலே இவர்களும் யோசனைபண்ணி மருட்டியருக்கும் நமக்கும் ராசியாப்போச்சுதே மருட்டியர் வெகுமானமும் அனுப்பினார்களே என்கிற சந்தோஷத்தினாலே வீட்டில் பண்டிதரையும் அவருடைய குமாரனையும் விட்டு விட்டார்கள், அவர்கள் தங்கள் வீட்டுக்கு வந்து ஸ்னானம் செய்து கோவிலிலே திருவிளக்குவைத்து உண்டானமட்டும் தானதர்மமும் செய்து தாங்கள் குடியிருந்த வீட்டையும் ஒரு பிராமணனுக்குத் தானம் பண்ணிப்போட்டு இருக்கிற தட்டுமுட்டெல்லாம்மாட்டின்பேரிலேகண்டாளம் போட்டுக்கொண்டுபெண்டு பிள்ளைகளையும் அழைத்துக்கொண்டு 12 ந்தேதி மத்தியானம் 12 மணிக்கு இவ்விடத்திலே இருந்து புறப்பட்டுப்போனார்கள். இதுக்குள்ளே இவர்கள் என்ன யோசனை பண்ணிக்கொண்டார்களோதெரியாது. நாலுமணிக்கு முத்தியாபிள்ளையவர்களை அழைச்சு வீட்டில் பண்டிதன் வெளியே போட்டால் நம்மிட உத்தாரமில்லாமல் எப்படி விடுவாய் நமது எச்சரிக்கை தேவையில்லையா? என்றும் இந்தக்ஷணம் அவனைக்கொண்டு வந்து ஒப்பித்தலாச்சுது, இல்லாவிட்டால் அந்த நேரம்உன்பேரிலே செமரும் என்கிறதாய் கண்டிப்பாய்ச் சொன்னார்கள். அவரும் தாம் தப்பித்துக்கொண்டுசொல்லத்தக்க விஷயமெல்லாம் சொல்லிப் பத்துப்பேர் குப்பனீர்ச் சேவகரை அனுப்பிவித்து எந்தமட்டுக்கும் போனாலும் மறுபடி திருப்பிக்கொண்டு வரச்சொல்லி அனுப்பிவித்தார் வீட்டில்பண்டிதர் ஒழுகரைக்கிட்ட போகச் சேசேவகர்போய்பிடித்தார்கள் அழைத்தால்நான் வருகிறதில்லை என்று மல்லுக்கட்டிக் கொண்டிருக்கச்சே அவ்விடத்திலே இறங்கி இருந்த மருட்டியக் குதிரைக்காரர் வந்து அவரையும் தள்ளிக்கொண்டு இங்கேயிருந்துபோன சேவகரையும் பிடித்துக்கொண்டு வில்லியநல்லூர் ஆத்திலே இறங்கியிருக்கிற தண்டுக்குள்ளே வைத்துக்கொண்டார்கள். பிறகு இவ்விடத்திலேயிருந்துபோன இரண்டு பேர் சேவகரும் இந்தச் சமாசாரம் கேட்டு புறப்பட்டு ஓடி வந்து (ா துரையவர்களுடனே கபுறு சொன்னார்கள். அதின் பேரிலே குமிசல்கூடி இராத்திரி எட்டரை மணிக்கு மேலண்டை கெவுனியண்டை யிருக்கிற முத்தையா பிள்ளையை அழைச்சுக்கொண்டுவர கோட்டையிலேயிருந்து ஆறு சொலுதாதும் சேவகருமாய்ப்போய் அழைச்சுக் கொண்டு கோட்டையிலே (ா துரையவர்கள் முன்னே விட்டார்கள் அவரைக்கொண்டு போய் மணிக்கூண்டின் பேரிலே காவல் வைக்கச் சொன்னார்கள். அந்தப்படியே குண்டு போடச்சே கொண்டுபோய் காவல் வைத்தார்கள. காவல் பண்ணின நாள் முதல் சாப்பாட்டுக்கு வெளியே விட்டதில்லை. ...லகாரம் சாப்பிட்டுக்கொண்டு வருகிறார்.

1741 ௵ ஏப்ரல் ᏽ 23 உ துர்மதி ௵ சித்திரை ᏽ 14 உ சனிவார நாள்

காலமே இவ்விடத்திலே யிருந்து கனகராய முதலியார் மைத்துனன் அழகப்பன் என்கிறவனை வில்லியநல்லூருக்குப் போய் விட்டில்பண்டிதரை அழைத்துக்கொண்டுவரமாருட்டிய ரண்டைக்கு ஸ்தானுபத்தியம் போகச்சொல்லி சிறிதுபேர் கும்னிர் சேவகரையும் கூடக்கூட்டி அனுப்பிவித்தார்கள். இவர்கள் போனவுடனே இந்தச்சேதி கேட்டமாத்திரத்திலே இவ்விடத்திலேயிருந்து போனபேரைக்காவல் பண்ணிக் கொண்டார்கள் அதின்பேரிலே இந்த நாள் சாயங்காலம் நாலுமணிக்கு அந்தக்கபுறு இவர்கள் கேட்டு இந்த ஊருக்குள்ளே வர்த்தகம் பண்ண வந்திருந்த மருட்டியர்கள் முப்பதுபேர் இருந்தார்கள். அவர்கள் யாரென்றால் அக்கிம்சாயபு வரச்சே கூடவந்த பேர். அவர்களெல்லாரையும் பிடிச்சு முத்திரைச்சாவடியிலே காவல்வைத்து கும்பனி சேவகரும் வெள்ளைக்காரர் பதினஞ்சு பேர் சொல்தாதுமாய் காவலிலிருந்தார்கள். இதல்லாமல் மருட்டியர் ஸதானுபதி இவ்விடத்திலேயிருந்தவனையும் காவல் பண்ணினார்கள்.

1741 ஆண்டு ஏப்ரல் ᏽ 24 உ துர்மதி ௵ சித்திரை ᏽ 15 உ ஆதிவார நாள்

இவ்விடத்திலேயிருந்த மருட்டியர் ஸ்தானுபதி இந்தச் சமாசாரமெல்லாம் எழுதி அனுப்பினான். (சித்திரை ᏽ 12 உ வியாழக்கிழமை தினம் சாயங்காலம் பட்டணத்தைச் சுத்தி யிருக்கப்பட்ட கெவுனியெல்லாம் சாத்திப்போட்டு திட்டி மாத்திரம் விட்டு வெளியிலேயிருந்து வருகிற பேரையெல்லாம் உள்ளே விட்டுவிடுகிறது. இவ்விடத்து மனுஷர் ஒருத்தரும் வெளியே போகப்போகாதென்று திட்டம் பண்ணினபடிக்கு வெள்ளிக்கிழமை சனிவார நாள். இரண்டு ஒருத்தரையும் விடவில்லை, இன்றையதினம் காலமே மருட்டியர் பிடித்து வைத்துக்கொண்டிருந்த அழகப்பனைவிட்டு அனுப்பிவிட்டார்கள். அதன்பேரிலே இவர்கள் காவல் பண்ணிவைத்திருந்த மருட்டியரையும்விட்டு கெவுனிக்கப்புறம் கொண்டுபோய் விட்டுவிட்டு கெவுனி சாத்தி திட்டிவாசல் விட்டிருக்கிறபடிக்குத்தானே மேற்கு கெவுனிமாத்திரம் பத்து மணிக்குமேல் போக்குவரத்தா யிருக்கிறபேரை விட்டு இதுக்குள்ளே மருட்டியனென்கிறவனையும் பண்டாரங்கள் சன்னியாசிகள் பிராமணர் இவர்களை மாத்திரம் விடப்போகாதென்று திட்டம் பண்ணினார்கள்.

1741 ஆ ஏப்ரல் மீ 25 உ துர்மதி ஆ சித்திரை மீ 16 உ திங்கட்கிழமை நாள்

வடக்கு கெவுனியும் மேற்கு கெவுனியும் போக்குவரத் தாய்விட்டார்கள்.

1741 ஆ ஏப்ரல் மீ 26 உ சித்திரை மீ 17 உ செவ்வாய்க்கிழமை நாள்

இரண்டு மூன்று கதவும் பெரிய வாசல் திறந்துவிட்டார்கள். இந்த நாள் மருட்டியர் 20 குதிரைக்காரர் 12 மணிக்கு திறந்துவிட்டார்கள். அவர்கள் வந்ததென்றால் வீட்டில் பண்டிதரை எது நிமித்தியம் அழைத்தனுப்பினீர்கள் என்று (௱) துரையவர்களைக் கண்டு பேசவந்தார்கள் அவர்கள் வந்து மூலைத்தோட்டத்திலே இறங்கியிருந்து சாயங்காலம் ஐந்து மணிக்கு (௱) துரையவர்கள் வீட்டிலே 30 பேர் சொலுதாதுகள் வாசலிலே இரண்டு பக்கமும் வரிசை நின்றார்கள். அந்த வரிசைக்குள்ளே போய் துரையவர்களை பேட்டி பண்ணிக்கொண்டார்கள். அவ்விடத்திலே நடந்த சேதி நடந்து விட்டால் பண்டிதரை அழைச்சுக்கொண்டு வருகிறோம் என்று சொல்லிக்கொண்டு அனுப்பிச்சுக்கொண்டு வெளியே புறப்பட்டு சமுததிரம் போய் பார்த்துப்போட்டு அந்நேரமே ராயசம் சீனப்பய்யர் கூடப்போய் கெவுனிக்கு வெளியிலே விட்டுப் போட்டு வந்துவிட்டார்.

1741 ஆ ஏப்ரல் மீ 27 உ துர்மதி ஆ சித்திரை மீ 18 உ புதன்கிழமை நாள்

சாயங்காலம் வில்லியநல்லூரிலே யிருந்து மராட்டியர் சொல்லியனுப்பின சேதி என்னவென்றால் வீட்டில் பண்டிதரை அழைத்துக்கொண்டு வருகிறோம் என்று சொல்லி அனுப்பினார்கள் அதின் பேரிலே (௱) துரையவர்களும் மற்ற கொம்பிசேலியரும் ஒரு இஸ்த்தாங்கி சொலுதாதுகளும் மேற்கு வாசலிலே போய் காத்துக்கொண்டிருந்தார்கள். அதின் பேரிலே மருட்டியர் வீட்டில் பண்டிதரை அழைத்துக் கொண்டு ஒழுகரைக்கிப்புறம் வந்து குண்டுத்தாழைக்கு வெளியிலே எல்லப்பன் சாவடியிலே இருந்துகொண்டு சொல்லி அனுப்பின சேதி என்னவென்றால் நாங்கள் வீட்டில் பண்டிதரை அழைச்சுக்கொண்டு வருகிறதுக்கு எங்கள் மனதுக்கு நம்பிக்கையாயிருக்கவில்லை. ஆனபடியினாலே தங்களிடத்திலே யிருக்கிற கனகராய முதலியாரையாவது ஒரு பாதிரியாரையாவது ஒரு கும்மிசெல்க்காரரையாவது மூன்று பேரிலே ஒருத்தரை அனுப்பிவிச்சால் வீட்டில் பண்டிதரை அனுப்பிவிக்

கிறேம். தாங்கள் பேசவேண்டிய பேச்சைப் பேசிக்கொண்டு அவரை அனுப்பிவித்த பிறகு இவர்களை அனுப்பி விடுகிறோ மென்று சொல்லி அனுப்பினார்கள். அந்த மட்டிலே இவர்கள் புறப்பட்டு வந்துவிட்டார்கள்.

1741 ஹு ஏப்ரல் 29 உ துர்மதி ஹு சித்திரை மீ 19 உ வியாழக்கிழமை நாள்

காலமே பின்னை ஒன்றும் விந்தைகள் நடந்ததில்லை.

1741 ஹு ஏப்ரல் மீ 29 தேதி ரௌத்திரி ஹு சித்திரை மூ 20 உ வெள்ளிக்கிழமை நாள்

காலமே விட்டில்பண்டிதரும் முப்பது நாற்பது மருட்டியர் குதிரையுமாக நமது தோட்டத்தண்டையிலே வந்து இருந்துகொண்டு சொல்லி அனுப்பினார்கள். பத்து பதினைந்து குதிரையுடனே உள்ளே வரச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அப்படியே பதினைந்து குதிரையுடனே-10-மணிக்கு கெவுனிக்குள்ளே வந்தார்கள் வந்தவர்களுக்கு சேஷாசல செட்டியாரது மூலை தோட்டத்திலே விடுதி விட்டார்கள்.

1741 ஹு அவ்ரீல் மீ 29 உ துர்மதி ஹு சித்திரை மீ 20 உ வெள்ளிக்கிழமை நாள்

சாயங்காலம் -5-மணிக்குமேல் விட்டில்பண்டிதர் (ஈ) துரையவர்களுடன் பேட்டிக்கு வந்தார்கள். வந்தவிடத்திலே துரையவர்கள் வ்ளவிலே இருபுறமும் வரிசை நிண்ணுதம்பூறு அடிச்சார்கள் அவர் போய் துரையவர்களைக்கண்டு பேசினார்கள். அவ்விடத்திலே நடந்த சேதி என்னவென்றால், ......

1741 ஹு அவ்ரீல் மீ 30 உ துர்மதி ஹு சித்திரை மீ 21உ சனிவார நாள்

காலமே 9 மணிக்கு (ஈ) துரையவர்கள் முத்தியாபிள்ளையவர்களை அழைப்பித்து காவல் விடுதலை பண்ணி எப்போதையும்போலே உத்தியோகமும் கொடுத்து இனிமேல் சாக்கிரதையாய் நடந்து கொள்ளுமென்று உத்தாரங்கொடுத்து வளவுக்கு அனுப்பிவிட்டார்கள். அதின்பேரிலே தம்முடவளவுக்கு அவர் வந்தவுடனே பட்டணத்திலே உண்டான சனங்களெல்லாரும் போய் வினவினார்கள். ஆனால் அவர் எட்டுநாள் சாப்பிடாமல் ரொம்ப வருத்தப்பட்டார்.

1741 ௵ மார்ச்சு ௴ 24க்கு துர்மதி ௵ வைகாசி ௴ 15 ௳ புதன்கிழமை நாள்

காலமே பத்துமணிக்கு முன்னாலே மருட்டியருக்கு அனுப்பியிருந்த வெகுமானத் தட்டுமுட்டுகளை மறுபடியும் கொண்டு வந்து விட்டார்கள். அதெதினாலே என்றால் மருட்டியர் செகதெவு விட்டு அப்புறம் கிஷ்ணையைக் கிட்டிப்போய்விட்டபடியினால் வெகுமானம் கொண்டுபோனவர்கள் வேலூரண்டை போனவுடனே மருட்டியர் அப்புறப்பட்டுப்போன சேதி கேட்டு இந்த மட்டுக்கும் அங்கேதானே இருந்து அந்தச்சமாச்சாரம் இவ்விடத்துக்கு எழுதி அனுப்பிவித்து இவர்கள் மறுபடி திருப்பிக்கொண்டு வரச்சொல்லி எழுதி அனுப்பின உத்தாரத்தின்பேரிலே இந்த நாள் 10 மணிக்கு வெகுமானத்தட்டு முட்டுகளுடனே போன மனுஷரும் கூட வந்து புதுச்சேரி வந்து சேர்ந்தார்கள்.

1741 ௵ நூன் ௴ 4 ௳க்கு துன்மதி ௵ வைகாசி ௴ 26 ௳ ஆதிவாரநாள்

சாயங்காலம் 5 மணிக்கு இராசஸ்ரீ துரையவர்கள் காரைக்காலுக்குப் போகத்தக்கதாக சீமை கப்பலிலே ஏறினார்கள்.

சூன் ௴ 5 ௳ வைகாசி ௴ 27 ௳ திங்கட்கிழமை நாள்

காலமே ஆறு மணிக்கு முத்தியாபிள்ளையவர்கள் காரைக்காலுக்கு கரைவழியே பயணமாகிப்போனார்கள்.

சூன் ௴ 6 ௳ வைகாசி ௴ 28௳ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே ஏழு மணிக்கு (ா) துரையவர்கள் கப்பலின் பேரிலே ஏறியிருந்தவர் காத்தில்லாதபடியினாலே இறங்கி வீட்டுக்குவந்து சேர்ந்தார்கள் வந்தவுடனே யோசனை பண்ணிபோகிறோம் என்று புறப்பட்டு சகலமானபேரும் சேவகர் துபாசிகள் முத்தியா பிள்ளையவர்கள் மத்த சாமான்கள் தட்டுமுட்டுகளெல்லா சமஸ்த்தமுமாகிப் போனபடியினாலே இனிமேல் போகாமலிருந்தால் காரியமல்லவென்று கரைவழியே போகிறத்துக்கு யோசனைபண்ணி முன் (ா) துரையவர்கள் கப்பலின் பேரிலே ஏறச்சே கரைவழியாய் பயணப்பட்டுப்போன பேரையெல்லாரையும் மறுபடியும் வரச்சொல்லி ஓலையெழுதி சேவகனை பயணம் பண்ணி ஓடவிட்டார்கள். போனவர்களை இத்தனை சுருக்காக அழைப்பிக்கிறத்துக்கு என்ன நிமித்தியம் என்றால் எல்லாரும் வந்து சேர்ந்த பிற்பாடு சந்தடியுடனே கூட வெள்ளியணைக்கு

காலமே பயணம் புறப்படத்தக்கதாகத் தீர்த்துக்கொண்டு ஆனந்தரங்கப்பிள்ளையவர்களை அழைச்சுநாமானால் வெள்ளிய ண்ணைக்குப் பயணம் புறப்படுகிறோம் இராத்திரி பரங்கிப் பேட்டை தாக்கலாகிறோம். நீர் முன்னே போய் அவ்விடத் திலேயெல்லாம் முஸ்தீது பண்ணிவிக்கிறீரா அல்லவென்று நம் முட பிறகேகூட வாறீராயென்று கேட்டார்கள். அதுக்குப் பிள்ளையவர்கள் சொன்னது: நீங்கள் எப்படிச் சொன்னீர்கள் அந்தப்படி செய்யுரேனென்று சொன்னார்கள். அதின்பேரிலே நல்லது நாம் கூடத்தானே போவோம் முன்னே எழுதி அனுப்பிவிச்சு முஸ்தீது பண்ணிவையுமென்று சொன் னார்கள். அந்த உத்தரவுபடியே கூடலூருக்கு எழுதியனுப்பி அவ்விடத்திலே யிருந்து தட்டுமுட்டு சாமான்கள் நாற்காலி மேஜைப்பலகை தீனிதட்டு சகலமும் முஸ்தீது பண்ணிவிச்சு அதுக்கேத்த மனுஷரையும் அனுப்பிவிக்கிறத்துக்கு எழுதி அனுப்பினோம். அப்படியிருக்க மத்தியானம் பதினொண்ணரை மணிக்கு துரையவர்கள் வீட்டுக்கு நாம் போனவிடத்திலே அவர் சொன்னது நாம் பரங்கிப்பேட்டைக்குப் போகவில்லை. இப்படி மேட்டுப்பாளையத்திலே யிருந்தாப்போலே சிதம் பரத்துமேலே போகிறோம்என்கிறதாகச்சொன்னார்கள் அதின் பேரிலே கூடலூருக்கு ஒரு சேவகனை ஓடவிட்டு பறங்கிப் பேட்டைக்கு அனுப்புகிற தட்டுமுட்டுகளை நிறுத்திப்போட் டோம். அதின் பேரிலே வெள்ளியண்ணைக்கு பயணம் ஊர்ச்சித மாய்சகலமும் பயணமுஸ்தீது பண்ணிக்கொண்டிருந்தார்கள் வியாழக்கிழமை நாள் சாயங்காலம் முன் போயிருந்த பேரெல் லாரும் கொள்ளிடக்கரை மட்டுக்கும் போய் திரும்பிவந்த படியினாலே போனவர்களெல்லாரும் வேசாரிப்போனார்கள் பயணம் சாகுபடி ஆகாதென்று நிறுத்தி ஆதிவாரம் நாள் பய ணம் புறப்பட யோசனை பண்ணி இருக்கிறார்கள்.

**1741** ஷு சூன் மீ 11 உ துர்மதி ஷு ஆனி மீ முதல் உ (கார்த்திகை நக்ஷத்திரம்) ஆதிவார நாள்

கார்த்திகை நக்ஷத்திரத்தில் காலமே அஞ்சுமணிக்கு (ா) துரையவர்கள் பயணம் புறப்பட்டு அரியாங்குப்பத்துக்குப் போய் கோவிலிலே பூசை கேட்டு அப்புறம் பயணம் போனார் கள். இன்றையதினம் காலமே ஏழு மணிக்கு (ா) பிள்ளையவர் கள் கனகராய முதலியார் சேஷாசல செட்டியார் மற்று முண் டான பெரிய மனுஷர் அனைவரும் பயணம் போனார்கள்.

பயணமாய்ப் போகச்சே கொள்ளிடக்கரையைக் கிட்ட போகிறபோது கனகராய முதலியாருடைய பல்லக்கு கத்திரிக் கால் ஒடிஞ்சுபோய் பல்லக்கை திருப்பிவிட்டு சேஷாசல செட் டியார் பல்லக்கின் பேரிலே ஏறிக்கொண்டு போனார்.

*1741*ௌ சூன் மீ 20 உ துர்மதி ௵ ஆனி மீ 10 உ செவ்வாய்க்கிழமை நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு (ரா) துரையவர்கள் கப்பலின் பேரில் காரைக்காலிலிருந்துவந்து புதுச்சேரி துறை பிடித்து 5 மணிக்கு இறங்கினார். இந்தக் கப்பலிலே வந்தவர்கள் (ரா) துரையவர்களும் கனகராய முதலியாரும் அவரைச் சேர்ந்தவர்களும்கூட வந்து இறங்கினார்கள். கப்பல் வந்து துறை பிடித்து உடனே துறையிலேயிருந்த கப்பல்காரரெல்லாரும் கப்பலுக்கு கப்பல் பீரங்கிபோட்டார்கள் இறங்குகிறபோது கப்பலிலே 21 பீரங்கி போட்டார்கள். இவ்விடத்திலே கரையிலே இறங்கின உடனே கோட்டையிலே 21 பீரங்கி போட்டார்கள். இறங்கி வீட்டுக்குப்போனார்கள்.

*1741*ௌ சூன்மீ 23உ துர்மதி௵ ஆனிமீ 13உ சுக்கிரவார நாள்

சாயங்காலம் விறகு பெருநாள் பண்டிகை கொண்டாடினார்கள் இந்த நாள் காரைக்காலுக்கு பிள்ளையவர்களையும் முத்தியாப்பிள்ளையவர்களையும் சீக்கிரயாய் புறப்பட்டு வரச் சொல்லி (ரா) துரையவர்கள் கனகராய முதலியாருடனே சொன்னதின்பேரிலே அவர் இரண்டுபேர் பேருக்கும் ஓலை எழுதி தபாலிலே அனுப்பிவிச்சார்.

*1741*ௌ சூன்மீ 30உ துர்மதி௵ ஆனிமீ 20உ சுக்கிரவார நாள்

காலமே 8 மணிக்கு பிள்ளையவர்களும் முத்தியாப்பிள்ளையவர்களும் புதுச்சேரி பட்டணம் வந்துசேர்ந்தார்கள்.

*1741* ௌ சூலை மீ 19 உ துர்மதி ௵ ஆடி மீ 8 உ புதவார நாள்

காலமே சீமையிலே யிருந்து திரித்தோமே (Triton) என்கிற கப்பல் வந்து துறை பிடிச்சு 21 பீரங்கியும் போட்டான். கோட்டையிலே 21 பீரங்கி போட்டார்கள். இந்தக் கப்பலிலே வந்த சேதி என்னவென்றால் (ரா) துரையவர்களுக்கு திரேக்தோர் உத்தியோகம் வந்ததென்று சொன்னார்கள்.

ஆடி மீ 9 உ-க்கு சூலை மீ 20 உ-க்கு வியாழக்கிழமை நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு கொமிசல் கூடி சீமையிலேயிருந்து வந்த கடுதாசியைப் படிச்சுக்கொண்டார்கள். அந்தக் கடுதாசியிலே எழுதிவந்த வயணம்.............

இந்த வயணமெல்லாம் பார்த்துக்கொண்ட உடனே (ஸ்ரீ) துரையவர்களுக்கு மேலான உத்தியோகம் வந்து தென்கிற தாய் கோட்டையிலே 21 பீரங்கி போட்டார்கள். அதின் பேரிலே துறையிலே கிடக்கிற கப்பலின் பேரிலேயும் கப்பலுக்கு கப்பல் பீரங்கிபோட்டு இந்த சந்தோஷத்தை கோன் சேவியேர் மற்றுமுண்டான வெள்ளைக்காரர் சகலரும் போய் மெனவினார்கள்.

சூலை மீ 27 உ-க்கு ஆடி மீ 16 உ வியாழக்கிழமை

சாயங்காலம் நாலு மணிக்கு அல்லினக்கீம் சாயபு அவர்கள் வெகுமானம் வந்தது. கனகராய முதலியார் மற்றபேர் எதிர்கொண்டு போய் அழைச்சுக்கொண்டு வந்தார்கள். வரச்சே பல்லக்கின் பேரிலே வச்சிகொண்டு (ஸ்ரீ) துரையவர்கள் வீட்டில் கொண்டுபோனார்கள். போன உடனே கோட்டையிலே ஏழு பீரங்கி போட்டார்கள்.

1741 ஹு சூலை மீ 28 உ துர்மதி ஹு ஆடி மீ 17 உ சுக்கிர வார நாள்

காலமே பத்து மணிக்கு முசே பெபுரியேர் (M. Febvrier) காரைக்காலுக்கு துரைத்தனமாய் போகிறதுக்கு இவ்விடத்திலிருந்து கப்பலுக்கு கப்பலின் பேரிலே ஏறி கப்பல் பாயெடுத்து கப்பல் காரைக்காலுக்கு ஓடிப்போச்சுது முசே பெபுரியேர் காரைக்காலுக்குப் போய் இறங்கின உடனே முசே துலார் அந்த கப்பலிலே தானே ஏறி புதுச்சேரிக்கு வந்து விடுவார்.

இந்த நாள் சாயங்காலம் நாலு மணிக்கு சீமையிலேயிருந்து ஒரு கப்பல் வந்தது. கப்பல் பெயர் லநகோனத்து (Argonaute) கப்பல் கப்பித்தான் பெயர் முசே லசினே (M. Lachenaye).

சூலை மீ 31 உ-க்கு ஆடி மீ 20 உ திங்கள்கிழமை நாள்

சாயங்காலம் நிசாம் மகன் நாசர்சிங்கு வெகுமானம் வந்தது. வந்தவுடனே மீனாட்சி அம்மாள் சத்திரத்திலே நிறுத்திவச்சு வடக்கு வெளிக்கு வெளியிலே கூடாரம் போட்டு சொலுதாத்துகள் எல்லாருமாய்ப்போய் வரிசைநின்று கொண்டு கூடாரத்திலே (ஸ்ரீ) துரையவர்கள் மற்ற ஆலோசனைக்காரரும் கூட இருந்துகொண்டு சின்ன துரையும் முசே துளோராம் (M. Dulaurens) கனகராய முதலியார் மேளதாள சகல சம்பிரமத்துடனே போய் எதிர்கொண்டு போய்

அழைச்சுக்கொண்டு வந்தார்கள். வெகுமானத்தை துரையண்டையிலே கூடாரத்திலே கொண்டுபோன உடனே கெவுனிவாசல் கொத்தளத்தின்பேரிலேயும் பீரங்கி சுட்டு கப்பலின்பேரிலேயும் பீரங்கி போட்டார்கள் அந்த வெகுமானத்தை மறுபடியும் பல்லக்கின் பேரிலே வைத்துக்கொண்டு மேளவாத்தியத்துடனே (ஈ) துரையவர்களிருக்கிற வீட்டிலே கொண்டுபோய்வைத்தார்கள். வீட்டிற்குப் போனவுடனே கோட்டையின்பேரிலே 21 பீரங்கி போட்டார்கள்.

**1741** ௵ ஆகஸ்ட் ௴ **3**ௗக்கு துர்மதி ௵ ஆடி ௴ **23** ௳ வியாழக்கிழமை நாள்

சாயங்காலம் நாலு மணிக்குப் போனார். மமுதல்லி சாயபு அவர்களுடைய வெகுமானம் வந்தது. வந்த உடனே கனகராய முதலியாரும் மூசே துளோரம் அவர்களும் முத்தியாப்பிள்ளையவர்கள் பின்னையும் லாத்து இரண்டுபேர் பின்னப் பெத்தையளுமாய் மேளதாளத்துடனே எதிர்கொண்டுபோய் வெகுமானத்தை பல்லக்கின்பேரிலே வைத்துக்கொண்டுவந்தார்கள். வந்தவுடனே கோட்டையின்பேரிலே 7 பீரங்கிபோட்டார்கள்.

ஆகஸ்ட் ௴ **5** ௳க்கு ஆடி ௴ *25* ௳ சனிவார நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு தமுக்குப் போட்டார்கள். அதென்னவென்றால் முன்னாலே மருட்டியர் கலாபத்தையிட்டு சாராயம் ஊரிலே விற்கவேண்டாமென்று தட்டி அறைசாத்தியிருந்த சம்மதி இந்நாள் விடுதலை பண்ணினோம். இனிமேல் பழையபடிக்கு குத்தகைக்காரர் சம்மதியானபடிக்குச் சாராயம் காய்ச்சி விற்றுக்கொள்ளுகிறது என்று தட்டிப் பறைசாத்தி வைத்தார்கள்.

**1741** ௵ ஆகஸ்ட் ௴ **6** ௳க்கு துர்மதி ௵ ஆடி ௴ **26** ௳ ஆதிவார நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு அசரத்து கானுபகதூர் அவர்களுட வெகுமானம் வந்தது கானுபகதூர் இவ்விடத்திலே (ஈ) துரையவர்கள் தோட்டத்திலே குடியிருக்கிறவர் வெகுமானத்தை வெளியிலே கெவுனிக்கப்புறம் கொண்டுபோய் வைச்சுக்கொண்டு துரையவர்களுக்குச் சொல்லி அனுப்பினார். அதின் பேரிலே இவ்விடத்திலேயிருந்து கனகராய முதலியார் மற்றப்பேர் கூட மேளதாளத்துடனே எதிர்கொண்டு போய் அழைச்சுக்கொண்டு வந்து துரையவர்கள் பேட்டியானவுடனே கோட்டையின் பேரிலே பீரங்கி போட்டார்கள்

ஆக்ஸ்ட் மீ 7 வ ஆடி மீ 27 வ திங்கள்கிழமை நாள்

சாயங்காலம் அஞ்சு மணிக்கு ஒரு சொலுதாது உவார்ந்த காரனை சுட்டுப் போட்டார்கள். அவன் என்ன நேரம் செய்தானென்றால் தான் வெளியே புறப்பட்டு ஓடிப்போகிறவன் தன்னுடனே கூட நாலு பேர் வெள்ளைக்காரரை கூட அழைச்சுக்கொண்டு ஓடிப்போனான். கூடப்போன நாலு பேரும் மிஞ்சிப்போய் தேவனும் பட்டணம் சேர்ந்தார்கள். இவன் ஒருத்தன் மிச்சமாய் குடிச்சுக்கொண்டிருந்தபடியினாலே ஓடமாட்டாமல் வழியிலே அகப்பட்டுக்கொண்டான். ஆனபடியினாலே இவனைப் பிடிச்சுக்கொண்டு வந்த மறுநாளைக்குத் தானே சுட்டுப்போட்டார்கள்.

1741 ஸ்ரீ ஆகஸ்ட் மீ 9 வ-க்கு துர்மதி ஸ்ரீ ஆடி மீ 29 வ புதன்கிழமை இந்த நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு ஒரு கப்பல் சீமையிலேயிருந்து ஓடிவந்தது. அந்த கப்பல் பேர்........கப்பல் கப்பித்தான் பேர்...........கப்பல் வந்து துறை பிடிச்சு உடனே துறையிலே இருக்கிற கப்பலுக்கு புதுசாய் ஓடிவந்த சீமை கப்பல்காரன் ஆசாரம் பண்ண மறுபடியும் அவரவர் ஆசாரம் பண்ணி பிற்பாடு கோட்டைக்கு பதினஞ்சு பீரங்கி போட்டான். கோட்டையிலேயும் பதினஞ்சு பீரங்கி போட்டார்கள். இந்தக் கப்பலிலே வந்த அதிசெயம் என்னவென்றால் ...........

1741 ஸ்ரீ ஆகஸ்டு மீ 13 வ-க்கு துர்மதி ஸ்ரீ ஆவணி மீ 1 வ ஆதிவாரம் இந்த நாள்

புதுச்சேரி பட்டணத்திலே நடந்த அதிசெயம் கடுதாசியிலே எழுதி சாவடியிலேயும், கோட்டையிலேயும், கெவுனி வாசலிலேயும் ஒட்டினார்கள். அதென்ன சமாசாரமென்றால் கடுதாசி வயணம் இராசாவினுடைய கட்டளைப்படிக்கு புதுச்சேரி பட்டணம் மேலான கொம்சேலியரவர்கள் உத்தாரப்படியாவது என்று மேலே எழுதி அப்புறம் எங்களிடத்துக்கு வந்து விண்ணப்பம் பண்ணிக்கொண்டதென்னவென்றால் வலங்கைச்சாதியானவர்கள் செட்டி வர்த்தகம் மற்றுமுள்ள இடங்கைச்சாதியாரை பல்லக்கின் பேரிலே குதிரையின் பேரிலே ஏறிக்கொண்டு புதுச்சேரிக்குள்ளே சென்னப்பட்டணத்து வாசலாலே வருகிறதற்குச் சம்மதிக்கயில்லை. அது என்னத்தாலே சம்மதிக்கவில்லையென்றால் தமிழ் ராச்சியத்திலே வழங்குகிற தமிழர் வழக்கத்தின்படிக்கு அதுக்கு மேலான கோன்சேலியரவர்கள் மனஸ்கரிக்கவில்லை

அரண்மனையாருடைய நினைப்பென்னவென்றால் எப்போதும் இந்தப்பட்டணம் அவரவர்களுக்கு சுதந்திரமாய் வருகிறதற்கும்போகிறதற்கும் தடையில்லாமல் சுபாவமாய் நடக்கவேண்டியதென்று சகலரும் ஒழுங்குடனே மார்க்கமாய் அவரவர்கள் அநுபவிக்கிறது. புதுச்சென்னப்பட்டணத்து வாசல்புதுத் தெருவாகிய ராசவீதி திறந்துவிட்டதென்ன நினைப்பினாலே என்றால் அந்த ராசவீதியில் வலங்கையா ரிடங்கையார் சகலரும் பொதுவாக நடக்கவேண்டியதுக்காக கோன்செலியரவர்கள் உத்தாரங் கொடுத்தார்கள் புதுச்சேரி பட்டணத்துக்குள்ளே சகல வர்த்தகசெட்டியின் பல்லக்கின்பேரிலே குதிரையின் பேரிலே ஏறி வருகிறதற்கு சென்னப்பட்டணத்து வாசலாலே வருகிறதற்கும் வழுதாவூர் வாசலாலே வருகிறதற்கும் வெளிப்படுத்துகிறோம் சகல சாதியும் வலங்கையார் இடங்கையார் தெத்துவாசல் நுழைஞ்ச உடனே அவரவர் தெருவுக்குப்போகிறதற்கு வலது பக்கத்து மதிலோரத்துத் தெருவீதியாவது இடது பக்கத்து மதிலோரத்துத் தெருவீதியாவது போய் அவரவர்கள் தெருவுக்குப் போகிறது. இந்த உத்தாரத்தை யாதொரு சின்ன மனுஷராகிலும் பெரிய மனுஷராகிலும் எப்பேர்ப்பட்டவர்களாகிலும் விகாதம் பண்ணினால் கலாபம் பண்ணுகிறவன் எந்த ஆக்கினைப் படுவானோ அந்த ஆக்கினைக்குப் பாத்திரவானுவான். இந்த உத்தாரத்தை எவர்களாகிலும் அறியோமென்று சொல்லாதபடிக்குப் பிரசித்தமாக கடுதாசியிலே எழுதி எந்த ஸ்தானங்களிலேயும் ஸ்தாபிக்க வேணுமோ அந்த இடங்களிலே ஸ்தாபிச்சு இருக்கிறது இந்தப்படிக்கு மேலான கொம்பிசெலியாரவர்கள் உத்தாரப்படி (1741 ஆ ஜூலை மீ 31 உ) இதிலே கையெழுத்துப் போட்டது. தும்மா, லகு, துலோராம், யெங்கராம், மீரா, பொறுலாம், கோன்சேல் உத்தாரப்படிக்கு போலோ.

1741 ஆ ஆகஸ்ட் மீ 15 உ-க்கு துர்மதி ஆ ஆவணி மீ 3 உ செவ்வாக்கிழமை நாள்

இராத்திரி 9½ மணிக்குமேல் ஒரு சொலுதாது கையிலே துப்பாக்கி எடுத்துக்கொண்டு வெளியே புறப்பட்டு வந்து பெரிய சீனப்பய்யர் வீட்டண்டை வந்த உடனே துப்பாக்கியிலே குண்டும் மருந்தும் போட்டு கெடிச்சு அவ்விடத்திலே கட்டியிருக்கிற ஆனையைப் பார்த்து சுட்டான் அந்தக்குண்டு ஆனையின் பேரிலே படாமல் செந்துபோச்சுது அந்த மட்டிலே புறப்பட்டு வெள்ளாழத் தெருவாலே வந்து கடைத்தெருவாலே போய் மறுபடி புகையிலைக் கிடங்குக்கு நேராய் வந்து நம்மிட தெருவிலே வந்தான். அவன் பிறகே தலையாரியன் தொடந்து வந்தார்கள். வந்த வெள்ளைக்காரன் பாதிரி

கோவில் வாசல் படியண்டை வந்த உடனே கிழக்கே திரும்பிப்பார்த்து துப்பாக்கியை மாருக்குப்பிடிச்சு தலையாரியனைப் பார்த்துச் சுட்டான். அவர்கள் தப்பிச்சுக்கொண்டார்கள். அப்புறம் புகையிலைக் கிடங்குக்கெதிரே நடுத்தெருவிலே ஒரு அம்மை நின்னாள். அவளுக்குப் பக்கத்திலே இரண்டு குண்டும்பட்டு அப்புறம் உருகிப்போச்சுது. அவள் பிழைச்சாள். பிற்பாடு நம்பிட தெருவு திண்ணையின் பேரிலேயிருந்தவர்கள் கூடயெல்லாருமாய் வீட்டுக்குள்ளே வந்து தெருக்கதவு சாத்திப்போட்டோம். அதின் பேரிலே மறுபடியும் குண்டும் மருந்தும் போட்டு துப்பாக்கியை கருகாது பண்ணிக்கொண்டு கோவில் வாசல்படியிலே நின்னான். இந்தச் சத்தம் கேட்டு பாதிரியார் வெளியே புறப்பட்டார். அவரைக் கண்ட உடனே துப்பாக்கியைக் கிழே வச்சுப் போட்டு அவருக்கு உபசாரம் பண்ணினான். அவனைப் பேச்சுக் கொடுத்துக் கொண்டே நின்றார். இதுக்குள்ளே தலையாரிச் சேவகர் ஓடி கெவுனியிலே சொன்னார்கள். அங்கேயிருந்து முசுக்கதோர் வந்து அவனைப் பிடித்துக்கொண்டுபோனார்கள். அவன் எங்கேயிருக்கிறவனென்று விசாரித்தால் அவன் வில்லியனூர் வாசல் படியிலே சேவகம் என்று சொன்னார்கள். ஊரிலே வெள்ளைக்காரர் சுலுமி மெத்தவும் நடக்கிறது.

1741 ஷு ஆகஸ்டு மீ 20 உ-க்கு துர்மதி ஷு ஆவணி மீ 8 உ ஆதிவார நாள்

இராத்திரி இரண்டு மணிக்கு தேவனாம்பட்டணத்து துரையவர்கள் மெஸ்த்தர் ஆபர்ட்டு (Mr. Hubbard) அவர்கள் செண்ணு போனார்கள். மறுநாள்

9 உ-க்கு 21உ சோமவாரம் நாள்

சாயங்காலம் ஆறு மணிக்கு எடுத்தார்கள். எடுக்கிறபோது சாயங்காலம் ஆறு மணி துவக்கி ஒன்பது மணி மட்டுக்கும் பொறுத்துப் பொறுத்து பீரங்கி போட்டார்கள்.

1741 ஷு ஆகஸ்டு மீ 31 உ துர்மதி ஷு ஆவணி மீ 19 உ வியாழக்கிழமை நாள்

காலமே பத்து மணிக்கு காரைக்காலிலே யிருந்து மூசே தலாரவர்கள் கப்பலின் பேரிலே வந்து புதுச்சேரி துறை பிடிச்சு இறங்கினார்.

*1741* ௵ செப்தம்பர் *மீ* 3 ௳ துர்மதி ௵ ஆவணி *மீ* 22 ௳ ஆதிவார நாள்

*சாயங்காலம் நாலு மணிக்கு நம்மிட வீட்டுக்கெதிரே யிருக்கிற...........கோவிலிலே யிருக்கிற பிஷப்பு* (Bishop) *பாதிரி லொவியேரவர்கள் ஸியாமுக்கு பிஷப்புஆயி* (Bishop) *போயிருக்கத்தாக கப்பலின் பேரிலே ஏறிப்போனார்கள். ஏறச்சே துறையிலே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள். கப்பலின் பேரிலே ஏறச்சே கப்பலிலே 9 பீரங்கியும் போட்டார்கள்.*

*1741*௵ செப்டம்பர்*மீ* 26௳ துர்மதி௵ புரட்டாசி*மீ* 14௳ செவ்வாய்க்கிழமை நாள்

*மணிக்கு அச்சைக் கப்பல் புதுச்சேரியிலேயிருந்து அச்சைக்குப் பாயெடுத்தார்கள். கப்பல் பேர் துக்குதேலோரியாம்* (Duc d'Orleans) *கப்பல் கப்பித்தான்* முசே லசூசு (M de la Souche) முசே......... ...*இந்த கப்பலுக்கு தொக்தேர் சுலுத்தான் கண்டு மரைக்காத்தம்பி* (Sultan Kandu Marakkayan Tambi)

*1741*௵ செப்டம்பர்*மீ* 27௳ துர்மதி௵ புரட்டாசி*மீ* 15௳ புதவார நாள்

*காலமே 11 மணிக்கு சீமையிலேயிருந்து இராசாவினுடைய இரண்டு கப்பலும் கும்பனியாருடைய கப்பல் அஞ்சும் கப்பலும் ஆக ஏழு கப்பலுமாக சண்டை முஸ்தீதுடனே மசுக்கரையிலேயிருந்து புறப்பட்டு இந்த நாள் 11 மணிக்கு மூன்று கப்பல் வந்து சேர்ந்த துறையிலே வைத்துப்பிடித்தான். இந்த ஏழு கப்பலுக்கும்* முசே லபோருதுனே (M. de la Bourdonnais) *கும்மாந்தாமாய் அவர் வருகிற கப்பலிலே அமிரால் போட்டுக்கொண்டு ஓடிவரச்சே துறையிலே யிருந்த கப்பல்காரன் அமிராலைக் கழத்திப்போட்டு கப்பல்காரரெல்லாரும் மரியாதை பண்ணினார்கள்.*

*1741*௵ ஒக்தோபர்*மீ* 6௳ துர்மதி௵ புரட்டாசி*மீ* 24௳ வெள்ளிக்கிழமை நாள்

*மத்தியானம் பனிரெண்டடித்து ஒரு மணிக்கு மசுக்கரையிலேயிருந்து* முசே தீருவார் *பங்காளத்துக்கு உத்தியோகமாய் போகத்தக்கதாக சீமை கப்பலின்பேரிலே வந்து இரண் மணிக்கு துறை பிடித்து கரையிலே இறங்கினார்.*

**1741** ௵ ஒக்தோபர் *மீ* **15**௨ துர்மதி ௵ அற்பசி *மீ* **3** ௨ ஆதிவாரம் நாள்

*சாயங்காலம் நல்ல தம்பிசெட்டி அருணாசல செட்டிக்கு துரையவர்கள் வெகுமானம் அங்கியும் நாலு நகையும் வெகுமானம் கொடுத்தார்கள்.*

ஒக்தோபர் *மீ* *16* ௨ அற்பசி *மீ* **3** ௨ சோமவார நாள்

*காலமே எட்டு மணிக்கு சின்ன துரையவர்களுக்குப் பெரிய துரையவர்கள் பெரிய துரைத்தனம் கொடுத்து 21 பீரங்கி போட்டு சகலமான வெள்ளைக்காரர் குமிசெலியேர் மற்றப் பேர் அனைவரும் வந்து பேட்டி பண்ணிக்கொண்டார்கள். சாவியும் ஒப்பிச்சுப்போட்டு தம்முட அதிகாரமும் அவர் வசம் பண்ணினார்கள்.*

ஒக்தோபர் *மீ* *18* ௨ அற்பசி *மீ* 6 ௨ புதன்கிழமை நாள்

*நவராத்திரி பூசை பண்டிகை தின..................ம் இந்த நாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கு மூசே லபோர்துனே பயணமாய் கப்பலின் பேரிலே ஏறினார்.*

ஒக்தோபர் *மீ* 19 ௨ அற்பசி *மீ* *7* ௨ வியாழக்கிழமை நாள்

*விச்சயதசமியன்று காலமே (ா) துரையவர்கள் மூசே திம்மா குவர்னர் துரையவர்கள் சீமைக்குப் போகிறத்துக்கு பயணமாய் அஞ்சு மணிக்கு ஆயத்தப்பட்டார்கள். அதின் பேரிலே துரையவர்கள் வீட்டிலே யிருந்து கடலோர மட்டுக்கும் இருபுறமும் வாழையும் தென்னை மட்டையும் கமுகுமரமும் நட்டு லெஸ்த்து பண்ணினார்கள். துரையவர்களும் துரையவர்கள் பெண்சாதியும் சீமைக்குப் போனார்கள் என்கிறதாய் அறிஞ்சு பட்டணத்திலே இருக்கப்பட்ட வெள்ளைக்காரரிலே பெரிய மனுஷரவர்களும், தமிழரிலே பெரிய மனுஷர் மற்றுமுண்டான சகல சனமும் போய் இராத்திரி ஏழு மணிக்கு முதல் கொண்டு பத்து மணி மட்டுக்கும் அவர்களைப் போய்க் கண்டு பேசி அனுப்பிவிச்சுக்கொண்டார்கள். அஞ்சரை மணிக்கு துரையவர்களும் துரையவர்கள் பெண்சாதியும் பயணமாய் வீட்டைவிட்டு வெளியே புறப்பட்டார்கள். புறப்பட்ட உடனே அம்மாள் பல்லக்கு முன்னேயும் துரையவர்கள் பல்லக்கு பிறகேயும் அவர் பிறகாலே சின்னதுரை மூசே துளோராம் மற்ற கொம்மிசெல்க்காரர் பல்லக்கும் கொம்பு தமுக்கு தேவடியாள் மேளக்காரர் சகல சம்பிரமத்துடனே வாழமரச் சாலைக்கு நடுவே வீட்டிலேயிருந்து மெதுவாய்ப்போய் ஆறு*

மணிக்கு சலங்கிலே ஏறினார்கள். துரையவர்கள் ஏறின சலங்கிலே துரையவர்கள் பெண்சாதியும் கூடத்தானே ஏறினார்கள். சலங்கிலேறினவுடனே கோட்டையிலே இருபத்தோரு பீரங்கி போட்டார்கள். சலங்கு போகச்சே வழியிலேயிருந்த கப்பல்காரர் கப்பலுக்குப் கப்பல் பீரங்கிபோட்டு ஆசாரம் பண்ணினார்கள். (ா) துரையவர்களும் அம்மாளவர்களும் கப்பலின் பேரிலே போய் ஏறின உடனே கப்பலிலே 21 பீரங்கிபோட்டு வலிய பாய்மரத்திலே — சதிரக்கொடியும் போட்டார்கள். அதின்பேரிலே மூசே லபோடுதுனே (M. de la Bourdonnais) ஏறியிருக்கிற கப்பலிலே 21 பீரங்கி போட்டு அப்புறம் துறையிலேயிருக்கப்பட்ட கப்பல்களிலும் எல்லாம் கப்பலுக்கு கப்பல் 21 பீரங்கி போட்டார்கள். அந்த மட்டிலே இன்றைய தினம் பகல் முப்பது நாழிகையும் துறையிலேதானே யிருந்தார்கள்.

1741 ஸ்ரீ ஒக்தோபர் மீ 20 உ துர்மதி ஸ்ரீ அய்பசி மீ 8 உ சுக்கிவார நாள்

காலமே பத்து மணிக்கு நேத்தியதினம் கப்பலிலே ஏறி இருந்த (ா) தும்மா குவர்னர் துரையவர்கள் கப்பல் பாயெடுத்து ஓடிப்போச்சுது. அந்தக்கப்பல் பாயெடுக்கச்சே கூட மூசே லபோடுதுனே (M. de la Bourdonnais) கப்பலும் அவர் பிறகே கூட வந்திருந்த கப்பலும் ஆக ஒரு முகூர்த்தத்திலே ஏகமாய் கப்பல் பாயெடுத்து ஓடினார்கள்.

1741 ஸ்ரீ நவம்பர் மீ 28 உ துர்மதி ஸ்ரீ கார்த்திகை மீ 17 உ

(ா) பிள்ளையவர்கள் இந்நாள் செவ்வாய்க்கிழமை நாள் சாயங்காலம் பயணம் புறப்பட்டு கூடலூருக்குப் போனார்கள்.

1742 ஸ்ரீ சனவரி மீ 1 உ துர்மதி ஸ்ரீ மார்கழி மீ 20 உ ஆதிவார நாள்

சனவரி பண்டிகை கொண்டாடினார்கள்.

சனவரி மூ 9 உ-க்கு மார்கழி மீ 28 உ திங்கட்கிழமை நாள்

மத்தியானம் இரண்டு மணிக்கு முன் அச்சைக்குப்போயிருந்த தூக்கு தெ லொரியாம் (Due de la Orléans) என்கிற சீமைக்கப்பல் அச்சையிலே யிருந்து ஓடிவந்து வச்சுப்பிடிச்சு 9 பீரங்கியும் போட்டார்கள். உடனே கோட்டையிலே பதி

லுக்கு 9 பீரங்கி போட்டார்கள். 4 மணிக்கு மூசே லத்தூசும் புதுசாய்ப்போன தொக்கதோர் சுலுதாங்கண்டு மரக்காய்த்தம்பி (Super Cargo-Sultane Kandu MarakkayanTambi) யும் பழைய தொக்கதோர் உசனல்லி பேக்கும் (Super Cargo Husain Ali Beg) இறங்கினார்கள். அவர்கள் சொன்ன சேதி என்னவென்றால் அச்சையிலே பழைய இராசா கொடுக்கவேண்டிய பழைய நிலுவை சம்மதிக்காக பழைய இராசாவினுடைய கப்பலைப் பிடித்துக்கொண்டு வந்தார்களென்றும் அந்தக் கப்பலிலேயிருந்த சரக்கு சாம்பிருணி மற்ற சரக்கு எல்லாம் சிறிது சரக்குகளை இந்த சீமை கப்பலிலே பறிச்சுப் போட்டுக்கொண்டு அந்தக் கப்பல் மனுஷரை இந்தக் கப்பலிலே ஏற்றிக்கொண்டு அந்தக் கப்பலிலே மூசே கோத்தரேல்லையும் (M. Cotteril) (மூசே கோர்ணே) (M. Cornet) இவர்களைப்போட்டு அந்த அச்சை இராசாவினுடைய கப்பலை மோரீசுக்கு (Mauritius) அனுப்பிவிட்டு இந்தக் கப்பல் பாயெடுத்து ஓடிவந்தோமென்றும் இந்தக் கப்பலிலே வந்த சரக்கு குதிரை 44, சாம்பிருணி பாரம் 30, பாக்கு அவனம்—சர்க்கரை பாரம்... . இதுகளும் பின்னையும் சிறிது சரக்குகளும் வந்ததென்று சொன்னார்கள்.

1742 சனவரி மீ 10 உ துர்மதி ஞு மார்கழி மீ 29 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே 12 மணிக்கு மெர்கைக்கு (Mergui) முன் போயிருந்த...... ...கப்பல் ஓடிவந்து வச்சுப்பிடித்து 9 பீரங்கியும் போட்டான். இந்தக் கப்பலிலே வந்த சமாச்சாரம் சரக்கு வயணம்.........

1742 ஞு சனவரி மீ 10 உ துர்மதி ஞு மார்கழி மீ 29 உ

மத்தியானத்துக்கு மேல் மூனு மணிக்கு யானத்திலேயிருந்து ஒரு சுலுப்பு ஓடிவந்து வச்சு பிடிச்சு 1 பீரங்கி போட்டான். இந்த சுலுப்பு சேதி என்னென்றால்.........

1742 ஞு ஜனவரி மீ 11 உ துர்மதி ஞு தை மீ 1 உ புதன்கிழமை நாள்

காலமே 10 மணிக்கு மூசே எலியாசு (M. Elias கப்பல் ஓடி வந்து வச்சுபிடிச்சான் இந்தக் கப்பல் பைகோவிலே (Pegu) இருந்து ஓடி வந்தது.

ஜனவரி மீ 14 உ சித்ரு தை மூ 4 உ சனிவார நாள்

காலமே பத்து மணிக்கு வங்காளத்திலேயிருந்து ஒரு கப்பல் ஓடி வந்து வச்சுபிடிச்சு 9 பீரங்கி போட்டான். அந்தக் கப்பலிலே வந்த சேதி யென்னென்றால் இந்தக் கப்பலுடனே கூட நாலு கப்பல் வங்காளத்திலே புறப்பட்டோம் ஒரு கப்பலிலே துரை வருகிறார் அந்த மூன்று கப்பலும் இன்றைக்கு காணுமோ நாளைக்கு காணுமோ என்று சொன்னான்,

இந்த நாள் சாயங்காலம் நாலு மணிக்கு அந்த மூன்று கப்பலும் கண்டுது. அதிலே ஒரு கப்பலிலே முசே துப்பிளேக்ஸ் அவர்கள் இவ்விடத்துக்கு துரைத்தனத்துக்குவந்தபடியினாலே அமரால் போட்டுக்கொண்டு வந்தார். வரச்சே தானே துறையிலேயிருந்த கப்பல்க்காரர் எல்லாம் அவரவர் பீரங்கி போட்டு மரியாதை பண்ணினார்கள் பிற்பாடு கோட்டைக்கு 21 பீரங்கி போட்டார் பதிலுக்கு கோட்டையிலே 21 பீரங்கி போட்டார்கள் கட்டுமரத்திலேகடுதாசி 5½ மணிக்குவந்தது அந்தக் கடுதாசியிலே கடல் உரமாயிருக்கிறதுகாலமேஇறங்குகிறோம் என்று சேதிவந்தது. இதுக்குள்ளே இவ்விடத்திலே முஸ்தீதுபண்ணி கடலோரத்திலேயிருந்து துரைவீடு மட்டுக்கும் இரண்டுபுறமும் வாழைமரமும் தென்னமட்டையும் நட்டு முஸ்தித்தாயிருந்தார்கள் அந்த மட்டிலேயிருந்து காலமே ஆதிவார நாள் காலமே ஆறு மணிக்கு அசுபதி நக்ஷத்திரம் மகரலக்னத்தில் முசே திப்பிளேயிக்சு அவர்களும் அவருடைய பெண்சாதியும் மற்றுமுள்ள சனங்களுடனே இறங்கினார் துறையிலே இறங்கின உடனே கோட்டையிலே-21-பீரங்கி போட்டார்கள், கடலோரத்திலே தானே இவ்விடத்திலே இருக்கப்பட்ட துரையின் ஆலோசனைக்காரர் மற்றுமுண்டான பெரிய மனுஷர் அனைவரும் போய் கண்டார்கள். அங்கேயிருந்து கால் நடையாய் இருபுறமும் பாருவரத்தக்கதாக கோட்டைக்குள்ளே போய் கோவிலிலே பூசை கேட்ட உடனே பாருவச்சு மூணுதரம் பாரு தீத்தார்கள். பிற்பாடு எட்டு மணிக்கு கோட்டையிலேயிருந்து வீட்டுக்கு வந்தார். வரச்சேயும் நடந்துதானே வந்தார். கோட்டைவிட்டு புறப்பட்டு வரச்சே (21-பீரங்கியும் வீட்டுக்குள்ளே வந்து நுழைஞ்சஉடனே 21-பீரங்கியும் போட்டார்கள். அந்த மட்டிலே நட்டுமுட்டுக்காரர் நாடக சாலையாளுடனே சகல சம்பிரமத்துடனேயும் வந்து சுபதினத்தில் வீட்டிலே வந்து துரைத்தனத்துக்கு உட்கார்ந்தார்.

1742 ஞு ஜனவரி மூ 15உ துர்மதி ஞு தை மீ 5 உ

நேத்தியதினம் சாயங்காலம்ஆறுமணிக்கு இவ்விடத்திலேயிருந்து இரண்டு பேர் சேவகரைப்பயணம் பண்ணி துரையவர்

கள் வந்த சேதிக்கு கூடலூருக்குப் பிள்ளையவர்களண்டைக்கு சபுறு போச்சுது அவ்விடத்திலே இந்த கபுறு கேட்ட உடனே இராத்திரி அந்த க்ஷணமே 11 மணிக்கு பயணம் புறப்பட்டு இந்த நாள் காலமே 5 மணிக்கு வீட்டுக்கு வந்து (ா) துரையவர்கள் கப்பலின் பேரிலேயேயிருந்து இறங்கச்சே எதிரே போய் பேட்டி பண்ணிக்கொண்டார்கள்.

1942 ஸு பிப்ரவரி மீ 3 உ துர்மதி ஹு தை மீ 25 உ சனிவார நாள்

காலமே பத்து மணிக்கு தூக்கு தொலோரியா என்கிற (Due de la Orleans) சீமை கப்பல் சீமைக்குப் பயணமாய் பாயெடுத்தான். அந்தக் கப்பலிலே சலவைப் புடவை கட்டு...... ...நீலப் புடவைக் கட்டு........பின்னையும் லேஞ்சு கிண்டன் பல தரம் கட்டு...... ஆக கட்டு ஏத்திக்கொண்டு பயணமாச் சுது. இந்தக் கப்பலிலே மூசே துலாரவர்களும் ஏறி சீமைக்குப் போனார்கள்.

......மாசி மீ.........உ முத்திரைச் சாவடியிலேயிருக்கிற வந்தவாசி ரங்கப்பிள்ளையை காவல் பண்ணினார்கள். அதெதி னாலே என்றால் சாவடியிலே இவர் இருக்கிறபோது வெள்ளாழ மன்னப்பமுதலி நெல்லுகொண்டு வருகையில் கெவுனியிலே நெல்லுச் சட்டை எத்தனை என்று அவன் (122) சட்டை என்று சொல்லி சாவடியிலே (120) சட்டை என்று சொன்னபடியி னாலே சேவகனுக்கும் வர்த்தகனுக்கும் விசுதம் நடந்து அதை விசாரிக்கவில்லை என்று காவல் பண்ணினார்கள்.

1742 ஹு பிப்ரவரி மீ 20 உ துர்மதி ஹு மாசி மீ 12 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே நாலரை மணிக்கு (ா) குவர்னர் துரை மூசே திப் பிளேக்சு அவர்கள் காலாப்பட்டுக்கு சவாரி போனார்கள். துரை யவர்கள் வங்காளத்திலேயிருந்து இவ்விடத்துக்கு வந்து இறங்கின பிற்பாடு இந்த சவாரி ஆரம்பம். ஆனால் இவ்விடத் திலேயிருந்து புறப்பட்ட சம்பிரமம் என்னவென்றால் துரை யவர்கள் பல்லக்கு பின்னாலே வெள்ளைக்காரர் ஒரு இன்சு தங்கி 50 பேர்களும் சொலுத்தாதுகளும்........பல்லக்குகளும் நாலைந்து குதிரைகளும் முத்தியப்பிள்ளை யவர்களும் நாமும் கூட தேவடியார் மேளக்காரர் கொம்புதமுக்கு பிள்ளாங் குழல் நாகசுரம் கொடியன் இந்தச்சம்பிரமத்துடனே நீலவிலே புறப்பட்டுப்போனார்கள். போனவாகள் நம்மிட சாவடியைக் கிட்டப்போகச்சே 21 பீரங்கி போட்டு சுட்டார்கள். அவ் விடத்திலே நில்லாமல் சேவையாய்ப் புறப்பட்டு காலாப்பட்

டிலே போட்டிருக்கிற கூடாரத்திலே போயிறங்கி ஒரு நாழிகை இறங்கியிருந்து அவ்விடத்திலேயிருந்து புறப்பட்டு மறுபடியும் நம்மிட சாவடிக்கு வந்து இறங்கினர். வரச்சேயும் 21 பீரங்கிபோட்டார்கள். வந்து இறங்கினவுடனே 21 பீரங்கி தீனிக்கு உட்காரச்சே 21 பீரங்கி சாருய மது குடிக்கச்சே 21 பீரங்கி-குடிச்சு எழுந்திருந்த உடனே 21-பீரங்கியும் போட்டு தோரணங்கள் கட்டி பந்தல்கள் போட்டு வெகு சம்பிரமாய் சாயங்காலம் மட்டுக்கும் திருவிழா சம்பிரமம் போலே மகா வேடிக்கையாயிருந்தது. அப்பால் சாயங்காலம் 5½ மணிக்குப் புறப்பட்டு (ா) துரையவர்களும் மற்றுமுண்டானவர்களும் வந்துவிட்டார்கள்.

**1742** ஞு பிப்ரவரி மீ *22* உக்கு துர்மதி ஞு மாசி மீ **14** உ வியாழக்கிழமை நாள்

காலமே எட்டு மணிக்கு (ா) துரையவர்கள் வீட்டிலே இருக்கச்சே முன்னுலே சாவடியிலே காவலிலே வச்சிருந்த வந்தவாசி ரங்கப்பிள்ளை நெல்லுக்கார கன்னப்பமுதலி வழிச்சாரி சேவகன் இவர்கள் மூன்று பேரையும் அழைப்பிச்சு அவர்கள் சண்டை போட்டுக்கொண்டுவந்து உன்னுடனே சொன்னுல் அதை நீ விசாரியாமல் போனதென்ன, சேவகனிருந்துகொண்டு வந்தவாசி ரங்கப்பிள்ளையைப் பார்த்து நீயும் வர்த்தகனும் கூடிக்கொண்டு திருடுகிறபடியினுலே அல்லவா அவன் என்னை திட்டினதுக்கு நீர் சும்மாயிருந்தீரென்று சொன்னுனே அந்த விஷத்தைத்தானே பளுவாய்ச்சு மத்தி நீர் அப்படி திருடியிருக்கிறபடியினுலே அல்லவா சும்மாயிருந்தாயென்று அதுக்கு தண்டனைபண்ணுகிற மட்டுக்கும் நடத்தி பிற்பாடு பேருக்கு பத்துப்பத்து வராகன் அபராதம் வாங்கிக்கொண்டு விட்டுவிட்டுப் போகச்சொன்னுர்கள். அதின் பிறகு இந்தக் காரிய நிமித்தியம் இவர்கள் பேரிலே பித்திசமெழுதிக்கொடுத்த முருகப்பிள்ளையை அழைச்சு வரச் சொல்லி அந்த வயணமெல்லாம் கேட்டார்கள். அதுகளுக்கெல்லாம் வயணம் வாக்கு சொன்னதின்பேரிலே சாவடி மணியக்காரர் அழகப்பிள்ளை அப்பா தம்பி வந்தவாசி ரங்கப்பிள்ளை இவர்கள் மூன்று பேரையும் அழைப்பிச்சு நாலுபேர் மணியக்காரராயிருக்கச் சொல்லி முருகப்பிள்ளைக்கு உத்தியோகம் கொடுத்தார்கள்.

1742 ஞு பிப்ரவரி மீ 26 உக்கு துர்மதி ஞு மாசி மீ *18* உ சோமவார நாள்

காலமே அஞ்சு மணிக்கு (ா) துரையவர்களும் மதாமும் கொம்மிசேலியர் இரண்டொருத்தருங்கூட முத்தியபிள்ளை

யவர்கள் கனகராயமுதலி அவர் பிறகாலே இரண்டு பிள்ளை களை இரண்டு குதிரை மேலே வச்சுக்கொண்டு வந்தார். தேவடியாள் மேளக்காரர் நாகச்சுரம் இந்த சமயபிரமத்துடனே அரியாங்குப்பத்து ஆத்திலே இந்த நாள் சாயங்காலம் ஆறரை மணிக்கு மறுபடி வந்து புதுச்சேரி சேர்ந்தார்கள்.

பிப்ரவரி மூ 29 உக்கு மாசி மீ 21 உ வியாழக்கிழமை நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு மயிலாப்பூரிலேயிருந்து அசரத்து நபாபு சப்த்தரல்லிகான் சாயபு அவர்கள் வெகு மானமும் மீர்சத்து சாயபு அவர்களுட வெகுமானமும் மீரு குலாம் உசேன் அவர்களுட வெகுமானமும் மூன்று பேர் வெகுமானமும் (ா) துரையவர்களுக்கு வந்தது. இதுக்கு வயணம் நபாபு சப்தரல்லிகான் சாயபு அவர்கள் ஒரு குதிரை யும் ஒரு சிரொப்பாவும், மீர்சத்து சாயபு அவர்கள் ஒரு சிர் ரொப்பாவும், மீருகுலாம் உசேன்வர்கள் ஒரு சிரொப்பாவும் கூடத்தானே ஒன்றாய் வந்தது. வரச்சே இவ்விடத்திலே யிருந்து மேளதாளத்துடனே எதிர்கொண்டுபோய் வெகு மானத்தை பல்லக்கின்பேரிலே வச்சுக்கொண்டு வரச்சே மேற்கு வழுதாவூர் கெவுனி நுழையச்சே கெவுனியிலே-13- பீரங்கி போட்டு (ா) துரையவர்களண்டை கொண்டுவந்து வச்ச உடனே-15 பீரங்கியும் போட்டார்கள்.

1742 அப்ரீல் மீ 10 உக்கு துந்துபி ஷு சித்திரை மீ முதல் 1உ செவ்வாய்க்கிழமை நாள்

...........க்கு கும்பனிர வர்த்தகருக்கு ஒப்பந்தம் கொடுத்து கோந்திராத்து கையெழுத்து போட்டார்கள். பழைய கும்பனிர் வர்த்தகருக்கு ஒப்பந்தம்-2-லக்ஷத்துப்பதினாயிரம் வராகன், சேஷாசலசெட்டியாருக்கு லக்ஷத்து ஒன்பதினாயிரம் வராகனுக்கும் ஒப்பந்தம் கொடுத்தார்கள்.

அப்ரீல் மீ 22 உக்கு துந்துபி ஷு சித்திரை மீ 13 உ ஆதிவார நாள்

...........க்கு முன்னாலே இவ்விடத்திலேயிருந்து போன மணிலா கப்பல் வந்துசேர்ந்து துறை பிடிச்சு--பீரங்கி போட் டார்கள்...........கப்பல் பேர்...........கப்பித்தான் பேர்...........க்கு இந்தவிசை மணிலாவிலே சரக்கு எழுத்துப் பிடவையுடனே சேர்ந்தது நூத்துக்கு நூத்தன்பது ஆதாயம் காண வித்தது. காங்குப்பிடவை கம்பாயம் சட்டை சாம்பு விலை போதாது முதல் பணம் காணுமென்கிறதாய்ச் சொன்னார்கள்.

*1742* ஞூ மே மீ *2* உக்கு துந்துபி ஞூ சித்திரை மீ *23* உ புதவார நாள்

காலமே 9 மணிக்கு பாச்சாவினுடை நிசானும் நவாப்த்தும் ராச ஸ்ரீ துரையவர்களுக்கு வந்தது. அதினுடைய சம்பிரமம் என்னவென்றால் முன்னாலே பாச்சா அவர்கள் அனுப்பியிருந்த நிசானும் நவாப்பத்தும் துலுக்கருடைய பீருலு பண்டிகைக்கு முன்னதாக இவ்விடத்துக்கு வந்துது அதை இதுவரைக்கும் ஒழுகரையிலே வச்சு வச்சு இவ்விடத்திலே நிசான் முஸ்த்தீது பண்ணினார்கள். நிசானும் முஸ்த்தீதானவுடனே இந்த நாள் காலமே அஞ்சு மணிக்கு இவ்விடத்திலேயிருந்து (ௌ) துரையவர்கள் புறப்பட்டுபோய் வழுதாவூர் கெவுனியண்டையிருந்தார். மற்றப்படி சின்ன துரை முதலான கும்பிசெல்க்காரர்கள் கணக்கர், பின்னையும் கும்பனி உத்தியோகஸ்த்தர் வெள்ளைக்காரர் மற்றுமுள்ள வெள்ளைக்காரர் பெரிய மனுஷர் இதல்லாமல் தமிழரிலே பெரிய மனுஷர் கும்பனிர் உத்தியோகஸ்தர் வர்த்தகர் மற்றுமுண்டானவர்கள் கூட மேளதாளம் கொம்பு தமுக்கு சகல சம்பிரமத்துடனேயும் புறப்பட்டு முன்னே கும்பனிர் சேவகன் நூறு பேர் துப்பாக்கிக்காரரும் பிறகே பின்னே ஒரு ஈஸ்தாங்கி அன்பது சொலுதாதுமாய் ஒழுகரைக்குப்போய் அவ்விடத்திலே இருந்து சகல முஸ்த்தீதுடனேயும் புறப்பட்டு ஆனையின்பேரிலே நிசானை வச்சுக்கொண்டு மற்றப்படி நலப்பத்துக்களை ஆனையின்பேரிலேயும் குதிரையின் பேரிலேயும் வச்சுக்கொண்டு நவப்பத்து வாத்தியம் பண்ணிக்கொண்டு ஒரு ஆனையின்பேரிலே அவுதா வச்சுக்கொண்டு நடுவே வரத்தக்கதாக அதின் பக்கத்திலே (ௌ) துரையவர்கள் வரத்தக்கதாக வெள்ளைக்காரர் பல்லக்கும் 40, 45, வெள்ளைக்காரர் குதிரையிலே-10-12-தமிழர் பெரிய மனுஷர் பல்லக்கு-8-9-காடி-6-7-தமிழர் கும்பனிர் உத்தியோகஸ்தர் பெரிய மனுஷர் வீட்டுப்பிள்ளைகள் ஏறிவந்த குதிரையிலே, 30-35-இதல்லாமல் இவ்விடத்திலேயிருந்து போன சவரனையுடனே வெகு சம்பிரமத்துடனே ஒன்பது மணிக்கு வந்தார்கள் வரச்சே வழுதாவூர் கெவுனியிலே-21-பீரங்கி போட்டார்கள். அப்புறம் (ௌ) துரையவர்கள் வீட்டுக்கு வந்த உடனே கோட்டையிலே-21-பீரங்கி போட்டார்கள். அதின் பிற்பாடு துறையிலேயிருக்கிற கப்பலெல்லாம் கப்பலுக்குக் கப்பல்-21-பீரங்கி போட்டார்கள். அந்த மட்டிலே அவரவர் வளவுக்கு அவரவர் போய்விட்டார்கள். பிற்பாடு அந்த கொடியும் நவப்பத்தும் கோட்டையிலே மேலண்டை வாசலிலே கோட்டைக்கு மேலாக வச்சு நித்தியம் வாத்தியம் பண்ணிக்கொண்டு வருகிறார்கள்.

1742 ஆு மே மீ 7 உக்கு துந்துபி ஆு சித்திரை மீ 28 உ திங்கட்கிழமை நாள்

அஸ்தமிச்சு சாமத்திற்குமேல் கனகராயமுதலியார் தங்கச்சி மகன் ஆசாரப்பனுக்கு கலியாண முகூர்த்தம் பெண் கனகராய முதலியார் பெண்சாதி உடப்பிறந்தான் குமாரத்தியைக் கொடுத்தார்கள். சித்திரை மாதம் 24உக்கு மே மாதம் 3 ந்தேதி முதல் ஊர்கோலம்.

சித்திரைமீ 29உ மே மாதம் 8உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே 10 மணிக்கு அனந்தய்யர் வந்து சுங்குவாருடைய மூலைத்தோட்டத்தில் இறங்கினார்கள்.

சித்திரைமீ 30உக்கு மே மாதம் 9உ புதன்கிழமை நாள்

காலமே சென்னப்பட்டணத்திலேயிருந்து (ா) துரையவர்களுக்கு தபாலிலே வந்த கடுதாசியிலே எழுதிவந்தவயணம் பாதிரி தொமாசியார் அவர்கள் முன்னாலே இவ்விடத்திற்கு வந்திருந்து (ா துரையவர்களை அனுப்பிவித்துககொண்டு நாகலாபுரத்துக்குப் போய் அவ்விடத்திலேயிருந்து சரீர சொஸ்தமில்லாமலாய் புறப்பட்டு சென்னப்பட்டணத்துக்கு வந்து 28 ந்தேதி திங்கட்கிழமை சாயங்காலம் 5 மணிக்கு காலம் பண்ணிப்போனார்களென்று எழுதிவந்தது.

1742 மே மீ 13உ துந்துபி ஆு வைகாசிமீ 3உ ஆதிவார நாள்

சாயங்காலம் 5½ மணிக்கு பூசெ செரடுந் என்கிற கப்பித்தான் மரணத்தை அடைந்துபோனான்.

1742 மே மீ 25 உ துந்துபி ஆு வைகாசி மீ 16 உ ஆதிவார நாள்

காலமே மணிலாவுக்குக் கப்பல் பாயெத்தோண அந்தக் கப்பல் பேர் சாம் பெத்துரு (Jean Fidon) கப்பித்தான் ஸவில்பாகு தமிழ் கப்பித்தான் மகம்மதுகான் செகனிவாசமுதலியார்.

1742 ஆு ஜூன் மீ 5 உ துந்துபி ஆு வைகாசி மீ 26 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே நடந்த அதிசய மென்னவென்றால், கோட்டையிலே வேலை செய்கிற கட்டுக்காரர் கோட்டைக்கிடங்கிலே

மிளகு திருடி அவர்கள் மூன்றுபேராய்க் கொண்டுபோய் பங்கிட்டுக்கொண்டு கடையிலே இருக்கப்பட்ட கடைக்காரரை அழைத்துவந்து நிறுத்திவிடப் போகச்சே தலையாரியைக் கண்டு பிடித்துக்கொண்டுவந்து முத்தியாபிள்ளையவர்களுடனே சொன்னவிடத்திலே அவரும் பாவத்துக்குப் பயந்து யோசனை பண்ணி பத்துப்பேர் அறிஞ்சகாரியம் வெளியானால் மடிப்பு வருமென்கிறதாக (ா) துரையவர்களுடனே சொல்லிப்போட்டார்கள். ஆனால் இந்த மூன்றுபேர் கட்டுக்காரரும் செய்த காரியம் மடிப்புதான். அதெந்னவென்றால் இரண்டு மூட்டை மிளகும் ஒரு மூட்டை மெழுகும் மூன்று மூட்டை கட்டி எடுத்துக்கொண்டுபோனார்கள் போகச்சே வழியிலேதானே புறவாய் வெளியாய்ப் போனபடியினாலே அந்த விசேஷம் துரையவர்கள் கேட்டவுடனே கோபித்துக்கொண்டு கிடங்கில் போடச்சொன்னார். பிற்பாடு மத்தியானத்துக்குமேல் மூன்று மணிக்கு கோட்டையிலே கொண்டுவந்து கீழண்டை வாசல் படியிலே இரண்டு புறத்திலே இரண்டுபேரையும் மேலண்டை வாசல்படியிலே ஒருத்தனையுமாக இருட்டுக் கிடங்கிலே போட்டார்கள்.

1742 சூன் மீ 8 உக்கு துந்துபி ஸு வைகாசி மீ 29 உ வெள்ளிக்கிழமை நாள்

காலமே எட்டுமணிக்கு கும்பனீர் வர்த்தகர் சுங்கு சேஷாசல செட்டியார் இவர்கள் இரண்டுபேருக்கும் (ா) துரையவர்கள் வீட்டிலே வெகுமானங்கொடுத்து -9 9- பீரங்கியும் போட்டார்கள் வெகுமானம் ஆனவுடனே சுங்குவார் கும்பனீருக்கு கனகராயமுதலியார் பிள்ளையவர்கள் மற்றுமுண்டான உத்தியோகஸ்தர் அனைவரும் கூடப்போனார்கள். சேஷாசல செட்டியார் தம்முட கும்பனியருக்கு வந்தவர்களுக்கு எல்லாருக்கும் வெகுமானம் கொடுத்தார்கள். அந்தமட்டிலே அவரவர் வளவுக்குப் போய்விட்டார்கள்.

1742 ஸு சூன் மீ 11 உக்கு துந்துபி ஸு ஆனி மீ முதல் தேதி திங்கள்கிழமை நாள்

சாயங்காலம் மரந்தைமுதலியை சாவடியிலே காவலில்வச்சார்கள் அதெதினால் என்றால் குச அங்கன் பெண்சாதி நோவாளி கிடங்குக்கு இரணடு லக்ஷம் குச்சுக்கட்டைக்கு குச்சுபோட்டதை நாலு லக்ஷம் என்று கும்பனீரிலே கணக்கு எழுதிவச்சு வராகன் வாங்கினானென்று பித்திசாமன் எழுதிப்போட்டதின் பேரிலே அவனைப்பிடித்துக் காவல்பண்ணினார்கள்.

*1742* ஞு சூன் மீ 14உக்கு துந்துபி ஞு ஆனி மீ 4உ வியாழக்கிழமை நாள்

காலமே கனகராயமுதலியார் போய் சின்னதுரை யவர்களுடனே சொல்லி அப்புமுதலியார் வீட்டுக் கலியாண நிமித்தியம் விடுதலை செய்தார்கள்.

சூன்மீ 17உக்கு ஆனிமீ 7உ ஆதிவார நாள்

கொண்டுபோய் மரந்தை முதலியையும் அவன் தமையனையுமாக இரண்டுபேரையும் மறுபடியும் காவலிலே வைத்தார்கள். இருநூறு வராகன் கொடுத்தால் விட்டுவிடுகிறோம் என்று சொல்லுகிறார்கள். கொடுக்கிறதுக்கு அம்மாத்திரம் சத்தியில்லாதபடியினாலே கிடங்கிலேதானே யிருக்கிறார்கள்.

சூன்மீ 20உக்கு ஆனிமீ 10உ புதன்கிழமை நாள்

சாயங்காலம் முன்னாலே கோட்டை கிடங்கிலே வைத்திருந்த கட்டுக்காரர் மூன்று பேரையும் அழைத்து கோட்டைக் கிடங்கைவிட்டு முத்திரைச்சாவடியிலே கொண்டுபோய் வைத்து 12 உ வெள்ளிக்கிழமை நாள் காலமே எட்டு மணிக்கு சின்னதுரை யவர்கள் சாவடிக்குவந்து ஞாயம் விசாரித்து அந்தக் கட்டுக்காரர் மூன்றுபேரையும் அழைத்து மரத்திலே மூன்றுபேரையும் கட்டச்சொல்லி 50-50 அடி அடித்து சொணக்கு முத்திரைப்போட்டு ஊர்கடக்கக் கொண்டுபோய் விட்டு வந்தார்கள். அவர்களுடைய உயிர் தப்பினது ஆராலென்றால் முதலாவது சுவாமியும் இரண்டாவது ஆனந்தரங்கப்பிள்ளையவர்கள் புண்ணியத்தினாலே அவர்கள் பிராணன் தப்பித்தது அதேதென்றால் (ஈ) துரையவர்களுடனே ரொம்பவும் நேரிடச்சொல்லி மனுவாய்க்கேட்டுக்கொண்டபடியினாலே அவர்களும் பிள்ளையவர்கள்பேரிலிருக்கிற பக்ஷத்தினாலே தட்டிச்சொல்லமாட்டாமல் விட்டுவிட உத்தாரங் கட்டளையிட்டார்கள்.

**1742** ஞு சூன் மீ 23 உக்கு துந்துபி ஞு ஆனி மீ 13 உ ஞாயிற்றுக்கிழமை நாள்

........மணிக்கு சீமையிலேயிருந்து எர்க்லீயு (Hercule) என்கிற சீர்மை கப்பல் ஓடிவந்து வச்சு பிடிச்சான். துறையிலே வச்சு பிடிச்சவுடனே 15 பீரங்கிபோட்டார்கள். கோட்டையிலேயும் 15 பீரங்கிபோட்டார்கள். இந்தக் கப்பல் வங்காளத்துக்குப் போகிறத்துக்காக வந்தது.

நாளது ஆதிவாரம் நாள் மதாம் திப்பிளேக்சுக்கு அவர் களுடைய பண்டிகை தினம்.

ஜூன் *மீ* 27 வ ஆனி *மீ* 17 வ புதன்கிழமை நாள்

காலமே பனிரெண்டு மணிக்கு சீர்மையிலே யிருந்து லீசு (Lys) என்கிற கப்பல் ஓடிவந்து வச்சு பிடிச்சு 15 பீரங்கி போட்டார்கள். கப்பித்தான் பேர் ஷான் கூடிலுன் (Jean Coudlou) என்று சொன்னார்கள். இந்தச் சீமைக் கப்ப லிலே வந்த சேதி யென்னென்றால் பிராஞ்சுக்காரருக்கும், இங்கிலீசுக்காரருக்கும் இப்போது சண்டையில்லை என்றும் இசுப்பாஞ்சிக்காரருக்கும் இங்கிரீஸ்காரருக்கும் முன்னாலே சுறுக்காயிருந்த சண்டை இப்போது சாடையாயிருக்கிறதென் றும் எம்பர்தோர் ஸ்தானத்திலே போய் பட்டத் துக்கிருக்கிறவர் பிராஞ்சுக்காரருக்கு எழுதி அனுப்பி அவர் கள் மனுஷர் எண்பதினாயிரம் பேர் சொலுதாக்களை அழைப் பிச்சுக்கொண்டு அதின் பேரிலே இவர்கள் மத்தத்தின்பேரிலே போய் எம்பிர்தோர் இராசாவாயிருந்தாரென்றும் மூசே தூம்மா அவர்கள் இவ்விடத்திலேதானே குவர்னர் துரையிட மாய் இருக்கிறார்களென்கிறதாய் அவர் பேருக்குத்தானே கடுதாசி மற்றது வந்ததாகவும் இந்தப்படியென்று சீர்மைக் கப் பல் சேதியாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

ஜூலை *மீ* 9 வ க்கு ஆனி *மீ* 29 வ சோமவாரம் நாள்

இராத்திரி.........மணிக்கு சீனத்துக் கப்பல் பாயெடுத்து ஓடிப்போனான்.

29 வ திங்கள்கிழமை நாள்

காலமே 9 மணிக்கு பரசுராமபிள்ளைக்கு முகூர்த்தம்.

29 வ ஆனி *மீ*

சாயங்காலம் ஆறு மணிக்கு பிள்ளையவர்கள் நம்மிட சாவ டிக்குப் பய்யபண்டாரம் குமாரன் கலியாண நிமித்திபம் போயிருந்து 30 வ சாயங்காலம் 7 மணிக்கு புதுச்சேரி வந்து சேர்ந்தார்கள். (ஜூலை மீ 10 வ ஆனி 30 வ)

1742 ஆகஸ்டு *மீ* 17 வ துந்துபி ஆவணி *மீ* 5 வ சுக்கிரவார நாள்

காலமே எட்டு மணிக்கு சென்னபட்டணத்திலேயிருந்து புதுச்சேரி பட்டணத்துக்கு கானு பாதூர் வந்தார். வரச்சே சென்னப்பட்டணத்துக் கெவுனி வழியாய் வரச்சே

இவ்விடத்திலே யிருந்து கனகராயமுதலியார் முத்தியாபிள்ளை யும் இரண்டுபேர் வெள்ளைக்காரருமாய் மீனாக்ஷி அம்மாள் சத்திர மட்டுக்கும் எதிர்கொண்டுபோய் அழைச்சுக் கொண்டுவரச்சே கெவுனியிலே ஏழு பீரங்கி போட்டார்கள். அந்த மட்டிலே வந்து அவருக்கு விடுதி விட்டிருக்கிற துரை தோட்டத்திலே இறங்கினார்கள் ஆனால் இவர் வருகிறார் என்று பீரங்கிசுடச்சே கெவுனிக்கு வெளியிலே முத்தாலு பேட்டையிலே வண்ணாரத்துறைக்கு வடக்கே பிராமணவீதியிலே தெருவிலே ஒரு பிராமணத்தி நின்றுகொண்டிருக்கச்சே அந்த பிராமணத்திக்கு அந்த பீரங்கிலே.........யிருந்துபோய் அவனுக்கு முழங்காலுக்குத் தாழ காயம்பட்டது. அதன் பேரிலே அந்த அம்மாளை கெவுனியிலே எடுத்துக்கொண்டு வந்து காயங்கட்டினார்கள்.

1742 ஸ்ரீ ஆகஸ்டு மீ 24 உ துந்துபிஸ்ரீ ஆவணி மீ 12 உ வெள்ளிக்கிழமை நாள்

சாயங்காலம் (ரா) இராசா பண்டிகைக்கு ஆரம்பம் பண்ணி பெரிய வரிசை வச்சு மூன்று தரம் துப்பாக்கி வேட்டு தீர்ந்து கோட்டையிலே 21 பீரங்கி போட்டு ஊரைச் சுத்தியிருக்கிற அலங்கத்தின் பேரிலே தென்னண்டையிலே சமுத்திரக்கரை கொத்தளம் ஆரம்பம் வடவண்டை சமுத்திரக். கரை கொத்தள மட்டுக்கும் பீரங்கி சுட்டார்கள்.

ஆகஸ்டுமீ 25உ க்கு ஆவணி மீ 13 உ சனிவார நாள்

காலமேயும் பண்டிகை கொண்டாடி பீரங்கி சுட்டார்கள்

நாளது தேதியில் கிருஷ்ண செயிந்தி உறியடி திருவிழா பண்டிகை.

1742 ஆகஸ்டு மீ 29 உ க்கு துந்துபி ஸ்ரீ ஆவணி மீ 17 உ புதவார நாள்

காலமே அழிசிபாக்கம் மீர்சத்து மனுஷர் வந்து தோரணம் வைக்க வருகிறார்களென்கிற கபுறு அறிஞ்சு இவ்விடத்திலேயிருந்து முன் இவ்விடத்திலே மாயே (Mahe) சண்டை பண்ணி கெலிச்சு வந்து இவ்விடத்திலே சேவகமாயிருக்கிற துலுக்கரை நூறு நூற்றைம்பது பேரை பயணம் பண்ணி அனுப்பிவிச்சு அழிசி பாக்கத்திலே தயினாத்தாயிருக்கிறதற்கு வச்சார்கள். அவனை அனுப்பினார்கள். இது எதினாலென்றால் முன்........................ உமுறட்டாண்டி தண்ணிப்

பந்தலண்டையிலே எல்லேச் சந்துக் கட்டாயிருந்து அவ்விடத்திலே முத்தியாப்பிள்ளையவர்கள் போயிருந்து விறகு அறுத்து எடுத்துவந்தபடியினல் இவ்விடத்தில் இழுக்கு வந்தது.

1742ளு செப்தம்பர்மீ 2உக்கு துந்துபிளு ஆவணிமீ 21உ ஆதிவார நாள்

வெளியிலே யிருந்து இவ்விடத்திற்கு வருகிற வெற்றிலேக் கட்டுகளை வழுதாவூரிலே இறங்கியிருக்கிற மீர்சத்து மனுஷர் தள்ளிப்போட்டார்கள். இதல்லாமல் மீர்சத்து அவர்கள் தமக்கு செல்லப்பட்ட இராச்சியம் காஞ்சீபுரம், திருவொற்றியூர் அந்த வட்டங்களுக்கும் எழுதியனுப்பி அனந்தய்யர் அவர்களுக்கும் எழுதி அனுப்பிவிச்சு பிருமசுக்காரருக்கு எங்கெந்த ஊரிலே புடவைகள் கூடுதோ அந்தந்த ஊர் அமுல்தாரருக்கும் எழுதி அனுப்பிவிச்சுப்புதுச்சேரிக்குப் புடவைகள் போகவொட்டாமல் அங்கங்கே கூடியிருக்கிற புடவையைஅங்கங்கே தடைபண்ணிப் போடச்சொல்லி எழுதி அனுப்பினதின் பேரிலே அந்தப்படிக்குத் தடைபண்ணின சேதிக்கு அந்தந்த துறையிலேயிருக்கிற தரகர் கும்பனீர் வர்த்தகருக்கு எழுதி அனுப்பினர்கள். நமக்கு சிநேகமாயிருக்கப்பட்ட பெரிய மனுஷரும் நமக்கு எழுதி அனுப்பினர்கள். அந்தப்படிக்கு புடவை கட்டுகளும் வராமல் அட்டிபட்டது.

செப்தம்பர் மீ 3 உக்கு ஆவணி மீ 22உ சோமவார நாள்

முன் கனகராய முதலியாருக்கு விட்டிருக்கிற ஆலங்குப்பத்தை சப்திபண்ணி தோரணம் வச்சார்கள். அவ்விடத்திலேயிருந்து இவ்விடத்திற்கு வருகிற சுண்ணும்பு பொதியை தள்ளிப்போட்டார்கள். அந்த சமாசாரம்(ா) துரையவர்களுக்கு வந்து இன்றையதினம் சாயங்காலம் அஸ்தமிச்சு பத்து நாழிகைக்குமேல் இவ்விடத்திலேயிருந்த வீரராகவநாயகனையும் 50 60 பேர். மாயே சேவகனையும் நாலுபேர் சொலுதாக்களையும் கூட்டி அனுப்பிவிச்சார்கள் இவர்கள் போய் தோரணத்தையும் அறுத்துப்போட்டு சுண்ணும்புபொதியும் எடுப்பிச்சுக்கொண்டு மறுநாள் 23உ செப்தம்பர் மீ காலமே சூரிய உதயமாய் நாலஞ்சு நாழிகைக்கு வந்து சேர்ந்தார்கள். மறுபடி இவ்விடத்திலிருந்து 30-40 பேர் சேவகரை பயணம் பண்ணி அனுப்பிவிச்சு ஆலங்குப்பத்திலே தானையமிருக்கச் சொன்னர்கள். அவனை அனுப்பினர்கள்.

**1742**ஸு செப்தம்பர்மீ **4**உக்கு துந்துபிஸு ஆவணிமீ **23**உ

இவ்விடத்திலே கெவுனிக்குள்ளே புடவைக்கடை மேலண்டைக்கடை கடைசிக்கடையிலே இருந்து ஆயம்வாங்கிக்கொண்டிருந்த வழுதாவூர் ஆயக்காரனைக் குண்டுத்தாழைக் கடக்க ஓட்டி விட்டார்கள்.

வடக்கே இருந்து இவ்விடத்திற்கு வருகிற பொதியை வழியிலே கூவத்தூரிலே புடவை பொதி தள்ளிப்போட்டார்கள் இச்சேதிஎழுதிவந்து இவ்விடத்திலிருந்து 40, 50 பேர் சேவகரையும் மூனறுபேர் சேருவைக்காரனையும் கூட்டி அனுப்பினார்கள்.

*1742* ஸு செப்தம்பர்மீ *5* உ-க்கு துந்துபிஸு ஆவணிமீ ***24***உ புதவார நாள்

மரிகிருஷ்ணுபுரத்திலே புடவைக் கட்டுகளை மறிச்சார்கள் என்கிற சேதி இவ்விடத்திலே யிருந்து ........பேர் சேவகரை அனுப்பி அவ்விடத்திலே யிருக்கிற ஆயக்காரரைப் பிடிச்சுக்கொண்டு வந்தார்கள்.

செப்தம்பர் *மீ* 6 உக்கு ஆவணி *மீ* 25 உ வியாழக்கிழமை நாள்

காலமே இவ்விடத்திலே யிருந்து 30, 40 பேர் சேவகரை பயணம்பண்ணி திருவேங்கட நாயக்கனையும் தூக்கனும்பாக்கத்திலே புடவைக்கட்டைத் தள்ளியிருக்கிறதை எடுப்பிச்சுக்கொண்டுவரச்சொல்லி அனுப்பினார்கள். அப்படியே போய் புடவை கட்டை எடுப்பிச்சுக்கொண்டு வரப்போனார்கள்.

இவ்விடத்திலிருந்து அசரத்து நபாபு அவர்களுக்கும் மீர் சத்து அவர்களுக்கும் கடுதாசி எழுதியனுப்பி இருக்கிறார்கள். மறுசேதி இந்த மட்டும் கடுதாசி வரவில்லை. அவ்விடத்திலிருந்து கடுதாசி வந்த பிறகு என்ன நடக்குமோ தெரியாது.

*1742*ஸு அக்டோபர் *மீ 8* -உக்கு துந்துபி ஸு புரட்டாசி *மீ* **26** உ சோமவார நாள்

சாயங்காலம் கிட்டாவுக்குப் போகிற சீர்மைக்கப்பல் மரிசுசேபு (Marie Joseph) என்கிற கப்பல் பாயெடுந்து ஓடிப் போனார்கள். அந்தக் கப்பலுக்கு கப்பித்தான்...... ..... தொக்கதோர் மாமுநெயினா மரக்காயன் இந்த கப்பலிலே ஏத்தின பிடவை காங்கு பிடவை எழுத்துப்பிடவை (ா)

துரையவர்களுக்கு நம்முட முகாந்திரமாய் கட்டுப்போட்டு ஏத்தின கட்டு 59 புகையிலை பாரம்.........அபினி மருந்து பெட்டி .........8, 84

1742 ஹு அக்டோபர் மீ 10உக்கு துந்துபி ஹு புரட்டாசி மீ 28 உ புதவார நாள்

மத்தியானம் பனிரெண்டு அடிச்சு அரை மணிக்கு (ஈ) துரையவர்கள் மூசே துப்பிளேயிக்கு அவர்களுக்கு புத்திரேஸச்சமாய் ஆண்பிள்ளை பிறந்தது. பிறந்த உடனே துறையிலேயிருக்கிற கப்பலுகள் பேரிலே கப்பலுக்கு கப்பல் 21 பீரங்கி போட்டார்கள். கோவிலிலே மணி அரை நாழிகை மட்டுக்கும் முழங்கிற்று. இதற்குள்ளே அந்தப் பிள்ளை சுவாமி பாதம் சேர்ந்து போச்சுது. அந்தப் பிள்ளையிருந்த காத்திரம் ஒரு வருஷத்துப் பிள்ளைபோலேயிருந்தது. அதை மங்கள மேஸ்திரி அளந்து பார்த்து சொன்னது சாதி அடியாலே இரண்டரை அடியிருந்தது இத்தனை காத்திரமும் இத்தனை நீளமும் ஒரு பிள்ளையும் பிறக்கக் கண்டதில்லையென்று சொன்னான்.

இதே நாள் (புரட்டாசி மீ 28 உ) மத்தியானம் பனிரெண்டுஅடிச்சு ஒருமணிக்குநம்முடையஆனந்தப்புரவிப்பாறு கொழும்பிலேயிருந்து ஓடிவந்து துறையிலே வச்சுப் பிடிச்சு காரியக்காரர் பீருமரைக்காயன் முத்துக்குமரப்பிள்ளை மற்ற பேர் இறங்கினார்கள்.

1742ஹு அக்டோபர்மூ 16உக்கு துந்துபிஹு அப்பிசிமீ 3உ மங்களவாரம் நாள்

இந்த நாள் சூரிய உதயமான சாமத்துக்கு வேலூரிலிருந்து கும்பனிர் சேவகர் வந்து துரைக்குச் சொன்ன வயணம் என்னவென்றால் முன் புரட்டாசிமீ 31உ சனிவாரம் நாள் இராத்திரி 20 நாழிகை அளவில் நவாபு சப்பித்தரல்லிகான் சாயபு அவர்கள் வேலூரிலே முர்தாசி அல்லிகான் வளவிலே சாப்பிட்டுப் படுத்துக்கொண்டு நித்திரை போகிறபோது வேலூர் கில்லேதாரன நவாபாக்கிரல்லிகான் குமாரன் இளையவன் நாவாபு முருத்திசா அல்லிகான் என்கிறவன் இப்போது இவன் வேலூருக்கு கில்லாதாராயிருக்கிறவன் நவாப் சப்பித்தரல்லிகான் சாயபு அவர்களுடைய உடப்பிறந்தாளைக் கலியாணம் பண்ணியிருக்கிற மைத்துனன் இதல்லாமல் நவாசப்பித்தரல்லிகான் சாயபு அவர்களுக்கு சாட்சாத் பெரியப்பன் மகன் அப்படி மைத்துனனுகியும் அண்ணன் தம்பியுமாயிருக்கிற முருத்தசி அல்லிகான் என்கிறவன் நவாபு சப்பித்தரல்லிகான் சாயபு நல்ல நித்திரை

வேளையிலே கத்தியினாலே வெட்டிப்போட்டானென்றும் இந்தச்சேதி தகூர்சாயபும் கனஅல்லிமக்குகான் என்கிறவன் அகமது மகமதுகான் வீட்டிலே படுத்துக்கொண்டிருந்தவன் சப்பித்தரல்லிகானுக்கு நல்மருமகனுயிருக்கிறவன் கேட்டு அந்நேரத்திலே கத்தியெடுத்துக்கொண்டு ஓடிவரச்சே வழியிலேயிருந்த முருதிசா அல்லிகான் மனுஷன் அபிசி ஒருத்தன் அலி நகூம்கானை மூன்று காயப்படுத்தினனென்றும் அதிலே அவன் கிழே விழுந்தாப்போலே முருதிசல்லிகான் இவனைச் சகோபு என்கிறவன் பிராஞ்சுகாரன் வீட்டிலே கொண்டுபோய் காயம்கட்டச் சொன்னபடிக்கு அங்கே எடுத்துப்போய் காயங்கட்டினர்கள் என்றும் அந்நேரத்திலே மீர்சத்து அண்டையிலே அதற்கேற்ற மனிதரை அனுப்பி நபாசப்பித்தரல்லிகான் சாயபு அழைக்கிறுன் என்று அழைத்துவரச்சொல்லி ஆளனுப்பினதாகவும் அந்தப்படிக்கு அவன் அழைத்தபடிக்கு மீர்சத்து வந்தமாத்திரத்திலே நபாசப்பித்தரல்லிகான் அழைக்கிறுன் என்று என்ன காரியமோ என்று அந்நேரத்திலே அவன் வீடுவிட்டு வெளியே வந்தமாத்திரத்திலே முருத்தி சல்லிகான் மனுஷர் நூறுபேர் மாத்திரம் போய் அவனைப்பிடித்துக் கட்டிக்கொண்டு அங்கே தானே பயிசாராலேயும் செருப்பாலேயும் சினத்தடியாலேயும் நானூறு அந்நூறு அடி அடித்து அவர்களை இழுத்துக் கொண்டு குத்தப்போன உடனே அகமத்தயர் குமாரன் நபா மகம்மது உசேன்கான் சாயபு முருத்தசல்லிகான் கையை பிடித்துக்கொண்டு இவனை குத்திப்போட்டால் கணக்கு முழுகிப்போம்; இவன் மூன்று வருஷத்திய கணக்கு மோசுபாகு கொடுக்கவேணும் இதல்லாமல் குதிரைக்காரர் கால் சேவகர் சம்பளம் கொடுத்ததும் கொடாததும் தெரியாமல் போம். அதின் பிற்பாடு அவர்களுக்கு உத்திரவாதம் பண்ணுகிறது ரொம்பவும் பிரயாசம் ஆகையாலும் இதுவல்லாமல் இவன் கிழே இந்த சீர்மையிருந்தது அந்தந்த சீமை மோசுபாகு ஆகவேணும் ஆனபடியினாலே இவனைச் சீவனைப் போக்கப் போகாது என்று சொன்னுர். அற்பிசி மீ 3 உ யென்று ரொம்பவும் சொன்னபடியினாலே அந்நேரத்திலே காலுக்கும் கைக்கும், கழுத்துக்கும் விலங்குபோட்டு 30 நாழிகையும் பகலிலே காவல் வைத்தார்கள். பின்னையும் மீர்சத்து, முருதசத்துகான், சப்பித்தரல்லிகான் சாயபு அவர்களைச் சேர்ந்த மனுஷர் எல்லாரையும் காவல் வைத்தார்கள், காசிதாஸ் புக்கான்சி என்கிற குச்சரத்திகாரன் சப்பித்தரல்லிகான் சாயபு சார்பை புகயிருந்தவனை அழைபித்து காவல்பண்ணினுர்கள். அழைத்துக் கொண்டுவரச்சொல்லி வரச்சே சத்தெனலடி கையோயாமல் இரண்டு போட்டார்கள். காவிரல் வெங்கடேச செட்டி என்கிறவன் மீர்சத்து சருப்பு அவனுக்கும் அப்படித்

தான் நடந்தது. இந்தப்படிக்குத்தான் சந்தா சாயபு வீட்டுக்கும் பின்னையும் இருக்கிற பேருக்கும் எழுதி வந்தது.

*1742* ஞு அக்டோபர் மீ *21* உ க்து துந்துபி ஞு அற்பிசி மீ **8** உ ஆதிவாரம் நாள்

சீர்மை கப்பல் பாயெடுத்து 10 மணிக்கு பயணமாய் ஓடிப் போனான். அந்த கப்பல் பேர் புலோரி கப்பித்தான். பேர் மூசே புநம். இந்த கப்பலின்பேரிலே ஏறின கபே கட்டு 1300, புடவைக்கட்டு 800 இதல்லாமல் செம்மரம் பாரம் 1000, மிளகு பாரம் .. . .......மூசே எங்கிராம் அவர் பெண்சாதியும் கூட ஏறி சீர்மைக்குப் பயணமாய்ப் போனார்கள்.

*1742* ஞு ஒக்தோபர் மீ *26* உக்து துந்துபி ஞு அற்பிசி மீ **13** உ சுக்கிரவாரம் நாள்

மத்தியானம் பதினெட்டரை நாழிகைக்கு வேலூரிலேயிருந்து நவாபு மீர்சத்து அல்லிகான் அவர்களும் நவாபு உசேன் த்தயார்கான் சாயபு அவர்களும் நவாபு இராசத்துகான் மற்றப் பேரும் அவர்களுடைய ராணுவக் குதிரை ஆனை சேனை பரிவாரத்துடனே சகல சம்பிரமத்துடனே ஆற்காட்டுக்கு வந்து நவாபு மீர்சத்து சாதிக்அலிகானவர்களுக்கு பட்டங் கட்டி கலவையான மற்றப் பேர் அனைவரும் வந்து நசர் வைத்து பேட்டிபண்ணிக்கொண்டு அரசனுகிறதற்கு நவாபு இடத்திலேயிருக்கிறார்களென்றும் பழையபடிக்கு அவரவர் பெரிய மனுஷர் அவரவர் சீர்மையை அவரவருக்கு விட்டுவிட்டு எல்லாருக்கும் என் சம்மதியாய் நடந்துகொள்ளச் சேதி எழுதி வந்தது. இனிமேல் என்ன நடக்குமோ தெரியாது.

நாளது உக்கு வந்த சேதி என்னவென்றால் தக்கா சாயபும் நவாபும் முதல்லிகானும் இவர்களிருவரும் தவிர சாத்து கடையிலிருந்து இராசத்துகான் சாயபு நசர் மற்றது வைத்து பேட்டி பண்ணிக்கொண்டார்கள் என்றும் கலவை சபிதர் உசேன்கான் வரவில்லை என்றும் இப்படியாகச் சொன்னார்கள். இது அல்லாமல் சென்னப்பட்டணத்திலே இருந்து எழுதி வந்த சேதி என்னவென்றால் நவாபு சபித்தரல்லிகான் சாவு 3 ந்தேதி சாயங்காலம் வந்து அவர்களை வளவிலே துக்கப் படச்சே மறுநாள் 4உ சென்னப்பட்டணம் ஆளுகிற மேஸ்தர் பெரிங்குன் (Mr Benyon) அவர்களை கோட்டையிலே அரைகொடி போடுவித்து வி நாழிகைக்கு ஒரு பீரங்கி விழுக்காடு அறுபத்தொரு பீரங்கி சுட்டு குவர்னர்துரை

முதலாகிய கோன்சேலியேர் பின்னையும் பெரிய மனுஷராயிருக்கப்பட்டவர்கள் அனைவரும் துக்க சட்டையாகிய கருப்புச்சட்டை போட்டுக்கொண்டு பாருவைத்துக் கொண்டு கோவிலுக்குள்ளே போய் சுவாமியை தொழுது கொண்டு மறுபடியும் கோட்டையேபோனார்கள். அதின் பிற்பாடு துரை பெண்சாதி கருப்பு உடுப்புகளை உடுத்திக்கொண்டு சப்பித்தரல்லிகான் பெண்சாதியையும் அவர் தாயாரையும் போய் விசாரித்து விட்டு மறுபடி கோட்டைக்குப் போனான் என்று சப்பித்தரல்லிகான் மகன் பட்டங்கட்டவேணுமென்று இதிலே சிறிதுபேர் யோசனைபண்ணிக்கொண்டு நடக்கிறது என்றும், கானுக்கோய் கிருஷ்ணுசி பண்டிதரையும் சம்புதாசு திருவீதி சேஷாசல செட்டியையும் வரச்சொல்லி இப்போ நவாபாய் உட்கார்ந்து மநுதிசல்லிகான் காகிதம் அனுப்பி வைத்தாற்போலேயும் அதுக்கு கனுகோய் கிருஷ்ணுசி பண்டிதர் தீபாவளி கழித்து உடனே ஆற்காட்டுக்குப் போகவேண்டுமென்று இருக்கிறுரென்றும் இவர் போய் குதிரான பிற்பாடு அவர்கள் போகிறதாயிருக்கிறதென்றும் இப்படியாக சென்னப்பட்டணத்திலிருந்து எழுதி வந்தது. இருசத்துக்கான் ஆற்காட்டிலிருந்தவன் நபாமிருத்தி சல்லிகான் கையில் அனுப்பி வைத்துகொண்டு மறுபடியும் சாத்துக்கடைக்குப் போனுனென்று எழுதிவந்தது.

சென்னப்பட்டணத்திலே இங்கிலீஷ்காரருக்கு 5 கிராமமும் ஆதியப்பநாயக்கருக்கு ஒரு கிராமமும் ஆக 6 கிராமம் உம்பளமாய்விட்டார்களாம். அந்த கிராமத்துப்பேர் வயணம்.

**1742 ௵ நவம்பர் ௴ 11உ க்கு துந்துபி ௵ அற்பிசி ௴ 29உ ஆதிவார நாள்**

காலமே எட்டு மணிக்கு (ஈ) துரையவர்களும் மதாமவர்களும் கோட்டைக் கோவிலிலே பூசை கேட்டுவிட்டு அங்கேயிருந்து ஒழுகரைக்குப் போகவேண்டுமென்று பயணம் புறப்பட்டார்கள். புறப்பட்ட உடனே கோட்டையிலே 21 பீரங்கிபோட்டார்கள். அந்த மட்டிலே புறப்பட்டு கொம்பி செல்காரர் மற்றப்பேருடனே முத்தியாப்பிள்ளை யவர்கள் கூட ஒழுகரைக்குப் போனுர்கள். (ஈ) துரையவர்கள் ஒழுகரைக்குப்போனது எதினுலென்றால் இவ்விடத்திலே சரீர சொஸ்தமில்லை என்கிறதாக ஒரு மாசத்துக்காரியம் ஒழுகரையிலே போயிருந்தால் அவ்விடத்திலே தண்ணீர் சவுகரியமாயிருக்கிறது என்று போனுர்கள்.

*1742* ௵ நவம்பர் ௴ *12*௨ அற்பிசி ௴ *30*௨ சோமவாரம் நாள்

*இராத்திரி சந்திரகிராணம்.*

*1742* ௵ நவம்பர் ௴ *13* ௨ துந்துபி ௵ கார்த்திகை ௴ *1*௨ செவ்வாய்க்கிழமை நாள்

*காலமே 7 மணிக்கு மேஸ்தர் மானுசனவர்கள் தேவனும்பட்டணம் துரைத்தனத்துக்கு சென்னப்பட்டணத்திலேயிருந்து மேற்குவாசல் அலங்கரித்து ஓரமாய்ப் புறப்பட்டு தேவனும்பட்டணத்துக்குப்போகிறார் அவர் துபாசி கிருஷ்ணநாயகரும் அவருடைய தம்பி முன்னாலே மேஸ்தர் ஆப்பர்ட்டு அவர்களண்டையிலே முன்னாலே தேவனும்பட்டணத்திலே துபாசியாயிருந்து மேஸ்தர் ஆப்பர்ட்டு செத்துப்போனதும் பிற்பாடு சென்னப்பட்டணத்துக்குப்போன முத்தாலுநாயக்கரும் கூட தேவனும்பட்டணத்துக்குப் போனார்கள். அவர்கள் போகிறபோது முத்திரசப்பிள்ளை சாவடி மட்டுக்கும் நாமும் ஏகாம்பரமய்யரும் கூடப்போய் இந்த மத்தியானத்துக்கு இவ்விடத்திலே எல்லாருமாய் சாப்பிட்டு மத்தியானத்துக்குமேல் அப்புறப்பட்டுப் போய்விட்டார்கள். நாமும், ஏகாம்பரமய்யரும் சிங்கர் கோயிலிலே யிருந்து இராத்திரிக்கு சுவாமி தரிசனம்பண்ணி காலமே வில்லியனூருக்குப்போய் மத்தியானத்துக்கு சுவாமி தரிசனம் பண்ணி அங்கே மத்தியானத்துக்கு சாப்பிட்டு சாயங்காலத்துக்கு ஒழுகரையே வந்து (ஈ) துரையவர்கள் பேட்டி பண்ணிக்கொண்டு இராத்திரி ஏழு மணிக்கு புதுச்சேரி வந்து சேர்ந்தோம்.*

*1942* ௵ டிசம்பர் ௴ *16* ௨ துந்துபி ௵ மார்கழி ௴ 5 ௨ ஆதிவாரம் நாள்

*சாயங்காலம் ஆறு மணிக்கு (ஈ) துரையவர்கள் ஒழுகரையிலே யிருந்து புதுச்சேரிக்கு வருகிறார்களென்று பட்டணமெல்லாம் அலங்கிரதம் பண்ணி தேவனாயகசெட்டி சாவடி முதற்கொண்டு மீராபள்ளி தங்கசாலை மட்டுக்கும் தோரணங்கள் கட்டி வீதியிலே இருபுறமும் விளக்குகள் வைத்து வில்லியனூர் வாசலிலே அலங்கரித்து மேலே நாலு வரிசை விளக்குவைத்து வெகு அலங்கிரதம் பண்ணிவிவைத்தார்கள். அப்புறம்/ மூசே சீந்நோர் வீடு உப்பத்தாண்டையிலே புதுசாய்க் கட்டியிருக்கிற வீட்டை அலங்கிரதம்பண்ணி அந்த வீட்டிலே வந்திருந்து துரையவர்கள் வாணவேடிக்கை பார்க்கவும் அதுக்கு எதிரே கோட்டைக்கு தென்புறமாய் முன் துரையவர்களுக்குப்*

பிள்ளை பிறக்கப்போகுதென்கிற நிமித்தியமாய் பண்டிகை கொண்டாடத்தக்கதாக விளக்குவைக்கிறதற்குக் கட்டின விளக்கு மண்டபத்தை முஸ்தீதுபண்ணி அதிலே வாணவித்தைகளெல்லாம் செலஸ்த்துபண்ணி அந்த விளக்கு மண்டபம் தொடுத்து மூசே சீஞ்ஞோர் வீட்டு மட்டுக்கும் இருபுறமும் சாலையாய் பீரங்கியை நட்டு கம்ப வாணங்களை நட்டு தயார்பண்ணினார்கள். இதல்லாமல் கோட்டையிலே புடவை பார்க்கிற சாலையிலே துரையவர்கள் வந்து இறங்கித் தீனி தின்னத்தக்கதாக புடவை சாலையை அலங்கிரதம்பண்ணி வன்னமெழுதி மெழுகுதிரியை விளக்கு கொளுத்திவைத்து தீனி முஸ்த்தீதுபண்ணி தயார்பண்ணிவைத்து திட்டம்பண்ணி வைத்திருந்தது. அது இந்தப்படிக்கு பட்டணமெல்லாம் அலங்கிரதப்பண்ணி முஸ்த்திபாயிருந்தது இப்படியிருக்கச்சே (ா) துரையவர்களும் அம்மாளவர்களும் பயண முஸ்த்தீதாக ஒழுகரையிலே யிருந்து புறப்பட்டார்கள். அவ்விடத்திலிருந்து புறப்பட்ட சம்பிரமம் என்னவென்றால் ஆனையின்பேரிலே நகபத்தும் குதிரையின்பேரிலே டங்கா மற்றதும் பெரிய ஆனையின்பேரிலே நிசானுமாக இவ்விடத்திலேயிருந்து பெரிய மனுஷர் வெள்ளைக்காரர் சகலமான பேரும் கானு பாதூர் கூட சகல சம்பிரமத்துடனே சாயங்காலம் ஆறு மணிக்கு ஒழுகரை விட்டுப் புறப்பட்டு எட்டு மணிக்கு வந்து மூசே சீஞ்ஞோர் வீட்டிலே வந்து சேர்ந்தார்கள். அவ்விடத்திலே யிருந்து வாண வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்து எட்டரை மணிக்கு கோட்டைக்குள்ளே போனார்கள். இராத்திரிக்கு ஒன்பதரை மணிக்கு கோட்டையிலே புடவை பார்க்கிற சாலையிலே அலங்கிரதம் பண்ணியிருக்கிற விடத்திலிருந்து சாப்பிட்டு கேளிகை மற்றது விளையாடிக்கொண்டிருந்து பெரிய பண்டிகை கொண்டாடினார்கள்.

1742 ஹு டிசம்பர் மீ 26உக்கு துந்துபி ஹு மார்கழி மீ 15உ புதன்கிழமை நாள்.

காலமே எட்டு மணிக்கு மெரிகையிலே (Merqui) யிருந்து சீமை கப்பல் ஒன்று தேடிவந்தது கப்பல் பேர்.........கப்பித்தான் பேர்...... ...இந்த கப்பலிலே வந்த சரக்கு யானத்து நெடுமூழம் 18000.க்கு கெடி 900 புடவையும் அரிசி கரை— பின்னையும் சிறிது தினுசுகளும் வந்தது.

1743 ஹு ஜனவரி மீ 5உக்கு துந்துபி ஹு மார்கழி மீ 25 உ சனிவாரம் நாள்.

காலமே ஏழு மணிக்கு அச்சையிருந்து (Acher) ஒரு கப்பல் ஓடி வந்து வச்சு பிடிச்சு ஏழு பீரங்கியும் போட்டான். அந்த கப்பல் பேர்.........கப்பித்தான் பேர்.........இந்த கப்பலிலே வந்த குதிரை.........

1743 ஸு 30உ ஜன்வரி மீ. துந்துபி ஸு தை மீ 21உ புதன் கிழமை நாள்

வேலூர் கோட்டையிலே இருந்த மீர்சத்து ஆயிரங் குதிரையுடனே புறப்பட்டு சேத்துப்பட்டு கோட்டையிலே வந்து இருக்கிறதற்கு இடங்கேட்டார். அந்த கோட்டைக்காரன் இடங்கொடுக்கிறதில்லை யென்று சொன்னதின்பேரிலே அவ்விடத்திலே இருந்து புறப்பட்டு வழுதாவூர் கோட்டையிலே வந்து இறங்கினார். பிற்பாடு நூறு குதிரையும் இருநூறு குதிரையுமாய் கொஞ்சம் கொஞ்சமாய் இரண்டாயிரங் குதிரை மட்டும் வந்துசேர்ந்தது ஆகவே மூவாயிரங் குதிரையுடனே வழுதாவூர் கோட்டையிலே யிருந்தான். இருக்கச்சேதானே அந்தக் குதிரைக்காரர் புறப்பட்டு சுத்துப்பட்டிலேயிருக்கிற கிராமங்களெல்லாம் தோரணம் வைக்கிறதும் சுலுமுபண்ணுகிறதுமாக இருந்தது இப்படியிருக்கச்சே.

1743 ஸு பிப்ரவரி மீ 2 உக்கு துந்துபி ஸு தை மீ 24 உ சனிக்கிழமை நாள்

ஆற்காட்டிலேயிருந்த நவாபு உசேன் சாயபு அவர்களும் சரத்துகானு குமாரனும் வந்தவாசிக்கு வந்து அவ்விடத்திலேயிருந்து சப்பித்தரு சானுகானு சாயபு (Safdar husain khan) அவர்களையும் அழைப்பித்துக்கொண்டு அய்யாயிரங்குதிரையும் சேகரம்பண்ணிக்கொண்டு அவ்விடத்திலேயிருந்து புறப்பட்டு வழுதாவூருக்கு மேற்கே திருவக்கரை ஆற்றங்கரையிலே இறங்கி சண்டைபோட்டார்கள். அப்படியிருக்கச்சே அவர் பிறகே வந்த குதிரைக்காரர் ஓரண்டையிலே கிராமங்களெல்லாம் கொள்ளையிட்டு அடித்துப்பறித்து தானியதவசம் உடமை உப்பந்தி தட்டுமுட்டுகள் சகலமும் கொள்ளையிட்டதுமல்லாமல் ஊருக்குள் நெருப்பைபோட்டு வீடு வாசல்களெல்லாம் கொளுத்தி நிர்தூளிபண்ணி சுத்த சூனியமாக்கிப் போட்டார்கள். வழுதாவூர் கோட்டையிலேயிருக்கிற குதிரைக்காரர் புறப்பட்டு அருகாமலிருக்கிற பள்ளிப்பட்டுகளிலும் கிராமங்கள் குப்பங் குடிக்காடு சகலமும் இவர்களும் அப்படியே கொள்ளையிட்டு நிர்தூளிபண்ணிப் போட்டார்கள். இப்படி நாலாவிதமும் இராச்சியமும் கெட்டு இராச்சியத்திலே உண்டான சனங்களெல்லாரும் ரொம்பவும் கெட்டுநொந்து சர்வசோபாரமும் தோற்று கட்டத்துணியும் குடிக்க கஞ்சியுமில்லாமல் ஒருத்தர் போனவழி ஒருவர் போகாமல் முகமிட்ட வாக்கிலே அலைஞ்சுபோனார்கள். ஆனால் முன்னாலே மருட்டியர்கள் கலாபத்திலே இத்தனை அநியாயமில்லை. அப்போவானாலும்

அவரவர் கொஞ்ச நஞ்சம் பறிகொடுத்தது போக அவரவருக்கு கொஞ்சநஞ்சம் தப்பியிருந்து அதன் பிற்பாடு இந்த மட்டுக்கும் சீவனம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். இனிமேல் சீர்மை நிலைக்கிறது ரொம்ப வருத்தமாய் காணுது. மீர்சத்து கோட்டையிலேதானே யிருக்கிறார். உசேன் சாயபு திருவக்கரை ஆற்றங்கரையண்டை இறங்கினபடிக்கே இருக்கிறார்கள். இனிமேல் என்ன நடக்குமோ தெரியாது.

1743 ௵ பிப்ரவரி ௴ துந்துபி ௵ தை ௴

மொக்காவுக்கு ஒரு கப்பல் பாயெடுத்தார்கள் அந்த கப்பல் பேர் நெப்பதானு (Neptune) கப்பித்தான் பேர் முசே துபோக்காஷ் (M. du Bocage) சொபர்கார்சோ முசே குருப்புசாத்து (M. Courbezatre) முசே தேபரேன் (M. Desfresnes) இந்த கப்பலிலே ஏற்றிய சரக்கு.

1743 ௵ பிப்ரவரி ௴ 17 உ க்கு துந்துபி ௵ மாசி ௴ 9 உ ஆதிவார நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு வழுதாவூரிலேயிருந்து அசரத்து உசேன்சாயபு அவர்கள் தம்பி மகம்மது சமால் சாயபு (Muhamad Jamal) 500 குதிரையுடனே ஒழுகரையிலே வந்து இறங்கி (ா) துரையவர்களுக்குச் சொல்லி அனுப்பிவைத்தார்கள். அதின் பேரிலே இவ்விடத்திலேயிருந்து கனகராய முதலியாரை அனுப்பிவைத்தார்கள். கண்டு பேசிவரச்சொல்லி அந்த மட்டிலே இவ்விடத்திலேயிருந்து கனகராய முதலியார் பயணப்பட்டு ஒழுகரைக்குப் போய் அசரத்து உசேன் சாயபு அவர்கள் தம்பி மகம்மது சமால் (Muhamad Jamal) சாயபைக் கண்டு பேசி அனுப்பிவைத்துக் கொண்டு வரச்சே எல்லப்பன் சாவடியண்டையிலே நாற்பது ஐன்பது குதிரைக்காரர் துலுக்கர் இறங்கி யிருந்தவர்கள் கனகராய முதலியாரை வழி மறித்தார்கள். மறித்த மட்டிலே பல்லக்கை நிறுத்தின உடனே அங்கேயிருந்த குதிரைக்காரர் எல்லாரும் வந்து சுற்றிக்கொண்டு அதிலே ஒருத்தன் இறங்கி கனகராய முதலியார் மடியைப் பிடித்துக்கொண்டு ஒரு கையிலே கட்டாரியை உருவிப்பிடித்துக்கொண்டு சேனே அலாக்குபண்ணினார்கள். அதேதனாலே என்றால் அவர்கள் முன்னாலே சந்தாசாயபு அவர்களைச் சேவித்து அவர்களுக்கு சந்தாசாயபு அவர்கள் பேரிலே சம்பளம் வரவேண்டியிருந்து அது நிமித்தமாய் சந்தாசாயபு எழுதிக்கொடுத்த கடுதாசியை வைத்துக்கொண்டு அந்த கடுதாசியை கனகராய முதலியார்

முன்னே போட்டு அசரத்து சந்தாசாயபு அவர்களுடைய மகள் உங்களூரிலே இருக்கிறதே புதுச்சேரிக்கு துரை நீயாமே இந்த கடுதாசியை எடுத்துக்கொண்டு உண்டான பணத்தை நீர் எங்களுக்குக் கொடுத்துவிட்டு அப்புறம் நீர் போய் அவர்கள் கையிலே வாங்கிக்கொள்ளுமென்கிற தாய் அவர்களை விடுகிறதில்லை என்கிறதாய் அங்கு கவரை ஒருத்தன் மடியை ஒருத்தன் பிடித்துக்கொண்டு கட்டாரியை உருவப்போனவுடனே கனகராய முதலியாருக்கு நிற்சீவனாய்ப்போய் உதகிரவு கொடுக்கிறதுக்கு நாவெழாமல் தத்தத் தப்பித் தக்கயென்று தடுமாறிப்போய் வாயிலே பல்லிலே தண்ணியில்லாமல் சித்தப்பிரம்மைபோலே பல்லக்கின்பேரிலே உட்கார்ந்தமட்டிலே யிருந்துபோனார், பெருக்கோரண்டையிலே இழிந்து அலங்கோலப்பட்டது. அப்படி யிருக்கச்சே உசேன் சாயபு மருமகன்—இந்த சமாசாரங்கேட்டு ஒழுகரையண்டை யிருந்தவன் குதிரை போட்டுக்கொண்டு ஓடிவந்து கனகராயமுதலியாரை மல்லுக் கட்டிக்கொண்டிருக்கிற துலுக்கரை சமாதானம் பண்ணி அப்புறம் இருந்துவிட்டு அவர்களுக்கு ரொம்பவும் உடன்படிக்கை சொல்லிவிட்டு மெள்ளன கனகராயமுதலியாரை அப்புறப் படுத்திவிட்டார் அவரெப்போ அப்புறப்படுத்தினரோ அங்கே இருந்த பயணம் ஒரு நிப்பிரமாய் புறப்பட்டு கெட்டேன் பிழைத்தேன் என்று ஒரு நிப்பிரமாய் வந்து கெவுனியிலேவந்து விழுந்தார். ஆனால் இந்த பட்டணத்திலே பிறந்த அதிசய மென்னவென்றால் கனகராய மூதலியார் ஒழுகரைக்குப் போனர் வழியிலே எல்லப்பன்சாவடியண்டையிலே இறங்கியிருந்த குதிரைக்காரர் பிடித்துக்கொண்டு பின்கட்டு மாரையாய் கட்டி அங்கியைக் கிழித்துப்போட்டு பல்லக்குக்காரரை அடித்து பல்லக்கை தவிடுபொடிபண்ணி ரொம்ப அலங்கோலப் படுத்துகிறார்கள். இந்நேரம் என்னமோ தெரியாது என்று பட்டணம் நாலு மூலையும் சொல்லென்று பிறந்தது. உசேன் சாயபு அவர்களின் மருமகனுடைய மருமகன் வந்து விலக்காமலிருந்தால் இப்போது எழுதியிருக்கிறபடிக் கெல்லாம் நடக்கும். அவர் வந்து விலக்கிவிட்டபடியினாலேயும் இவருக்கு ஆயிசு நன்றாயிருக்கிறபடியினாலேயும் தப்பினார். அதின் பேரிலே இவ்விடத்திலேயிருந்து ஒழுகரைக்கு உசேன் சாயபு தம்பி மகம்மது சமா சாயபு அண்டைக்கு உத்தாரம் போய் அவ்விடத்திலே யிருந்து அவரும் பத்துப்பேர் சேவகருமாய் உள்ளே வந்தார்கள். மற்றக் குதிரையன் ராணுவை ஒருத்தரையும் உள்ளே விடவேண்டாமென்று உத்தாரங் கட்டளையிட்டார்கள் அந்தமட்டோடே அவர் வந்திருந்து மறுநாளைக்கு தண்டுக்குப் பயணம் போய்விட்டார்.

*1743* ௵ பிப்ரவரி *மீ 18* உ-க்கு துந்துபி ௵ மாசி *மீ* 10உ சோமவாரம்

சாயங்காலம் உசேன் சாயபு அவர்கள் ஆற்காட்டுக்கு நிசாம் வருகிறார் என்கிறதினாலே பாளையம் கூச்சுபண்ணி அப்புறம் போனார்கள் என்கிற சமாசாரம் வந்தது.

பிப்ரவரிமீ 21உ க்கு மாசிமீ 13உ வியாழக்கிழமை நாள்

காலமே சாமத்துமேல் நிசாம் அவர்களும் அவர் பிள்ளைகளும் அவருடைய பந்து சனங்களும் பெரிய மனுஷர் உமறுக்களும் எழுபதினாயிரங் குதிரையனும் யானையுடனே கால் பலங்களும் கூட சமுத்திரம் பொங்கி வந்தாற்போலே வெகு ஆர்ப்பாட்டத்துடனே ஆற்காடுவந்து தாக்கலானார்கள். ஆனால் அதுகளுக்கு விபரம் வயணம் எழுதுகிறேன். நிசாம் அவர்களுக்கு வயது 80. அவர் சரீரம் ஒல்லியாயிருக்கிறார். நல்ல சிகப்பு ரத்த வர்ணமாயிருக்கிறார். அவருடைய குமாரன் மூத்தபிள்ளை நாசர்சங்கு. அவருக்கு வயது 30. அவருக்கு இளையவன் மகம்மது சயித்துகான். அவருக்கு வயது 8. அவர்கள் இரண்டு பேர் அண்ணன் தம்பி. இரண்டு பேரும் ஒரு யானையின்பேரிலே ஒரு அவுதாவிலே கூடவருகிறதற்கு ஒரு டேராவிலேதானே இறங்கியிருக்கிறது. நிசாம் அவர்கள் மாத்திரம் ஒரு யானையின் பேரிலே வருகிறது. ஒரு டேராவிலே இறங்கியிருக்கிறது. இதல்லாமல் நபாபு மகனென்றும் சொல்லுகிறார்கள். அவர் பேர் சமாலத்தீனுகான் அவர் நிசாமவர்களுக்கு சரிசமானமாயிருக்கிறவராம். அவரும் வேறே ஒரு யானையின் பேரிலே நிசாமவர்களுடனே கூடத்தானே வருகிறதும் அவருடைய டேராவுக்கு அடுத்தாற்போலே சமீபத்திலேதானே இறங்கியிருக்கிறது இதல்லாமல் கேவலம் ஆப்த பந்துக்களாயிருக்கிற உமறுக்கள் பெரிய மனுஷர் நாற்பது அவுதாக்காரர் நூறுபேரைக்கொண்டு கூட வரப்பட்டவர்கள் இதல்லாமல் பீரங்கிச் சாமான்கள் எடுத்துக்கொண்டுவருகிற யானையன் 200, மூட்டைமுடிச்சுகள் எடுத்துக்கொண்டுவருகிற யானையன் 100, பின்னையும் சாமான்கள் எடுத்துக்கொண்டுவருகிற யானையன் 100, சபர்சங்குகளும் பீரங்கி தட்டுமுட்டுகளும் எடுத்துக் கொண்டுவருகிற யானையன் 100, நகாரா நகபத்து பின்னையும் வாத்தியங்களை எடுத்துக்கொண்டு வருகிற யானையன் 100, நிசாமவர்களுடைய சொந்த குதிரை 20000.—

இதல்லாமல் நிசாமவர்கள் பிறகே வந்த சில்லரை சமேதாரர் குதிரையன் 10000 இதல்லாமல் நாற்பது அவுதாக்காரருக்கும் குதிரையன் 20000— கடப்பை அப்துல் நபிகான் சாயபு அவருடைய பிள்ளையனும்கூட வந்திருக்கிறார்கள் அவர்

களுடையபேர் பத்தேமியா-படேமியா. அவர்களது 3000. இதல்லாமல் பாளையக்காரர் அனுகொண்டவாரு—முனுகொண்டவாரு-பிராக்கட்டவூர்வாரு—நாடிக்கட்டவாரு—மயிசூரிவாரு—குடிநாடவாரு — சித்திரகண்டிவாரு — சிரிங்கேரிவாரு — கங்கேந்திவாரு— ஆனைகொண்டிவாரு—யாச்சமன நாயனிவாரு—மட்டலவாரு—இங்கேவாரு—பொம்மராச்சவாரு. பின்னையும் சில்லரை பாளையக்காரர் இவர்களுடையதெல்லாம் 5000, 6000 குதிரையுண்டு. இதல்லாமல் பெண்டாரியள் கணக்கு வழக்கு ஒருமிதம் எழுதப்போதாது. இதல்லாமல் மருட்டியரில் பெரியமனுஷர். இவர்கள் பிறகே வந்தவர்கள் இராசா சந்திரசேன், இராசா நிம்பாலிசியுதோசி என்கிற மருட்டியர். இவர்கள் 2000) குதிரையுடனே இருபதினாயிரங் குதிரையுடனே திருப்பதிக்குப்போய் சுவாமிதரிசனம் பண்ணப்போனார்கள். இனிமேலவர்கள் திருப்பதியிலேயிருந்து காஞ்சிபுரத்து மார்க்கமாய்வருவார்களென்றும் சொல்லுகிறார்கள். ஒருவேளை கணமை மார்க்கமாக வருவார்களென்றும் சொல்லுகிறார்கள்!—இப்போ தண்டு வந்து இறங்கியிருக்கிறது. பொன்னை முதல் வேலூர் கூட்டிக்கொண்டு காவேரிபாக்கம் ஏரிக்கரைமட்டுக்கும் வெகு தூரத்துக்கு வெகுதூரம் பாளையம் இறங்கியிருந்ததாம்—இதல்லாமல் பதினைந்து இருபதுநாள் ஆற்காட்டிலேயிருந்து அவர் குமாரன் நாசர் சங்குவை ஆற்காட்டிலே வைத்துவிட்டு நிசாம் அவர்களும் அவர்கள் பிறகே வரப்பட்ட குதிரை யானையன் ராணுவ சாமான்களுடனே திருச்சிராப்பள்ளிக்குப் போகிறார் என்று சொல்லுகிறார்கள். அவர்களிப்படி தெற்கே போகிறது எதினாலென்றால் திரிச்சிராப்பள்ளியை வாங்கி மயிசூராருக்கு கொடுத்துப் போகிறார்களென்று சொல்லுகிறார்கள். கானுபாதூர் பேட்டிபண்ணிக்கொண்டதாகவும் மற்றப் பேர்சகலமான பெரிய மனுஷரும் இவ்விடத்திலே இமாம் சாயபு. அவர்கள் முகாந்தரமாய் நடக்கிறது. இனிமேல் என்ன நடக்குமோ தெரியாது.—

தண்டு பாளையம் இறங்கியிருக்கிறது பனிரெண்டுநாழிகை வழி சவுக்கமாய் இறங்கியிருக்கிறதாம் இப்படியாக ஆற்காட்டிலேயிருந்து எழுதிவந்தது.

1743 ௵ பிப்ரவரி ௴ 23 உக்கு துந்துபி ௵ மாசி ௴ 15 உ சனிவார நாள்

காலமே சூரிய உதயத்துக்கு வழுதாவூர் கோட்டையிலேயிருந்த மீர்சத்துபாளையம் கூச்சுபண்ணி பயணம்புறப்பட்டு நிசாமவர்கள் பேட்டிக்கு ஆற்காட்டுக்குப் போனார்.

1743 ஆ பிப்ரவரி மீ 23உக்கு துந்துபி ஆ மாசி மீ 15உ

இந்த தினம் இந்த ஊரிலே யிருக்கப்பட்ட (ா) துரையவர்கள் துப்பிளேய்க்சு குவர்னர் துரையவர்கள் யோசனை செய்யும் பட்டணத்திலே யிருக்கப்பட்ட வெள்ளைக்காரர், சட்டைக்காரர் சேவகமில்லாமலிருக்கப்பட்டவர்களெல்லாரையும் உத்தியோகத்துக்கு வரச்சொல்லி வெள்ளைக்காரத் தெருவிலே தெருவுக்குத்தெரு தம்பூரடித்துக்கொண்டு கடுதாசி படித்தார்கள்.

1743ஆ பிப்ரவரி மீ 24உக்கு மாசி மீ 16உ ஆதிவார நாள்

மத்தியானம் மூன்று மணிக்கு கோட்டையிலே (ா) துரையவர்கள் வந்து சிறிது பேர் சொலுதாதுகளையும் சேவகம் எழுதிக்கொண்டு துப்பாக்கிக் கொடுத்தார்கள். இதல்லாமல் துரைத்தனம் பண்ணப்பட்டவர்கள் கொம்மிசெல்காரர் கணக்கர் மற்றபேர் பெரிய மனுஷரா யிருக்கப்பட்டவர்கள் எல்லாருக்கும் துப்பாக்கிக் கொடுத்து சொலுதாதாய் திட்டம் செய்துவைத்தார்கள். இதை இரண்டு கும்பனியாய் பிரிந்து ஒரு கும்பனிக்கு கப்பித்தான் முசே லமெத்திரியையும், ஒரு கும்பனிக்கு கப்பித்தான் முசே திப்பிரமுனியும் (M. d'Esperemónil) ருயித்தினுங்கு ........ இப்படியாக உத்தியோகமும் அவரவருக்குக் கட்டளையிட்டுத் திட்டம்செய்தார். அதன்பேரிலே கோட்டையின் கொத்தளங்கள் சகலமும் முஸ்தீதுபண்ணி அங்கங்கே பீரங்கியின் குண்டுகள் மருந்துகள் எல்லாம் கொண்டுபோய்ச் சேர்த்து முஸ்தீதுபண்ணி லேஸ்துபண்ணி வைக்கிறார்கள்.

1743 ஆ மார்ச்சு மீ 8 உக்கு துந்துபி ஆ மாசி மீ 29 உ சுக்கிரவார நாள்

மாசிமகம், மாகமகம் கும்பகோணத்துக்கு தம்பி திருவேங்கடம்பிள்ளையவர்கள் போய்வந்தார்கள்.

1743 ஆ மார்ச்சு மீ 31 உக்கு துந்துபி ஆ பங்குனி மீ 21 உ ஆதிவார நாள்

இராத்திரி மனீலாவுக்கு யாத்திரை போகிற மகம்மதுஷா என்கிற கப்பல் பாயெடுத்து ஓடிப்போனான். இந்தக் கப்பல் கப்பித்தான் முசே துபுவா, சோபர்கார்கோ, முசே மீசு.

1743௵ அவ்ரீல் ௴ 6 உக்கு பங்குனி ௴ 27 உ சனிவார நாள்

மத்தியானம் 10 மணிக்கு மனிலாவிலேயிருந்து ஒரு கப்பல் ஓடிவந்து வைத்துப்பிடித்து பீரங்கி போட்டார்கள். அந்தக் கப்பல் பேர்..........இந்தக்கப்பல் வங்காளத்துக்கு ஒன்றும் மனிலாவுக்குப் போன கப்பல். இது மனிலாவிலேயிருந்து வங்காளத்துக்கு வந்து அங்கேயிருந்து இவ்விடத்துக்கு வந்தது.

நாளது ௴ 21 உ சனிவார நாள் சாயங்காலம் 4½ மணிக்கு கோட்டை சுப்பையனைப் பிடித்து கோட்டையிலே தானே காவல்பண்ணிவைத்தார்கள். அந்நேரமே வெங்கப் பிள்ளை குமாரன் கணபதிபிள்ளையும் கொண்டுபோய் சாவடியிலே கிடங்கிலே வைத்தார்கள். அதின்பேரிலே சாயங்காலம் 6-மணிக்கு முசே திப்பிரம்மனே (M. d'espremenil) என்கிறவரும் முசே ........... கனகராயமுதலியாரும் முத்தியாபிள்ளையவர்களும் கூட சுப்பையர் வீட்டுக்கு வந்து வீடுவாசலெல்லாம் சோதித்து இருந்த தட்டு முட்டுகள் பெட்டி பேழை வெண்கலத்தட்டு முட்டு சகலமும் ஒரு வீட்டிலே போட்டுக் கணக்கெழுதிக் கொண்டு முத்திரித்துப்போட்டு கும்பனீர் சேவகரையும் பாளையக்காரருடைய சேவகரையுமாய் தெருவாசலில் காவல் வைத்தார்கள். அந்த மட்டிலே குண்டு போட்டு 9½ மணிக்குப் புறப்பட்டுப் போய்விட்டார்கள். இப்படியெல்லாம் நடந்தது எதினாலே என்றால் முன்னாலே நாலு மூன்று மாதத்துக்கு முன்னே கனகராயருக்கு நீலக் கூலி சம்மதிக் கும்பனீரிலே பணம் வரவேண்டியிருந்து கணபதிபிள்ளையை அனுப்பி பணம் வாங்கிவரச் சொன்னார். அவன் போய் முசே கோர்னேயைக் கேட்டதற்கு அவர் 3200 வராகனுக்குப் பணம் முடிச்சாய் எண்ணிக் கொடுத்து கணபதி கையிலே கையெழுத்து வாங்கிக் கொண்டான். அந்தப் பணத்தை வாங்கிவந்தவுடனே கனகராயமுதலி இருந்துகொண்டு எப்போதும் ரூபாயாச்சே கொடுக்கிறது பணத்தை நீ ஏன் வாங்கி வந்தாய், கொண்டுபோய்க் கொடுத்துவிடு என்று சொன்னார். அவன் மறுபடி கொண்டு போய்க் கொடுத்துவிடப்போனால் கோர்னே வாங்கமாட்டேனென்று சுப்பய்யன் கையிலே கொடுத்துவைக்கச் சொன்னார். அந்த மட்டிலே அவர் சுப்பய்யர் கையிலே கொடுத்துப் போட்டு வந்துவிட்டான். சுப்பய்யர் அந்தப் பணத்திலே எடுத்து 2000 வராகன் மட்டுக்கும் செலவுசெய்துவிட்டார். அதின்பேரிலே இப்படி நடந்து பிற்பாடு மறுநாள் காலமே பணத்துக்கு உடன்படிக்கைப் பண்ணிக்கொண்டு விட்டுவிட்டார்கள்.

**1743 ஞ அவ்ரீல் மீ 9 உக்கு துந்துபி ஞ பங்குனி மீ 30 உ செவ்வாய்க்கிழமை நாள்**

காலமே எட்டு மணிக்கு மனிலாவிலேயிருந்து ஒரு கப்பல் ஓடிவந்து வச்சு பிடிச்சான். அந்த கப்பல் பேர் சான் பெதுனு (M. Jean fidon) கப்பித்தான் பேர் மூசே லவில்பாக்கு (M. de la Villebague) தமிழ் கப்பித்தான் செகினிவாசமுதலி இந்தக் கப்பலிலேயிருந்து ஒன்பதுமணிக்கு மூசே லவில்பாகுவும், செகினிவாச முதலியும் இறங்கிவந்தார்கள். ஆனால் இந்தக் கப்பலிலே வந்த சேதி என்னென்றால், எழுத்துப்புடவை லம்பாசு சீட்டியில் நல்ல விலைக்கு விற்றதாகவும் காங்கு புடவைக்கு விலை கிராக்கியில்லாமல்சரக்குவிற்காமலிருக்கிறபடியினாலே இந்தக் கப்பலிலே சொபர்கார்கோவா இப்போது போனவர்களிலே ஒருத்தனை மனிலாவிலே வைத்துப்போட்டு வந்துவிட்டதாகச் சொன்னார்கள். இந்தக் கப்பலிலே வந்த சரக்கு வயணம்.

இதல்லாமல் இந்தக்கப்பலிலேவந்த சேதி என்னவென்றால்: முந்தை மாசத்திலே இவ்விடத்திலேயிருந்து மொக்காவுக்குப் பயணமாய்ப்போன கப்பல் அந்தக்கப்பல் பேர் நெப்பத்துன் (Neptune) கப்பித்தான் பேர் மூசேது பொக்காழ் (M. de Bocage) சொபர்கார்கோ மூசே குருப்புசாத்து (M. Courbezatre) மூசே தீபெறென். (M Desfresnes). இந்தக்கப்பல். இவ்விடத்திலேயிருந்து பாய்வலிச்சு மாயேக்குப் (Mahé) போய்சேர்ந்து அவ்விடத்திலே மிளகும் ஏலக்காயும் ஏற்றிக்கொண்டு அங்கேயிருந்து பாய்வலிச்சு மொக்காவுக்குப் பயணமாய்ப் போகச்சே அதற்கடுத்தாப்போலே சமீபத்திலேதானே கள்ளக் கப்பல்காரர் அங்காடியார் ஐந்தாறு கப்பலுடனே வந்து சுற்றிக்கொண்டார்கள். அதின்பேரிலே கப்பல்காரன் தங்களாலே ஆனமட்டுக்கும் பீரங்கியினாலேயும், துப்பாக்கியினாலேயும் சுட்டார்கள். என்ன சுட்டாலும் இவர்களுக்கு அபசெயகாலமானபடியினாலே அவர்களுக்குள்ளே ஒன்றும் சேதப்படாமல் நெருங்கிவந்து கப்பலைப் பிடித்து லக்கை ஏறினார்கள்ா கள்ளர் வந்து எப்போது கப்பலின்மேல் ஏறினார்களோ அந்தமட்டிலே கப்பலிலே யிருந்தபேர் திகைச்சாப்போலே நின்றுபோட்டுப்போனார்கள். அந்தமட்டிலே கள்ளா அதுரவர் கையாட்டின சமயத்திலே மூசே குருப்புசாத் (M. Courbezatre) என்கிறவர் தண்ணீரியிலே குதித்தார் அவரைத் தாழேயிருந்தபேர் துண்டந்துண்டமாய் வெட்டிப்போட்டார்களாம். மூசே துபொக்காசை (M. du Bocage) தலையிலே ஐந்தாறு காயமாய் சிலுக்கசிலுக்க வெட்டினார்கள். மூசே லோஸந்தீசு (M. Lhostis) என்கிறவனை இடதுகையை வெட்டிப் போட்டார்கள் மூசே பநவேலென்கிறவனுக்கு (M. Baraville) மாரிலேஇரண்டுதுப்பாக்கி காயம்பட்டது. இந்தச்சந்தடியிலே

முசே தெபேரஸ், M. Desfresnes) பயந்து பெரிய பெட்டி யிருந்தது அந்தப் பெட்டிக்குள்ளே பூந்துகொண்டான். அப்படி யிருக்கச்சே அவனைக்கண்டு கைப்பிடியாய்ப் பிடித்து தங்கள் கப்பலிலே ஏற்றிக்கொண்டார்கள். ஆனால் பின்னையும் வெகுபேர் மனுஷர் சேதமாச்சுது ஆனால் இவர்கள் கப்பலுக்கு இப்படி ஆதங்கம் வருவானேனென்றால் இந்தக் கப்பலிலே வெள்ளைக்காரர் விஸ்தாரமாயில்லாதபடியினாலே இப்படி இப்படி மோசம் வந்தது. இப்படியிருக்கச்சே பிர்த்துகேசுக் காரனுடன் கப்பல் (Portuguese) சீர்மைக் கப்பல் ஒன்று அது வழியாக வரச்சே இந்தக் கலாபத்தைக் கண்டு இதேதோ சண்டைபண்ணுகிறப்போலே இருக்கிறதென்றுசமீபமாய் ஓடி வந்து பார்த்தவுடனே இவர்களானால் கள்ளக்காரரென்று தெரிந்துகொண்டு பீரங்கியை இழுத்துக்கொண்டு கட்டி சுடு கிறதற்குள்ளே இந்தக் கப்பலை விட்டுப்போட்டு அவர்கள் ஓடிப்போய்விட்டார்கள். அந்த மட்டிலே பிர்த்துகேசுக்காரர் (Portuguese) இந்தக் கப்பலைப் பிடித்துக்கொண்டுபோய் மங்க ளூரிலே வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்தச்சேதிக்கு பிர்த்துகீஸ் (Portuguese)க்காரருக்கு மாயே (Mahé) யிலே யிருந்து பிராஞ்சுக்காரர் ரொம்பவும் உபசாரமாய் சிநேகித ருமாய் எழுதி அனுப்பிவித்தார்கள். அந்த மட்டிலே யிருக்கி றது; இன்னம் கப்பலை விட்டதில்லை என்றும் அவர்கள் விச்ரேயரவர்களுக்குக் கோவைக்கு எழுதியனுப்பியிருக்கிறார்க ளென்றும் இப்படியாக மனில் கப்பலிலே சேதிவந்து (ஈ) துரையவர்களுக்கும் காகிதமும் வந்தது.

*1743* ஷு மேமீ *8* உ-க்கு ருத்ரோத்காரி ஷு சித்திரை மீ *29* உ புதன்கிழமை

சென்னப்பட்டணத்திலேயிருந்து நிசாமவர்களுக்கு வெகு மானம் கொண்டுபோயிருந்த வெள்ளைக்காரர் மூன்று பேரும் ராயசம் பெரிய துபாசி வெங்கடாசலய்யர் சின்ன உத்தாண்டி முதலியார் மற்றுமுண்டான சேவகர் மற்றப்பேர் அனைவரும் கூட வந்து எல்லாருமாய் நயினியப்பிள்ளையவர்கள் சாவடியிலே இறங்கினார்கள் ராயசம் பெரிய துபாசி வெங்கடாசலய்யர் அவர்கள் மாத்திரம் பட்டணத்துக்கு மேற்கே நம்முடைய தோட்டத்திலே வந்திறங்கினார்கள். நானும் வெளியிலே சாரி போனவிடத்திலே அவருக்கும்நமக்கும் சந்திப்பு ஆச்சுது. அந்த மட்டிலேஅவரை நம்முடைய வளவுக்கு வரச்சொல்லி அழைத்த விடத்திலே நல்லதென்கிறதாகச்சொல்லி இந்நாள் இராத்திரி சந்திரகிராணமானபடியினாலே கிராண ஸ்நானத்துக்குப்போக வேணுமென்கிறதாய் பட்டணத்துக்குள்ளே வந்தார். அதின் பேரிலேஅவருக்கு விருந்துமற்றது பண்ணிவைத்துவெகுமானம் நாலு நகையும் கொடுத்து அச்சைக் குதிரை ஒன்று

கொடுத்து அனுப்பிவைத்தோம். அந்நேரமே நம்முடைய கையிலே அனுப்பிவித்துக்கொண்டு கெவுனி திறந்த உடனே மறுநாள் காலமே ஐந்து மணிக்குப் பயணம் புறப்பட்டுப் பட்டணத்துக்குப் போய்விட்டார்.

1743 ஹு மே மீ 9உக்கு ருத்ரோத்காரி ஹு சித்திரை மீ 30உ குருவாரம் நாள்

காலமே 6 மணிக்கு கோபால நாராயணய்யர் என்கிறவரை மாயே (Mahé) துலுக்கர் மரிகிஷ்ணுபுரத்திலேயிருந்து பிடித்துக்கொண்டு வந்தார்கள். அதெதினாலென்றால் சுங்கு சேஷாசலசெட்டியாருக்கு கோபால நாராயணய்யர் கடன் கொடுக்கவேண்டிய சம்மதிக்காக சேஷாசல செட்டியார் கோபால நாராயணய்யரண்டைக்குக் கூடலூருக்குப்போயிருந்தார் அவ்விடத்திலே (ௗ) துரையவர்களுடனே சொல்லி அவரைப் பிடித்து காவல்பண்ணுகிறதாயிருந்தபடியினாலே தப்பித்துக்கொண்டு மரிகிஷ்ணுபுரத்திலே வந்திருந்தார். அந்தமட்டிலே சேஷாசலசெட்டியார் இவ்விடத்துக்குவருகிறவழியிலே அவரிருக்கிறபடியினாலேவரபயந்துஇவ்விடத்துக்கு எழுதிக்கொண்டார். அந்த காபரு கேட்டு (ௗ) துரையவர்கள் இவ்விடத்திலேயிருந்து 20, 30 பேர் மாயே (Mahe) துலுக்கரை மற்றதாய் அனுப்பிவித்தார்கள். அவர்கள் போய் மரிகிஷ்ணுபுரத்திலே பதுங்கியிருந்தார்கள். ஆதிவார நாள் இராத்திரி கிராணமானபடியினாலே கிராண ஸ்நானத்துக்கு மரிகிஷ்ணுபுரத்துத் துறையிலே ஸ்நானம்பண்ணத்தக்கதாக அவரும்அவருடைய சிரேஷ்ட புத்திரனும் ஐந்தாறு பேர் சேவகருமாக வந்தார்கள். வந்தவுடனே மாயே (Mahé) துலுக்கரும் கும்பினீர் சேவகருமாய் பதுங்கியிருந்தவர்கள் போய் விழுந்து பிடித்தார்கள். பிடித்தவுடனே அவருடைய குமாரன் மல்லுக்கட்டி ஒருத்தர் இரண்டுபேரைக் கையாட்டினான். அதின்பேரிலே அவனைப் பதினைந்து இருபது வெட்டுக்காயப் படுத்திவிட்டுப்போட்டு இந்த கோபால நாராயணய்யரென்கிறவரை மாத்திரம் பிடித்துக்கட்டிக்கொண்டு வந்தார்கள். இவ்விடத்திலே (ௗ) துரையவர்கள் சொன்னதின்பேரில் அவரைக் கொண்டுபோய் முத்தையாப்பிள்ளை வளவிலே காவல்பண்ணி வைத்தார்கள்.

1743 ஹு மேமீ 9 உக்கு ருத்ரோத்காரி ஹு சித்திரை மீ 30உ வியாழக்கிழமை.

இந்த நாள் வியாழக்கிழமை காலமே ஏழு மணிக்கு திரிச்சிராப்பள்ளியிலே இறங்கியிருக்கிற நிசாமவர்களண்டையிலேயிருந்து வெகுமானம் நாலு நகையும், ஒரு அரபிக் குதிரையும்

வெகுமானம் வந்தது. வரச்சே இவ்விடத்திலே யிருந்து (ா) துரையவர்கள் சின்ன துரையவர்கள் மூசே துளோராமவர்கள் மற்றுமுள்ள குமிசெல்காரர் பெரிய மனுஷர் தமிழரில் பெரிய மனுஷர் கனகராய முதலியார் முத்தியாபிள்ளையவர்கள், சேஷாசலசெட்டி குமாரன் மற்றுமுள்ள பெரிய மனுஷர் சற்றேறக்குறைய அறுபது பல்லக்கும், இருபது, முப்பது குதிரையின்பேரிலே எல்லோருமாய்ப் புறப்பட்டு ஆனையின் பேரிலே நிசாமும், நவாப்த்தும், இருநூறு பேர் சொலுதாதும், தம்பூர், புல்லாங்குழல் மாயே துலுக்கர் நூறு துப்பாக்கிக்காரரும், பாளையக்காரர் சேவகரும் கொம்பு தமுக்கும் மேளதாளத்துடனே சகல சம்பிரமத்துடனே புறப்படச்சே செட்டியனும் கூட பல்லக்குகளும் காடியின்பேரிலேயும் குதிரையின்பேரிலேயுமாக ஏறிக்கொண்டு கூடத்தானே போனார்கள். அந்த மட்டிலே கெவுனிக்கு வெளியிலே போட்டிருககிற கூடாரத்திலே (ா) துரையவர்கள் மூசே துப்ளேக்ஸ் (M. Dupleix) அவர்கள் இறங்கியிருந்து மற்றப்பேர் அனைவரும் அப்புறம் நடந்தார்கள். இதற்குள்ளே ஒழுகரையிலே இறங்கியிருந்த வெகுமானத்தைக் கொண்டுகினு எதிரே வந்தார்கள். வரச்சே எதிர்கொண்டு போய் அழைத்து வந்து (ா) துரையவர்களிருக்கிற கூடாரத்திலே கொண்டுவந்துவிட்டார்கள். அந்த வெகுமானம் வந்தவுடனே (ா) துரையவர்கள் எழுந்திருந்து கையினாலே வாங்கிக் கொண்டார். கையிலே வாங்கச்சே கொத்தளங்களிலே 21 பீரங்கி போட்டார்கள். அந்த மட்டிலே எல்லாருமாய் எழுந்திருந்து நாலு நகை வெகுமானத்தையும் (ா) துரையவர்கள் ஏறுகிற பல்லக்கின்பேரிலே வைத்துக்கொண்டு வெகுமானம் வந்த அரபிக் குதிரையைப் பக்கத்திலே பிடித்துக்கொண்டு அதின் பின்னோடே ஆறு குதிரை கட்டின வண்டியின்பேரிலே (ா) துரையவர்களும் சின்னதுரையும் மூசே துளோராம் பின்னையும் இரண்டொரு கொமிசெல்காரர் கூட ஏறிக்கொண்டு வந்தார்கள். இவர்கள் பிறகாலே

**1743** ஷு மாசி மீ 9 உ-ந்த ருந்றோத்காரி ஷு சித்திரை மீ 30 உ வியாழக்கிழமை இந்த நாள்

இவ்விடத்திலே யிருந்துபோன நவாபத் மற்றுமுள்ள சகல சம்பிரமத்துடனேயும் புறப்பட்டு வரச்சே கெவுனியிலே நுழைந்தவுடனே 21 பீரங்கி போட்டார்கள். அவ்விடத்திலே யிருந்து (ா) துரையவர்கள் வீட்டுக்கு வந்தார்கள். வந்தவுடனே 21 பீரங்கி போட்டார்கள். அதின் பிற்பாடு கப்பலின்பேரிலே 21 பீரங்கிபோட்டார்கள்.

மே ௴ 13 ௳ வைகாசி ௴ 3 ௳ திங்கட் கிழமை

இந்த நாள் காலமே முன் மொக்காவுக்குப் போன கப்பல் நெப்பதூன் (Neptune) என்கிற கப்பல் இந்த நாள் ஓடிவந்து வச்சுப் பிடிச்சுது. அந்தக்கப்பலில் வந்த சேதி யென்னென்றால்.

மே ௴ 16 ௳-க்கு வைகாசி ௴ 6 ௳ வியாழக்கிழமை இந்த நாள்

காலமே 10 மணிக்கு கும்பனீர் வர்த்தகருக்கு ஒப்பந்தம் பண்ணி கோந்திராத்து எழுதி கையெழுத்துப் போட்டார்கள். அவர்களுக்கு அய்யாயிரம் வராகன் கொடுத்தார்கள். வெகுமானம் மற்றதும் இப்போது ஒன்றும் காணவில்லை. இந்நாள் சாயங்காலம் சேஷாசல செட்டியாருக்கு பழையபடிக்கு ஒப்பந்தம் கொடுத்தார்கள். கோந்திராந்திலே கையெழுத்தும் போட்டார்கள்.

மே ௴ 17 ௳ வைகாசி ௴ 7 ௳ சுக்கிரவார நாள்

நான் போய் (ா) துரையவர்கள் பேட்டி பண்ணிக் கொண்டவுடனே சிறிது ஒப்பு உடம்படிக்கையன் பேசிக் கொண்டு அதின் பிற்பாடு மத்தியானம் பனிரெண்டு மணிக்கு கோந்திராந்திலே போன வருஷம் கூடினபடிக்குச் சரக்கு கூடத்தக்கதாகப் பேசி கையெழுத்துப்போட்டுக் கொடுத்து வந்தோம்.

1743 ௵ மே ௴ 31 ௳க்கு ருத்ரோத்காரி ௵ வைகாசி ௴ 21 ௳ வெள்ளிக்கிழமை நாள்

மத்தியானம் இரண்டு மணிக்கு பசுறுவிலேயிருந்து ஒரு கப்பல் ஓடிவந்து வச்சுபிடிச்சு-9-பீரங்கி போட்டான். அந்தக் கப்பல் பேர்..... ......................... ...இந்த கப்பலிலே வந்த சரக்குகள் ...............

1743 ௵ ஜூன் ௴ 1 ௳க்கு ருத்ரோத்காரி ௵ வைகாசி ௴ 22 ௳ சனிவார நாள்

சாயங்காலம்-5 மணிக்கு சூரத்திலேயிருந்து கடுதாசி இவ்விடத்துக்கு கரைவழியேவந்தது. அந்தக் கடுதாசி சேதியென்னவென்றால் எம்பர்தோர் இறந்துபோய் அந்தப் பட்டத்துக்கு ஒருத்தரும் ஏற்படாமல் அந்த இராசாவுக்குக் கீழ்படிந்துயிருந்தவர்கள் பத்துப்பதிமூணுபேர் ஒருத்தருக்கொருத்தர் உனக்கெனக்கென்று அடித்துக்கொண்டிருக்கையில்

பிரான்சுகார இராசா அவர்கள் யோசனைபண்ணி எம்பார் தோர் இராசா சந்ததியிலே சுதந்திரனாக யிருக்கிறவனுக்கு பட்டங்கட்டி வைக்கிறதற்காக இருபத்தையாயிரம் பேரை மற்றதாய் அனுப்பிவைத்து பட்டங் கட்டிவைத்துப் போட்டு அந்த25000 பேரும் வரச்சே எம்பார்தோர் இராசாவுக்கு திலே ஷியாயிருக்கப்பட்ட இராசாக்கள் இரண்டு மூன்று இரா சாக்களாய்க்கூடி எண்பதினாயிரம் பேரை அனுப்பி இந்த இருபத்தையாயிரம் பேர் வரச்செ வழியிலே மறித்துக் கொண்டு சண்டை பண்ணினார்கள். இந்தச் சண்டை பண்ணினவிடத்திலே இவர்கள் எதிர்த்துக்கொண்டு 20000, 25000 பேரை வெட்டி செயித்தார்கள். அந்த மட்டிலே அவர்கள் புறப்பட்டு ஓடிப்போனார்கள், அதின்பேரிலே இவர்கள் புறப்பட்டு பிரான்சு இராச்சியம் வந்து சேர்ந் தார்கள். அந்த சாமாச்சாரம் பிரான்சு இராசா அவர்கள் கடுதாசி எழுதி கரைவழியாய் அனுப்பிவைத்தார்கள். அந்தக்கடுதாசி சனிவாரநாள் சாயங்காலம் இவ்விடத்துக்கு வந்து சேர்ந்து அந்த சந்தோஷ கபுறு வந்த கடிதாசியைப் பார்த்துக்கொண்டவுடனே 1743 ௵ சூன் ௴ 2௳ வையாசி ௴ 23௳ மறுநாள் ஆதிவாரம் நாள் காலமே எட்டுமணிக்கு (ா) துரையவர்கள் மற்றுமுண்டான துரைத்தனக்காரர் பெரிய மனுஷர் யாவரும் கோவிலுக்குப் போய் பூசைகேட்டு ஆன வுடனே இந்தக் கடுதாசியை சகலமானபேரும் கேட்கத்தக்க தாகப்படித்துக் காண்பித்து இராசாவை வாழ்த்தி வாழ்த்தி பண்டிகை கொண்டாடினார்கள். கோட்டையின்பேரிலேயும் கப்பல்கள் பேரிலேயும் பீரங்கி சுட்டு இராசாபேருக்கு பண்டி கை கொண்டாடினார்கள்.

1743 ௵ சூன் ௴ 1௳க்கு வைகாசி ௴ 22௳

முத்தியாபிள்ளையவர்கள் குடும்பத்துடனே திருப்பா திரிப்புலியூர் திருவிழாவுக்குப் போனார்கள் அவர் மாத்திரம் படகின்பேரிலே போனார். மற்றப்பேர்கரைவழியே போனார்கள்.

சூன் ௴ 5௳க்கு வையகாசி ௴ 26௳

மீரா வெளியிலே ஒரு துலுக்கன் வீட்டிலே திருடின திரு டனை இன்றையதினம் நாலு மணிக்கு சாவடிக்கெதிரே கொண்டுவந்து தூக்கிலே போட்டார்கள்.

1743 ௵ சூன் ௴ 16 ௳க்கு ருத்ரோத்காரி ௵ ஆனி ௴ 6 ௳ ஆதிவார நாள்

காலமே சீர்மையிலேயிருந்து ஒரு கப்பல் ஓடிவந்து வச்சு பிடிச்சான். அந்தக் கப்பல் பேர் பனிக்கிசு (Phénix) கப்பல்

கப்பித்தான் பேர் மூசே புறுசெல் (M. Brassy) இந்தக் கப்பலிலே வந்த வெள்ளிப் பெட்டி.

1743 ௵ சூன் மீ 17 உ க்கு வையாசி மீ 7 உ சோமவார நாள்

சீர்மையிலே யிருந்து ஒரு கப்பல் ஓடி வந்து வச்சு பிடிச்சான். அந்தக் கப்பல் பேர் லறுக்கோனத்து. (Argonaute) கப்பல் கப்பித்தான் பேர் மூசே ஒபென் (M. Aubin) இந்தக் கப்பலிலே வந்த வெள்ளி பெட்டி.

இந்த நாள் பிருத்தக்கேசுக்காரன் (Portuguese) கப்பல் ஒன்று வந்து வச்சுபிடிச்சான். அந்தக் கப்பல் முன் பிரமாதீச ௵ (1733) த்திலே கோவையிலிருந்து பரங்கிப்பேட்டைக்கு வந்து வச்சுபிடிச்சு சரக்கு கூட்டிக்கொண்டு போனவன். இப்பவும் இந்தக் கப்பலிலே வெள்ளியும் பொன்னும் விஸ்தாரமாய் தானே வந்திருக்கிறது. கப்பல் கப்பித்தான் சோபர்கார்கோ மூசே மில்னேர் (M. Moullineau).

1743 ௵ சூன் மீ 25 உக்கு ருத்தோத்காரி ௵ ஆனி மீ 15 உ செவ்வாய்க்கிழமை நாள்

குண்டுக்கிராமமும் முருங்கப்பாக்கமும் ஐந்து வருஷத்துக்கு குத்தகை பேசி வாங்கின குத்தகைக்காரர் பேர் வயணம்

| | |
|---|---|
| வருஷம் ஒன்றுக்கு குண்டு கிராமம் குத்தகை வராகன் . . . . . . . . | 9 4 |
| முருங்கப்பாக்கம் குத்தகை வராகன் . . . | 751 |

இந்தப்படி பேசி வாங்கி கையெழுத்துப் போட்டார்கள் குமரப்பிள்ளை, வீராநாயக்கன், சந்திரமதிபிள்ளை, எல்லப்பிள்ளை இவர்கள் நாலுபேரும் குத்தகை ஐந்து வருஷத்துக்கு ஒப்புக்கொண்டு நம்மை பிணைச்சொல்லிவைத்து, கையெழுத்துப் போட்டார்கள். இவர்களுக்கு நாம் பிணையாக நாமும் கையெழுத்துப்போட்டுக்கொடுத்தோம். இந்தக் குத்தகை துவக்கம் 1743 ௵ சூலை மீ முதல் தேதி முதல் ஐந்து வருஷத்துக்கு நிர்ணயம் பேசித் தீர்த்துக்கொண்டது.

1743 ௵ சூன் மீ 15 உக்கு ஆனி மீ 25 உ செவ்வாய்க்கிழமை நாள்

இந்தப் பட்டணத்திலே நடந்த அதிசயம் என்னவென்றால் இவ்விடத்திலே யிருந்து சிறையன் கொண்டுவித்த

பரமானந்தனென்கிறவனைப் பிடித்து கைக்கும், காலுக்கும் விலங்குபோட்டுக் கசெத்திலே கோட்டையிலே போட்டார்கள். அதேதினுலென்ருல், கோட்டையிலே ஒயர்வு சுகிப்பர் உத்தியோகத்திலே யிருக்கப்பட்ட முசே ............க்கு ஆஸ்தகனுயிருக்கிற முசே சூது (M. Soude) என்கிறவன், பரமானந்தன் கையிலே பணங்காசு கொடுத்து சிறையன் (Slaves) கொண்டு வரச்சொன்னபடியினுலேயே அவன் தன்னுடைய மனுஷரை விட்டு வெளியிலே மனுஷரை அனுப்பி சிறைகொண்டு வரச் சொன்னபடியினுலே அவர்கள் போய் சிறிதுபேரை கை விலைக்கு கொண்டு வந்ததும் அத்தடனே கூட சிறிது பேரை வழியிலே மோசம் பண்ணிக்கொண்டு வந்தார்கள்.

அப்படி வெகுபேரை சுண்ணும்பிலே மருந்து கலந்து கொடுத்தும் கையிலே மைச்சிமின் வைத்துக்கொண்டுயிருந்தும் அதினுலே மோசம் பண்ணியும் வெகுபேரைக் கொண்டு வந்தார்கள். அப்படியிருக்கச்சே இவ்விடத்திலே அதுகள் எப்படி வெளியான வயணம் எப்படியென்ருல் இவ்விடத்திலே மணிலா மலையப்பனெகிறவன், உத்தியோகமில்லாமல்பரமானந்தனிடத்திலே போகவரயிருந்தவன் இந்தச் சாடைகளெல்லாம் பார்த்தான். அவன் வந்து இருசப்பசெட்டி முத்துசெட்டியுடனேயும் குடைக்கார ரங்கப்பனுடனேயும் சொன்னுன். அவர்கள்போய் குதிரைபார்க்க வேணுமென்கிறதாக சாக்கிட்டுக்கொண்டு பின்னையும் நாலுபேர் செட்டியளைக் கூட்டிக் கொண்டு போனுர்கள் அவ்விடத்திலே போய் சிறைக்கூடத்துக்குள்ளே போனவுடனே அங்கே நாலுபேர் செட்டிகளும் ஒரு செட்டிக்கு அம்மையும் இவர்கள் பந்துசனமாயிருக்கிறவர்கள் ஓடிவந்து காலிலே விழுந்து அழுதார்கள். அவர்களை விசாரிக்குமிடத்தில் ஒருத்தனை மூட்டையிருக்கிறது எடுத்துவாரியா கூலி தருகிறோம் என்று அழைத்து வந்து உள்ளே போனவுடனே மொட்டை அடித்து காலிலே விலங்கு போட்டார்களென்று சொன்னுர்கள். ஒருத்தனிருந்துகொண்டு வெத்திலையிலே சுண்ணும்பு தடவிக்கொடுத்தார்கள். அதை போட்டுக்கொண்ட உடனே என்னமோ மயக்கமாயிருந்து வந்துவிட்டேனென்று சொன்னுன். ஒருத்தன் சொன்னது சங்கமாத்திரை பண்ணுகிருர்கள். வாரீயா என்றழைத்தார்கள். உள்ளே வந்த உடனே மொட்டை அடித்தார்கள் என்று சொன்னுன். பின்னையும் சிறிது பேர் விறகு கட்டு விலைபேசி அழைத்துக்கொண்டு வந்து உள்ளே விட்டு மோசம் பண்ணினதும் பில்லுக்கட்டுக்காரரை அழைத்துவந்து மோசம் பண்ணியும் நாலாவிதமும் சிறை பிடித்தார்கள். இதல்லாமல் தலங்கம்பாடி யண்டையிலே ஒரு கிராமத்திலே இவர்களுக்கு ஒரு வீடு இருக்கிறதாம். அந்த ஊருக்கு மேற்கே குப்பக் காட்டுகளிலேயும் இப்படித்தான் மோசம் பண்ணி அந்த

வீட்டிலே நூறுபேர் அன்பது பேரைக்கொண்டுவந்து அடைத்துவைத்து ஒரு இராத்திரியிலே படகின் பேரிலே ஏற்றி, அரியாங்குப்பத்திலே கொண்டுவந்து இறக்கி, அவ்விடத்திலே இவன் வீடு ஒன்று யிருக்கிறது, அந்த வீட்டிலே கொண்டுவந்து அடைத்து அவ்விடத்திலே மொட்டையடித்து கறுப்பு புடவைகளைக் கொடுத்து ஒரு காலிலே விலங்கு வளையம் போட்டு அங்கேயிருந்து இராத்திரியிலே சாச்சுக் கொண்டுவந்து சூதன் வீட்டிலே யிருக்கிற சிறைக்கூடத்திலே அடைத்துப்போடுகிறதும். கப்பல் போகச்சே அப்படித்தானே படகிலே ஏற்றி கப்பலின் பேரிலே ஏற்றிவிடுகிறதும் இப்படியாக நாலு மூன்று தரம் ஏற்றியும்விட்டார்கள். அதிந்த மட்டும் வெளியாகாமலிருந்தது இப்போது இருசப்பசெட்டி, முத்தும், ரங்கப்பனுலேயும் வெளியாச்சுது. அதின் பேரிலே இவர்கள் போய் முசே சூதனுடனே இப்படியானல் வருகிறவனை போகிறவனை எல்லாம் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். நாங்களறிந்தவர்கள் நாலைந்து பேரிருக்கிறார்கள் அதை தீர விசாரிக்கவேணுமென்று சொன்னார்கள். அதற்கவன் சொன்னது நான் பணங் கொடுத்தல்லோ கொண்டது போவென்று சொல்லி அதை விசாரித்தான். இவர்கள் மோசம் பண்ணிக்கொண்டுவந்தது பிசகில்லை. அந்த ஐந்துபேரையும் கூட்டிக்கொண்டு கனகராய முதலியாரண்டைக்கு அனுப்பி விட்டுவிடச்சொன்னான். அவரதை இருசப்பசெட்டி முத்தண்டைக்கு அனுப்பிவித்தார். அவன் ஒப்புக்கொண்டால் என்ன பதிலாமைவருமோ என்கிறதினாலே ஒப்புக்கொள்ளமாட்டோம் என்றான் அதன் பேரிலே சூதன் புறப்பட்டு கனகராயமுதலியார் வீடு சேஷாசலசெட்டியார் வீடு நம் வீடு இருசப்பசெட்டி முத்துவீடு இவ்விடங்களுக்கெல்லாம் போய் வீடுவீடாய் நுழைந்து அவரவருக்கு ரொம்ப தெரியப்படச்சொல்லிப் போட்டார்கள். அந்தமட்டிலே காலமே கனகராயமுதலியார் போய் ஈ துரையவர்களுடனே இந்த வயணமெல்லாம் சொன்னார் அதன் பேரிலே பரமானந்தனை அழைத்துவரச்சொன்னார்கள். அவனைப்போய் கும்பனீர் சேவகர் அழைக்கவே உள்ளேயிருந்த அருளானந்தனென்கிறவன் தோட்டத்தாலே ஏறிக் குதித்து பாதிரிகோயிலிலே பூந்துகொண்டான் பரமானந்தனை மாத்திரம் கொண்டுபோய் கோட்டையிலே கச்சோத்திலே போட்டார்கள். முசே சூதை உத்தியோகத்தை வாங்கிப்போட்டு அவனுக்கு எஜமானனுயிருக்கிற குவனர்துரை யவர்களை அழைத்து அவனுடைய கணக்கு வழக்கெல்லாம் ஒப்புக்கொள்ளச் சொல்லி உத்தாரங்கட்டளையிட்டு அந்த உத்தியோகத்துக்கு வேறே ஒரு வெள்ளைக்காரனை நேமித்து உத்தியோகம் கொடுத்தார்கள்.

1743 ௵ ஜூலை ௴ 5 ௳ ருத்ரோத்காரி ௵ ஆனி ௴ 25 ௳ சுக்கிரவாரம் நாள்

மத்தியானம் இரண்டு மணிக்கு சீர்மையிலே இருந்து ஒரு கப்பல் ஓடி வந்து வச்சு பிடிச்சான் அந்தக் கப்பலிலே வந்த சேதிகள்............

ஜூலை ௴ 21 ௳ந்து ஆடி ௴ 9௳ ஆதிவாரம் நாள்

சாயங்காலம் ஏழு மணிக்கு (ா) துரையவர்கள் குமாரத்தி கலியாணத்துக்கு கனகராயமுதலியார் வெகுமானமும் வரிசையுங் கொண்டுபோனார்கள் என்னெனவென்றால், பட்டுச் சுருட்டி............ ..பல தினுசு சரக்குகள்...........

ஜூலை ௴ 21 ௳க்கு ஆடி ௴ 9௳ ஆதிவாரம் நாள்

சாயங்காலம் 5 மணிக்கு செஞ்சி கோட்டையிலே யிருந்து தண்டுக்குப் போகத் தக்கதாக புதுச்சேரிக்கு வந்துசேர்ந்தார். அவர் யாரென்றால் மீருகுலாமுசேன் வந்து சேர்ந்தார்.

ஜூலை ௴ 22௳க்கு ஆடி ௴ 10 ௳ சோமவாரம் நாள்

சாயங்காலம் 7 மணிக்கு (ா) துரையவர்கள் குமாரத்தி இரண்டு பேருக்குக் கலியாணம் என்கிறதாக நம்முடைய வளவிலேயிருந்து மேளவாத்தியம் தீவட்டி வாணவேடிக்கையுடனே வெகுமானமும் வரிசையும் அறுபது எழுபது ஆள் சுமை போட்டுவித்துக்கொண்டுபோய் கொடுத்துப்போட்டு வந்தோம் என்னென்னவென்றால்............

1743 ௵ ஜூலை ௴ 23௳க்கு ருத்ரோத்காரி ௵ ஆடி ௴ 11௳ செவ்வாய்க்கிழமை நாள்.

சாயங்காலம், 7 மணிக்கு கும்பனீர் வர்த்தகம் சேஷாசல செட்டியார் வெகுமானமும் உலுப்பேயும் கொண்டு போனார்கள்.

ஜூலை ௴ 24 ௳க்கு ஆடி ௴ 12 ௳ புதன்கிழமை நாள்

காலமே எட்டு மணிக்கு வந்தவாசியிலேயிருந்து டக்கே சாயபு வெகுமானம் வந்தது. வெகுமான மென்னவென்றால் நாலு நகை வெகுமானம் வந்தது.

நாளது ஜூலை மீ 24உ-க்கு ஆடி மீ 12உ புதவார நாள்

சாயங்காலம் ஏழு மணிக்கு கும்பனி வர்த்தகர் வெகுமானமும் உலுப்பேயும் கொண்டுபோனார்கள்.

ஜூலை மீ 25 உ-க்கு ஆடி மீ 13உ வியாழக்கிழமை நாள்

சாயங்காலம் ஏழு மணிக்கு முத்தியாபிள்ளையவர்கள் வெகுமானமும் உலுப்பேயும் கொண்டுபோனார்கள். என்னென்னவென்றால் சரப்பணி....... 2-க்கு......விலை......வராகன் 50 பட்டுச்சுருட்டி 2-க்கு ............விலை.........வராகன் 20 மற்ற உலுப்பை சர்க்கரை கற்கண்டு திராக்ஷைப்பழம் வாதாம்காய், சாதிக்காய், சாப்பத்திரி லவங்கம், பழவகைகள் அரிசி, பருப்பு, ஆடு, கோழி மற்றச் சாமான்கள் கிரையம் ...... .....வராகன் 30 ஆக இருநூறு வராகனுக்கு வெகுமானம் உலுப்பையும் கொண்டுபோனார்கள்.

ஜூலை மீ 26 உ-க்கு ஆடி மீ 14 உ வெள்ளிக்கிழமை நாள்

மத்தியானம் சவுளிக்கடைக்காரர் வெகுமானமும் உலுப்பையும் கொண்டுபோனார்கள். அவர்கள் கொண்டுபோன உலுப்பை வெகுமானம் சகலமும் ரூபாய்............

நாளது உ ஜூலை மீ 26 உ-க்கு ஆடி மீ 14 உ

சாயங்காலம் ஏழு மணிக்கு சலத்து வெங்கடாசல செட்டியார் வெகுமானமும் உலுப்பையுமாக கிரயம் ரூபாய்.................மட்டுக்கும் கொண்டுபோய் கண்டார்.

1743 ஆம் ஜூலை மீ 27 உ-க்கு ருத்ரோத்காரி ஆம் ஆடி மீ 15 உ சனிவாரம் நாள்

மத்தியானம் குண்டூர் ரவணப்பா செட்டியார் வெகுமானமும் உலுப்பேயுமாகரூபாய்.........மட்டுக்கும் கொண்டுபோய் கண்டார்கள். நாளது உ யில் சாயங்காலம் படேசாயபு வெகுமானமும் உலுப்பேயும் கொண்டுபோனார்கள். அதென்னென்னவென்றால்............

நாளது தினம் தறுவாடி வெகுமானமும் உலுப்பேயும் கொண்டுபோனார்.

ஜூலை மீ 28வ க்கு ஆடிமீ 16வ ஆதிவாரம் நாள்

சந்தா சாயபு அவர்கள் குமாரன் வெகுமானம் அனுப்பினார். நாளது வ யில் டங்காசாலைக்காரர் மேலுகிரி பண்டிதர் வீட்டிலேயிருந்து வெகுமானம் வரிசை கொண்டுபோனார்கள்.

நாளது வ ராத்திரி ஒன்பது மணிக்கு மளிகைக்கார செட்டியார் வெகுமானமும் வரிசையும் கொண்டுபோனார்கள்.

1743 ஞு ஜூலை மீ 29 வ க்கு ருத்ரோத்காரி ஞு ஆடி மீ 17 வ திங்கட்கிழமை நாள்

காலமே எட்டு மணிக்கு கோட்டைக்கோயிலிலேயிருந்து (ஈ) துரையவர்கள் வீட்டுமட்டுக்கும் போட்டிருக்கிற பந்தலிலே பெண்கள் இரண்டுபேரைப் பல்லக்கின்பேரிலே வைத்துக்கொண்டு மற்ற துரைத்தனக்காரர் துரைசானியார் சகலமானசனங்களும் நடந்துபோனார்கள். எல்லாருமாய்கோட்டைக் கோவிலுக்குள்ளே போனவுடனே, பீரங்கியன் மிதமில்லாமல் சுட்டார்கள். அதின்பேரிலே கோவிலிலே 7 மணிக்கு துவக்கி 8 8½மணி மட்டுக்கு மிருந்து மோதிரம் மாற்றிக் கோண்டு கோவில் கலியாணமும் ஆகி வெளியே புறப்பட்டு மறுமடியும் வீட்டுக்கு வந்தார்கள். இன்றையதினம் கலியாணம் சம்பிரமம் தீனிச்செலவு சகலமும் வராகன்.................... இந்தநாள் ராத்ரி கோட்டையின் பேரிலேயும் வீட்டு மதில்கள் பேரிலேயும் விளக்குகள் வைத்து கம்பவாணங்கள் நட்டு ஆறரைமணி துவக்கி எட்டுமணி மட்டுக்கும் வாண வேடிக்கை பார்த்த பிற்பாடு பந்தலிலே வந்து துரையன் துரைசானியன் கூட்டிக்கொண்டு நாட்டியமாடினார்கள்

1743 ஞு ஜூலை மீ 30 வக்கு ருத்ரோத்காரி ஞு ஆடி மீ 18 வ செவ்வாய்க்கிழமை நாள்

மத்தியானம் வெள்ளைக்காரர் சகலமான பேருக்கும் விருந்துசாப்பிட்டுகலியாணம் சம்பிரமமாய்நடந்தது. இன்றையதினம் ராத்திரியும் அப்படித்தானே கோட்டைக்கு தென்னண்டையிலே கம்பவாணங்கள் நட்டு விளக்குக்கூண்டுகட்டி இருக்கிறதின்பேரிலேயும் வாணங்களைக்கட்டி தாழேயிருந்து வெகு வாணங்களைக் கொளுத்தினார்கள். துரையன் கோட்டையின் பேரிலேயிருந்து எட்டுமணி மட்டுக்கும் வேடிக்கைப் பார்த்து பிற்பாடு வளவுக்குப் போய் இன்றையதினமும் அவர்கள் தானே நாட்டியம் பண்ணினார்கள்.

1743 ஞ ஜூலை மீ 31௨க்கு ருத்ரோத்காரி ஞ ஆடி மீ 19௨ புதன்கிழமை நாள்

ராத்திரி தாசிகளை அழைப்பித்து கேளிக்கைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது முன் கலியாணத்துக்கு வரிசை கொண்டுவந்த வர்த்தகர் பெரிய மனுஷர் அனைவருக்கும் தம் மண்டையிலிருக்கப்பட்ட உத்தியோகஸ்தருக்கும்வெகுமானம் கொடுத்த சம்பிரமம் எழுதமுடியாது. அதெென்னவென்றால் வெகுமானம் கொடுத்தவுடனே சூரினேசு பண்ணச்சொல்லி சொப்புதார்கள் பெரிய மனுஷர் நாலத்து ரெண்டுபேரைக் கையைப்பிடித்து இழுத்து குனியச்செய்து கழுத்துப் பிடரி யிலே குத்தினார்கள்.

1743ஞ ஆகஸ்டு மீ 1௨க்கு ருத்ரோத்காரிஞ ஆடிமீ 20௨ வியாழக்கிழமை நாள்

காலமே 11 மணிக்கு வில்லியநல்லூரிலே வந்திருக்கிற முகலே நம்முடையவளவுக்குவந்தான். அவனேது வந்ததென்றால் (ா) துரையவர்கள் விட்டுக்கு கலியாணத்துக்கு வந்திருந்து போகிறவன் நம்மண்டைக்கு வந்து அனுப்பிவித்துக் கொண்டு போகத் தக்கதாக வந்தான். வந்தவிடத்திலே அவருக்கு ஒரு சிப்பம் சகலாத்தும் கொடுத்து பன்னீர் பாக்கு வெற்றிலை கொடுத்து சொல்லவேண்டிய உபசாரம் நாமும் சொன்னோம். அவரும் பிரதி உபசாரம் சொல்லி வாங்கிக்கொண்டார் இந்தப்படி அந்தமட்டிலே அனுப்பிவித்துக்கொண்டுபோனார். இந்த நாள் வெகுமானம் வெளியிலே யிருந்துவந்தது. அது யாருடையதென்றால்,.........

1743ஞ ஆகஸ்டுமீ 5௨க்கு ருத்ரோத்காரிஞ ஆடிமீ 24௨ திங்கட்கிழமை நாள்

சாயங்காலம் ஐந்து மணிக்கு கலவைக்கோட்டையிலே யிருந்து சப்பித்தருசேன்கான் சாயபு அவர்கள் நாலு நகை வெகுமானம் அனுப்பிவித்தார்கள். அதை இவ்விடத்திலே மேளவாத்தியத்துடனே எதிர்கொண்டுபோய் அழைத்துவந்து துரையவர்களண்டையிலே கொண்டுபோய் வைத்தவுடனே... பீரங்கிபோட்டார்கள்.

ஆகஸ்டு மீ 6 உக்கு ஆடி மீ 25 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே ஏழு மணிக்கு மீருகுலாமுசேனவர்கள் நம்முடைய வளவுக்குவந்து அனுப்பிவித்துக் கொண்டுபோகத் தக்கதாக வந்தார்கள். வந்தவுடனே தெருவாசல் மட்டுக்கும்

எதிர்கொண்டுபோய் அழைத்துவந்து வெகுமானம் இரண்டு சிப்பம் சகலாத்தும் நாலு பன்னீர் சொம்பும் கொடுத்து அவர் பிறகே வந்த...... .. .....க்கு.........ம் வெகுமானம் பண்ணி அனுப்பினோம். அந்தமட்டிலே அனுப்பிவித்துக்கொண்டு அவர் வளவு மீரா வெளியிலேயிருக்கிற வீட்டுக்குப் போனார்கள். அங்கேயிருந்து அந்நேரமே பயணம் புறப்பட்டு தண்டுக்குப் போகத்தக்கதாகப் பயணம் போனார்கள்.

*1743* ஞு செப்டம்பர் மீ *1* உக்கு ருத்ரோத்காரி ஞு ஆவணி மீ *20*உ

ஞாயிற்றுக்கிழமை ராத்திரி நவாப் ஆசபுசா (Asaf Jah) அவர்கள் வசுக்கூரிலிருந்து வந்த காபுரு என்னவென்றால் முராரிராயருக்கும் நவாபு ஆசபுசா அவர்களுக்கும் உடன் படிக்கை நடந்து கோட்டையைவிட்டு வெளியே வந்து திரிச்சிராப்பள்ளி கோட்டையிலே நவாபு ஆசபுசா அவர்கள் மனுஷரும் பார்சாவுடைய கொடியும் நாளது மாதம் 17உ வியாழக்கிழமை சாமத்துக்குக் கொண்டுபோய் சண்டாவும் போட்டு பத்தே நவபத்து பசாய்ச்சார்கள். முயன்றும் முராரியனுக்கு நவாபு ஆசபுசா அவர்கள் தயவுபண்ணி கொடுக்கிறோமென்று சொன்னதென்னவென்றால், பெனுகொண்டையென்று வடக்கே ஒரு துர்க்கமிருக்குதாம். அந்த துர்க்கமும் கொடுத்து ஆயிரம் குதிரை மனசுபாவுக்கு அந்த துர்க்கத்துக்கு அடுத்தாற்போல சாகீரும் விடத்தக்கதாக உடன்படிக்கையும் எழுதிக் கொடுத்து சத்தியாய் முராரியனை சேவித்துவந்தவர்களுக்கு முராரியன் கொடுக்கவேண்டிய சம்பளத்துக்காக நவாபு ஆசபுசா அவர்கள் இரண்டு லக்ஷம் ரூபாய் கொடுக்க உடன்படிக்கை பேசி தீர்த்துக்கொண்டு இதுகளெல்லாம் தப்பிப்போகாமல்படிக்கு அதற்கேற்ற பரவசாகனை வாங்கிக் கொண்டு திரிச்சிராப்பள்ளி கோட்டையை ஒப்பிவித்தானென்றுமீர்குலாமுசேன்மனுஷர்காசிதாசு புகான்சி(Kasi Dos Bukonji) தாசவர்களுக்கு நம்மைக் கொடுக்கச்சொல்லி உண்டிகை காகிதமும் கொண்டுவந்தவர்கள் சொன்னார்களிந்தக் கபுருமேயப்படித்தானதுக்குச் சந்தேகமில்லை. ஆனால் இந்த முராரியன் மெத்தக் கெட்டிக்காரன் என்று கீர்த்திபெற்றான். அதெதினாலே என்றால் நவாபு ஆசபுசா அவர்கள் தயவு பண்ணி மாசி மாதம் முதல்கொண்டு நாளதுவரைக்கும் ஆறேழு மாசமாய்க் கோட்டையின்பேரிலே வந்திறங்கிக் கொண்டு சண்டைபண்ணாமை விருந்துகொண்டு பிடிபடவில்லை பிடிபடவில்லையென்று சொல்லிக்கொண்டு ஆசுதா பண்ணிக் கொண்டு ஆட்டங் கொடுத்துக்கொண்டு இருந்ததையிட்டும்

நவாபு தந்திரவாதியானபடியினாலே இவர்களுக்கும் காரியம் அநுகூலமாச்சுது அவனும் கீர்த்திபெற்றான்.

**1743** ௵ செப்டம்பர் ௴ 2 உ-க்கு ருத்ரோத்காரி ௵ ஆவணி ௴ **21** உ திங்கட்கிழமை நாள்.

காலமே ஆறு மணிக்கு நவாபு ஆசபுசா அவர்கள் லசுக்கரிலிருந்து இமாம் சாயபு அவர்கள் கடுதாசி (ா) துரையவர்களுக்கு வந்தது. அந்தக் கடுதாசியிலே எழுதிவந்த வயணமென்னவென்றால், அந்தக் கடுதாசியிலேயும் அப்படித்தான் முராரி ராயருக்கும் நபாபு ஆசபுசா அவர்களுக்கும் உடன்படிக்கையாய் நாளது ௴ வியாழக்கிழமை நாள் சாமத்துக்கு முராரிராயன் கோட்டைவிட்டு வெளிப்பட்டாரென்றும் அதின் பேரிலே நபாபு ஆசபுசா அவர்கள் மனிதரும் பார்சாவுடைய கொடியுங் கொண்டுபோய் சண்டாவும் போட்டு பத்தே நவப்பத்தும் பசாய்ச்சார்கள் என்று எழுதி வந்தது. அந்தக் கடுதாசியைப் பார்த்துக்கொண்டவுடனே (ா) துரையவர்கள் வெகு சந்தோஷப்பட்டு பெரிய வரிசை வைக்கச் சொல்லி மூன்றுதரம் வரிசை தீர்ந்து பீரங்கி மேஸ்திரியை அழைத்து காலமே ஒரு தரம் மத்தியானத்துக்கு ஒரு தரம் சாயங்காலத்துக்கு ஒரு தரம் கோட்டையிலே யிருக்கப்பட்ட பீரங்கிகளெல்லாம் சுடச்சொல்லி உத்தாரங் கொடுத்து சூரிய உதயந் துவக்கி சாயங்கால மட்டுக்கும் கொடிபோட்டபடியே இறக்காமல் போட்டிருக்கச்சொல்லி உத்தாரங் கொடுத்து நவபத்துக்காரரையும் அழைப்பித்து காலமே துவக்கி சாயங்காலமட்டும் பத்தே நவபத்தும் அடிக்கச் சொல்லி உத்தாரங் கோட்டையிலே பெரிய வரிசைவைத்து மூன்று தரம் வரிசை தீர்ந்தவுடனே கோட்டையிலே கட்டளையிட்டார்கள். அந்தக் கட்டளைப்படியே காலமே யிருக்கப்பட்ட பீரங்கிகளெல்லாம் சுடச்சொல்லி பட்டணத்தைச் சுத்தியிருக்கப்பட்ட கொத்தளங்களிலேயிருக்கப்பட்ட பீரங்கிகளும் ஒரு வரிசை தீர்ந்தார்கள். பத்தே நவபத்து வாங்காமல் பசாயிச்சுக்கொண்டேயிருந்தார்கள் மத்தியானம் பனிரெண்டு மணிக்கு ஒரு தரம் வரிசைவைத்து கோட்டையிலே மாத்திரம் பீரங்கி போட்டார்கள். பிற்பாடு சாயங்காலம் ஒரு தரம் அந்தப்படிக்குகோட்டையிலே பீரங்கி ஒருவரிசை தீர்ந்து நவபத்து எக்காலத்திலேயும் முழக்கினார்கள். இந்தப்பிரகாரம் இன்றையதினம் வெகு சந்தோஷத்துடனே இருந்தார்கள்.

**1743** ௵ செப்தெம்பர் ௴ **4** உ-க்கு ருத்ரோத்காரி ௵ ஆவணி ௴ **23** உ

திரிச்சிராப்பள்ளியிலேயிருந்து வெகுமானம் வந்தது.

செப்தெம்பர்மீ 4உக்கு ஆவணி மீ 23உ புதன்கிழமை நாள்

சாயங்காலம்-5-மணிக்கு (ஈ) துரையவர்கள் அழிசிப்பாக்கத்துக்குப் போனார்கள். ஆனபடியினாலே (ஈ) பிள்ளையவர்களும் நாளது சாயங்காலம் ஆறு மணிக்குப் பயணப்பட்டு அழிசிப்பாக்கத்துக்குப் போனார்கள். ஆனால் அரியாங்குப்பத்திலே கிரீஸ்த்துவர் பத்துநாளைய பண்டிகை கொண்டாடி திருவிழாவுக்குப் பதில் திருவிழாவைப்போலே நடப்பிக்கிறபடியினாலே அவ்விடத்திலேயும் ஒரு நாளிருந்து வேடிக்கைப் பார்த்து வருவார்கள்.

செப்தெம்பர் மீ 6 உக்கு ஆவணி மீ 25 உ

காலமே ஆறு மணிக்கு (ஈ) பிள்ளையவர்கள் வந்து சேர்ந்தார்கள்.

*1743* ஞு செப்தெம்பர் மீ *17* உக்கு ருத்ரோத்காரி ஞு புரட்டாசி மீ 5 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே 10 மணிக்கு பங்காளத்திலே யிருந்து ஒரு கப்பல் வந்தது. அந்தக் கப்பல் பேர்...........

நாளது தேதியில் *11* மணிக்கு பசுராவிலேயிருந்து ஒரு கப்பல் ஓடி வந்தது. வச்சு பிடிச்சான். அந்தக் கப்பல் பேர்......

நாளது தேதி சாயங்காலம் *6* மணிக்கு மசுக்கரையிலேயிருந்து ஒரு கப்பல் ஓடி வந்து வச்சு பிடிச்சான். அந்தக் கப்பல் பேர்...............

செப்தெம்பர் மீ *27* உக்கு புரட்டாசி மீ 15 உ சுக்கிரவாரம் நாள்

நவராத்திரி பூசை பண்டிகைதினம்.

செப்தம்பர் மீ 28 உக்கு புரட்டாசி மீ 16 உ சனிவார நாள்

விசயதசமி காலமே *8* மணிக்கு, கோபால நாராயணய்யரை விடுதலை பண்ணி, கோட்டை பாதாளக் கிடங்கிலே போட்டிருந்தவனை விட்டு முத்தியாபிள்ளை வீட்டிலே கொண்டு வந்து வைத்தார்கள். ஏனென்றால், சேஷாசல செட்டிக்கு *6000* வராகனும் கொடுக்கத் தீர்ந்தபடிக்கு நாலாயிரம் வராகன் சென்று போய் குறை இரண்டாயிரம் வராகனும் செல்லுகிற மட்டுக்கும் முத்தியாபிள்ளை யவர்கள் வீட்டிலே, காவலாய் வைத்திருக்கிறது.

*1743* ஸு ஒக்தோபர் *மீ 9*உக்கு ருத்ரோத்காரி ஸு புரட்டாசி *மீ 27* உ புதன்கிழமை நாள்

*காலமே ஏழுமணிக்கு அசரத்து நிசாம் அவர்களண்டையிலே இருந்து வெகுமானம் வருகிறபோது ஓழுகரையிலே வந்து சேர்ந்தவுடனே (ௗ) துரையவர்களுக்குச் சொல்லி அனுப்பினார்கள். அதின்பேரிலே வில்லியநல்லூர் கெவுனிக்கு வெளியிலே கூடாரம்போடுவித்து அந்தக் கூடாரத்திலே (ௗ) துரையவர்கள்போய் இருந்துகொண்டு அப்புறம் எதிர்கொண்டு போகத் தக்க மனுஷர்களை அனுப்பிவித்தார்கள் அப்புறம் எதிர்கொண்டுபோய் வெகுமானத்தைப் பல்லக்கின்பேரிலே வைத்துக்கொண்டு கூடாரத்தண்டையிலே வந்தவுடனே (ௗ) துரையவர்கள் எழுந்திருந்து வெகுமானத்தைக் கையிலே வாங்கிக்கொண்டவுடனே 40 பீரங்கி போட்டார்கள். அதன் பேரிலே அங்கேயிருந்து முன்னே வரிசை வைத்துக்கொண்டு ஆனையின்பேரிலே பாச்சா நிசானும் பிடித்துக்கொண்டு நவபத் வாத்தியம் பண்ணிக்கொண்டு, கொம்புதமுக்கு மேளதாளத்துடனே மகா சம்பிரமத்துடனே வெளிக்கோட்டை வாசலுக்குள்ளே நுழைந்தவுடனே 40 பீரங்கிபோட்டார்கள். அந்தச் சம்பிரமத்துடனே (ௗ) துரையவர்கள் வீட்டிற்கு வந்து உடனே 40 பீரங்கிபோட்டார்கள். ஆனால் வெகுமானம் வந்தது என்னவென்னவென்றால் நாலு நகை வெகுமானமும்....*

**1743** ஸு ஒக்தோபர் *மீ* 20உ க்கு ருத்ரோத்காரி ஸு அற்பிசி *மீ* **8** உ ஞாயிற்றுக்கிழமை நாள்

*ராத்திரி முசம்பீக்குக்குப் பாயெடுத்தான் அந்தக் கப்பல் பேர் சேம்பியேர்* (St. Pierre) *அந்தக்கப்பல் கப்பித்தான் பேர்* முசே பார், முசே துகிலி (M. Bard, M. Duguilly) *இந்தக்கப்பல் முசம்பீக்குக்குப் பாயெடுத்தான்.*

ஒத்தோபர் *மீ 22* உ அற்பிசி *மீ 10* உ செவ்வாய்க்கிழமை நாள்

*காலமே சீர்மையாகிய பிரான்சுக்கு ஒரு கப்பல் பாயெடுத்து ஓடிப்போனான். அந்தக்கப்பல் பேர் பினிச்சு. கப்பல் கப்பித்தான் பேர் முசே. புரோசேல். இந்தக் கப்பலிலே ஏற்றிய கட்டு 1001, செம்மரம் பாரம் 2000, மிளகு பாரம் 600, பின்னையும் சில்லரை தினுசுகளும் ஏற்றி காலமே கப்பல் பாயெடுத்துச் சீர்மைக்குப் பயணம் போனான் கோட்டைக்குப் பதினொரு பீரங்கியும் போட்டுப் பாயெடுத்தார்கள்.*

இற்றைநாள் செவ்வாய்க்கிழமை காலமே சீர்மை கப்பல் பாயெடுத்தவுடனே பின்னையும் நாலு நாழிகைக்கெல்லாம் மொக்காவுக்கு ஒரு கப்பல் பாயெடுத்து ஓடிப்போனான். அந்தக் கப்பல் பேர் நெபுதின் (Neptune) கப்பல் கப்பித்தான் பேர் மூசே துபோக்காஷ் சூபர்கார்க்கு, மூசே திசேடுதேன், மூசே தோத்தேல் இந்தக் கப்பலுக்குச் சரக்கு ஏற்றி இற்றைநாள் காலமே பாயெடுத்து ஓடிப்போனான்.

1743 ௵ ஒக்தோபர் ௴ 22 உ ருத்ரோத்காரி ௵ அற்பிசி ௴ 10 உ இந்த நாள்

நாலுமணிக்கு மாயேக்கு (Mahé) ஒருகப்பல் பாயெடுத்தார்கள். அந்தக்கப்பல் பேர் புளோரி. கப்பல் கப்பித்தான்பேர் மூசே புயேல். இந்தக்கப்பல் சாயங்காலம் நாலுமணிக்குப் பாயெடுத்து ஓடிப்போனான், இந்தக்கப்பலிலே முன்னிவ்விடத்திலே வந்திருந்த சிப்பாய்கள் நூறுபேரும் சமேதார் பிசான்கானும் ஏறிப்போனார்கள்.

..............உமுன் திரிச்சிராப்பள்ளிக் கோட்டைமேலே வந்திறங்கியிருந்த ஆசப்சா அவர்கள் வடக்கே பயணப்பட்டு போகிறாரென்று இந்த நாள் நமக்கு எழுதி வந்தது.

1743 ௵ ஒக்தோபர் ௴ 31 உ க்கு ருத்ரோத்காரி ௵ அற்பிசி ௴ 18 உ

கோபால நாராயணய்யர் அனுப்பிவித்துக் கொண்டு பயணம் புறப்பட்டுச் சாயங்காலம் ஊருக்குப் போய்விட்டார்.

கோபால நாராயணய்யர் சேஷாசல செட்டியாருக்குக் கடன் கொடுக்கவேண்டிய சம்மதிக்காக முன்னாலே கிராணத்தும்போது மாயே துலுக்கர் போய் மரிகிருஷ்ணாபுரத்திலே பிடித்துக்கொண்டுவந்து கோட்டையிலே பாதாளக்கிடங்கிலே போட்டு வைத்திருந்து பிற்பாடு உடன்படிக்கை பண்ணிக் கொண்டு முத்தியாபிள்ளையவர்கள் வளவிலே யிருந்தவர் இந்த நாள் வியாழக்கிழமை நாள் மத்தியானம் பதினொரு மணிக்கு நம்முடைய வளவுக்குச் சேஷாசல செட்டியாரும், கோபால நாராயணய்யரும் வந்து தண்டாபாரிக்குப் பண்ணி நம் முன்பாகத் தீர்த்துக்கொண்டு பாரீக்தும் எழுதிக்கொடுத்துத் தீர்த்து (ா) துரையவர்கள் உத்தாரப் படிக்கு இருவருக்கும் சமாதானம்பண்ணிவித்து இவர் கை பாக்கு வெற்றிலை அவருக்கும், அவர் கை பாக்கு வெற்றிலை இவருக்கும் வாங்கிக்கொடுத்துச் சமாதானம்பண்ணி அனுப்பி

விட்டோம். அதின்பேரிலே கோபால நாராயணய்யரை சேஷாசலசெட்டியார் தம்முடைய வளவுக்கு அழைத்துக் கொண்டுபோய் வெகுமானம்பண்ணி அனுப்பிவைத்தார். அங்கேயிருந்து அனுப்பிவித்துக்கொண்டு சாயங்காலம் ஐந்து மணிக்குக் கெவுனிக்குப் புறப்பட்டு விழுப்புரத்துக்குப்பயணம் போகத் தக்கதாக ராத்திரிக்கு வில்லியநல்லூரிலேபோயிறங்கி சுவாமி தரிசனம்பண்ணி, மறுநாள் அப்புறப்பட்டுப் போனு ரென்றதாய்ச் சொன்னார்கள்.

1743 ஞு நொவெம்பர் மீ 2 உ ருத்ரோத்காரி ஞு அற்பிசி மீ 20 உ சனிவாரம் நாள்

மத்தியானம் 11 மணிக்கு (ஈ) துரையவர்கள் நம்மை அழைத்தனுப்பிவித்தார்கள். அவ்விடம் போனவிடத்திலே நடந்த சேதி யென்னவென்ருல், காரைக்கால் திருமலைராயன் பட்டணத்திலே நாம் கூட்டுகிற சிறுவன்னலேஞ்சுக்கு அந்த திருமலைராயன்பட்டணம் குத்தகைக்காரன் கனகராய முதலியாருக்குக் கும்பினியார் எழுதிக்கொடுத்திருக்கிற குத்த கைப் பட்டையத்திலே கும்பினீருக்குக் கொடுக்கிற சரக்குக் குத் தீர்வைக்களவேயில்லை என்று எழுதியிருக்கிறபடியாலே நாமிதுவரைக்கும் தீர்வை கொடுக்கிறதில்லை. தகரார்பட்டுக் கொண்டு (ஈ) துரையவர்களுடனே நாம் சொல்லியிருந்ததற்கு அவரும் காரைக்காலுக்குக் கடுதாசி எழுதித்தருகிறோமென்று சொல்லியிருந்த சம்மதிக்கு இற்றை நாள் கனகராயமுதலி போய் என்னமோ கோடு மாருட்டமாய் ஆசைவார்த்தை சொன்னதின்பேரிலே அவர்கள் நம்மை அழைப்பித்து அந்த தீர்வை உண்டானதை கொடுத்துவிடவேண்டும் ஏனென்ருல், முன்னே சரக்குக் கூட்டினபேரெல்லாம் தீர்வை கொடுத் திருக்கிறபடியினாலே நீ தடைசொல்லத் தேவையில்லை. உண் டானதைக் கொடுத்துவிடென்று சொன்னுர்கள். அதற்கு நாம் சொன்னது குத்தகைப்பட்டையத்திலே எழுதியிருந்தாலும் கொடுக்கிறோமென்று சொல்லிப்போட்டு வந்துவிட்டோம்.

இதல்லாமல் வாஞ்சியூர் உப்புத்தீர்வை இது வரைக்கும் கனகராயமுதலியார் கிராமத்திலே சேர்த்து வாங்கிக்கொண்டு வந்ததென்ன, இப்போது நீர் வாங்கிக்கொள்ளுகிறதேதென்று கேட்டார்கள் அதேதையா அந்தக் கிராமம் நாம் குத்தகை வாங்கி கும்பினீருக்குப் பணம் செலுத்தவும், கனகராயமுதலி யார் உப்புத்தீர்வை வாங்கிக்கொண்டுபோகிறது என்ன நியா யம்? இது நாளதுவரைக்கும் தகரார்பட்டுக்கிடக்கிறதுதான். அதின்பேரிலே மூசே பெபுருயேரண்டையிலே போய் நம்முடைய

மனுஷர் சொல்லிக்கொண்ட விடத்திலே அவரிந்த நியாயத்தைக் கேட்டு அந்த உப்புத்தீர்வை அந்தக் கிராமக் குத்தகைக்காரருக்கே அல்லாமல் கனகராயமுதலியாருக்கு கவையில்லை என்று தீர்த்தார்களென்று சொன்னோம். அதின்பேரிலே யானால் அந்த நியாயம் அவ்விடத்லேதானே போய் மூசே பெபுரியேர் முன்பாகத் தீர்த்துக்கொள்ளுங்களென்று சொல்லிப்போட்டார்கள்.

1743 ஆடு நோவாம்பர் மீ 10 உ க்கு ருத்ரோத்காரி ஆடு அற்பிசி மீ 28 உ ஆதிவாரம் நாள்

காலமே ஐந்து மணிக்கு (ா) துரையவர்கள் மூசே துப்ளேய்க்ஸ் அவர்கள் மொறட்டாண்டி தண்ணீர்ப் பந்தலுக்கு விளையாடத்தக்கதாகப் பயணம் புறப்பட்டுப் போனார்கள். போகிறபோது இவ்விடத்திலேயிருந்து நவபத்தும், இரண்டு இஸ்த்தாங்கி சொலுதாதுகளும் மாயே துலுக்கர் ஐம்பது பேரும் பாளையக்காரர் சேவகரும் கொம்புதமுக்கு சகல சம்பிரமத்துடனேயும் புறப்பட்டுப் போனார்கள். அந்தச் சாவடியிலே போயிறங்குகிறதற்கு உத்தரவில்லாதபடியினாலே இவ்விடத்திலே யிருந்து புறப்படுகிறதற்கு ஒரு மாதம் முன்னதாகத்தானே கொலுத்துக்காரர், தச்சன், கருமானை பனைமரம் செங்கல் வேணுமென்ற சாமான்களெல்லாம் அனுப்பிவித்து (ா) துரையவர்கள் இருக்கிறதற்குச் சாதி அடியாலே தொண்ணூறு அடி நீளம்........அடி அகலம் இருக்கத்தக்கதாக வீடு கட்டிவைத்து இரண்டு பக்கமும் இரண்டு அறையும் அதற்கெல்லாம் கதவுகள், பூட்டுகள் சகல முஸ்தீதுபண்ணிவைத்துத் தயாரானவுடனே இவ்விடத்திலே யிருந்து பயணம் புறப்பட்டுப் போனார்கள், அவ்விடத்திலே தானே நாற்பது நாள் மட்டுக்குமிருந்து சனவரிபண்டிகையைச் சேர வருவார் என்று சொல்லுகிறார்கள்.

1743ஆடு நோவம்பர்மீ 21உ ருத்ரோத்காரிஆடு கார்த்திகைமீ 9உ வியாழக்கிழமை நாள்

பஞ்சமி உத்திராட நக்ஷத்திரத்திலே தம்பி திருவேங்கடப் பிள்ளை யவர்களும் அவர் பெண்ஜாதி காளத்தி அம்மாள், அப்பாவு வீரராகப்பிள்ளை குமாரன் முத்தும், அவர்கள் வளவுப் பேர் அனைவரும் கூட நம்முடைய வளவு பசங்கள் சிறுக்கிகள் சமஸ்தமான பேரும் நம்முடைய சாவடிக்கு நேற்றிய தினம் சாயங்காலம் போய் ஆசாரியாரவர்களை தரிசனம் பண்ணிக்கொண்டு இற்றை நாள் காலமே அனைவரும் தீக்ஷை வாங்கிக்கொண்டு மறுபடிவும் சாயங்காலம் வந்து சேர்ந்தார்கள்.

நோவாம்பர் ௴ 23உக்கு கார்த்திகை ௴ 11உ சனிவாரம் நாள்

இராத்திரிபதினொருமணிக்கு முசே தான்ஷே (M. Thonhee) என்கிறவன் மரணமடைந்தான். அவராரென்றால் (ரா) துரையவர்கள் இவ்விடத்திற்கு துரைத்தனத்துக்கு வருகிறபோது வங்காளத்திலேயிருந்து கூட வந்தபடியினாலே அவர் பேரிலே ரொம்பவும் தயவுபண்ணி கொம்மிஸ்ஸேர் உத்தியோகம் கொடுத்து கொம்மிஸ்ஸேராய்... .....உத்தியோகம்பண்ணிக் கொண்டிருந்தவர் காலம்பண்ணிப்போனார்.

நோவாம்பர் ௴ 24 உக்கு கார்த்திகை ௴ 12 உ ஆதிவாரம் நாள்

காலமே ஏழு மணிக்கு (ரா) துரையவர்கள் மொறட்டாண்டி தண்ணீர்ப்பந்தலிலே யிருந்து இவ்விடத்துக்கு வந்து கொடி சுருக்கிப் போட்டு... ..மணிக்கு மறுபடியும் (ரா துரையவர்கள் புறப்பட்டு மொறட்டாண்டி தண்ணீர்ப்பந்தலுக்குப் போய் விட்டார்கள்.

1743ளு டிசம்பர்௴ 1உ ருத்ரோத்காரிளு கார்த்திகை௴ 19உ ஆதிவாரம் நாள்

நாட்டுக்கார்த்திகை பண்டிகைதினம். இற்றை நாள் சாயங்காலம் ஐந்து மணிக்கு, அரிதாசு கலியாணதாசு குமாஸ்தா ராமகிருஷ்ணதாசு என்கிறவர் வடக்கே முத்தியாலுப்பேட்டையிலே மீனாட்சியம்மன் சத்திரத்திலே வந்திருக்கையில் இவ்விடத்திலே யிருந்து சேஷாசலசெட்டியாரும், பிள்ளையவர்களும், குருவப்பசெட்டியும் கூடப்போய் எதிர்கொண்டு அழைத்துக்கொண்டுவருகையில் கெவுனி தாண்டி உள்ளே வந்தவுடனே குருவப்பசெட்டி ஏறிக்கொண்டுபோன பெரிய குதிரை எடுத்துப்போட்டு காலை மெரித்துப்போட்டு காலிலே காயம்பட்டு, பல்லக்கின்பேரிலே போட்டுக்கொண்டு அவர்கள் வீட்டிற்கு எடுத்துக்கொண்டு போனார்கள்.

டிசம்பர் ௴ 2 உக்கு கார்த்திகை௴ 20 உ திங்கட்கிழமை நாள்

மத்தியானம் முத்தையமுதலியை பயணம்பண்ணி காரைக்காலுக்கனுப்பினார்கள். என்ன நிமித்தமானால் காரைக்காலிலே நம்முடைய குத்தகைக் கிராமத்து கவைகாரியம் பார்க்கத்தக்கதாக மாதம் 1 க்குச் சம்பளம் வராகன் 2½ விழுக்காடு சம்பளம்பண்ணி சாயங்காலம் அனுப்பினார்கள்.

நாளது திங்கட்கிழமை நாள் சென்னப்பட்டணம் முத்துப்பிள்ளையை சென்னப்பநாயக்கன்பாளையத்துக்கு அனுப்பினார்கள். அவ்விடத்திலே ராமலிங்கய்யருடனே கூடமாட யிருந்து காரியம் பார்க்கச்சொல்லி அனுப்பிவித்தோம். முத்தியாமுதலி காரைக்காலுக்குப் பயணமாய்ப் போயினர். அரியாங்குப்ப மட்டுக்கும் போய் சகுனத்தடையாயிருக்கிறதென்கிறதாகப் போகாமல் புறப்பட்டு வந்துவிட்டார். நாளது௳ எழுதினது முன்........௳ ஆற்காட்டிலேயிருந்து எழுதிவந்த தென்னவென்றால், ஆற்காடு சுபாவுக்கு கோசா அப்துல்லாகான் குமாரன் நயமத்துல்லாகானவர்களும், மீர் அசத்து அவர்களும், திவான் கிரியுமாய் வந்து ஆற்காடு தாக்கல் ஆனார்களென்று எழுதிவந்தது.

*1743*௵ டிசம்பர்மீ 19௳ க்கு ருத்ரோத்காரி௵ மார்கழிமீ 8௳ வியாழக்கிழமை நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு (௩) துரையவர்கள் மொறட்டாண்டி தண்ணீர்ப்பந்தலிலே யிருந்து இவ்விடத்துக்கு வந்து விட்டார்கள் வரும்போது அவ்விடத்திலே மூசே துளோராமுக்கும், மூசே திப்பிழனே அவர்களுக்கும் ஒருத்தருக்கொருத்தர் சாராயத்தைக் குடித்ததின் பேரிலே விசேஷ வார்த்தை நடந்து மூசே துளோராம், மூசே திப்பிர்ழனேயை உதைத்தார். அதின்பேரிலே மூசே திப்பிர்ழனும், மூசே துளோராமை பிரம்பினாலே அடித்தார். அதின்பேரிலே ஒருத்தருக்கொருத்தர் கையிணக்காய் கத்தியை உருவிக்கொண்டார்கள். அந்தமட்டிலே எல்லாருமாய்ப்போய் விலக்கிவிட்டு, அவர் வீட்டிலே கொண்டுபோய் விட்டுவிட்டார்கள். அதனால் அவர்கள் மனதில் என்னென்னதை நினைத்துக் கொண்டு இப்படி நடந்து கொண்டார்களோ தெரியாது. இதல்லாமல் இற்றை நாள் சாயங்காலம் நாலு மணிக்குக் கண்ட அதிசய மென்னவென்றால், இதுவரைக்கும் பத்துப்பதினைந்து நாளாய்ப் பட்டப்பகலிலே நக்ஷத்திரம் கண்டுகொண்டு வந்தது பிற்பாடு இரண்டு நக்ஷத்திரம் கண்டுகொண்டு வந்தது. அதென்னென்னமோ விபரீதமென்றும் பட்டம்பகலிலே நக்ஷத்திரம் காணுகிறது ஆச்சர்யமாயிருக்கிறதென்று சொன்னார்கள் அப்படியிருக்க, இற்றை நாள் சாயங்காலம் நாலு மணிக்கு வாயு மூலையிலே ஒரு நக்ஷத்திரம் பூசனிக்காய் பருமனிலே எரிந்துகொண்டு விழுந்தது. அதை இந்தப் பட்டணத்திலுள்ள பேர்களெல்லாரும் கண்டார்கள் ஆனாலிதனாலே என்ன விபரீதம் பிறக்குமோ தெரியாது என்று சகலமானபேரும் சொல்லிக்கொண்டார்கள். இப்படி

பட்டம்பகலிலே நக்ஷத்திரம் எரிந்து விழுந்தது ஒரு காலா காலங்களிலேயுமில்லை என்றதாக சகல சனங்களும் சொல்லிக் கொண்டார்கள்.

**1743** ஞு டிசம்பர் *மீ 21* உ க்கு நந்ரோத்காரி ஞு மார்கழி *மீ 10* உ சனிவாரம் நாள்

*காலமே (ா) துரையவர்கள் சொன்னதென்ன வென்றால், இன்று முதலாய் மொறட்டாண்டி தண்ணீர்ப்பந்தலிலே வர்த்தகர், பெரிய மனுஷர், கும்பினி உத்தியோகஸ்தர் சகலமான பேருமாய்ப் பேருக்கொரு வீடு கட்டிக்கொள்ளச் சொல்லியும், இனிமேலாக அதை துப்ளேக்சுபேட்டை என்று சகலரும் சொல்லுகிறதேயல்லாமல் மொறட்டாண்டி தண்ணீர்ப்பந்தல் என்று யாதாமொருத்தர் சொல்லுகிறார்களோ அவர்கள் கையிலே அபராதம் வாங்கிப் போடுவோமென்கிற தாய் உத்தாரங் கட்டளையிட்டார்கள்.*

**1743** ஞு தேசம்பர் *மீ 26* உக்கு நந்ரோத்காரி ஞு மார்கழி *மீ 15* உ வியாழக்கிழமை நாள்

*மத்தியானத்துக்கு மேல் தேவனாம்பட்டணத்திலே துரைத்தனம்பண்ணிக்கொண்டிருந்த மேஸ்தர் மானுசானும்* (M. Monson) *அவருடைய துபாஷி கிருஷ்ணம நாய்க்கரும் முத்தாலு நாய்க்கரும் கூட தேவனாம்பட்டணத்திலேயிருந்து பயணம் புறப்பட்டு சென்னப்பட்டணத்துக்குப் போகத்தக்கதாக சாயங்காலம் ஏழு மணிக்கு வந்தவர்கள் இந்த ஊருக்குள்ளே வராமல் அலங்கத்தைச் சுற்றினாற்போலே புறப்பட்டு ராத்திரிக்கு நம்முடைய தண்ணீர்ப் பந்தலிலேயிருந்து அப்புறம் பொழுது விடிய நாலு நாழிகை இருக்கும்போது எழுந்திருந்து அப்புறம் பயணம் புறப்பட்டுப்போனார்கள். ஆனால் இவர்கள் சென்னப்பட்டணத்துக்குப் போகிறது எதினாலேயென்றால், சென்னப்பட்டணத்திலே துரைத்தனம் பண்ணின ஆதியப்ப நாயக்கருடைய துரை மேஸ்தர் பிரிங்கன், சீர்மைக்குப் போகிறார் என்றும் சென்னப்பட்டணம் துரைத்தனம் மேஸ்தர் மாசும்* (Mr. Morse) *சின்னதுரைத்தனத்துக்குத் தேவனாம்பட்டணத்திலேயிருந்து போகிற மேஸ்தர் மானுசான்* (M. Monson) *இருக்கப்போகிறார் என்று சொல்லுகிறார்கள். முத்தாலு நாயக்கர் மேஸ்தர் மாசுவண்டையிலே துபாசியாக இருக்கப்போகிறார் என்றும் சொல்லுகிறார்கள்.*

**1743 ஞு தெசம்பர் மீ 29உ க்கு நந்ரோத்காரி ஞு மார்கழி மீ 18உ ஆதிவாரம் நாள்**

சாயங்காலம் மேற்கே ஒரு நக்ஷத்திரம் வால்முளைத்த நக்ஷத்திரம் கண்டது அதை தூமகேது வென்று சொன்னார்கள். இது நல்ல நாளைக்குக் காணுதாம். இதினாலே என்ன காலக் கேடோ தெரியாதென்று வெகு சனங்கள் அங்கலாய்த்தார்கள்.

**1744 ஞு ஜனவரி மீ 1 உ க்கு நந்ரோத்காரி ஞு மார்கழி மீ 21 உ புதன்கிழமை நாள்**

ஜனவரி பண்டிகை இன்றையதினம் வேதபுரி ஈசுரனுக்கு ரத உற்சவம் வெகு சப்பிரமமாய் நடந்தது.

**1744ஞு ஜனவரிமீ 3உ க்கு நந்ரோத்காரிஞு மார்கழிமீ 23உ சுக்கிரவார நாள்**

சாயங்காலம் நாலுமணிக்கு மகாநாட்டார் ஜனவரி பண்டிகை சந்திப்புக்கு (ா) துரையவர்கள் சொல்லி அனிப்பிவித்தார்களானபடியினாலே இன்ன நிமித்தியமென்று நமக்குத் தெரியாமல் மகா நாட்டாரை அழைத்துக்கொண்டு சந்திப்புக்குப் போனவிடத்தில் சகல சனம் முன்பாக (ா) துரையவர்கள் நமக்கு அறிக்கையுங்கொடுத்து ஏழு பீரங்கியும் போடுவித்து முசே புரியை (M. de Bury) அழைத்து நம்முடைய பல்லக்குக் கோட்டைக்குள்ளே போகவர உத்தாரமும் கொடுத்துரொம்பவும் மரியாதைபண்ணி நடப்பித்தார்கள். ஆனால் (ா) துரையவர்கள் முசே நுப்ளேக்ஸ் அவர்கள் நமது பேரிலே யிருக்கிற பரிபூரண தயவினாலே அந்தப்படி நடப்பித்தார்கள்.

**1744 ஞு ஜனவரிமீ 27 உ க்கு நந்ரோத்காரி ஞு தைமீ 17 உ திங்கட்கிழமை நாள்**

மத்தியானம் பதினேழு நாழிகையளவில் கானுபாதுருடைய ஆனை அவர் கடன் சம்மதிக்காக, போளூர் வீராப்பிள்ளை மறித்திருந்த ஆனை நம்முடைய தோட்டத்தண்டையிலே கட்டியிருந்தது. ஏழு எட்டு நாள் அதற்கு என்னமோ வியாதிபோலே கண்டு வாயினாலே தண்ணீராய் விழுந்து தீனியெடாமல் அதின்பேரிலே அதற்கேற்ற அவிழ்தங்களெல்லாம் கொடுத்து ஒரு விதத்திலேயும் குணமாகாமல் அதினுடைய ஆயிசு அவ்வளவானபடியினாலே இன்றையதினம் அடைந்து விட்டது.

ஜனவரிமீ 28உ க்கு தைமீ 18உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே ஆறு மணிக்கு சூரிய உதயத்திற்கு முன்னமே சென்னப்பட்டணம் குவர்னர் பிரிங்கனவர்கள் சீர்மைக்குப் போகத் தக்கதாக படகிலேறி சீர்மை கப்பலின்பேரிலே ஏறினூர். அவரேறிப்போகிற கப்பல் பேர் சீப்புடுக்கு (Duke) கப்பித்தான் பேர் கேப்டேன் இங்கின்மென் (M Hin lman) பின்னை ஒரு கப்பல் துறையிலேயிருந்த சீர்மை கப்பல் ஒன்று. அதுகூட ஆக இரண்டு கப்பலும் சீர்மைக்குப் போகத்தக்கதாக ஏழு மணிக்குப் பாயெடுத்தார்கள். குவர்னர் பிரிங்கன் (M. Benyon) நடைப் படகிலேறி உட்கார்ந்து குவர்னர் மாளிகையில் (M. Morse) முத்திரை மோதிரமும் சாவியும் கொடுத்தார்கள். மூன்றலையுந் தாண்டினவுடனே 21 பீரங்கி போட்டார்கள் அந்த உத்ரக்ஷணம் மகாலக்னத்தில் குவர்னர் மாசு (M. Morse) அவர்கள் போய் படகிலேறினவுடனே 21 வேட்டு பீரங்கி போட்டார்கள். அதின்பேரிலே வர்த்தகருக்கு பன்னீர் தெளித்து நிலாசுவார்த்தைச் சொன்னூர்கள். ஆதியப்பநாய்க்கரும் சமுத்திர முதலியாரும் குவர்னர் பிரங்கன் (M. Bengon) ஏறிப்போன படகிலே கூட கப்பல்மட்டுக்கும் போய் அனுப்பிவித்துக்கொண்டு வந்தார்கள். குவர்னர் பிரிங்கனவர்கள் கப்பலிலே ஏறினவுட்னே கோட்டையிலே நாலாபுறத்திலும் இருபத்தியொரு வேட்டு பீரங்கி போட்டார்கள். சீர்மை கப்பல் இரண்டிலேயும் அப்படியே போட்டார்கள் துறையிலே இருக்கிற கப்பல்களிலேயெல்லாம் பீரங்கி போட்டார்கள் அந்த மட்டிலே கப்பல் பாயெடுத்துப் பயணமாய்ப் போனூர்கள் என்று எழுதிவந்தது.

1744ளு பிப்ரவரிமீ 2உ க்கு ருத்ரோத்காரிளு தைமீ 23உ ஆதிவார நாள்

காலமே தேவனும்பட்டணத்துக்கு துரைத்தனமாய் வருகிற மேஸ்தர் இன் (H nd) என்கிறவர் சென்னப்பட்டணத்திலேயிருந்து இன்றைய நாள் காலமே எட்டு மணிக்குப் புதுச்சேரிக்கு வந்தார். வரும்போது இவ்விடத்திலேயிருந்து கொம்பிசெலியர்நாலத்து இரண்டு பேர் எதிர்கொண்டுபோய் முத்தாலுப்பேட்டைக்கப்புறம் நயினியப்பபிள்ளை சாவடிமட்டுக்கும்போய் அழைத்துக்கொண்டுவந்தார்கள். வரும்போது கெவுனியிலே பதினைந்து பீரங்கி போட்டார்கள் பிற்பாடு (ஈ) துரையவர்கள் வீட்டினண்டை வந்தவுடனே (ஈ) துரையவர்கள் எதிர்கொண்டுவந்து அழைத்துக்கொண்டுபோய் இருவருக்கும் சந்திப்பானவுடனே கோட்டையிலே 21 பீரங்கிபோட்டார்கள்.

அதின்பேரிலே கப்பல்மேலே எல்லாம் அந்தப்படியே 21 பீரங்கி. 21 பீரங்கி விழுக்காடு ஒரு வரிசை தீர்த்தார்கள். அப்பால் மத்தியானம் பனிரெண்டு மணிக்குத் தீனிதின்ருன வுடனே 21 பீரங்கி போட்டார்கள் பிற்பாடு எழுந்திருக்கும் போதும், ஒருதரம் தித்திப்பு வைக்கும்போதும் ஒருதரம், சாராயம் குடிக்கும்போதும் ஒரு தரம் இப்படி நாலாவர்த்தி பீரங்கி போட்டார்கள். அந்த மட்டிலே சாயங்காலம் ஐந்து மணிக்கு கெவுனிக்கு வெளியே சாரிபோகத் தக்கதாக (ஈ) துரையவர்கள் துப்ளெய்க்சு (M. Dupleix) அவர்களும் தேவனும் பட்டணத்து துரையவர்களும் மெஸ்தர் இன் (Hind) அவர்களும் ஒரு வண்டியின்பேரில் ஏறிக்கொண்டு பின்னையுமிருக்கப்பட்ட கொமிசியேலவரல்லாரும் வண்டியின்பேரிலேறிக் கொண்டு சவாரிபோய் ஆறு மணிக்கு மறுபடியும் வந்தார்கள். அந்த மட்டிலே ராத்திரிக்கும் இவ்விடத்திலேதானே யிருந்து தீனி தின்று நித்திரை போய் நாலு மணிக்குப் பயணம் புறப்பட்டு தேவனும்பட்டணம் துரைத்தனத்துக்குப் போனுர். போனவர் 24 உ க்கு திங்கட்கிழமை நாள் காலமே பஞ்சமி அஸ்த நக்ஷத்திரம் விடிந்து இரண்டு நாழிகை மட்டுமிருக்கையில் அஸ்த நக்ஷத்திரத்திலே ஆறு மணிக்கு சூரிய உதயமாகும்போது போய் தேவனும்பட்டணத்துக்குப் போனுர்.

1744 ௵ பிப்ரவரி ௴ 8 உ க்கு நந்ரோத்காரி ௵ தை ௴ 29 உ சனிக்கிழமை நாள்

காலமே........மணிக்கு சீர்மை கப்பல் என்கிற கப்பல். இந்தக் கப்பல் கப்பித்தான் பேர் மூசே துசே. இந்தக் கப்பலிலே ஏற்றிய புடவை பல தினுசுக்கட்டு 1000. இந்தக் கப்பல் சீர்மைக்குப் பாயெடுத்து ஓடிப்போனுன்.

1744 ௵ பிப்ரவரி௴ 11உ க்கு நந்ரோத்காரி ௵ மாசி௴ 3உ செவ்வாய்க்கிழமை நாள்

சாயங்காலம் ஐந்து மணிக்கு ஆற்காட்டிலே இருந்து வக்கீல் கோபாலய்யன் மகன் எழுதி அனுப்பின காகிதம்: (ஈ) துரையவர்கள், மூசே துப்ளெய்க்சு அவர்களுக்கு. வந்தவுடனே அவர்கள் நம்மை அழைத்துச் சொன்ன வயணம்: அசரத்து நவாப் ஆசத்சா குமாரன் நாசர்சங்கியும் கோசா அபுதுல்லா கான் குமாரன்...........இவர்கள் இரண்டுபேரையும் மருட்டியார் சரிகட்டிவிட்டார்களென்றும் நிசாமவர்களையும் மருட்டியார் சுற்றிக்கொண்டிருக்கிருர்களென்றும்,

அவர் பேச்சும் தப்பி வருகிறது ரொம்பவும் வருத்தமாயி ருக்கிறதென்றும், இப்படியாக லசுக்கரிலேயிருந்து ஆற் காட்டிற்கு எழுதிவந்தது. இதல்லாமல் மராட்டியார் கண வாய்த் தாண்டி இப்புறப்பட்டார்கள் என்கிற சேதி ஆற் காட்டிலே பிறந்து அந்த ஆற்காடு பட்டணத்திலே இருக்கப் பட்ட சனங்கள் எல்லாம் முறிஞ்சு கோட்டைக்குள்ளே போய் பூரப்போகும்போது கோட்டை வாசலிலே நெருக்குப் பட்டு இருபது முப்பது பேர் சேதப்பட்டுப்போனார்களென்றும் ஆற்காட்டுப் பட்டணத்திலே ஒருத்தராகிலும் குடியில்லே என்றும் இப்படியாக எழுதிவந்தது என்று சொன்னார்கள். இனிமேலே என்னமாய் நடக்குமோ தெரியாது பட்டம்பக லிலே நக்ஷத்திரம் கண்டதும், பட்டம்பகலிலே நக்ஷத்திரம் விழுந்ததும் வால்முளைத்த நக்ஷத்திரம் பிரமாண்ட மாய் இரண்டேற்றக்கோல் அவ்வளவு உயரம் தூபம் போலே வால் காண்கிறதும் இதுகளெல்லாம் ஒரு விபரீத காலங்களுக்குக் காணுமென்கிறதாய் முந் நாளையிலே பெரியோர்கள் சொல்லுவார்கள். அதற்கு ஏஷ்யமாகக் காண்கிறதுபோலே யிருக்கிறது முன் மார்கழி மாதம் 18ந்தேதி மேற்கே கண்ட வால்முளைத்த நக்ஷசத்திரம் முன்னே கண்டபோது சூட்சுமமாய்க்கண்டு பிற்பாடு வரவர நாளுக்குநாள் விர்த்தியாய் வளர்ந்துகொண்டே வருகிறது. இன்றையதினம் அந்த வாலினுடைய பிரமாணம் இரண் டேற்றக்கோல் பிரமாணம் உண்டுபோல் காண்கிறது.

*1744* ஸு பிப்ரவரி மூ 17 உ க்கு ருத்ரோத்காரி ஸு மாசி மீ *9* உ திங்கட்கிழமை நாள்

சாயங்காலம் நாலுமணிக்கு ரேவு உத்தியோகமாயிருந்த கேசவய்யன் சுகசன்னிகண்டு காலம்பண்ணிப்போனார்.

இன்றையதினம் ராத்திரிதானே கனகராய முதலிபோய் (ரா) துரையவர்களைக் கண்டுபேசி அந்த உத்தியோகத்துக்குப் பதில் தம்முடைய மைத்துனனாகிய செவுனிவாச முதலியை கத் தக்கதாக உடன்படிக்கைப் பேசி டீக்குபண்ணி வைத்துப் போட்டுவந்துவிட்டார். காலமே (ரா) துரையவர்களண்டைக் குப் போனவிடத்திலே ரேவு உத்தியோகஸ்தன் கேசவய்யன் செத்துப்போன வயணம் இப்படியிப்படி அல்லவா அந்த உத்தி யோகத்துக்குக் செவுனிவாச முதலியை நேமித்திருக்கிறோ மென்று சொன்னார்கள். அதற்கு நாம் சொல்லவேண்டிய விசேஷமும் சொன்னோம். நாமென்ன சொல்லியும் அந்த மனுஷர் போட்டிருக்கிற பொடியைப் பற்றி ஒன்றும்

நடக்கவில்லை. ஆனால், அவனெப்போ சாவானேவென்று பார்த்துக்கொண்டிருந்து, அதைக் காத்துக்கொண்டேயிருந்த வனைப்போலவேயிருந்து இவன் அந்த உத்தியோகத்துக்கு அசரிக்கது என்று பத்துப்பேரும் சொல்லிக்கொண்டார்கள்.

1744 ஸு பிப்ரவரி மீ 18 உக்கு ருத்ரோத்காரி ஸு மாசி மீ 10௨ செவ்வாயக்கிழமை நாள்

காலமே பத்து மணிக்குக் கனகராயமுதலி மைத்துனன் கெவுனிவாசமுதலி ரேவு உத்தியோகம் கேசவய்யனுக்குப் பதிலாய் உத்தியோகத்திலே வைத்தார்கள். அவரும் போகவர இருக்கிறார். இனிமேல் என்ன நடக்குமோ தெரியாது. இந்த மட்டுக்கும் இது ஊர்சிதமாய்க் காண்கிறது.

1744 ஸு பிப்ரவரிமீ 21 உக்கு ருத்ரோத்காரி ஸு மாசி மீ 13 ௨ சுக்கிரவார நாள்

ராத்திரி விழுப்புரம் அப்பய்யப்பிள்ளை அவர்கள் இவ்விடத்திற்கு வந்தார்கள். கெவுனிக்கு வெளியிலே பவழக்காரர் சாவடியிலேயிருந்துகொண்டு இவ்விடத்துக்குச்சொல்லி அனுப்பினார்கள். கெவுனிக்குச் சீட்டு வாங்கி அனுப்பிவிக்கிற தற்குள்ளே கெவுனி சாத்திப்போட்டார்கள். ஆனபடியினாலே, ......... .......

மார்ச் மூ 8 உக்கு மாசி மூ 29 ௨ ஆதிவாரம் நாள்

ட்கோட்டை சுப்பய்யனையும் கணபதிப்பிள்ளையையும் சாவடியிலே இருந்தவர்களை விடுதலைபண்ணி, அவரவர் வீட்டுக்குப் போகச்சொல்லி அனுப்பிவிட்டார்கள். அந்த மட்டிலே புறப்பட்டு வீட்டுக்குப் போய்விட்டார்கள்.

1744 ஸு எப்ரல் மீ 16உக்கு ரக்தாக்ஷி ஸு சித்திரை மீ 8௨

சீர்மையிலேயிருந்து ஒரு கப்பல் ஓடிவந்து வச்சு பிடிச்சு பீரங்கிபோட்டார்கள். அந்தக் கப்பல் பேர்........கப்பித்தான் பேர்... .....இந்தக் கப்பலிலே வந்த சேதி.........

1744 ஸு மே மீ 17 உக்கு ரக்தாக்ஷி ஸு வைகாசி மீ 8 ௨ ஆதிவாரம் நாள்

காலமே குமிசெல்கூடி கும்பினீரிலே ரொம்பவும் சம்பளம் செலவாகிற தென்கிறதாகச் சொல்லி கும்பினீர் வேலையா

ளையும் நிறுத்திப்போட்டு கும்பினீர் உத்தியோகஸ்தரைச் சிறிது பேரையும் தள்ளிப்போட்டார்கள் ஆராரென்றால், கோட்டையிலே கோந்துவாரிலே இருக்கப்பட்ட கணக்கரில்... கோட்டை சுப்பய்யன், ஷை குமாரன் சின்ன சீனப்பய்யன், கட்டுக்காரர் சனம் 40, ரேவிலே வாசுதேவய்யன், முத்திரைச் சாவடியிலே அழகப்பிள்ளை, ரங்கப்பிள்ளை; நோயாளிக்கிடங்கிலே அருளானந்தம் மரந்தைமுதலி தம்பி, கும்பினீர் சேவகரிலே சேர்வை கிரியப்பநாயக்கன் சேவகரிலே..........பேர் பின்னையும் அங்கங்கே இருக்கப்பட்டபேரிலே பார்த்துப் பார்த்துப் பின்னையும் வெகுபேரை உத்தியோகம் வாங்கிப் போட்டார்கள்.

*1744* ஹு மே மீ 18 உக்கு ரக்தாக்ஷி ஹு வைகாசி மீ 9 உ

காலமே திருநாமநல்லூர் அப்பயப்பிள்ளை குமாரனுக்கு 12உ முகூர்த்தமென்று சொல்லி இன்றைய நாள் இவ்விடத்திலே யிருந்து சேஷாத்திரிபிள்ளையவர்களும் பெண்டுகளும் போனார்கள். 11உ தம்பி திருவேங்கடப்பிள்ளை பயணப்பட்டுப் போய் முகூர்த்தத்திற்கு இருந்து, 18ந்தேதி புதவாரம் நாளிலிவ்விடம் வந்து சேர்ந்தார்கள்.

1744 ஹு மே மீ 27 உக்கு ருத்ரோத்காரி ஹு வைகாசி மீ 18 உக்கு 27 உ

மணிலாவுக்குப்போகிற ஷார்லிஸ் (Charles) என்கிற கப்பல் பாயவித்துப் பயணப்பட்டு ஓடிப்போனான். செபர்கார்கு மூசே லவீல் பாகு (M. de Villebague). தமிழ் கப்பித்தான் குமரப்பிள்ளை

ஜூன் மீ 11 உக்கு ஆனி மீ 1 உ வியாழக்கிழமை நாள்

மத்தியானம் தேவனாம்பட்டணம் துபாசி ஓரகண்டி ரங்கப்ப நாயக்கர் சென்னப்பட்டணத்திலே கலியாணம் பண்ணிக் கொண்டு இவ்விடத்திற்கு வந்தார். வந்தவுடனே மத்தியானமும் ராத்திரிக்கும் நம்முடைய வளவிலே விருந்துபண்ணிவித்துச் சிறப்பாக வெகுமானமும் கொடுத்தோம். மறுநாள் (ஜூன் மீ 12 உ) 2 உ சுக்கிரவாரம் நாள் காலமே அனுப்பிவித்துக்கொண்டு தேவனாம்பட்டணத்துக்குப் போனார்.

ஜூன் மீ 13 க்கு ஆனி மீ 3 உ சனிவாரம் நாள்

காலமே 5 மணிக்கு (ஈ) துரையவர்கள் ஒழுகரைக்குச் சவாரிபோனார்கள். அவ்விடத்திலேதானே பத்து பதினைந்து நாளைக்கு இருப்பார் என்று சொல்லுகிறார்கள்.

1744 ஸு ஜூன் மீ ..க்கு ரக்தாக்ஷி ஸு ஆனி மீ 9 உ

காரைக்காலிலேயிருந்து எழுதிவந்தசேதி என்னவென்றால், முன் வையாசி மீ 31 உ செவ்வாய்க்கிழமை நாள் சாயங்காலம் மூன்று மணிக்கு; காரைக்கால் கோட்டைக்குள்ளே தீக்குடுக்கை கிடிக்கிறபோது நெருப்புப்பறந்து தீக்குடிக்கை வெடித்து மருந்து கிடங்கிலே விழுந்து மருந்து கிடங்கிலே ஏகமாய்ப் பத்திக்கொண்டு வடபுறம் கோட்டைச்சுவர்கூட கோட்டையிலே இருந்த வீடுகள்கூட அதிக சின்னாப்பின்னமாய்ச் சிதறி வெகுதூரம் வெளியிலேயும் அரை நாழிகை வழி சுற்றிச் சிதறி அடித்தது. (ஈ) துரையவர்கள் முசே பெபுரியோவர்கள் அந்நேரத்திலே தம்முடைய வளவிலே நித்திரை போனார்கள். தீக்குடுக்கை வெடித்த சத்தம் கேட்டு விழித்து வெளியிலே புறப்படுகிறபோது பின்னையும் தீக்குடுக்கை வந்து அடித்து சுவரிடித்துக்கொண்டு துரைமேலே விழுந்தது. விழுந்தவுடனே மேலே சிலரும் கீழே துரையுமாய் அகப்பட்டுக்கொண்டு துரை பேச்சு ஆய்ப்போச்சுது. துரை பெண்சாதிக்குக் காயம் பட்டுக் கப்பலிலே ஏற்றிவிட்டார்கள் கப்பித்தான் முசே திக்பிளாம் (M. Deccublan) கூட விழுந்துபோனார். பின்னையும் நாலத்து இரண்டு பேர் வெள்ளைக்காரரும் தமிழரும் சேதமுண்டு. இதல்லாமல் பிரகாச முதலி, திருவேங்கடப்பிள்ளை முத்துகிருஷ்ணப்பிள்ளை மற்றபேர் தப்பினார்கள். அந்த வேளையிலே பிரகாச முதலியும் முத்துகிருஷ்ணப்பிள்ளையும் வெளியே புறப்பட்டு ஊருக்குள்ளே போயிருந்தார்கள். திருவேங்கடப் பிள்ளையும் கப்பல் கொமாந்தான் முசே தெயேயும் (M. Deshayes) கோட்டைக்குள் தென்பாரிசத்திலே ஒரு வீட்டு மறைவிலே ஒதுங்கி நின்றவர்கள் புகைவந்து சுற்றிக்கொண்டு உடனே கலங்கிப்போய் தென்னண்டை கொத்தளத்தின்பேரிலே ஏறி கீழே இறங்கி அக்கினியிலே குதித்து அப்புறம் போய்விட்டார்கள். மற்றப்படி பூரண ஆயுசாயிருந்த பேரெல்லாரும் தப்பினார்கள்.

1744 ஸு ஜூன் மீ 15 க்கு ரக்தாக்ஷி ஸு ஆனி மீ 5 உ சோமவாரம் நாள்

பஞ்சமி மக நக்ஷத்திரம் இற்றை நாள் காலமே உதித்து $7\frac{3}{4}$ நாழிகைக்கு மேல் சிரஞ்சீவி பாப்பாள் ருதுவானாள்.

ஜுன் மீ 29 உ க்கு ஆனி மீ 19 உ திங்கட்கிழமை நாள்

ருதுசாந்தி கலியாணம் பண்ணினார்கள் ருதுவான நாள் முதல் இந்தப் பதினைந்து நாளைக்குள்ளே இந்தப் பட்டணத்திலே யிருக்கப்பட்ட பெரிய மனுஷர் உத்தியோகஸ்தர் சகலமான பேரும் பிரதி நித்தியம் ஆறு ஐந்து வரிசை விழுக்காடு ... .......வரிசை வந்தது இப்படிப்பட்ட சம்பிரமம் இந்தப் பட்டணத்திலே இருக்கப்பட்ட பெரிய மனுஷர் வீட்டுக் கலியாணங்களுக்குக்கூட இப்படி நடந்ததில்லை என்கிறதாகச் சகல சனமும் சொல்லிக்கொண்டார்கள்.

ஜுலை மீ 4 உ க்கு ஆனி மீ 24 உ சனிவாரம் நாள்

ஆற்காட்டிலேயிருந்து எழுதிவந்த தென்னவென்றால், உசேன்சாயபு அவர்கள் வளவிலே கலியாணம் பண்ணும்போது வேலூர் மீர்சத்தல்லிகான் சாயபு அவர்கள் அனுப்பிவித்ததாக எட்டுப் பேர் பட்டாணியர் வந்து வெகு நாளாகச் சமயம் பார்த்துக்கொண்டிருந்து இன்றையதினம் ஊர்கோலம் புறப்படும்போது சப்த்தரல்லிகான் பிள்ளை சாயபு சாதாவையும்... .........இந்தப் பிள்ளைகளையும் வெட்டிப்போட்டதாகவும் இராஷத்துகானவர்களுக்கும் காயம்

ராமகிருஷ்ண சாஸ்திரியார் எழுதி அனுப்பின காகிதப் படிக்கு வயணம், உசேன்சாயபு குமாரத்திக்குக் கலியாணம் ஆகி மூன்று நாளாயிற்று இன்றையதினம் 24 உ சனிக்கிழமை நாள் இரண்டு சாமத்துக்கு ஆற்காட்டிலே மாப்பிள்ளை வீட்டுக்குப்போய்ப் போனார். மமுதல்லி சாயபும் இராஷத்துகானும் சப்பிதானுகானும், பின்னையும் பெரிய மனுஷர் சப்த்தரல்லிகான் குமாரனும் இவர்களெல்லாரும் வந்திருக்கிற அந்தவேளையிலே அயிதலிகான் சமோசை என்கிற பட்டாணியன் நாலு பேருடனே கூட வந்து கச்சேரியிலே உட்கார்ந்து, சாயபு சாதாவும் இராசத்துகானும் இருக்கும்போது மத்தியே அவர்களண்டைவந்து உட்கார்ந்து எங்களுக்குச் சம்பளம் வரவேண்டும், கொடுங்களென்று கேட்டான். அதற்கு இராசத்துகானிருந்துகொண்டு தப்புந்தாறுமாய் கூவாதே, எழுந்திருந்து போ என்று சொன்னான் அதற்கவன் விசேஷம் எறிஞ்சு போடாதே, பார்த்துப் பேசென்றும் பல்லைக் கொட்டிப் போடப்போகிறேனென்றும் சொன்னான். இதிலே இவனேதோ இறுத்திரமாய் வந்திருக்கிறுப்போலே காணுதென்கிறதாய் யோசனைபண்ணி இராசத்துகான் எழுந்திருந்துவிட்டார்.

*1744* ஆு அவ்ரில் மீ ரக்தாக்ஷி ஆு சித்திரை மீ *8* உ வியாழக்கிழமை நாள்

*மத்தியானம் இரண்டு மணிக்கு சீர்மை சுப்பல் ஓடிவந்து துறை பிடித்து பீரங்கி போட்டார்கள். இந்தக் கப்பலிலே வந்த சேதி என்னவென்றால்,—*

*1744* ஆு சூலை மீ *4* உ க்கு ரக்தாக்ஷி ஆு ஆனி மீ *24* உ சனிவாரம் நாள்

*ஆற்காட்டிலேயிருந்து எழுதிவந்தது. அந்தப் பக்கத்திலே எழுதியிருக்கிறது போக இப்புறம் சமாசாரம் இராசத்துகான் எழுந்திருந்தவுடனே அந்தப் பட்டாணியிருந்துகொண்டு நீ எங்கே போகிறாய் என்கிறதாக நம்முடைய சம்பளத்தைக் கொடுத்துவிட்டுப் பிறகு போ என்கிறதாய் அங்கி கயிற்றைப் பிடித்து உட்காரவைத்தான் இதற்குள்ளே கலவரப்பட்டு, சாயபு சாதாவை அப்புறப்படுத்தவேண்டுமென்கிறதாய் எடுத்துக்கொண்டுபோகப் போனார்கள். இதற்குள்ளே கட்டாரி வாங்கி அந்தப் பிள்ளையைக் குத்தினான். அந்தக் குத்து அந்தப் பிள்ளைக்குக் குறுக்கே தடுத்த இராசத்துகானுக்குப் பட்டது. அதின் பேரிலே கும்பல்கூடி சாயபு சாதா, போனார் மகதல்லிகான் குமாரன் சப்பித்தானுகான், பின்னையும் ஒரு நவாப்பித்தன்கூட நாலு பேர் விழுந்துபோனார்கள். மகதல்லிகானுக்கும் காயம் இராசத்துகானுக்கும் பல காயம். அந்தப் பட்டாணியன் நாலுபேரையும் வெட்டிப்போட்டார்கள் இன்றையதினம் சாயங்காலத்துக்குள்ளே அந்த மட்டுக்கும் ஊரிலே வெகு காலிமேலாயிருந்தது. அந்த வேளையிலே உசேன் சாயபும் சயிந்தல்லிகானும் இவர்கள் இரண்டு பேரும் கோட்டைக்குள்ளே வராமல் தங்கள் வீட்டிலேதானே யிருந்தார்கள். இந்தக் கலவரம் ஆனபிறகு வந்தார்கள். ரசாலிகானுக்குக் காயம்படவில்லை. அந்த வேளையிலே பின்னை ஒரு வீட்டிலே யிருந்தபடியினாலே அவர் தப்பினார். இதிலே நவாபு அன்வர்த்திகான் சாயபு அவர்கள் தம்மண்டையிலே யிருக்கப்பட்ட பவுஞ்சு யெல்லாம் சமைபண்ணிக்கொண்டு பட்டாணியர் தமாமும் அவரவருடைய வீடுகளிலே யெல்லாம் லுடாய்ச்சி பண்ணச்சொல்லி உத்தாரங் கட்டளையிட்டு, சறுதாறுகான் வீடுமாத்திரம் மாப்பு செய்தார்கள். இந்தப் பிரகாரம் நடந்தது என்கிறதாக ஆற்காட்டிலே யிருந்து எழுதிவந்தது.*

1744 ஞு ஆகஸ்டு மீ 10 உ க்கு ரக்தாக்ஷி ஞு ஆடி மீ 30 உ சோமவாரம் நாள்

ராத்திரி 10 மணிக்கு (ா) துரையவர்கள் ஒழுகரையிலே யிருந்து புதுச்சேரிக்கு வந்தார்கள்.

பக்கம் 241 வீட்டுக் கணக்கு.

1744 ஞு செப்தம்பர் மீ 14உ க்கு ரக்தாக்ஷி ஞு புரட்டாசி மீ 3 உ சோமவாரம் நாள்

காலமே பொழுதுவிடிய பத்து நாழிகைக்கு (ா) குவர்னர் மூசே துப்ளேக்சு அவர்கள் குமாரத்தி கெற்பிணியாயிருந்தவள் பிரசூதியறை சன்னி பிறந்து மரணத்தை அடைந்தாள். அந்தப்பெண் யாரென்றால், முன் ருத்ரோத்காரி ஞு ஆடி மீ 17 உ திங்கட்கிழமை நாள் கலியாணம் பண்ணின இரண்டு பெண்களிலே இளைய பெண் மரணத்தை அடைந்துவிட்டது. சாயங்காலம் ஆறு மணிக்கு எடுத்துப்போய் கப்சுக்கோயிலிலே ஸ்தாபிதம் பண்ணினார்கள். ஸ்தாபிதம் பண்ணிப் போகிறபோது கோட்டையிலேயும் கப்பலின்பேரிலேயும் சாவு பீரங்கி போட்டார்கள் ஆனால், இந்தப் பெண்பிள்ளை கலியாணம் பண்ணிக்கொண்டு பதிமூன்று மாசமும் பத்தொன்பது நாளுமிருந்து இதற்குள்ளே கெற்பிணியாய் பிரசூதியாகிப் பிள்ளையும் இந்தப் பெண்ணும் இரண்டு பேரும் மரணமானார்கள்.

1744 ஞு செப்தம்பர் மீ 22 உக்கு ரக்தாக்ஷி ஞு புரட்டாசி மீ 11 உ

சீர்மையிலெயிருந்து ஒரு கப்பல் ஓடிவந்து வச்சு பிடிச்சான். அந்தக் கப்பல் பேர் சென்சிறும் (St geran) கப்பித்தான் பேர் மூசே செல் (M. de la Selle) இந்தக் கப்பல் சீர்மையிலேயிருந்து மார்ச்சு மீ 8 உ புறப்பட்டு ஓடிவந்து இற்றை நாள் புதுச்சேரி துறை பிடித்தான். இந்தக் கப்பலிலே மூசே துவார் வங்காளத்துக்கு குமிசெல் உத்தியோகமாகி வந்து இறங்கினார். அவரும் அவ்விடத்துக்குப் பத்து நாளையிலே பயணமாய்ப் போவார்.

29 உ செப்தம்பர் மூ புரட்டாசி மூ 17 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே பத்து மணிக்கு முசம்பீக்குக்குப் போயிருந்த சேம்பியேர் (St. Pierre) என்கிற கப்பல். இந்தக் கப்பல் கப்பித்தான் மூசே பாறு (M. Bard). இந்தக் கப்பல் ஓடிவரும்போது தூரத்திலே காணச்சே கொடி வெள்ளைக்கொடியாய்க் கண்டு

அதின் பேரிலே இங்கிலிஷுக்காரர் இந்தப்படிக்கு வெள்ளைக் கொடியைப் போட்டுக்கொண்டு வந்து மோசம்பண்ணுவார்க ளென்கிறதாய் கலங்கி, கோட்டை வாசல் கிழண்டை வாசலை யும் சாத்தி, பீரங்கியெல்லாம் குண்டு மருந்து போட்டுத் தயார் பண்ணச் சொல்லியும், தென்னண்டை கடலோரத்துக் கெவுனி யும் அடைத்து, கொத்தளங்களிலே இருக்கப்பட்ட சொலு தாதுகளையெல்லாம் கோட்டைக்கு அழைப்பித்து இப்படியாக அதனகுதனப்பட்டுப்போச்சுது. அதின்பேரிலே துரையவர்கள் மூசே துப்ளேய்க்கு அவர்களிடமிருந்துகொண்டு பீரங்கி மேஸ்தி ரியை அழைப்பித்து முகத்துவாரத்து மூலைக்கொத்தளங்களின் பேரில் ஏறி குறியாய்ப்பார்த்து வரச்சொல்லியும், நம்முடைய கப்பலானால் அதற்கு இன்ன அடையாளம் போட்டிருக்கும். அந்த அடையாளப்படிக்கு இருந்ததேயானால் அந்த மூலைக் கொத்தளத்தின்பேரிலே யிருந்தபடியே ஒரு பீரங்கி போடு நமக் குத்தெரியத்தக்கதாக என்று சொல்லி அனுப்பிவித்தார்கள். அவனப்படியே போய் மூலைக்கொத்தளத்தின்பேரிலேறிப் பார்க்கையில் (ா) துரையவர்கள் சொன்ன குறிப்புப்படிக்குக் கொடி போட்டிருந்தபடியினாலே பிராஞ்சுக் கப்பலென்று சொல்லி அவனே பீரங்கி போட்டான் அந்த *............ யாருக்கும் தெரியாதபடியினாலே அந்த............ பீரங்கி வெடி எழும்பி ......அது எது சண்டை கப்பல் என்று தானே கோட்டை வாசல் கொத்தளங்களெல்லாம் லேஸ் பண்ணி, அவரவர் எச்சரிக்கைப்பட்டார்கள். அதின்பேரிலே (ா) துரையவர்களுக்கு அந்தச் சாடை தெரிந்து நம்முடைய முசம்பீக்குக்குப் போயிருந்த சேம்பியர் என்கிற கப்பலென்று சொன்னார்கள். அதின் பிறகு புத்தி மிதப்பட்டது. பிற்பாடு ஓடிவந்து வச்சுப்பிடிச்சான்

1744 ஹு ஒக்தோபர் மீ 9 உ க்கு ரக்தாட்சி ஹு புரட்டாசி மீ 27 உ

பறங்கிப்பேட்டையிலேயிருந்து பவோரி என்கிற சீர்மை கப்பல் இந்தக் கப்பல் கப்பித்தான் மூசே தேசினேஸ் கில்பர்ட் (M. Deschesnayes Gilbert) இந்தக்கப்பல் இற்றைநாள் சூரிய உதயத்துக்குப் பாயெடுத்து அச்சைக்கு (Acheen) ஓடிப் போனான். இந்தக் கப்பலில் வட்டக்காரர் கேழ்வியள் கட்டு ஏற்றப்பட்டது. காரிக்கம் காங்கு உள்பட கட்டு 60, சிப்பம் 34, மூட்டை 124 ஏற்றப்பட்டது.

1744 ஹு ஒக்தோபர் மீ 31 உ க்கு ரக்தாக்ஷி ஹு அப்பசி மீ 19 உ சனிவாரம் நாள்

மத்தியானம் மூன்று மணிக்குக் கோட்டையிலே கொடியும் பீரங்கியும் போட்டார்கள். பீரங்கி போட்டவுடனே பட்டணத்

* இந்த இடத்தில் ஏடு கிழிந்திருக்கிறது.

தைச் சுற்றியிருக்கப்பட்ட கெவுனி வாசலெல்லாம் சாத்தி விட்டு, கோட்டையிலே மேலண்டைவாசலும் சாத்திவிட்டு, கெவுனியிலே யிருக்கப்பட்ட சொலுதாதுகள் கும்பெனிக்காரர் கும்பினீர் உத்தியோகஸ்தராயிருக்கப்பட்ட கணக்கர் மற்றப் பேர் சகலமான பேருக்கும் துப்பாக்கிக்கொடுத்து அவரவருக்கு உத்தியோகங் கட்டளையிட்டு, வரிசைவைத்துத் திட்டப்படுத்தி அதின் பேரிலே பழையபடிக்குக் கெவுனிகளெல்லாம் திறந்து விட்டு, அவரவரிருந்த விடத்துக்கு அவரவர் போய்விட்டார் கள். இதேது இருந்தாற்போலே இப்படி நடந்தது ஏதென் ருல் (ஶ்ரீ) துரையவர்கள் நாளை மொறட்டாண்டிசாவடிக்குப் போகவேணுமென்று பயணமாயிருக்கிறபடியினுலேயும் முன் னுலே ஒருதரம் இங்கிலீஷுக்காரர் கப்பல் காணுதென்கிற தாகக் கோட்டைவாசல் மற்றதெல்லாம் சாத்திவிட்டு இரண்டு நாழிகை அகூனிப்பட்டபடியினுலே இப்போது எச்சரிக்கைக்கு இந்தப்படிக்குத் திட்டப்படுத்தி வைத்தார்கள்.

1744 ளு நோவம்பர் மீ 1 உ க்கு ரக்தாக்ஷி ளு அற்பிசி மீ 20 உ ஆதிவாரம் நாள்

ராத்திரி பதினொரு மணிக்கு, தளவாய் வீரராகவ நாயக் கனையும் அவருடைய குமாரன் கிருஷ்ணனையும் ஆறுமுக மென்கிறவனையும் மூன்று பேரையும் பிடித்துக் கிடங்கிலே போட்டார்கள். அந்த மூன்று பேரையும் ஒருத்தருடனே ஒருத்தர் பேசாமற்படிக்கு வெவ்வேறு கிடங்கிலே போட்டார் கள். அதேதினுலேயென்ருல் அவர்கள் வீட்டுக்குக் கீழண்டை வீட்டிலே குடியிருந்த பெருமாள் செட்டி வீட்டிலே களவு போன சம்மதிக்காகப் பிடித்துக் காவல்பண்ணினுர்கள்.

நோவம்பர் மீ 2 உ க்கு அற்பிசி மீ 21 உ சோமவாரம் நாள்

காலமே வீரராகவ நாயக்கன் குமாரனையும் ஆறுமுகத் தையும் அழைத்துக் கேட்டு அட்டவணைகொண்டு எழுதிக் கொண்டு மறுபடியும் கொண்டுபோய் வைத்தார்கள்.

நோவம்பர் மீ 3 உ க்கு அற்பிசி மீ 22 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே ஐந்து மணிக்கு (ஶ்ரீ) துரையவர்கள் பூசே துப்ளேய்க்கு அவர்கள் மொறட்டாண்டிசாவடிக்குப் போனுர்கள். அவ்விடத்திலே பத்து நாளைக்கு இருப்பார்கள் போலச் சொல்லுகிருர்கள்.

1744 ஹு நவம்பர் மீ 3 உ ரக்தாக்ஷி ஹு அற்பிசி மீ 22 உ

இற்றை நாள் மத்தியானம் இரண்டு மணிக்கு உப்புட்டூர் பெருமாள்செட்டி தன் வீட்டிலே களவுபோன தட்டு முட்டு வயணம் கணக்கெழுதி வைத்தான். அவர் எழுதிவைத்த வயணம், பொன் நகை வராகன் 646, வெள்ளி நகை வராகன் 51 ஆக வராகன் 697-க்கு மறுபடி அவன் கொண்டுவந்து போட்டுவிட்டது பொன் நகை வராகன் $75\frac{3}{4}$, வெள்ளி நகை வராகன் 42, ஆக வராகன் $117\frac{3}{4}$ நீக்கி வரவேண்டிய பொன், வெள்ளி நகை வராகன் $579\frac{1}{4}$ அவருடைய நகைகள் களவு போன வராகன் 204 ஆக களவுபோன வராகன் $783\frac{1}{4}$.

1744 ஹு நவம்பர் மீ 11 உ க்கு ரக்தாக்ஷி ஹு அற்பிசி மீ 30உ புதவாரம் நாள்

சப்தமி திருவோண நக்ஷத்திரம் மத்தியானம் 13 நாழிகைக்குமேல் மகரலக்னத்தில் மொறட்டாண்டிச்சாவடியிலே கருத்தம்பி நயினுருக்குப் பாளையக்கார உத்தியோகம் கொடுத்து நாலு கெசம் சகலாத்தும் வெகுமானம் பண்ணினார்கள். இவனுக்கு இப்போது பாளையக்கார உத்தியோகம் கொடுத்ததேதென்றால், முன்னாலே முத்தியபிள்ளைக்கு, பரிதாபி ஹு சித்திரை மீ ...... உ முசே லெனுவாரவர்கள் துரைத்தனம் பண்ணினபோது பாளையக்காரனாயிருந்த கருத்தம்பி நயினுரென்கிறவன் கையிலே ஆகாதவனென்றும் இந்தப் பட்டணத்துக்குப் பாளையக்காரனாயிருக்கிறதற்கு அவன் பாத்திரவானல்லவென்றும் குமிசெல் கூடி இந்தக் கருத்தம்பியைத் தள்ளிப்போட்டு அந்த உத்தியோகத்துக்குப் பாத்திரவானாகிய முத்தியாபிள்ளை என்கிறதாக யோசனைபண்ணி, அதின் பேரிலே முத்தியாபிள்ளைக்குப் பாளையக்கார உத்தியோகம் கொடுத்திருந்தபடியால் இது வரைக்கும் அவர்பேரிலே ஒரு குற்றமும் இல்லாதபடியினாலே அவரைத்தள்ளக்கூடாமல் ராசவட்டமிட்டுக்கொண்டிருந்தார்கள். அவர் ருத்ரோத்காரி ஹு வைகாசி மீ 22 உ சனிக்கிழமை நாள் இவ்விடம் விட்டுப் புறப்பட்டு, திருப்பாதிரிப் புலியூர் திருவிழாவுக்குப்போய் அவ்விடத்திலேயிருந்து........ வேங்கட்டராம்பேட்டைக்குப் போன நாள் முதலாய் அவ்விடத்திலேதானே யிருந்துகொண்டு வராமலிருந்தபடியினாலே இந்தமட்டுக்கும் பதினேழு மாசமும் எட்டு நாளுமாயிற்று. இவ்விடம் விட்டுப்புறப்பட்டு இந்த மட்டுக்கும் சந்து கட்டுப் பார்த்துக்கொண்டேயிருந்து இப்போது அதற்கேற்ற சந்து கட்டு வந்து வாய்த்தபடியினாலே அந்த நேரத்தைச் சுமத்தி

அந்த உத்தியோகத்தைப் பழையகையிலே ஆகாதென்று தள்ளு பட்டிருந்த கருத்தம்பி நயினருக்குக் கொடுத்தார்கள் இப் போது அப்படி என்ன சந்துகட்டு வந்து நேரிட்டதென்றால், முன்னெழுதியிருக்கப்பட்ட வீரநாயக்கன் பேரிலே சுமத்தி திருடன் என்று காவலிலே வைத்தபடியினாலே அவன் முத்தியா பிள்ளை அவர்களுடைய மனுஷனென்கிறதாக இவன் செய்த குற்றத்தை முத்தியாபிள்ளை பேரிலே சுமத்தி, நேரஸ்த னென்று எண்பித்து அதின் பேரிலே கருத்தம்பி நயினரை அழைப்பித்துப் பாளையக்கார உத்தியோகத்தை அவருக்குக் கொடுத்தார்கள் இவனுக்கு உத்தியோகம் கொடுக்கிறபோது மகாநாட்டார், பெரிய மனுஷர், வர்த்தகர் சகலமான பேரை யும் மொறட்டாண்டிசாவடிக்கு அழைப்பித்துச் சகல சனருக்கு முன்பாக உத்தியோகம் கொடுத்து அனுப்பி னார்கள். அதின்பேரிலே இந்த நாள் மத்தியானம் பனிரெண்ட டித்து மூன்று மணிக்குப் புதுச்சேரி பிரவேசமானான். வரும் போது கனகராயமுதலியார் சேஷாசலசெட்டியார், மற்றப்பேர் கூடப்போய் கருத்தம்பி நயினரைக் கொண்டுபோய் அவர்கள் வளவிலே விட்டுவிட்டு அவரவர் வீட்டுக்கு அவரவர் போய் விட்டார்கள். இற்றை நாள் மத்தியானம் கருத்தம்பி நயி னருக்கு உத்தியோகம் கொடுத்து அனுப்பிவிட்டபிற்பாடு இரண்டு மணிக்கு சாவடி அழகப்பமுதலியாருக்கும் வந்தவாசி ரங்கப்பிள்ளைக்கும் ....... மணியம் கொடுத்தனுப்பிவித்தார் கள். இந்த மட்டிலே அனுப்பிவித்தபிறகு ஐந்து மணிக்கு வந்துசேர்ந்தார்கள்,

1744ஆம் நவம்பர்மீ 23உ-க்கு ரக்தாக்ஷி ஆம் கார்த்திகைமீ 12உ திங்கட்கிழமை நாள்

சாயங்காலம் தளவாய் வீரநாயக்கனுக்குப் பதிலாய் அவன் தம்பி வேங்கடாசலத்தைக் கிடங்கிலேவைத்து வீர நாயக்கனை வெளியேவிட்டார்கள். அவனை வெளியிலேவிட்டது என்னவென்றால், தளவாய் கொமரப்பன் ரொக்கப்பிணைச் சொல்லச்சொல்லிக்கொண்டு பணஞ் சம்பாதித்துச் சம்மதி வேண்டிய நிமித்தியம் வெளியிலேவிட்டார்.

1744ஆம் டிசம்பர்மீ 14உ-க்கு ரக்தாக்ஷிஆம் மார்கழிமீ 3உ திங்கட்கிழமை நாள்

காலமே ஆறு மணிக்கு (ஈ) துரையவர்கள் மூசேதுப் ளேய்க்சு அவர்கள் மொறட்டாண்டிசாவடியிலேயிருந்து நம்

முடைய சத்திரம் திருவேங்கடபுரத்துக்கு வந்து காலமே எட்டு மணிக்கு அலுமூசு சாப்பிட்டு, மத்தியானத்துக்கும் விருந்தும் சாப்பிட்டுச் சாயங்காலம் நாலு மணிக்கு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் பொம்மையாபாளையம் மடத்துக்கு வந்து பாலையசுவாமிகளவர்களைத் தெரிசனம் பண்ணிக்கொண்டு, ஆறுகெசம் சகலாத்தும் இரண்டு பன்னீர் செம்பும் காணிக்கை வைத்துத் துரையவர்களும் அம்மாளவர்களும் ரொம்பவும் வணங்கி மரியாதை பண்ணினதின்பேரிலே சாமியாரவர்களும் ஆசீர்வாதம் பண்ணினார்கள். அவர்கள் கையிலே ஆசீர்வாதம் பெற்றனுப்பிவித்துக்கொண்டு புளியந்தோப்பிலே வந்து தித்திப்பு மேசைபோட்டு அவ்விடத்திலே கபேயும் குடித்து, அப்பால் பயணப்பட்டு மறுபடியும் மொறட்டாண்டி சாவடிக்குப் போய்விட்டார்கள்.

1745 ஆம் ஜனவர் மீ 10 உ க்கு ரக்தாக்ஷி ஆம் தை மீ 1 உ ஆதிவாரம் நாள்

ராத்திரி காரைக்காலிலேயிருந்து எழுதிவந்த சேதி யென்னவென்றால், தயங்கம்பாடிக் கப்பல் அச்சையிலேயிருந்து ஓடிவந்து தயங்கம்பாடித் துறை வச்சுபிடித்ததாம். அந்தக் கப்பலிலே வந்தசேதி என்னவென்றால், முன் புரட்டாசி மாதம் 27 ந்தேதி பறங்கிப்பேட்டையிலேயிருந்து அச்சைக்குப் பாயெடுத்த பிராஞ்சுக் கப்பல். அந்தக் கப்பல் பேர் பவோரி (Favori) என்கிற கப்பல் அச்சைக்குப் போய்ச்சேர்ந்து ஐப்பிசி மாதம் 9 ந்தேதி பொத்திரியானிலே வச்சுப்பிடித்துச் சரக்குகளெல்லாம் இறக்கி, காரியக்காரரும் இறங்கி இப்படியிருக்கையில் கார்த்திகை மாதம் 23 ந்தேதி இங்கிலீஷ்காரர் கப்பல் இரண்டு ஓடிவந்து சண்டைபண்ணி, பிராஞ்சுக் கப்பலைப் பிடித்துக்கொண்டார்களென்கிறதாகவும், தயங்கம்பாடி கப்பலிலே பூசேஸந்தாசும் பின்னையும் இரண்டொரு வெள்ளைக்காரரும் வந்திருக்கிறார்களென்றும் எழுதிவந்தது.

1745 ஆம் பிப்பரவரி மீ 7 உக்கு ரக்தாக்ஷி ஆம் தை மீ 29 உ ஆதிவாரம் நாள்

காலமே சங்கரபரி குமாரன் சம்புதாசு சென்னபட்டணத்திலேயிருந்து ராமேசுரத்துக்குப் போகிறதற்காக நம்முடைய சத்திரத்திலே வந்திறங்கின கபுறு இவ்விடத்துக்கு வந்தது. இவ்விடத்திலேயிருந்து (ா) பிள்ளையவர்களும், தம்பி மற்றப்பேரும் எதிர்கொண்டுபோய் அவவிடத்திலே சந்தித்துக்கொண்டு, மத்தியானத்துக்கு நம்முடைய சத்திரத்திலே

விருந்து பண்ணிவித்து அவ்விடத்திலேயிருந்து சாயங்காலம் அழைத்துக்கொண்டுவந்து கெட்டிணேக்கூடத்திலே விடுதி அமைத்து உலுப்பை மற்றதெல்லாம் இவ்விடத்திலேயிருந்து அனுப்பிவித்தோம் அவர்கள் பிறகே வந்தவர்கள் சேவகர் கூட நூற்றைம்பது பேருக்குண்டு, பல்லக்கு இரண்டு, குதிரை 5, டோலி 3, எருது 20, 30

1745 ஸு பிப்ரவரி மீ 8 உக்கு ரக்தாக்ஷி ஸு மாசி மீ 1 உ

காலமே 10 மணிக்கு (ா) துரையவர்கள் மூசே துப்ளேய்க்சு அவர்கள் பேட்டிக்குப் போனார்கள். போனவிடத்திலே இவரந்திரகொண்டுபோய் வைத்தது.... ........க்கு விலே அதின்பேரிலே (ா) துரையவர்கள் ரொம்பவும் மரியாதை பண்ணிக்கொடுத்த வெகுமானம் என்னவென்றால், சிவப்பு சகலாத்துச் சிப்பம் 2, பன்னீர் மெருவை 10, ஆகுதுங்கரி சீசாய், அத்தர் சின்ன சீசாய் 2, குதிரை 1, பாக்கு வெற்றிலே—

முதலாகியதெல்லாம் வெகுமானம்பண்ணி ஒன்பது பீரங்கியும் போட்டார்கள். அந்தமட்டிலே அனுப்பிவித்துக்கொண்டு, கனகராயமுதலியார் வீட்டுக்கு வந்து அவ்விடத்திலே இரண்டு கெசம் சகலாத்தும் வெகுமானம் வாங்கிக்கொண்டு சந்தாசாயபு மாலுக்குப் போய் அனுப்பிவித்துக்கொண்டு, அப்பால் மிருகுலான்முசேன் வீட்டுக்குப் போய் அனுப்பிவித்துக்கொண்டு, மறுபடியும் அவருடைய விடுதிக்குப் போய் மத்தியானம் சாப்பிட்டு நாலுமணிக்கு நம்முடைய வளவுக்கு வந்தார் அவருக்கு வெகுமானம் அவருடைய குமாரனுக்கு நாலு மடித்தை அரசிலேக் கொலுசு, சம்புதாசுக்கு ஒரு சிரொப்பா, லாலுதாசுக்கு ஒரு சிரொப்பா மயிசூர் சீரங்கப்பட்டணம் குஜிராத்திக்காரனுக்கு.........ஷியார் சம்புதாசவர்கள் பெண்சாதிக்கு உயர்ந்த பட்டு கருப்புத்துணி சரிகைச் சேலே 1, ரவிக்கை 1 குத்துணி 1, இந்தமட்டுக்கும் வெகுமானம் வாங்கிக்கொண்டு, ஐந்து மணிக்கு அனுப்பிவித்துக்கொண்டு பயணம் புறப்பட்டு அப்புறம் அரும்பாத்தைபிள்ளே சாவடிக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

பிப்ரவரி மீ 10 உக்கு மாசி மீ 3 உ புதன்கிழமை நாள்

ராத்திரி பனிரெண்டடித்து இரண்டு மணிக்கு மொக்காவுக்குப் போகிற கப்பல் பேர்......அந்த கப்பலுக்கு நபாபு

அவர்களுடைய கொடியும்போட்டு மீருகுலாமுசேன்பேருக்கு அந்தக் கப்பலைப் பயணம்பண்ணி மொக்காவுக்கு அனுப்பினார்கள். அந்தக் கப்பலிலேற்றிய காங்குப் புடவைக் கட்டு......, பின்னையும் பலதினுசுச் சரக்கு உள்பட வராகன் ....ஏற்றிக்கொண்டு பாயெடுத்து ஓடிப்போனான்.

1745 ஞு பிப்ரவரி மீ 12 உ க்கு ரக்தாக்ஷி ஞு மாசி மீ 5 உ சுக்கிரவாரம் நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு ஆறுமுகமென்கிற தேவடியாள்பிள்ளையாண்டானை மசுக்கரைக்குப்போகிற கப்பலிலேற்றிவிட்டார்கள். இவனை எதினாலேற்றிவிட்டார்களென்றால் முன்னாலே ஆற்காட்டுப் பெருமாள்செட்டி வீட்டிலே களவு போன சம்மதிக்காக வீரநாயக்கனையும், அவர் குமாரனையும், இந்த ஆறுமுகத்தையும் மூன்று பேரையும் பிடித்துக் காவல்பண்ணியிருந்தார்கள். அப்படியிருக்கையில், ஒரு நாள் அவர்கள் மூன்று பேரையும் அழைத்துத் தனித்தனியே கேட்டவிடத்திலே வீரநாயக்கன் இந்த முகம் தலையிலே சுமத்திவைக்கிற நிமித்தியம் நான்தானெடுத்தேன் என்று சொல்லடாவென்று புசுலாய்ச்சுச் சொல்லி வந்தபடிக்கு அவனுடைய கிராசாரவேளையினுடைய குணம் அப்படித்தானே சொன்னான். அதின்பேரிலே வீரநாயக்கன் மட்டுக்கும் செலவுபண்ணித் தானும் தன்னுடைய மகனும் வெளிப்பட்டான் அந்த மட்டிலே அவர்கள் குடும்பத்தோடே குண்டுக்கு வெளியே கொண்டுபோய் விட்டுவிட்டு வந்தார்கள். இனிமேலவர்கள் நேரஸ்தரானபடியினாலே என்னை என்றைக்கும் புதுச்சேரி பட்டணத்துக்குள்ளே வரப்போகாது என்று குமிசேல் கூடி தீர்த்தார்கள் அதினபேரிலே இந்த ஆறுமுகம் என்கிறவன்பேரிலே நேரத்தைச் சுமத்தி மசுக்கரைக்கு ஏற்றிவிட்டார்கள்.

பிப்ரவரி மீ 18 உ மாசி மீ 9 உ செவ்வாய்க்கிழமை நாள்

சாயங்காலம் நாலு மணிக்கு எம்பெருமான் பிள்ளை தாயார் மங்கத்தம்மாள் காலம்பண்ணிப்போனாள்.

1745 ஞு பிப்ரவரி மீ 18 உ க்கு ரக்தாக்ஷி ஞு மாசி மீ 11 உ வியாழக்கிழமை நாள்

காலமே 10 மணிக்கு பரசுராமப்பிள்ளை குமாரனுக்கு அரும்பாத்தபிள்ளை உத்தியோகம் கொடுத்து வெகுமானமும்

கொடுத்தார்கள் அதெதினுலென்றல் பரசுராமப்பிள்ளை வியாதிஸ்தனுய் வீட்டிலே படுத்துக்கொண்டபடியினுலே அப்புமுதலியார் முகாந்திரமாகச் சிறிது பணம் செலவு செய்து வெகுமானம்பண்ணிவித்துக்கொண்டு உத்தியோகமும் வாங்கிக் கொண்டார்கள். அதின்பேரிலே அவர்கள் வளவுக்கு வந்த உடனே அப்புமுதலியாருக்கு இரண்டு கெசம் சிவப்பு சகலாத்தும், சாவடி மணியக்காரனுக்குப் பச்சை கெசம் இரண்டு விழுக்காடும் கொடுத்துப் பின்னையும் அவரவருக்கு வெகுமானமும் கொடுத்தார்கள்.

*1745* ஞு அவ்ரீல் மீ *8* உ க்கு ரக்தாக்ஷி ஞு பங்குனி மீ *29* உ வியாழக்கிழமை நாள்

காலமே பத்து மணிக்குச் சங்கரபாரீக்கு அவாகள் குமாரன் சம்புதாசவர்கள் ராமேசுரத்திலேயிருந்து புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார்கள் ஆனல், ராமேசுரத்திலேயிருந்து வருகிற வழியிலே சீர்காழிக் கப்புறத்திலே தஞ்சாவூர் மனுஷர் வந்து பிடித்துக்கொண்டு தொந்தரவு பண்ணின விடத்திலே அவர்களுக்குக் கையிலே யிருந்த தட்டு முட்டுகளை ...... இந்த மட்டுக்கும் கொடுத்துவிட்டுத் தப்பிததுக்கொண்டு வந்தவிடத்திலே அவர்கள் புகுந்து இவர்கள்பிறகே வந்தவர்களை யெல்லாம் அடித்துப் பறித்துக்கொண்டு விட்டுவிட்டார்கள் அந்தமட்டிலே புறப்பட்டு அவரவர் ஒருத்தருடனே ஒருத்தர் சொல்லுகிறதற்கிடமில்லாமல் ..... .... ...... ... ......................
ஒருத்தர் ஒருத்தராய் எல்லாரும் வந்து சிதம்பரம் சேர்ந்து அங்கேயிருந்து புறப்பட்டு இப்புறம் வந்து சேர்ந்தார்கள். வருகிறபோது பிள்ளையவர்கள் சிங்கிரி கோவில் மட்டுக்கும் எதிர்கொண்டு போய் அவ்விடத்திலேயிருந்து புறப்பட்டு வியாழனன்று காலமே வந்துசேர்ந்தார்கள். வந்தவுடனே கேட்டினைக் கூடத்திலே விடுதிவிட்டு எல்லாருமாய்க் கூடப்போய் விட்டுவிட்டு வந்துவிட்டார்கள்.

*1745* ஞு அவ்ரீல் மீ *27* உ க்கு குரோதன ஞு சித்திரை மீ *18* உ

மணிலாவிலேயிருந்து ஓடிவந்த கப்பல் பேர் சம்சார்லு இந்தக் கப்பல் கப்பித்தான் பேர் மூசே கோசார். இந்தக் கப்பல் மூசே லமேத்திரி அவர்களுக்கும் மூசே சோசிக்குப் பொதுவிலே மணிலாவுக்குப் போன கப்பல் இற்றை நாள் சித்திரை மீ...... வந்து துறைபிடித்து பீரங்கியும் போட்டு...... கப்பித்தானும் இறங்கினுன். இந்தக் கப்பலிலே வந்த சரக்கு பல கலர் பின்னையும்......

ஏப்ரல் மீ 29 உக்கு சித்திரை மீ 20 உ

சீனமக்கா கப்பல். பேர் நோத்தர் தாம் தே சேர் (Notre Dame des Sœurs). கப்பல் கப்பித்தான் பேர் மூசே பெலிசியேன் தாசில்வா மெதிரோ (M. Felicien de Sylva Medeiro) இந்தக் கப்பலில் சர்க்கரை, கல்கண்டு, பின்னையும் சீனு தினுசுகள் வந்தது.

இதே நாளையிலே தருணுசேரியிலேயிருந்து (Iennasserim) வந்த கப்பல் பேர் லக்ஷ்மண பிரசாத் கப்பல் நகோதர் (Master) சூபசிங்கு இந்தக் கப்பலிலேற்றியது யானை 13.

தருணுசேரி வரவு சியாம் ராசா கப்பல் ஒன்று ஓடி வந்து வச்சு பிடித்தான், கப்பல் பேர் நஞுக் கப்பித்தான பேர்......... இந்தக் கப்பலிலேற்றிவந்த யானை 13, வெள்ளீயம் $81\frac{1}{2}$ சக்கை. பின்னையும் பல தினுசு வந்தது

1745 ஞு மே மீ 4 உக்கு குரோதனஞு சித்திரை மீ 25 உ செவ்வாய்க்கிழமை நாள்

மத்தியானம் இரண்டு மணிக்கு முன் மணிலாவுக்குப் போன கப்பல் ஷார்ல் என்கிற கப்பல். கப்பல் கப்பித்தான் சொபர்கார்கு மூசே வீல்பாகு (M. de la Villebague) இந்தக் கப்பல் மணிலாவிலேயிருந்து ஓடிவந்து வச்சு பிடித்தான். இந்தக் கப்பலிலே தமிழ் கப்பித்தான் வங்காளக் குமரய்யன் இந்தக் கப்பலிலே வந்த வெள்ளிப்பெட்டி............... ஆனுல், இதிலே போன எழுத்துப் புடவைகள் ஒன்றுமில்லாமல் மணிலாவிலேதானே வைத்துவிட்டு மற்றச் சரக்குகளெல்லாம் நல்ல விலைக்குத்தானே விற்றுவந்தது

மத்தியானம் ஒரு மணிக்கு சம்புதாசு இவ்விடத்திலே இருந்து சென்னப்பட்டணத்துக்குப் போகிறதற்காகப் பயணம் புறப்பட்டுப் போய் பிள்ளையவர்களும் கூடப்போய் ராத்திரிக்கு நம்முடைய சாவடியிலேயிருந்து தங்கி விடியற்காலமே அப்புறப்பட்டுப் போனுர்கள் பிள்ளையவர்கள் காலமே ஆறு மணிக்கு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் புதுச்சேரி வந்து சேர்ந்தார்கள்.

1745ஞு மேமீ 19உக்கு தமிழ் குரோதனஞு வைகாசிமீ 10உ புதன்கிழமை நாள்

காலமே ஐந்து மணிக்கு தம்பி திருவேங்கடம்பிள்ளை பயணம் புறப்பட்டுச் சென்னப்பட்டணத்துக்குப் போனுர். அவர்

அவ்விடத்துக்குப் போனதேதென்ருல், சம்புதாசனவர்கள் குமாரனுக்குக் கலியாணம் பண்ணுகிறபடியினுலே அந்தக் கலியாண நிமித்தியம் முகூர்த்தத்திற்குப் போனுர். அவர் பயணம் புறப்படச்சே அவர் கையிலே சிறிது நகையும் சிறிது பணம்காசும் கொடுத்து அதற்குச் செய்காரிய அட்டவணை எழுதிக்கொடுத்த விபரம்:

பூவராகன்.... ..350 ரூபாய்......200......வெள்ளிப்பணம் 24 (ராம்ச) (ரா) துரையவர்கள் கொடுத்தனுப்புகிற சீரொப்பா 1 க்கு நகை 5.

நாமனுப்பின சீரொப்பா......1 க்கு நகை 3 க்கு ரூ. 42......
சீரொப்பா......................1 க்கு நகை 2 க்கு ரூ, 34......
சீரொப்பா ......................1 க்கு நகை 4 க்கு ரூ. 131......
பச்சைப்பாலிசு சுருட்டி ......1 க்கு விலை வராகன் 10 ....
பச்சைக்கல் மோதிரம் ....... 2..................................
கெம்பு மோதிரம் ..............1..................................

ஆக இந்த உருப்படியும் நகையும் கொடுத்தனுப்பினதற்கு நடக்கவேண்டிய செலவு வயணம்: சதுரங்கப்பட்டணம் ராசப்பமுதலியார் வீட்டுக்குப் போய் பச்சைப்பாலிசு சுருட்டி 1 க்கு வராகன் ...10......

(ரா) சம்புதாஸ் அவர்கள் வீட்டுக் கலியாணத்துக்கு (ரா) துரையவர்கள் அனுப்பின ஆக ஐந்து நகைகள் சீரொப்பாவுடனேகூட இந்த ரொக்க வராகனிலே வராகன் 150........ சம்புதாசு அவர்கள் கையிலே கொடுத்து அவர்கள் கையிலே பதக்கமும் சரப்பளியும் வாங்கிக் கூடவைத்துச் சகல சம்பிரமத்துடனே கொண்டுபோகக் கொடுக்கச்சொல்லி, (ரா) துரையவர்களுடைய உத்தாரம் நம்மிடமாய் நடக்கவேண்டிய விபரம், சம்புதாசு அவர்கள் கையிலே இருநூறு வராகன் கொண்டுபோய்க்கொடுத்து அவர்கள் வீட்டிலேதானே பதக்கம், சரப்பளி புடவை, சீலை அதற்கேற்றதாய் வாங்கிச் சகல சம்பிரமத்துடனே வெகுமதி நடத்தவும், இதல்லாமல் மற்ற மூன்று சீரொப்பாவும் மூன்று மோதிரமும் வைத்துக்கொண்டு அவ்விடத்திலே எங்கெந்த பெரிய மனுஷருக்குக் கொடுக்க வேணுமோ அந்தப்படிக்கு நடப்பித்துவைக்கவும். ஒருவேளை இது போதும் போதாமல் பின்னையும் வேண்டியிருந்ததானுல் 100, 150, 200 வராகன் மட்டுக்கும் சம்புதாசு அவர்கள் கையிலே வாங்கிக்கொள்ளவும் இந்த இருநூறு ரூபாயும் ஒரு வராகன் பணமும் வழிச்செலவுக்குப் கேளிக்கைச் செலவுக்கும் வைத்துக்கொள்ளவும் என்று இந்தப்படியாக ஒரு யதாஸ்து கடுதாசியிலே எழுதிக்கொடுத்தனுப்பினேம்.

சம்புதாசு அவர்கள் குமாரனுக்கு இந்தவிசை கலியாணம் நின்றுபோய் கலியாணத்துக்குப்போன தம்பி சதுரங்கப்பட்டணத்திலே ராசப்பமுதலியார் விட்டு கலியாணத்துக்கு இருந்துவிட்டு இப்படித்தானே பயணம் புறப்பட்டுச் சென்னப்பட்டணத்துக்குப் போகாமல் வந்துவிட்டார். கலியாணம் எதினாலே நின்றதென்றால், அவர்களுடைய ஆசாரியார் காலமாகிப்போன படியினாலேயும் அவர்கள் சாதியிலே இந்த வருஷம் முகூர்த்த மில்லை என்றும் டில்லியிலிருந்து எழுதிவந்ததாகவும், அதினாலே நிறுத்திப்போட்டார்கள் என்றும் சொன்னார்கள் அதன் பேரில், போட்ட பந்தலைப் பிரிக்காமல் வித்தியாரம்பம் நடப்பிவித்து ஊர்கோலம் பண்ணி......

1745 ஹூ செப்தம்பர்மீ 10உக்கு குரோதன ஹூ ஆவணிமீ 29 உ சுக்கிரவாரம் நாள்

மத்தியானம் பனிரெண்டடித்து இரண்டு மணிக்கு அசரத்து நபாபு அன்வர்த்திகான்சாயபு அவர்கள் வந்து நயினியாபிள்ளை சாவடியிலே வந்து இறங்கினார்கள், இறங்கினவுடனே சுற்றுக் கோட்டை வடவண்டை கெவுனியிலேயும் கொத்தளத்து மேலேயுமாய் 21 பீரங்கி போட்டார்கள். அந்நேரமே இவ்விடத்திலேயிருந்து இரண்டு பேர் குமிசெல்காரரும் கனகராயமுதலியாரும், பிள்ளையவர்களும் பாளையக்காரனும் கொம்பு தமுக்கு மேளதாளத்தூடனே பயணப்பட்டு, நபாபு இறங்கியிருக்கிற நயினியாபிள்ளைசாவடி யண்டையிலிருக்கிற கூடாரத்திற்குப் போய், பேட்டி பண்ணிக்கொண்டுவந்தார்கள், அதின்பேரிலே நபாபவர்கள் இவ்விடத்திலேயிருந்து போன வெள்ளைக்காரருக்கும், கனகராயமுதலியார், பிள்ளையவர்கள் மருதானந்தபண்டிதர் நயினார் அவர்களுக்குப் பேருக்கு ஒரு சீரொப்பா விழுக்காடு வெகுமானம் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு அழைத்துவர வந்தோமென்று சொன்னவிடத்திலே, அப்படியே நாளைக்கு வருகிறோமென்று சொன்ன சேதியைக் கேட்டுக்கொண்டு அனுப்புவித்துக்கொண்டு வந்துவிட்டார்கள். வரும்போது (ா) துரையவர்களுக்கு வெகுமானம் ஒரு குதிரையும் சீரொப்பாவும் அனுப்பிவித்தார்கள்.

செப்தம்பர் மீ 11 உக்கு ஆவணி மீ 30 உ சனிவாரம் நாள்

மத்தியானம் பனிரெண்டு மணிக்கு இவ்விடத்திற்கு வருகிறோமென்று சொல்லி அனுப்பிவித்தார்கள். அந்தமட்டிலே இவ்விடத்திலே யெல்லாம் முஸ்தீதுபண்ணி, கெவுனிகள் சாத்திவிட்டு மேலண்டையிருக்கிற வழுதாவூர் கெவுனி மாத்

திரம் திறந்துவைத்து, கெவுனிக்கு வெளியே அகழிக்குள்ளே தென்னண்டை புறத்திலே கூடாரம் போட்டுவித்து இவ்விடத்திலேயிருந்து (ரா) துரையவர்கள் மூசே துய்ப்ளேக்சு அவர்களும், சின்ன துரை, மற்றுமுள்ள குமிசெல்காரர்களும், கனகராய முதலியார், பிள்ளையவர்கள், மற்றுமுள்ள பெரிய மனுஷர் கூட (ரா) துரையவர்கள் வீட்டிலேயிருந்து பார்வைத்துக்கொண்டு, மாயே துலுக்கர், கர்நாடக சேவகர், சகலமான பேரும் துப்பாக்கி யெடுத்துக்கொண்டு. இதல்லாமல் பாளையக்காரர், சேவகர் எல்லாரும் ஈட்டிக்கழி பிடித்துக்கொண்டு, ஆனையின்பேரிலேயும், ஒட்டகத்தின்பேரிலேயும், குதிரைகள்பேரிலேயும் நிசானும் நகபத்து வாத்தியம் பண்ணிக்கொண்டு தாசிகள் மேளதாளத்துடனே பனிரெண்டு மணிக்குத் துரையவர்கள் வீடு விட்டுப் புறப்பட்டு மேற்குக் கெவுனிக்கு வெளியே யிருக்கிற கூடாரத்துக்குள்ளே போய் இறங்கினார்கள். (ரா) துரையவர்கள் மற்றுமுள்ள துரைத்தனக்காரர் கூடப்போய் கூடாரத்திலே இறங்கி, சொலுதாதுகளை அலங்கத்து மேலே மூலைக்கொத்தள மட்டுக்கும் வரிசை வைத்துக்கொண்டு எல்லாரும் லேஸ்தாயிருந்து கொண்டு நபாபை அழைத்துவருகிறதற்குக் கனகராய முதலியாரை ஸ்தானாபத்தியம், மூசே தேமெரே, மூசே லமேர் இவர்களை அனுப்புவித்தார்கள். அவர் போய் அழைத்துப்போட்டு முன்னே வந்துவிட்டார். அப்படியிருக்கும்போது இரண்டு மணிக்கு நபாபு பாளையம்விட்டுப் புறப்பட்டார் என்கிற காபுறு வந்தது. அதின் பின்னோடே சம்பதிராயனும் மீருகுலா மூசேனும் பல்லக்கின்பேரிலே முன்னே வந்தார்கள். வரும்போது கூடாரத்துக்கு வெளியே வந்து ஒருத்தருக்கொருத்தர் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு கூடாரத்திலே போய் உட்கார்ந்தார்கள். அப்படியிருக்கும்போது கரீமல்லிகானும் பின்னையும் அப்துல் லசலீலும் நாலத்து ரெண்டு பேரும் கூடவந்தார்கள். அவருக்கும் அந்த மரியாதையாய்த் தானே கூடாரத்துக்கு வெளியே வந்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு அழைத்துக்கொண்டுபோய் கூடாரத்துக்குள்ளே உட்கார்ந்தார்கள். அப்படியிருக்கும்போது நபாபு அன்வருத்திகான் சாயபு அவர்கள் பல்லக்கின்பேரி லேறிக்கொண்டு அவருடனேகூட உசேன்சாயபு, மமியான்சாயபு, பத்தேமகம்மது எல்லாரும் பல்லக்கின்பேரி லேறிக்கொண்டு, ஆனையின்பேரிலே நிசானும், நகராவும், நகபத்தும் அடித்துக்கொண்டு வந்தார்கள் ஆனால், அவர் பிறகே வந்தவர்கள் ஆனை 3, குதிரை இருபது, ராணுவம் நூறுபேர், பல்லக்கு இருபது இந்தமட்டிலே வந்தார்கள். வரும்போது மூலைக்கொத்தளம்

துவக்கி துரையவர்களிருக்கிற டேராவுக்கு வருகிறமட்டுக்கும் ஐம்பது வெடி பீரங்கி போட்டார்கள். வருகிறபோது கெவுனிக்கு வெளியிலே முதல்வாசல் மட்டுக்கும் (ா) துரையவர்கள் எதிரே நடந்துபோய் முதலாவதுக்கு இரண்டாம் வாசற்படியண்டையிலே நின்று நபாபு பல்லக்கின்பேரிலே இருக்கச்சே தானே துரையவர்களை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டார். அதின் பிறகு நபாபு பல்லக்கின்பேரிலே யிருக்கத்தக்கதாக துரையவர்கள் நடந்துவர டேராமட்டுக்கும் வந்து பல்லக்கை டேராவுக்குள்ளே கொண்டுவந்துவைத்தவுடனே பல்லக்கை விட்டு இறங்கினவுடனே பிறகு ஒருதரம் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு எல்லாருமாய் உட்கார்ந்து அரைநாழிகை மட்டுக்கும் பேசிக்கொண்டிருந்து பிறகு எல்லாருமாய் எழுந்திருந்து கெவுனிக்குள்ளே வந்தார்கள். வரும்போது அசரத்து நபாபு அவர்களும், துரையவர்களும் நபாபு குமாரனுடைய பிள்ளையும் துலுக்குவார்த்தைத் தெரிந்த வெள்ளைக்காரன் மூசே தேலார்சேனும் பின்னையும் ஒரு துலுக்கப்பிள்ளை கூட நாலைந்து பேரும், ஆறு குதிரை கட்டின வண்டியிலேறிக்கொண்டு, இதல்லாமல் இரண்டு குதிரை கட்டின வண்டியிலே சம்பதிராயனும், உசேன் சாயபும் ஏறிக்கொண்டு மற்ற பேர் எல்லாரும் அவரவருடைய வாகனத்தின்பேரிலேறிக்கொண்டு கெவுனிக்குள்ளே நுழைந்தவுடனே பீரங்கிபோடத் துவக்கி ஐம்பது பீரங்கி போட்டார்கள். அந்தச் சம்பிரமத்துடனே வரிசை வைத்துக்கொண்டு நகபத்து மேளதாள வாத்தியத்துடனே மேற்குக் கெவுனியண்டையிலே யிருந்து நேரே கிழக்கே புறப்பட்டு கனகராயமுதலியார் வீடு மட்டுக்கும் வந்து தெற்கே திரும்பி ஈசுரன் கோவிலுக்குக் கீழண்டை புறப்பட்டு கோட்டை ஓரமாய்ப்போய் கோட்டைக்குத் தென்னண்டையிலேயிருக்கிறவெள்ளைக்காரத்தெருவேபோய்கப்புய்சேன்கோவில் ஓரமாய்வந்து கீழண்டை ஓரமாய்ப் புறப்பட்டு துரையவர்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். வருகிறபோது கோட்டை மேலண்டைவாசலை மூடிப்போட்டார்கள். கீழண்டை வாசலை மாத்திரம் திறந்துவைத்தார்கள். நபாபு துரையவர்கள் வீட்டிலேபோய் இறங்கினவுடனே கடலோரத்துக் கொத்தளத்திலே பீரங்கி போட்டார்கள். அதின்பிறகு துரை வீட்டுக்குத் தென்னண்டையிலே போட்டிருந்த கூடாரத்திலே வந்து இறங்கினார்கள். அதின்பிறகு சொலுதாதுகளை வரிசை பழக்கினார்கள். அதை இரண்டு நாழிகைமட்டுக்கும் பார்த்துக்கொண்டிருந்து பிற்பாடு கோட்டைப் பார்க்க வேணுமென்று சொல்லி நபாப் அவர்களை நாற்காலி கூடையிலே ஏறிக்கொள்ளச்சொல்லி, துரையவர்கள் பல்லக்கின்

பேரில் ஏறிக்கொண்டு, கோட்டைக்குள்ளே போனார்கள். கோட்டையிலே * ..................மரியாதை பண்ணினார்கள்.

கோட்டையிலே பெரிய மணிக்கூண்டு கொத்தளமெல்லாம் பார்த்துக்கொண்டு குந்தாணி பீரங்கி சுடச்சொல்லிப் பார்த்துப் பிற்பாடு வந்துவிட்டார்கள். பிறகு துரை வீட்டிலே மேசைபோட்டு மேசையின் பேரிலே யெல்லாம் வெள்ளிப் பீங்கான் கார்பு துல்லியேர் சகலமும் வெள்ளி முஸ்தீதாய் வைத்து, தித்திப்பு, பழவகைகள் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் நபாபு பிறகே வந்த கொபுதார்கள் வெள்ளிப் பீங்கான்களையும் துல்லியேர்களையும் ஐந்தாறுபேர் எத்தினார்கள். அதைக் கண்டுபிடித்துக்கொண்டு அவர்களைப் பிரகரித்துப் பிடுங்கிக்கொண்டார். அதின் பிற்பாடு வெகுமானங் கொடுத்தார். வெகுமானம் கொடுத்த தினுசு வயணம் இந்தச் சமாசாரமெல்லாம் எழுதி கடைசியிலே எழுதியிருக்கிறது.

பிற்பாடு அஸ்தமனமானவுடனே கோட்டையின் பேரிலேயும் துரையவர்கள் வீட்டு வாசலைச் சுற்றி மதில்களின் பேரிலே யெல்லாம் தீபம்வைத்து வாணவித்தைகள் நடப்பிவித்தார்கள். அந்தச் சம்பிரமம் எல்லாம் பார்த்துவிட்டு எட்டு மணிக்குப் புறப்பட்டு தண்டுக்குப் போகவேணுமென்று புறப்படுகையில் ஐம்பது பீரங்கி போட்டார்கள். அவருடனே கூட துரையவர்களும் வந்து கெவுனிக்கு வெளியே வழிவிட்டு அனுப்பிவித்துக்கொண்டு மறுபடி உள்ளே வந்துவிட்டார். நபாபு கோட்டை வாசலை விட்டு வெளியே புறப்பட்டு வருகையில் ஐம்பது பீரங்கி போட்டார்கள் அந்தமட்டிலே நயினியப் பிள்ளைச்சாவடிக்குப் போய்விட்டார் போகிற போது சென்னப்பட்டணத்துக் கெவுனியிலே புறப்பட்டுப் போனார். நபாபு வந்து ஊருக்குள்ளேயிருந்து வெளியே புறப்பட்டுப் போகிறமட்டும் ஒரு கெவுனி மாத்திரம் திறந்து வைத்து மற்றக் கெவுனிகளெல்லாம் மூடிப்போட்டார்கள். நபாபு வரச்சே தண்டும் பிறகே வந்தவர்கள் நபாபுக்கு வயது 8', 85. சம்பத்ராயருக்கு வயது 55. 60. உசேன் சாயபுக்கு வயது 45, 50 கரீ அலிகானுக்கு வயது 30, 40 மீருகுலாம் உசேனுக்கு வயது 40, பங்காருயாசாம் நாயக்கருக்கு வயது 55, 60 தாமலச்சேரி வெங்கடபதிநாயக்கருக்கு வயது 55, 60. காட்டுராசா குமாரனுக்கு வயது 18, 20.

---

* இழிந்திருக்கிறது.

## அசரத்து நபாபு அன்வருதிகான்சாயபு அவர்களுக்கு வெகுமானம் கொடுத்த நகைகள்.

| | வராகன் | பணம் |
|---|---|---|
| பங்தேசுதொருநகை 1, சுக்குபச்சிநகை 1, ஆக நகை 2 க்கு ... ... | 460 | 0 |
| தப்பிதெலிஹாரு சிறயோசியாமபி சுப்பாஞ்சு தொரு அபிசொரு நகை 1 | | |
| தலைக்கணி வீல்லுது நகை 3. ஆக நகை 4 க்கு | 830 | 0 |
| சல்தெஞ்சு பெர்யேத்து 1 க்கு | 60 | 0 |
| பொஅதே ஓடோரோஸ் 24 க்கு பெட்டி 1 க்கு | 40 | 0 |
| பெட்டி 1 க்கு கல்கண்டு 285 க்கு பவுண்ட் 1 க்கு $3\frac{1}{4}$ பணம் வீதம் ... | 38 | 0 |
| சர்க்கரை கட்டு 4 க்கு 639 பவுண்டு கிரயம் | 59 | 0 |
| ஆகுதுங்குரி சீசாய் 16, சீசாய் 1 க்கு 3 பணம் வீதம் கிரயம் ... | 2 | 0 |
| லொத்து சாம்புரொலு 12 புரொப் 1 க்கு 8 பணம் வீதம் கிரயம் ... | 4 | 0 |
| லோது மெலீசு 12 க்கு, 1 க்கு 8 பணம் வீதம் கிரயம் ... | 4 | 0 |
| லொதுவீல்நரெரு 13 க்கு, 1 க்கு 12 பணம் வீதம் கிரயம் ... | 6 | 12 |
| பன்னீர் சீசாய் 10 க்கு, 1 க்கு 18 பணம் வீதம் கிரயம் ... | 7 | 12 |
| மீருசாயபு மணி 28 க்கு, 1 க்கு 18 பணம் வீதம் கிரயம் ... | 18 | 0 |
| பாந்துரு வொருலோசு 1 க்கு, 1 க்கு 18 பணம் வீதம் கிரயம் ... | 35 | 0 |
| வில்லூது கெசம் $26\frac{1}{4}$ க்கு, கெசம் 1 க்கு 5 வராகன் கிரயம் ... | 130 | 0 |
| வில்லூது கெசம் 23 க்கு, கெசம் 1 க்கு வராகன் 4 வீதம் கிரயம் ... | 92 | 0 |
| கரசுதோரு மார்க்கு 4 க்கு, மார்க்கு 1 க்கு வராகன் 15 வீதம் கிரயம் ... | 60 | 0 |
| சகலாத்து கட்டு 1 க்கு சிப்பம் 10 க்கு கெசம் 157 க்கு வீதம் கிரயம் ... | 235 | 12 |
| இரண்டு குண்டு ஓடுகிற துப்பாக்கி 1 க்கு | 20 | 0 |
| ஆக வெகுமானம் கிரயம் கூடினது | 2104 | 0 |

**1745 ம் ௵ செப்தம்பர் ௴ 14 உக்கு புரட்டாசி ௴ 2 உ**

சம்பத்ராயர் அவர்களுக்கு வெகுமானம் கொடுத்த தினுசுகள் சகலமும் கிரயம் கூடின வெகுமான தினுசு கிரயம்... வராகன்... ......300......0 .

1745 ௵ செப்தம்பர் ௴ 28 உக்கு குரோதன ௵ புரட்டாசி ௴ 16 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே (ா) துரையவர்கள் மூசே துய்ப்ளெய்க்சு அவர்கள் நம்மை அழைத்துச் சொன்ன வார்த்தை என்னவென்றால், காரைக்காலிலேயிருந்து பிரகாசமுதலியார் ஒரு பெத்திசியோம் எழுதி அனுப்பினார் என்றும், அந்த பெத்திசியோமிலே எழுதியிருக்கிற வயணமென்னவென்றால், புது கிராமத்துக்குச் செலவிட்ட 1700 வராகனுக்கு மூசே பெபுரியேர் நாளையிலே எழுநூறு வராகன் சென்றது என்றும் இன்னும் ஆயிரம் வராகன் செல்லவேணும் என்றும் எழுதிவந்த கடுதாசியை நமக்குக் காண்பித்து அந்தக் கடுதாசியை நம்முடைய கையிலே கொடுத்து ரெப்போஸத்துபண்ணிக்கொண்டு வரச்சொன்னார்.

1745 ௵ செப்தம்பர் ௴ 29 உ-க்கு குரோதன ௵ புரட்டாசி ௴ 17 உ புதவார நாள்

காலமே நான் (ா) துரையவர்களிடம் போனவிடத்திலே அவர்கள் சொன்ன சேதி என்னவென்றால், இன்றையதினம் காரைக்காலிலேயிருந்து ஒரு கடுதாசி வந்தது. அந்தக் கடுதாசியிலே எழுதியிருக்கிற வயணமென்னவென்றால் பிரகாசமுதலிக்கும், திருவேங்கடப்பிள்ளைக்கும் ராசியாய்விட்டதென்று ஒரு உடன்படிக்கைக் கடுதாசி எழுதிவந்ததென்று அந்தக் கடுதாசியை நமக்குக் காண்பித்தார்கள் அதற்கு நாம் சொன்ன உத்தரவு முன்னாலே ஒரு தரம் உங்களுடனே நான் எச்சரித்திருந்தேன். அதென்னவென்றால், மூசே பெபுரியேர் நாளையிலே ஆயிரத்தி எழுநூறு வராகனும் செலுத்திப்போட்டோமென்று திருவேங்கடப்பிள்ளை எனக்கு எழுதியனுப்பிவைத்தார் என்று முன்னாலே சொல்லியிருந்தேன். அது என்ன சம்மதியோ இப்போது என்னமாய்த் தீர்ந்ததோ தெரியாதென்று சொன்னேன். அதற்கு, துரையவர்களிருந்துகொண்டு இபோது நடந்த சேதிக்கு, திருவேங்கடம் உமக்கும் எழுதியனுப்பிவைக்கவில்லையாவென்று கேட்டார்கள். இப்போது எழுதிவரவில்லை என்று சொன்னேன்,

**1745ஹு ஒக்தோபர்மீ 16 உக்கு குரோதனஹு அற்பிசிமீ 3 உ** சனிவார நாள்

காலமே எட்டு மணிக்கு, சம்பாக்கோவிலிலே நடந்த அதிசயமென்னவென்றால், காரைக்கால் பாதிரியாரிடத்துக்கு வந்தவர் யோசனைபண்ணி, கோவிலுக்குள்ளே வடவண்டை பக்கத்திலே குறுக்கே சுவர்வைத்து அந்தச் சுவருக்கு இப்புறம் பறையர் வந்து பூசை கேட்கவும், அப்புறத்திலே கிறிஸ்துவர், சட்டைக்காரர், வெள்ளைக்காரர் எல்லாரும் ஒருமிக்க வந்திருந்து பூசை கேட்கவும் இப்படியாக முன்னாலே தமிழ்க் கிறிஸ்துவர் இந்தப்படி ஒரு அத்துபண்ணி நாளது வரைக்கும் அந்தப்படிக்கு நடந்துவந்ததைக் காரைக்கால் பாதிரியார் இவ்விடத்திலே யிருக்கப்பட்ட சிஷ்யாக்கள் பண்ணிப்பறைச்சேரிப் பறையர், பெரிய பறைச்சேரிப் பறையர், சுடுகாட்டுப் பறைச்சேரிப் பறையர், உழந்தைப் பறைச்சேரிப் பறையர், பின்னையுமிருக்கப்பட்ட சிஷ்யாக்களாகிய பறையர், தோட்டிகள் அனைவரையும் எடுத்துவிட்டு அவர்களெல்லாருமாய் வந்து குருவாயிருக்கப்பட்ட பெரிய சுவாமியார் சிரேஷ்டருடனே சொல்லிக்கொண்டதென்னவென்றால், உங்களுக்குச் சிஷ்யாக்கள் என்றால் எல்லாரையும் ஒரு கண்ணினாலே பார்க்கவேணும் நாங்கள் வந்து சுவாமியினிடத்திலே சகல பணிவிடை ஊழியமும் செய்யத்தக்கதாகச் சுவாமியாரவர்கள் கிருபைபண்ணியிருக்க, தமிழ்க் கிறிஸ்துவர் எங்களைப் புறம்பாய்த் தள்ளிவைத்ததாகவும், நீங்கள் அதற்கு உத்தாரங் கொடுத்துக்கொண்டு பாரபக்ஷமாய்எங்களைப் புறம்புபண்ணக் காரியமென்னவென்கிறதாய் கும்பல்கூடிப்பேசுகிறவிடத்திலே பாதிரியார் சிரேஷ்டரவர்களும் நியாயமென்றுதானே ஒத்துக்கொண்டு, அந்நேரமே அந்தக் குறுக்குச் சுவரை இடித்துப் போட்டு எல்லாரும் நமக்குப் பிள்ளைகள்தான் நீங்கள் சம்மதியானபடிக்குக் கூட வந்திருந்து பூசை கேட்கலாமென்று சொல்லி அவர்களுக்கு ஆசீர்வாதம் பண்ணிப் போகச்சொன்னார்கள். இற்றை நாள் சாயங்காலம் கிறிஸ்துவர் அவர்கள் வீட்டுப் பெண்டுகள் கூட பூசை கேட்கப் போனவிடத்திலே இன்றைய தினம் பறையர், சட்டைக்காரர், வெள்ளைக்காரர், தமிழர் அனைவரும் கூடத்தானேயிருந்து பூசைகேட்கிறவிடத்திலே கனகராயமுதலியார் உடன்பிறந்தான் குமாரன் ஆசாரப்பமுதலியார் பெண்சாதி செல்வத்துடனே இருக்கிறபடியினாலே அந்தப் பெண் அவர்கள் சாதியிலே இடவேண்டிய உடமையெல்லாம் தரித்துக்கொண்டு பரிமள கெந்த சுகந்தத்துடனே துலாம்பரமாயிருக்கப்பட்ட சல்லாப் புடவையைக் கட்டிக்கொண்டு; சுவாமிக்கு அடுத்தாற்போலே யிருக்கப்பட்ட சிரேஷ்டராயிருக்கிற பாதிரியாரண்டையிலே போய்முட்டிக்காலின்பேரிலே

யிருந்துகொண்டு, தேகத்தியானமாய்ப் பூசை கேட்கிறவிடத்திலே அந்தச் சுகந்த பரிமள சுகந்தத்தினுடைய வாசனை பாதிரியார் மேலே பட்டவுடனே அவர் பூசை சொல்லுகிறதை விட்டுவிட்டு மூக்கைப் பிடித்துக்கொண்டு கையிலேயிருக்கிற பிரம்பினாலே கொண்டையிலே குத்தி, நீ கலியாணக்காரி அல்லவா, நீ தேவடியாளா, உன்னுடைய புருஷனுக்கு வெட்கமில்லையா. சரீரம், மார்பு, ரோமத்துவாரமெல்லாம் தெரியத்தக்கதாகச் சல்லாப்புடவையைக் கட்டிக்கொண்டு கோவிலுக்கு வருவார்களா புண்ணியவதி. நீ பூசை செய்தது போதும். எழுந்திருந்து வீட்டுக்குப் போ.—35

1745 ஞ ஒக்தோபர் மீ 16 உ க்கு அற்பிசி மீ 3 உ க்கு சனிவாரம் நாள்

சம்பாக்கோவிலிலே நடந்த அதிசயம் கடுதாசியிலே எழுதப்பட்டதுபோக மற்றது இந்தக் கடுதாசியிலே எழுதின வயணம். . .........என்கிறதாகக் கோபித்துக்கொண்டு போகச் சொல்லிவிட்டார் அதின் பேரிலே கிறிஸ்துவர் எல்லாரையும் அழைத்து இனிமேல் பெண்டுகள் ஒருத்தரும் மெல்லீசுப் புடவை கட்டத்தேவையில்லை என்றும், உடமைகள் தமிழரைப் போலே இடப்போகாதென்றும், எப்போதும் போலே கொண்டை முடிக்கப்போகாதென்றும், சட்டைக்காரிச்சிகள் போலே கொண்டை முடிக்கச்சொல்லியும், வாசனைபரிமளத் திரவியம் பூசப்போகாதென்றும் இந்தப்படிக்குத் திட்டப்படுத்தி நடந்துகொள்ளச் சொல்லி, பாதிரியார் சொன்னார். அதின்பேரிலே கிறிஸ்துவர் எல்லாரும் கும்பல் கூடிக்கொண்டு கோவிலுக்குப் போய் பாதிரியாருடனே தர்க்கித்துப் பேசுகிற விடத்திலே கெவுனி வாசல் முதலிலிருந்துகொண்டு எப்போதும் நடந்தபடி நடக்கிறதே அல்லாமல் நூதனமாய் நீங்கள் இப்படிச் சொன்னால் அது எங்களவருக் கொருத்தருக்கும் சம்மதிப்படவில்லை என்று எதிர்த்துச் சொன்னார். நீங்கள் எங்களுடனே எதிர்த்துப் பேசலாமா என்று பிடித்துத்தள்ளவும் அவர்போய் பாதிரியார்சட்டையைப் பிடித்திழுத்துவிஷங்கள்ஏறக்குறையப் பேசி, இனிமேல் நாங்கள் உங்களுடைய கோவிலுக்கு வருகிறதில்லை என்று சொல்லிவிட்டார்கள். இப்புறம் வந்து எல்லாரும் கும்பலாய்க் கூடிக்கொண்டு கனகராய முதலியாருடனே சொல்லிக்கொண்டார்கள். அதின்பேரிலே அவர் தெரியச் சொல்லி எல்லாரையும் அமர்த்தி, பாதிரியாரிடம் போய்க் கண்டு பேசி தெரியப்படச் சொல்லி, நல்லது எப்போதும் போலேதானே அவர்களுக்குச் சம்மதியானதுக்கு இருக்கச் சொல்லி உத்தாரங் கொடுத்துப் போகச் சொல்லச்சொல்லி

விட்டுப் பாதிரிகள் போய் (ா) துரையவர்களுடனே சொல்லிக் கொண்டதென்னவென்றால், கிறிஸ்துவர்கள், நாங்கள் சொன்னபடி கேளாமல் அத்துமீறி சரிப்போனபடியினாலெல்லாம் பேசி கும்பலாகக் கூடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களைத் தாக்கீது பண்ணிக் கோவிலுக்கு வரத்தக்கதாகச் செய்ய வேணும் என்று சொல்லிக்கொண்டதின்பேரில் (ா) துரையவர்கள், தளவாய் கிரிமோசி பண்டிதரை அழைத்து, கிறிஸ்துவர் யாதாமொருத்தராகிலும் நாலு பேராய்க் கூடிப் பேசிக் கொண்டிருக்கிறது கண்டால் பிடித்துக்கொண்டு போய்க் காவலிலே வைக்கச் சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அந்த மட்டிலே கும்பல் கூடாமல் அவரவர் இதைத் தனித்தேயிருந்தார்கள். *

1745 ஹு ஒக்தோபர் மீ 17 உக்கு அற்பிசி மீ 4 உ

சிறிது பேர் கோவிலுக்குப் போனார்கள். பறையர் வந்திருக்கிறதற்குக் குறுக்கே நாற்காலியை மறைத்து வைத்துப் பிரித்து அடைத்து வைத்தார்கள். பின் என்னமாய் நடக்குமோ தெரியாது.

1745 ஹு ஒக்தோபர் மீ 18 உ க்கு குரோதன ஹு அற்பிசி மீ 5 உ திங்கட்கிழமை நாள்

மத்தியானத்துக்குமேல் மூன்று மணிக்கு (ா) துரையவர்களிருந்துகொண்டு கணக்கு ரங்கப்பிள்ளையுடனே சொல்லி, காரைக்கால் திருவேங்கடம் பிறகாலே வீராசெட்டி என்கிறவன் வந்திருக்கிறானும். அவனை இரண்டு சேவகரை அனுப்பிப் பிடித்துக்கொண்டு வரச்சொல் என்று உத்தரவு கொடுத்தார்கள். அந்தப்படியே அவர் இரண்டுபேர் சேவகரை அனுப்பினார். அவர்கள் போய் அந்த வீராசெட்டி என்கிறவனைப் பிடித்துக்கொண்டு வந்து முன்னே விட்டார்கள். அவனைக் கண்டவுடனே கொண்டுபோய்க் கோட்டையிலே மேலண்டை வாசலிலே இருக்கிற கசெத்திலே கொண்டுபோய்ப் போடச் சொல்லி உத்தாரங்கொடுத்தார்கள். இவனை இன்ன நிமித்தியம் கசெத்திலே போட்டார்களென்று ஒன்றும் வெளியாகவில்லை. எல்லாருக்கும் குழப்பமாய்த்தானேயிருந்தது.

1745 ஹு ஒக்தோபர் மீ 19 உ க்கு குரோதன ஹு அற்பிசி மீ 6 உ செவ்வாய்க்கிழமை நாள்

காலமே காரைக்கால் வந்தவாசி திருவேங்கடப்பிள்ளையவர்களுடனே கண்டு பேசிக்கொண்டிருந்தபடியே கூடத்தானே வந்தார். வந்தவரை இவ்விட்டத்தில்தானே சாப்பிடச்

* கிழிந்திருக்கிறது.

சொன்னார்கள். அப்படி இருக்கச்சே, நேற்றியதினம் கோட்டைக்கிடங்கிலே வைத்த வீராசெட்டியை இரண்டு மணிக்கு (ா) துரையவர்கள் வீட்டுக்கு அழைப்பித்து அவனைக்கேட்ட வயணமென்னவென்றால், திருச்சிராப்பள்ளி கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதி கெட்டுப்போய் முன்னாலே காரைக்காலுக்கு வந்திருந்தவள் அவ்விடத்திலே நாலுமாதமிருந்துவிட்டு இவ்விடத்திற்கு வந்திருந்தவள் தனக்கேதோ திருவேங்கடம் ஆயிரம்வராகன் கொடுக்கவேணுமென்று சொல்லுகிறாள். அது நீ அறிவாயா என்று கேட்டவிடத்திலே, நானொன்றும் அறியேன் என்று சொன்னானும். அதின்பேரிலே அவனைக் கட்டிவைத்து அடித்தார்கள். அடியின்பேரில் மெய்தான் என்று சொன்னானும். அந்தக் கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதி சொன்னதென்னவென்றால், தன்னை, திருவேங்கடம்பிள்ளை ஆயிரம் வராகன் கடனாய்க் கேட்டதாகவும் நல்லது தருகிறேனென்று சொன்னதின்பேரிலே அந்த வீராசெட்டி கையிலே ஒரு சீட்டெழுதிக்கொடுத்து அனுப்பிவித்தார். அந்தச் சீட்டைக் கட்டிக்கொண்டு அவன் கையிலே ஆயிரம் வராகனும் கொடுத்தனுப்பினேனென்றும், அவனைக் கண்டித்துக் கேட்டால் எல்லாம் வெளியாய்ச் சொல்லுவானென்றும், அவன் சீட்டு கொண்டுவந்து கொடுத்தபடியினாலே சீட்டிலே போட்டிருக்கிற கையெழுத்து திருவேங்கடம்பிள்ளை போட்டாரோ, அல்லவென்று பின்னையும் அவரை எழுதச் சொன்னாரோ நானறியேனென்றதாக ஒரு பெத்திசியோமும் எழுதி அந்தச் சீட்டையும் (ா) துரையவர்கள் கையிலே கொடுத்தாள். அதை அவர்கள் வாங்கிப் பார்த்து திருவேங்கடம்பிள்ளையை அழைத்து நீ ஆயிரம் வராகன் அவள் கையிலே வாங்கினாயா இல்லையா என்று கேட்டார்கள். அதற்கு அவர் சொல்லிய உத்தாரமாவது என்னவென்றால், * .................................. அந்தச் சீட்டிலே என் கையெழுத்து இருந்தாலும் அல்லவென்று அவள் கொடுத்ததற்கு ருசு முகாபளாசா ரிஜிஸ்தரிலிருந்தாலும் ஒன்றுக்குப் பத்து உத்தரவாதமும் பண்ணி, தலைக்கும் அபராதமெழுதிக் கட்டுகிறேன் என்று சொல்லி, அந்தச்சீட்டை வெளியிலே போடச்சொல்லிப் பேசினார். அதையென்ன வெளியிலே போடுகிறது! அதெல்லாம் நான் விசாரித்தேன். அந்த வராகனை எட்டு நாளையிலே கொடுத்துவிடென்கிறதாய் நாலுபேர் கும்பினீர் சேவகரைக்கூடவிட்டு வராகனை வாங்கிக்கொண்டு வரச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள்.

இந்தப்படிக்கு எட்டுநாளை தவணையும் ஆன பிறகு புதன் கிழமை நாள் முதற்கொண்டு சாப்பிடவிடாமலும் பாக்குப்

* கிழிந்திருக்கிறது.

போட்டுக்கொள்ளவிடாமலும் தினக்கண்டம்பண்ணி வெயிலிலேவைத்தும் இப்படியாக பத்துநாள் வைத்தும் அரிக்கிதை பண்ணினூர்கள். அதுகளெல்லாவற்றிற்கும் அசையாமலிந்து கொண்டு நான் பரிச்சேதம் வாங்கினதில்லே. நீங்கள் செய்கிறதைச் செய்யுங்களென்று ஒரு பேச்சாய்தானே சொல்லிக்கொண்டு, பட்டினியே கிடந்தான். அப்படியிருக்கையில் அவர்கள் ஒரு பெத்திசியோ மெழுதி (ா) துரையவர்கள் கையிலே கொடுத்தார்கள். அந்தப் பெத்திசியோமை வாங்கிவைத்துக் கொண்டிருந்து மறுநாளைக்கு அவர்கள் வீட்டுக்குக் கொடுத்தனுப்பிவிட்டார். அதின்பேரிலே அவர்கள் பெண்டுகள் பெரியாளனைவரும் கூவிக்கொண்டு போய் துரையவர்கள் காலிலே விழுந்து அழுதார்கள். அந்தமட்டிலே கோபித்துக் கொண்டு அவர்களை வெளியே தள்ளிவிடச்சொல்லி, சேருவைக்காரனையும் பின்னையும் இரண்டு சேவகரையும் திருவேங்கடத்தண்டைக்கு அனுப்பிவித்து அவனை அழைத்துக்கொண்டுபோய் கோட்டையிலே மேலண்டை வாசற்படியண்டை தென்னண்டைதிக்கிலே போடச்சொல்லி உத்தாரங்கொடுத்தார்கள்.

*1745* ஞு நவம்பர் மீ 6 உக்கு குரோதன ஞு அற்பிசி மீ 25 உ சனிவாரம் நாள்

மத்தியானம் பனிரெண்டு மணிக்கு திருவேங்கடத்தைக் கொண்டு போய்க் கோட்டைக் கிடங்கிலே போட்டு மூடினூர்கள்.

*1745* ஞு நவம்பர் மீ 4 உக்கு குரோதன ஞு அற்பிசி மீ 21 உ வியாழக்கிழமை நாள்

அஸ்தமித்தவுடனே துவக்கி, பெருங்காற்றடித்தது. அந்தக்காற்று வியாழக்கிழமை நாள் ராத்திரி முப்பது நாழிகையும் அடித்தது. ஆனூல், இந்தக் காற்றினுடைய பிரதாபம் இன்னமட்டென்று ஒருவிதமாய்ச் சொல்லக்கூடாது. அதெப்படியென்றுல், இந்த முப்பது நாழிகைக்குள்ளே பட்டணத்திலே ஒரு மரமாகிலும் தப்பவிடாமல் ஊரிலே உண்டான மரங்களெல்லாம் படுகாடாய் விழுந்துபோனதும், சிறிது மரங்களை முறுக்கி முறித்துப்போட்டதும், அதுவுமல்லாமல் பட்டணங்களுக்குள்ளே தோட்டந் துரவுகள், தென்னை மரம், மாமரங்கள் எப்பேர்ப்பட்ட மரமும் ஒன்றுகிலும் தப்பாமல் படுகாடாய் விழுந்து போச்சுது. அதினூலே வெகுபேர் கெட்டுப்போனூர்கள். இதல்லாமல் உப்பாற்றிலே அவரவருக்கு மனைவிட்டு, அவரவர்கள் கல்வீடும் கூரைவீடுமாய் அவரவர் சக்திக்கான சரமாய்க் கட்டிக்கொண்டு குடியிருந்தார்கள். அப்படியிருக்கச்சே இந்தப் பெருங்காற்றிலே மேல்வெள்ளம்

வந்துஉப்பாற்றுத் தண்ணீர் வெளியே போகத்தக்கதாய்க்கட்டி யிருந்த மதகு மூடியிருக்கச்சே அந்த மதகைப் பிடுங்கிக்கொண்டு அந்த வெள்ளம் ஓடிற்று. அந்த வெள்ளத்திலே உப்பாற்றிலே வந்து விழுந்து உப்பாற்றிலே கட்டியிருந்த வீடுகள் பேரிலே ஒரு முழ வெள்ளம் வந்து அங்கே கட்டியிருந்த மூன்று தெருவும் படுகாடாய் விழுந்துபோய், வீடுகள் வெள்ளத்தில் முழுகிப்போய், அந்த வெள்ளத்திலே வீடுகளை அடித்துக்கொண்டு போனதும், மாடுகள் கன்றுகள் செத்ததும், மனுஷர் செத்ததும் இப்படியாக வெகு சேதப்பட்டு அந்த வெள்ளம் இப்படி பட்டணத்து மேலே திரும்பினபடியினாலே பள்ளத்துத் தெருக்களிலேயெல்லாம் அரை மட்டும் தண்ணியும் பெருந்துடை மட்டும் தண்ணியும் நின்றபடியினாலே பள்ளத்தாக்கிலே யிருந்த வீடுகளெல்லாம் அநேகமாய் விழுந்து போச்சுது. இதல்லாமல் இந்தக் காற்றிலே காக்காய், குருவிகள், பின்னையு மிருக்கப்பட்ட பட்சிகள் அநேகமாய் தெருவுக்குத் தெரு செத்து மிதந்தது மட்டுமிதமில்லை. இதல்லாமல் பட்டணத்துக்கு வெளியே யிருக்கப்பட்ட தோட்டந் துரவுகள் சகலமும் அடியோடே விழுந்துபோய்விட்டது. வீடுவாசல்களும் அநேகஞ் சேதம். இதல்லாமல் அவரவரது வெளியிலே யிருக்கப்பட்ட ஆடுமாடுகள் ஒன்றாகிலும் தப்பிப் பிழைக்கிறதற்கிடமில்லாமல் தரந்தரமாய் உளைந்துபோச்சுது. அந்த செத்த ஆடுகளைப் பட்டணத்துக்குள்ளே அவரவர் வாங்கிவந்து வீடுகளிலே காயப்போட்டபடியினாலே அதுகள் காய்கிறதற்கிடமில்லாமல் மழையிலே நனைந்து பட்டணமெல்லாம் தெருவுக்குத் தெரு பிணநாற்றமாய் இரண்டு மூன்றுநாள் மட்டுக்கும் வீதியிலே புறப்படக்கூடாமல் இப்படி அவஸ்தைப்பட்டுப்போச்சுது ஆனால், திருவுளஎத்தனத்தினாலே பொழுதுவிடிந்தவுடனே காற்றும் மழையும் நின்றுபோனபடியினாலே ஒரு சாமத்துக்குள்ளே எல்லா தண்ணீரும் வாங்கிப்போய் அவரவர் வீடு வாசலும் தப்பித்ததல்லாமல் மறுநாளைக்கும் அப்படி காற்று அடித்ததால் பட்டணத்திலே ஒரு வீடாகிலும் தப்பமாட்டாது.* ................... சுவாமி காத்தார்.

*1745*ஆம் நவம்பர்மீ *10* உ க்குரோதனஆம் அற்பிசிமீ *29* உ புதவார நாள்

காலமே ஏழு மணிக்கு (ா) துரையவர்கள் மூசே துப்ளேய்க்கு அவர்கள் மொறட்டாண்டிசாவடிக்குப் போனார்கள். அவரேது இப்போது போனதென்றால், இந்த மாரிக்காலத்திலே இவ்விடத்திலேயிருந்தால் சரீரம் ரொம்ப உபத்திரமா

* கடைசி வரி கிழிந்திருக்கிறது.

யிருக்கிறதென்கிறதினாலேயும் அவ்விடத்திலேயானால் ஆரோக்கியமா யிருக்குமென்கிறதினாலேயும் வருஷா வருஷம் அவ்விடத்துக்குப் போயிருக்கிற வாடிக்கையானபடியினாலேயும் இந்தவிசையும் அவ்விடத்துக்குப் போனார்கள். ஆனால், மறுபடியும் புதுச்சேரிக்கு வருகிறதற்கு, சனவரி பண்டிகைமட்டுக்கும் செல்லுமென்று சொன்னார்கள்.

1745ஹு நவம்பர்மீ 23உ குரோதனஹு கார்த்திகைமீ 12உ செவ்வாய்க்கிழமை நாள்

ராத்திரி ஒரு சாமமட்டும் காற்றடித்தது. ஆனால், முன் அற்பிசிமீ 21உ அடித்த காற்றிலே நாற்பதிலே ஒரு பங்கு காணும். மறுபடியுமிப்போ எதிர்காற்று அடிக்கக் காரணமேதென்றால் ........................................................
அமாவாசை கேட்டை நக்ஷத்திரம் செவ்வாய்க்கிழமையும் ஒன்றாய்க்கூடினபடியினாலே காற்றுக்கு யோகமிருக்குமென்று சொன்னார்கள். அந்தப்படிக்கு சாஸ்திரம் தப்பாமல் சாடையாய் அடித்துவிட்டது. முந்தின காற்று அடிக்கிறபோது ஒருத்தராகிலும் அறிந்து சொன்னதில்லை. இந்த விசை சனங்களெல்லாரும் பயந்திருந்தார்கள். சுவாமி தயவுபண்ணினார்.

1745ஹு நவம்பர் மீ 28உக்கு குரோதன ஹு கார்த்திகை மீ 16 உ சனிவாரம்நாள்

காலமே ஏழு மணிக்குத் துவக்கி மறுநாள் ஆதிவாரம் பொழுது விடிந்து ஒன்பது மணி மட்டுக்கும் பெருங்காற்றடித்தது. ஆனால், இந்தக் காற்று மிக்க பலமாய்த்தானே அடித்தது ஆனால் முன் அற்பிசி மீ 21உ அடித்த காற்றிலே முக்கால்வாசி மட்டென்று சொல்லலாம். அது அரைவாசி உண்டென்று சகல சனருக்கும் தோணப்பட்டது என்னத்தினாலே என்றால், முந்தின காற்றுக்குப் பட்டணத்திலே உள்ள மரங்கள் தோட்டந்துரவிலும் அகப்பட்ட மாவடை மரவடைகள் சகலமும் படு சூரணமாய்ப் போச்சுது. ஆனபடியினாலே இந்த விசை அடித்த காற்று தெரியாமலிருந்தது. ஆகிலும் * ........................

1745 ஹு நவம்பர் மீ 30க்கு குரோதன ஹு கார்த்திகை மீ 19உ செவ்வாய்க்கிழமை நாள்

இந்தப்பட்டணத்திலே நடந்த அதிசய மென்னவென்றால், ஒழுகரைக்குக் கிழண்டையிலே ரெட்டியார்பாளையத்திலே கனகராயமுதலியார் ஒரு பாதிரிகோவில் கட்டிவைத்து அந்தக் கோவிலிலே சிலைகள் ஸ்தாபிதம்பண்ணினார்கள் இது நிமித்தியம் பட்டணத்திலே உண்டாகிய பல பட்டடை பிராமணர், வெள்ளாழர், கோமுட்டிகள், செட்டி வர்த்தகர், கம்மாளர், நாயக்கர், கோளர், வாணியர், பின்னும் பல சாதிகளாயிருக்கப்பட்ட சகலமான பேருக்கும் விருந்துகள் சொல்லி, இதல்லா

* 1½ வரிகள் கிழிந்திருக்கிறது.

மல் வெள்ளைக்காரர், கிறிஸ்துவர் உண்டான பேருக்கெல்லா. விருந்துகள் சொல்லிச் சகலமான பேருக்கும் ஒழுகரையிலே விருந்துபண்ணிவைத்தார்கள் விருந்துபண்ணின சம்பிரம மெப்படியென்றால், சத்திரங்களிலே பிராமணரைவிட்டுச் சமையல் பண்ணுவித்தும் தோட்டங்களிலே பிராமணரை விட்டுச் சமயல் பண்ணுவித்தும், பின்னையுமிருக்கப்பட்ட வெள்ளாழர், அகம்படையர் வீட்டுகளிலேயும் சாப்பாடுபண்ணுவித்து, அவரவருக்குத் திட்டமாய்த்தானே சாப்பாடு காரியமெல்லாம் விசாரித்து வெள்ளைக்காரருக்கெல்லா மிவ்விடத்திலே யிருந்து தீனிகள் சமைத்துக்கொண்டுபோய் வெள்ளைக்காரருக்கெல்லாம் மேசை போடுவித்துத் திட்டமாய்த்தானே விசாரித்தார்கள். அந்த விருந்துக்கு மொறட்டாண்டிசாவடியிலே யிருந்து (ா) துரையவர்கள் மூசே துப்ளேய்க்சு, அவர் பெண்சாதி, மற்றுமுள்ள ஆலோசனைக்காரர் எல்லாருமாய்க் கூடவந்திருந்து விருந்துகள் சாப்பிட்டுச் சாயங்காலம் மட்டுக்கும் இருந்து சாயங்காலம் ஐந்து மணிக்கு, துரையவர்கள் புறப்பட்டு மறுபடியும் மொறட்டாண்டிசாவடிக்குப் போய்விட்டார்கள். இவ்விடத்திலே யிருந்துபோன சனங்களும் எல்லாரும் சாப்பிட்டுவிட்டுச் சாயங்காலம் புறப்பட்டு வந்துவிட்டார்கள். ஆனால், அவர் எத்தனம்பண்ணின காரியங்களிலேயும் சம்பாதித்த சாமக்கிரிகைகளிலேயும் தாட்சியில்லை. என்ன சம்பாதித்தும் என்ன செலவு பண்ணியும் சோபிதமாய், களையாய், சிறப்பாயிருக்கவில்லை அதேனென்றால், அவரவர் மார்க்கத்துக்கடுத்த நியாயங்களை நடப்பித்தால் அந்தந்த மார்க்கத்தின்படிக்கு அது இயற்கையாய்க் காணும். ஒரு மார்க்கத்துக்குள்ளே யிருந்துகொண்டு தமிழ் மார்க்கத்தின் படியே நடப்பிக்கவேணுமென்கிறதாய்த் தமிழ்மார்க்கத்திலே யிருக்கப்பட்ட பேரையெல்லாம் அழைப்பித்து இப்படி நடப்பித்தபடியினாலே எகத்தாளிக்கிடமாகிக் கண்டவன் கண்டபடிக்கெல்லாம் சொல்லிக்கொண்டார்கள். அவர்கள் கோவிலுக்கடுத்த நியாயமும் அவர்கள் வேதத்துக்கடுத்த மார்க்கமும் நடப்பிக்கவேணுமென்றால் வெள்ளைக்காரரும், கிறிஸ்துவரும், பறையரும் அந்த வேதத்திற்கடுத்தவர்கள்மாத்திரம் போய்ச் சாப்பிடவேண்டியது. அவருடைய பிரபலத்துக்கும், பிரதிஷ்டைக்கும் அப்படி நடப்பித்தாலும் அதினாலேயும் ஈனமாய்த்தானே சொல்லிக்கொள்ளுவார்கள். ஆனபடியினாலே, எவனெவன் சாதிக்கு எப்படியோ அந்த நியாயத்தின்படிக்கு எத்தனை பிரபலமாய்ச் செய்தாலும் * ... ... சொல்லிக்கொள்ளுவார்கள். ஒரு குலத்திலே பிறந்து மறுவேதத்தை அடுத்த ... ... ... ...மார்க்கத்தை ஆஸ்ரித்த பேருக்கெல்லாம் இந்தப்படிக்கு ... ... ... ... ...

* ஒரு வரி கிழிந்திருக்கிறது

**இந்தச் சாதகமல்ல. சர்வதாரி௵ பங்குனி ௴ 21 ௨ சனிவாரம் சாதகம் அப்பாலே எழுதியிருக்கிறது**

| | | | |
|---|---|---|---|
| சுக்ரன் புதன் சூரியன் | | | சனி |
| ராகு செவ்வாய் | ஆனந்த ரங்கப்பிள்ளை அவர்கள் சாதகம் | | |
| | | | கேது |
| குளிகன் | ராசா | | ல |

விரோதி ௵ பங்குனி ௴ 20 ௨ சனிக்கிழமை சதுர்த்தசி நாழிகை......, உத்திரட்டாதி நாழிகை 55, பிராமநாமயோகம் நாழிகை 41, சதுஷ்பர கர்ணம் நாழிகை 6, உதித்து 15 நாழிகைக்கு மேல் தியாச்சியம் இந்தச் சுபதினத்தில் ராத்திரி அரை நாழிகைக்குள்ளாக, பிரம்பூர் ஆனந்த ரங்கப்பிள்ளையவர்கள் செனனம். சுபமஸ்து.

லக்கினம் கன்னி. அதில் சென்ற நாழிகை 3½.

தற்கால கிரகநிலை

ரேவதி 1 ல் சூரியன்
உத்திரட்டாதி 3 ல் சந்திரன்
பூரட்டாதி 2 ல் செவ்வாய்
பூரட்டாதி 4 ல் புதன்
அநுஷம் 1 ல் ராசா
அசுபதி 4 ல் சுக்கிரன்
திருவாதிரை 4 ல் சனி
சதயம் 2 ல் ராகு
மகம் 4 ல் கேது
தனுசில் குளிகன்

உத்திரட்டாதியில் நின்ற நாழிகை 24½ க்குச் சனிமகா திசையில் நின்ற ௵ 7, மாதம் 9, நாள் 3. சுபமஸ்து.

முன் பிள்ளையவர்கள் எழுதிவைத்தபடிக்கு அசுவனி முதல் காலில் சுக்கிரன்.

| | | | |
|---|---|---|---|
| | | கேது | |
| ராசா | தம்பி திருவேங்கடம் பிள்ளை அவர்கள் | | குளிகன் |
| செவ்வாய் | | | சனி |
| சூரியன் சந்திரன் புதன் | சுக்கிரன் ராகு | ல | |

விசய ளு மார்கழி மீ 7 உ திங்கட்கிழமை பிரதமை நாழிகை 34, மூலம் நாழிகை 9, விர்த்திநாம யோகம் நாழிகை 34, கவுல் வாகரணம் நா — 6, உதித்து 5 நாழிகைக்கு மேலும் ராத்திரி 3 நாழிகைக்கு மேலும் தியாச்சியம் இந்தச் சுப தினத்தில் ராத்திரி 25 நாழிகைக்கு, திருவேங்கடபிள்ளை செனனம்.

லக்கினம் விருச்சிகம். இதில் சென்ற நாழிகை $\frac{1}{4}$, மூலம் 3-ல் சூரியன் துலாம் என்று ஆதியில் எழுதியிருக்கிறது.

பூராடம் 4 ல் சந்திரன்
திருவோணம் 1 ல் செவ்வாய்
பூராடம் 2 ல் புதன்
அநுஷம் 2 ல் சுக்கிரன்
சதயம் 4 ல் ராசா
பூரம் 3 ல் சனி
கேட்டை 4 ல் ராகு
மிருகசீரிஷம் 2 ல் கேது
கடகத்தில் குளிகன்

| | | | |
|---|---|---|---|
| | சுக்கிரன் | சனி<br>செவ்வாய் | |
| சூரியன்<br>புதன்<br>ராசா<br>கேது | சிரஞ்சீவி அப்பாவு | | |
| ல<br>சந்திரன் | | | ராகு |
| | | | |

நள வருஷம் மாசி 19௳ செவ்வாய்க்கிழமை துவாதசி $23\frac{1}{2}$ நாழிகை உத்திராடம் நாழிகை $12\frac{3}{4}$ பரிகனுமயோகம் 21, துயிதுலாகரணம் $23\frac{3}{4}$, உதித்து 23 நாழிக்குமேல் தியாச்சியம் இந்த சுபதினத்தில் ராத்திரி நாழிகை 26 க்குமேல் மகர லக்கினத்தில் அப்பாவு செனனம்.

தற்கால கிரகநிலை

சதயம் 4 ல் சூரியன்
திருவோணம் 3 ல் சந்திரன்
கார்த்திகை 3 ல் செவ்வாய்
சதயம் 4 ல் புதன்
சதயம் 4 ல் ராசா
அசுபதி 1 ல் சுக்கிரன்
ரோகணி 3 ல் சனி
உத்திரம் 1 ல் ராகு
பூரட்டாதி 3 ல் கேது

சந்திர மகாதிசையில் நின்ற ௵ 2, ௴ 6 சுபமஸ்து.

| | | | |
|---|---|---|---|
| சனி | | | ல<br>கேது |
| | சிரஞ்சீவி பாப்பாள் | | |
| | | | |
| சூரியன்<br>ராகு<br>புதன்<br>சுக்கிரன்<br>சந்திரன் | | செவ்வாய் | ராசா |

விரோதிகிருது ளூ மார்கழி மீ 17 உ வெள்ளிக்கிழமை சதுர்த்தசி $2\frac{3}{8}$ நாழிகை, அமாவாசை $57\frac{1}{2}$, மூலநக்ஷத்திரம் $42\frac{7}{8}$, விர்த்திமையோகம் $28\frac{1}{4}$, சதுரியாபகரணம் $2\frac{1}{8}$, திவி $3\frac{1}{2}$ க்கு மேலும், இராத்திரி 10 நாழிகைக்கு மேலும் தியாச்சியம் இந்த சுபதினத்தில் உதித்த நாழிகை $30\frac{1}{8}$ க்கு மிதுன லக்னத்தில் ஜெனனம் சிரஞ்சீவி பாப்பாள்.

தற்கால கிரகநிலை

பூராடம் 2 ல் சூரியன்
மூலம் 4 ல் சந்திரன்
சித்திரை 4 ல் செவ்வாய்
உத்திராடம் 1 ல் புதன்
அஸ்தம் 2 ல் ராசா
உத்திராடம் 1 ல் சுக்கிரன்
உத்திரட்டாதி 1 ல் சனி
மூலம் 4 ல் ராகு
திருவாதிரை 2 ல் கேது

கேதுதிசையில் நின்ற வருஷம் 1, மாதம் 5, நாள் 25.

சுபமஸ்து.

| | | | |
|---|---|---|---|
| கேது | | சனி | |
| ல | சிரஞ்சீவி பொன்னுச்சி | | |
| | | | |
| ராசா | சூரியன் சந்திரன் புதன் | சுக்கிரன் செவ்வாய் | ராகு |

ராக்ஷஸ ஞு கார்த்திகைமீ 4உ புதன்கிழமை கேட்டை நக்ஷத்திரம் நாழிகை 44. இந்த சுபதினத்தில் உதித்து 19 நாழிகைக்குமேல் ரும்ப லக்கினத்தில் சின்ன பொன்னுச்சி ஜனனம்.

தற்கால கிரகநிலை

அனுஷம் 2 ல் சூரியன்

பூராடம் 3 ல் ராசா

கேட்டை 3 ல் சந்திரன்

சுவாதி 4 ல் சுக்கிரன்

சுவாதி 1 ல் செவ்வாய்

கார்த்திகை 3 ல் சனி

அனுஷம் 3 புதன்

சித்திரை 1 ல் ராகு

ரேவதி 3 ல் கேது

புதன் தசையில் நின்ற வருஷம் 7 ம், மாதம் 1 ம், சுபமஸ்து.

அனுஷம் 3 ல் புதன் என எழுதினது தப்பிதம்

| | | | |
|---|---|---|---|
| ராசா | | | சனி |
| கேது | சிரஞ்சீவி நன்ஞச்சி | | சந்திரன் |
| சூரியன்<br>புதன்<br>சுக்கிரன்<br>செவ்வாய் | | | ராகு |
| | | ல | |

பிங்கள ஞு தை மீ 25உ திங்கட்கிழமை சதுர்த்தசி $44\frac{1}{4}$ நாழிகை, பூசம் $58\frac{3}{4}$ ஆயிராமநாமயோகம் $48\frac{1}{2}$ கெரீசவாகரணம் $12\frac{1}{2}$ உதித்து $17\frac{1}{2}$ நாழிகைக்குமேல் தியாச்சியம் இந்த சுபதினத்தில் ராத்திரி $13\frac{1}{2}$ நாழிகைக்குமேல் துலா லக்கினத்தில் நய்ஞச்சி ஜெனனம். சுபமஸ்து.

தற்கால கிரகநிலை

அவிட்டம் 1 ல் சூரியன்

உத்திரட்டாதி 1 ல் ராசா

பூரம் 4 ல் சந்திரன

உத்திராடம் 2 ல் சுக்கிரன்

உத்திராடம் 2 ல் செவ்வாய்

மிருகசீரிஷம் 3 ல் சனி

அவிட்டம் 1 ல் புதன்

மகம் 4 ல் ராகு

சதயம் 2 ல் கேது

சனி தெசையில் நின்ற வருஷம் 4, மீ 9 சுபமஸ்து.

பாம்பிறகோருதஸ்காட்டிஒருதஸ் தேம்படுதினகயத்து
மீனரெட்டுமாங்கே

மலங்கனன்செங்நாகம்களீர்தோள் சேரவாரவிலங்கென்ன
வென்னரிவிஞர்

பொத்தனூர்கல்லும்புண்றபிறியாவன்றிலும்போல
நிற்றலும்நம்மைப்

பிரியல்மென்றுலாத்தப்பொற்ருடியும் போடனத்தகறக
கோடாபிஞன்

நன்னெஞ்சே நிற்றியோபோதிருபாரு—என்பது

நத்ரோத்காரி ௵ ஆனி மீ 11 ௳

காரைக்காலிலே நாம் தத்தகைவாங்கின கிராமத்திலே மூன்று கிராமம் விட்டுவிட்டு அதுக்கு பதில் ஐந்து கிருமம் நாளதுதினம் நம்மிடவர்கள் திருவேங்கடபிள்ளையும் சேஷய்யங்காரும் தோரணம் வைத்தார்கள். இந்தப் படிக்கு எழுதிவந்தது. காரைக்காலிலேயிருந்து இப்போது விட்டுவிட்ட கிராமம் குத்தாலம் மத்துகுடி கொந்தகை இந்த மூன்று கிராமமும் விட்டுவிட்டது.

துந்துபி ௵ சித்திரை மீ

இவ்விடத்து டங்காசாலையிலே சொன்ன விலை, மலாக்கா கட்டி 1-க்கு வராகன் 171½க்கு கிரயம் 8 மாற்று வராகன் 2,4.

ரவணப்பசெட்டியார் சொன்ன: விலை

மலாக்கா கட்டி 1-க்கு வ. ரூ. 270-க்கு கிரயம் பூவராகன் விலை 276.

**1745 ௵ ஜூலை மீ 1௳ க்கு குரோதன ௵ ஆனி மீ 21 ௳ வியாழக்கிழமை புஷ்ய நக்ஷத்திரம்**

இந்த நாள் சமாசாரம் என்னவென்றால், விசயரங்க சொக்கநாதநாயக்கன் என்கிறவனும் துபக்கால் இந்துபக்கால் வெங்கட்டபெருமாள் நாயக்கனும் இவர்கள் இரண்டுபேரிலே மூத்தவன் காலம்பண்ணிப்போய் இளையவன் பத் ............ சிலர் பிறகே சாத்தாருக்குப் போயிருந்தவன் பாபோசிநாயக்கன் ஐம்பதினாயிரம் வராகன் கொண்டுவந்து இந்தக் கர்நாடகத்துக்குச் சவுதாய் வாங்கவந்தவன் பிறகே வந்து அப்பால் ஆ...முதல் தேதி, 2 ந்தேதியிலே கிருஷ்ணா முதலாகிய நதிகள் சலம் வருகிறபடியினாலேயும், அந்த ராச்சியத்திலே மழை காலமானபடியினாலேயும் சவுதாய் வாங்கவந்த பாபோசிநாயக்கன் மறுபடியும் அவர்கள் ராச்சியத்திற்குப் போகையிலே இந்த துபக்கல் வெங்கட்டபெருமாள்நாயக்கன் துறையூருக்கனுப்பிவிட்டு, அவன் அப்பாலே சாகிப்போனான். அந்த வெங்கட்டபெருமாள்நாயக்கர் கோபாலசுவாமிபேருக்கு ஒரு காகிதமெழுதி ஆனந்தரங்கப்பனைக் கண்டுபேசி அவர் முகாந்திரமாய் (ஈ) பெரிய துரையவர்களைக் கண்டுபேசி, தாம் புதுச்சேரியிலே வந்து குடியாயிருக்கிறதற்கும் வந்தவிடத்திலே பின்னையொரு போராட்டங்களுண்டாயிருந்தால் அப்போது கைவிடாமற்படிக்குப் பத்திரமாய்க் கேட்டுக்கொண்டு கவுலக் காகிதமும் வாங்கிக்கொண்டு வரச்சொல்லியும் சேஷய்யனென்று ஒரு ஸ்தானாபதியையும் அனுப்பி அவரண்டையிலிருக்கிற ஊழியக்காரன் வெங்கோசி எனகிறவனும் முன்னாலே பூந்தோட்டம் போடவேண்டும் என்று வந்து காத்திருந்துபோன பாலிநாயக்கனையும் அனுப்பினார்கள். அந்தப்படிக்கே கோபாலசுவாமி முகாந்திரமாய் வந்து நம்மைக் கண்டுபேசினார்கள். நாமும் இந்தச் சேதியெல்லாம் (ஈ) பெரியதுரையவர்களுடனே சொன்னோம். அவரும் சேஷய்யரையும், பாலிநாயக்கனையும், வெங்கோசியையும் அழைத்துப்போய் ராத்திரி பத்து மணி நேரத்திற்குப் பேட்டி ஐந்து வராகனும் வைத்துப் பேட்டி வாங்கிக்கொண்டார்கள். அதின்பேரிலே அவர் கேட்கத்தக்க சங்கதியெல்லாம் கேட்டார். இவர்களும் சொல்லத்தக்க சமாசாரமெல்லாம் சொன்னார்கள். அதின் பேரிலே பட்டணத்துக்குள்ளே வந்திருக்கிறதற்குக் கவுலக் கேட்டார்கள். அவர்கள் கேட்டபடிக்குச் சுகமாய்ச்

பட்டணத்துக்குள்ளே வந்து பின்னை ஒன்றுக்கும் சிந்தை பண்ணாமல் வந்திருக்கலாம் என்றும் கவுலக்காகிதமும் பிராஞ்சில் எழுதி தம்முடைய கையெழுத்தும்போட்டு பாரசி முத்திரையும் போட்டு வந்த சேஷய்யன் முதலான பேருக்கும் கோபாலசுவாமிக்குக் கூடப் பரவசம் கொடுத்து எத்தனை நாளையிலே வருவார்களென்று கேட்டார்கள். பத்துப் பனிரெண்டு நாளையிலே வருவார்களென்று சொன்னார்கள் அந்தப்படிக்கு உங்கள் எசமானை சீக்கிரமாக அழைத்து வாருங்கள் என்று சொல்லியனுப்பிவித்தார்கள். அந்தப் படிக்கு (ா) பெரியதுரையவர்கள் கையிலே அனுப்பிவித்துக் கொண்டுவந்து நம்மையும் அனுப்பிவித்துக்கொண்டு ராத்திரிக்கு விடுதிபோய் காலமே வருகிறோம் என்று போனார்கள்.

**1745** ௵ ஜூலை ௴ *2* உக்கு குரோதன ௵ ஆனி ௴ *22* உ

இந்த நாள் காலமே மேலே எழுதப்பட்ட நாயக்கருக்கும் அவர் கையிலே யிருக்கிற கோட்டைக்காடு வேங்கடாசலய்யனுக்கும் நம்முடைய காகிதமும் ஒவ்வொருவருக்கும் நாலு வராகன் செலவுக்கும் கொடுத்தனுப்பிவித்தோம். அவர்கள் பதினைந்து நாளையில் நாயக்கரையும் அழைத்துக்கொண்டுவருகிறோம் என்று சொல்லிப்போனார்கள்

**1745** ௵ டிசெம்பர் ௴ **31**உக்கு குரோதன௵ மார்கழி௴ **20** உ வெள்ளிக்கிழமை நாள்

ராத்திரி கிரியாசி பண்டிதரும் தலையாரி சேவகருமாய்ப் போய் தேவனாம்பட்டணம் வக்கீலாய் இவ்விடத்திலே யிருந்த ஆதியப்பனையும், அவனுடன் கூடேயிருந்த குட்டை வடுகச்சேவகனையும், பின்னையும் இரண்டு துலுக்கச் சேவகரையும் ஆக நாலுபேரையும் முதலியார்பேட்டையிலே ஒரு வீட்டிலே குடியிருக்கும்போது அவன் காகிதம் எழுதி, இரண்டு பேர் துலுக்கர் சேவகர் கையிலே கொடுத்ததைப் பார்த்துக்கொண்டிருந்து பிடித்துக்கொண்டுவந்து சாவடியிலே வைத்து அதின் பிறகு அவன் எழுதின காகிதத்தைப் படித்துப் பாத்து, உடனே ஆதியப்பனை மாத்திரம் மறுநாள் ராத்திரி கோட்டை வாசலிலே மேல்புறத்திலே இருக்கிற பாதாளக் கிடங்கிலே கொண்டுபோய்க் காலிலே பெரிய மாச்சு விலங்கு போட்டு மேலே இருந்த புடவையையும் பிடுங்கிக்கொண்டு அறைஞாண்கயிற்றையும் அறுத்துப் போட்டுவைத்தார்கள்... அவனுக்கும் கும்பினியார் சோறு கொடுக்கச்சொல்லிப் பரசுராமப்பிள்ளைக்கு உத்தாரங்கொடுததார்கள். அவன், நித்தியம் தோசையும் மோரும் அனுப்புகிறார்கள். அதைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறான்.

**1746௵ பிப்ரவரி௴ 5௳க்கு குரோதன௵ தை௴ 27௳ சனிக்கிழமை நாள்**

சாயங்காலம் ஐந்து மணிக்கு, புதுச்சேரி பட்டணத்திலே நடந்த அதிசயமென்னவென்றால், ........... சொலுதாதுகளை அழைக்கிற தம்புரு அடித்து அதின்பேரிலே சொலுதாதுகளையும் மாயே துலுக்கரையும் சேர்த்து, கர்நாடகச் சேவகரையும் கூடச்சேர்த்து, வெள்ளைக்காரர் சொலுதாதுகள் சற்றேறக் குறைய ஒரு தொகை 200, சட்டைக்காரர் 100, மாயே துலுக்கர் 100, கர்நாடக சேவகர் 1(0, ஆக தொகை ஐந்நூறு பேரும் வரிசையாய்க் கலந்தாற்போலே புறப்பட்டுப் போகையில் துரை பிறகே போகிற உப்பாஸ், துரு பனிரெண்டு பேரும் குதிரையின் பேரிலே ஏறிக்கொண்டு முன்னே போக, பிறகே கணக்கரிலே பதினைத்து பேர் குதிரை ஏறிக்கொண்டு ஆயுத சவுரணையுடனே போக, நடுவே போகிற சொல்தாது வரிசையிலே வெண்கல சின்ன குந்தாணி பீரங்கிகளையும், ஐந்தாறு போக, இதுவுமருந்து பீப்பாய் பத்துக்குமேல் 20-க்குள்ளே, இதைச் சுடுகிறதற்குப் பீரங்கி மேஸ்திரிகள் போக, இந்தப் படிக்குக் குசவன் மண்ணிலை பண்ணின கற்றைத்து (Grenades.) என்கிற தீக்குடுக்கை சொலுதாதுகளுக்கும், மாயே துலுக்கருக்கும் கர்நாடக சேவகருக்கும் பேருக்குப் பத்து விழுக்காடு கொடுத்தும், மற்ற துப்பாக்கிகள் கத்திகள் முதலாகிய ஆயுத சவுரணையுடனே ஒப்பிசியேமார்கள் கப்பித்தான் மார்கள் இவர்கள் எல்லாரும் புறப்படச்சே (ரா) குவெர்னேராகிய மூசே நுய்ப்ளேய்க்கும் அவர் பெண்சாதியும் கோட்டையிலே போய்ப் பயணமனுப்பி (ரா) துரையவர்களும் அம்மாளவர்களும் முன்னே போய் அரியாங்குப்பத்துக்குப்போகிற வழிசாலையிலே மூசே புசேத்து (M. de Bausset) தோட்டத்தண்டையிலேயிருக்கச்சே முன் சொல்லப்பட்ட படையும் படைத்தலைவர் சொலுதாதுகள் முதலாகிய பேரும் கோட்டை மேற்கு வாசலிலே புறப்பட்டு மூசே தெப்ரேமெனி வீட்டோரமாய்ப் புறப்பட்டு, சந்து வீதியிலே வில்லியனூர் வாசல்படி பெரிய நெடுந்தெருவிலே புறப்பட்டு, வில்லியனூர் வாசற்படி கடந்து அரியாங்குப்பத்துக்குப் போகிற வழிச்சாலையிலே புறப்பட்டு, கூடலூர் மேலே போகத்தக்கதாகப் போக, அந்தச் சாலையிலேயிருக்கிற (ரா) துரையவர்களையும் அம்மாளவர்களையும் கண்டு அவர்களுக்கு ஆசாரம் பண்ணிவிட்டு அப்பாலே அரியாங்குப்பத்துக்கு மேற்சொல்லப்பட்ட படையும் படைத்தலைவரும் இறங்கினார்கள் இவர்கள் கூடலூரின் பேரிலே சண்டை பண்ணத்தக்கதாக அனுப்பிவிக்கக் காரணமென்னவென்றால், அவர்கள் சரிபோனபடிக்கு இங்கிலீஷ்காரர் கப்பல்............... ...............குஞ்சல் (Conseil) கூடி நிச்சய

மாயித் திருந்தது என்னென்னவென்றால், பிராஞ்சுக்காரரது (escadre) சண்டை பண்ணுகிறதற்கு ஆறு கப்பலுக்குமேல் பத்துக்குள்ளாக வருகுதென்றும் மாயேயிலேயிருந்து எழுதி வந்தபடியினாலே இதற்குச் சமீபத்திலே வந்திருக்கவேணு மென்றும் இங்கிலீஷுக்கு அஞ்சான தலைச்சேரியிலேயிருந்து சேதி வந்தபடியினாலே போனவருஷம் வந்தது பிராஞ்சு அச் சைக்கப்பல், மணிலாக்கப்பல், சீனுக்கப்பல் முதலாகிய கப்பலைப் பிடித்து நாலு கப்பலும், இவ்வருஷம் சீர்மையிலி ருந்து இங்கிலீஷ்காரருக்கு வந்த கும்பனீர் கப்பல் ஐந்தும், ராசாகப்பல் இரண்டும் ஆக கப்பல் பதினொன்றும், இதல்லா மல் இவ்வருஷம் பிடித்த கப்பல்களிலே பலத்த வருவாய்ப் பார்த்துச் சேர்த்துக்கொண்ட ஐந்தாறு, இந்தப்பிரகாரம் சேர்த்துக்கொண்ட கப்பல் இருபத்திரண்டு பலவிதத்திலே. ஆனபடியினாலே, நம்முடைய கப்பலும் அவர்களுடைய கப்பலும் சந்தித்தால் நம்முடைய கப்பல்களுக்கு இரண்டரை அத்தனை அதனம் பின்னம் எதிராளிகளுக்கு இருக்கிறபடி யினாலே நாம் கூடலூரின்பேரிலே போய் இறங்கினால் அவர் களுக்கும் மற்றப் பேருக்கும் ஆக ஐந்தாறு கப்பல்கள் நிற்பார் கள். சென்னபட்டணத்திலேயும் இரண்டு மூன்று நிறுத்த வேண்டியிருக்கும். இந்தப்படிக்கு அவர்களுக்குப் பாதிபலன் வாங்கினால் மற்றப் பாதிபலனுடனே நம்முடைய கப்பலின் பேரிலே எதிர்ப்பார்களே, எதிர்த்தால் நம்முடைய கப்பலவர் களுக்குத் தக்கதாய்ப் புடைத்துப்போட்டு இவ்விடத்துக்கு வந்து சேருவார்கள் என்றும், இந்தப்படிக்கு யோசனைபண்ணி முன் சொல்லப்பட்ட படையையும் படைத்தலைவரையும் கூட லூரின் பேரிலே அனுப்பினதாய்ச் சொல்லிக்கொண்டார்கள். இன்றையதினம் நடந்த சேதியிது இனிமேல் நடக்கிற சேதி இதன் பிறகே எழுதுகிறோம் ..........

1746 ௵ பிப்ரவரி ௴ 6௳க்கு குரோதன ௵ தை ௴ 28௳ ஆதிவாரம் நாள்

அரியாங்குப்பத்திலே நேற்றையதினம் தங்கியிருந்த படைகள், அவ்விடம் விட்டு இற்றைநாள் புறப்பட்டு கிழக்கே இருக்கிற அழிசிபாக்கம் சிங்கர்கோவில் மேலே நடந்துவிட்டு கிழக்கே இருக்கிற தவளைக்குப்பத்துச்சாவடி யிலே வந்து பாட்டையிலே இறங்கினார்கள் அங்கே இருந்த வைக்கல்போரை பேருக்கு நாலு வைக்கலாய்ப் பிடுங்கிப்போட் டார்கள் என்றும், அவர்கள் அங்கேயே யிருந்துவிட்டார்கள். அவர்களைப்பற்றி அதற்குப் பின்னால் ஒன்றும் தெரியவில்லை.
* ... ... ... ... ... ... .. ...

* நாலு வரிகள் கிழிந்துபோய்விட்டன.

சூரத்திலேயிருந்துவந்த சேதிகள் பின்வருமாறு: அவர்கள் சொன்னதாவது என்னவென்றால், போனதற்கு நீ போனாற் போலே காகிதம் வந்தாற்போலே..........பார்த்ததுபோலே பண்ணுவார்கள் நீங்கள் சுருக்காய்ப் போங்கள் என்று சொல்லிவிட்டு வந்தோம் ஒன்றையும் காணோம் இதற்கு இருபத்தேழு நாளைக்குள்ளே வந்து சேர்ந்தோம் என்று சொன்னார்கள்.

காலமே ஒன்பது மணிக்கு நயினாரை அழைத்துத் துரை கோபித்துக்கொண்டு, நீ போகாதே போனதென்னவென்று கோபித்துக்கொண்டார். அதின்பேரிலே நயினார் போய் கனகராயமுதலியார் சரீரம் சுகமில்லாமல் வீட்டிலிருக்கிறவருடனே போய்ச்சொல்லி அதன்பேரிலே அதற்கு முன்னே பதினைந்து நாளாய் உத்தியோகங் கவையில்லை. என்று போயிருக்கிற கிரியாசி பண்டிதரை கனகராயமுதலியார் அழைப்பித்து எப்போதும்போல உத்தியோகத்திலேயிருக்கச்சொல்லி, தவளைக்குப்பத்து சாவடியிலே தங்க இறங்கியிருக்கிற படையண்டைகருப் போய்ப் பார்க்கச்சொல்லச் சொன்னார். அவரும் நயினாரும் போனார்கள். சாவடி மணியம் அழகப்பிள்ளை போய் அங்கே படைக்கு எசமானாயிருக்கிற மூசே தூக்கேடேனுடனே சொலுதாதுகளும் மாயே துலுக்கரும் இங்கேயிருந்து போய் கடைபோட்டுக்கொண்டிருக்கிற கடைக்காரரையும் பலசரக்குக் கடைக்காரரையும் ஓட்டிபண்ணுகிறார்கள். அப்படி செய்யாதபடிக்குத் தாக்கிது பண்ணச் சொல்லி யவருக்குத் தெரியச்சொல்லிப் போட்டுவந்தார்.

கூடலூரிலே தேவனாம்பட்டணத்திலே நடந்த சேதி என்னவென்றால் புதுச்சேரியார் தங்களைப் பிடிக்கிறதற்கு வருகிறார்களென்கிறபடியினாலே பட்டணத்தை வாங்க வருகிறார்களென்றும், அவர்களும் தேவனாம்பட்டணத்துக் கோட்டையையும் கூடலூரையும் சொலுதாதுகளை வைத்துக் கொண்டு சாலைவழியிருக்கிற விடத்திலே கர்நாடக சிப்பாய்களில் இருபது முப்பது பேருமாகப் படையைத் தயார்பண்ணி வைத்துக்கொண்டார்கள்.* ........ ..... ...... ..................

பிராஞ்சுக்காரர் எந்தச் சமயத்திலும் கூடலூரையும். தேவனாம்பட்டணத்துக் கோட்டையையும் பிடிக்கிறதற்காக எந்தச் சமயத்திலும் தாக்கப்படும் என்று மஞ்சகுப்பம், திருப்பாபுலியூரிலுள்ள ஜனங்கள் சகலரும் தங்கள் தட்டு

* (13-வரிகள் விழுந்துபோயிருக்கிறன. இங்கிலீஷ் மொழி பெயர்ப்பிலிருந்து தமிழில் எழுதியிருக்கிறது.)

முட்டுச் சாமான்களையும் ஆஸ்திபாஸ்திகளையும் வெகுதூரத்தில் பந்தோபஸ்து பண்ணிவைத்துவிட்டுச் சண்டை கடுமையாக நடக்கிறதானால் குடும்பங்களையும் அனுப்பிவிடுவதற்குத் தக்கதாக முஸ்தீதுபண்ணிவைத்திருந்தார்கள். சதா பயப்பட்டுக்கொண்டேயிருந்தார்கள் சனங்களுடைய பயம் மிதமில்லாமல் சொல்லத்தக்கனவல்ல. இங்கிலீஷ்காரர் புதுச்சேரிக்குப் போகிற கப்பல்களைப் பிடித்துக்கொண்டார்கள். இங்கிலீஷ்காரருக்கு இங்கிலாண்டு தேசத்திலிருந்தும் மற்ற இடங்களிலிருந்தும் சண்டைக்கப்பல்களும் படைகளும் வந்து சேர்ந்து இங்கிலீஷ்காரர் படை பலப்படுத்திவிட்டது என்றும் எழுதிவந்தது. தற்காலம் இங்கிலீஷ்காரர் ஆட்சியில் துரைத்தனத்தார் புத்திசாலிகளல்லாததினால் படைகள் மிகவும் கஷ்டத்தை அனுபவித்தன என்றும், இந்தச் சமயம் புதுச்சேரிக்குக் கப்பல்கள் வராதபடியினாலேயும் துரைத்தனத்தாருக்குப் போதுமான திரவியமில்லாததினாலேயும் சத்துருக்கள், பிரஞ்சுக் கப்பல்களைப் பிடித்துக்கொண்டார்கள். சனங்கள் மிகவும் ஆபத்தான நிலையில் கஷ்டப்பட்டார்கள். நவாப் நாட்களிலே அக்ரமம், ஆசை, ஆடம்பரம் ஒன்றும் தெரியாதபடியாலேயும், இக்காலத்தில் சனங்கள் சுகமாயிருக்க நம்பிக்கையுள்ள இடமாயிருக்கிற விடத்திற்குப் போய்த் தங்கள் பசங்கள் குஞ்சுகளையும் அனுப்பவேணுமென்றிருக்கிறார்களென்றும், அவரவர்கள் தத்தளித்துக்கொண்டிருக்கிறதைச் சொல்லிக்கொள்ள முடியாதென்றும் இந்தப்படியாகச் சொல்லிக்கொண்டார்கள்.

அவர்கள் இந்தப்பட்டணத்துக்கு வரப்பட்ட கப்பலையும் பிடித்துக்கொண்டதுமல்லாமலும் அவர்களுக்குச் சீர்மை கப்பல் முதலாகிய கப்பல்கள் வந்திருக்கிறது. அதினாலே இருக்கிற உற்சாகத்தினாலேயும் இப்படியெல்லாமிருக்கும் போதும்; அவர்களுக்குப் பிரபுவாயிருக்கிற துரைத்தனம் பண்ணுகிறவர் கையிலே ஆகாதவனானபடியினாலேயும், விவேகமில்லாதபடியினாலேயும் அப்படி தத்தளிக்கிறது. இந்தப் புதுச்சேரிக்குக் கப்பல்கள் வராமலிருக்கும்போதும், கும்பினீருக்குப் பணமில்லாமலிருக்கும்போதும், சத்துருக்கள் இவர்கள் கப்பல்களைப் பிடித்துக்கொண்டிருக்கும்போதும் இவர்கள் இப்படி பலம் குறைச்சலாயிருக்கும்போதும் இந்தப்பட்டணத்துக்குள்ளேயிருக்கிறவர்கள் நிர்ப்பயமாயிருக்கிறதும், இந்தப்பட்டணத்துச்சேதி சொன்னால் வெளியிலே இருக்கிற நபாபு முதலாகிய மனுஷரும் இங்கிலீஷ்காரர் வசமாயுமிருக்கிற சத்துருக்கள் இவர்கள் பேரைச் சொன்னால் கிடந்த இடத்திலே கிடக்கிறதற்கும் இருந்த விடத்திலே

யிருக்கிறதற்கும் இல்லாமல் உழைத்துக்கொண்டிருக்கிற தற்கும் இதெல்லாமிப்போது துரைத்தனம் பண்ணுகிற முசே துய்ப்ளேய்க்சு குவெர்னேருடைய ஊக்கமற்றக்காரர், அதினாலேயும் அவருடைய யோக அதிர்ஷ்ட அதிசயத்தினாலேயும் அவர் பிறகே வருகிற ஆள் ஒருத்தருக்கும் தோற்றாது அது எதினாலேயென்றால், இவருடைய யுக்தி புத்தி ஒருவருக்குமில்லை எந்தெந்த விதமென்றால்,.......... ஒருத்தருமில்லை. காரியத்திலே ........ ......... ... ........ இவர்போல் ஒருத்தர் இல்லாமலிருந்தால் பட்டணத்துச் சனங்கள மிகுந்த துயரத்தையும், சேதத்தையும், நஷ்டத்தையும் அடைந்து அழிந்துபோயிருந்திருக்கும் என்று சொல்லிக்கொண்டார்கள்.................. .....தாழ்த்தியில்லாமல் புத்தி, சுவாமி இவருக்குக்கொடுத்தபடி பிராஞ்சுக்காரர் விசேஷ திருப்தியான சேதியிலே பட்டணத்துக்கு வந்து துரைத்தனம் பண்ண வந்தவனானபடியினாலே இந்தப் பட்டணத்திலுள்ள கோன்சேலியேமார்கள், துபாசியார்மார்கள், எதிரிகள் பணத்திலே யிருக்கிறவர்களைப் பரிகரிசதம் பண்ணிக்கொண்டிருக்கத் தக்கதாகப் பிணக்கு முதலியதுகள் வராமல் துரைத்தனம் பண்ணினபடியினாலேயுமிருந்து இந்நேர வேளையிலே இப்படிப் பட்ட ஆதங்கம் வந்து இதனால் எதிரிகளுடைய பட்டணத்திலேயிருக்கிற சனங்களை..........................தத்தளித்துப் போச்சு.......... ......என்று சகலமான சனங்களும் சொல்லுகிறார்கள். இதல்லாமலும், இவருடைய தைரிய ஸௌரியமும் இவருடைய குணமும் இதுகளெல்லாம் பார்தால் இவருடைய குணமும் நடத்தையும் மேன்பாடு கொண்ட முகத்திலே இருக்கிற தந்திரமும் இதுகளையெல்லாம் பார்த்தால் அவுரங்கசீப்பு பாச்சாவுக்குச் சமானமென்றும், லூய்சு கத்தோர்சுக்குச் சமானமென்றும் சொல்லவேண்டும். மற்றப்படிக்கு, பின்னையும் யோசராசாங்கத்திற்குச் சமமாய்ச் சொல்லப்படுமேயல்லாமல் போகாது ஆனால் இவருடைய அனந்த கலியாணத்திற்கு எத்தனை விதமென்று எழுதப் போதாதென்றும் என் புத்தி எவ்வளவோ அந்த மட்டுக்கும் தோற்றினது எழுதினேன். புத்தி விசாலமுள்ளவர்களானால் இன்னும் விஸ்தரித்து எழுதுவார்கள்.

1746 ஹு பிப்ரவரி மீ 7 உ க்ஷய வருஷம் தை மீ 29 உ

நடந்தது என்னவென்றால் வடக்கே சென்னப்பட்டணத்திலேயிருந்து பதினைந்து நாழிகைக்கு இந்தூர் துறையிலே பொர்த்துய்கேஸ் கப்பல் (Portuguese) பேர் சேன் லூய் (St Louis) கப்பித்தான் பேர் அந்தோணியோ தொகெயித்தான். அந்தக்கப்பல் வந்து சினிபோட்டு மூன்று பீரங்கி துறை

யிலேயிருக்கிற கப்பலுக்கும் போட்டான். மறுபடியும் துறை யிலேயிருந்த கப்பலிலே மூன்று பீரங்கி பதிலுக்குப் போட்டார்கள், பதிலுக்குக் கோட்டையிலே ஏழு பீரங்கி போட்டார்கள். இந்தப்பொர்த்துய்கேஸ்காரன் (Portuguse) கப்பலை நாலு இங்கிலீஷ் கப்பல் துரத்திக்கொண்டு வந்தது துறைக்குத் தூரமாய் கண்டு கொண்டிருந்தது. இந்தப் பொர்த்துய்கேஸ்காரன் கப்பலைத்துரத்திக்கொண்டுவரக் காரிய மென்னவென்று, விசாரித்தால் இந்தக் கப்பல் பங்காளத்திலேயிருந்து வரும் போது சென்னப்பட்டணத்து இங்கிலீஷ் கப்பல்காரர் பிடித்து வந்து சென்னப்பட்டணத்துத் துறையிலே விட்டார்கள் சென்னப்பட்டணத்தார் எந்தக் கப்பல் என்று விசாரித்தால் நாங்கள் போர்த்துய்கேஸ்கார கப்பல் என்றுசாஹிரிப்பண்ணி அது களுக்கு ...................... கப்பலிலே கொண்டுவந்த சரக்கு களெல்லாம் இவ்விடத்திலே விற்றுப்போட்டுப் பதிலுக்குச் சரக்குவாங்கிக்கொண்டு ஏற்றிக்கொண்டுபோ என்று சொன்னார்கள். நல்லது என்று சொல்லி விற்கிரயத்துக்குப் பேசுகிறுப்போலப் பேசி அவர்களை ஏற்றிப்போட்டு நேற்றியதினம் பாயெடுத்து ஓடிவந்தான் என்றும், நாளை துரத்திக்கொண்டு பொழுதுவிடிந்த பிறகு புறப்பட்டு வந்தர்களென்று இப்படியாகச் சொன்னார்கள். இந்தக் கப்பலைத் துரத்திவந்த மூன்று கப்பலும் ஒரு ஷலுப்பும் ஆக நாலும் மூன்று மணி முதற்கொண்டு நாலரை மணி மட்டுக்கும் துறைக்கு நேராக ஓடி வந்து மறுபடி புதுச்சேரி கோட்டைக்கு ஈசானிய பாகத்திலே மூன்று உருப்படி வைத்துப்பிடித்துச் சீனி போட்டான். தேவனாம்பட்டணத்திலேயிருந்து இரண்டு கப்பல் ஆக்கினேய பாகத்திலே துலையிலேவைத்துப் பிடித்துச் சீனி போட்டான். வடக்கேயிருந்துவந்த உருநாலிலே ஒரு ஷலுப்பு மாத்திரம் ஒரு பீரங்கி சுட்டுப்போட்டு அங்கே யிருந்தாற்போலே தெற்கே தேவனாம்பட்டணத்துக்குச் சேதிசொல்லத் தக்கதாகப் போனான். இந்தக் கப்பல் துறைக்கு நேராக வரும் போது (ா) துரையவர்கள் கோட்டையின்பேரிலே போயிருந்து வாசல்களிலேயிருக்கிற சொல்தாதுகளை எல்லாம் அழைப்பித்துக் கடற்கரை முடிய இருக்கிற கொத்தளங்கள் பேரிலே முடிய வைத்து, கடற்கரை கொத்தளங்கள்பேரிலே யிருக்கிற பீரங்கிகளெல்லாம் கிடித்து, தீக்குடுக்கையெல்லாம் குந்தாணி பீரங்கியின்பேரிலே வைத்துக் கிடித்துவைத்து, பின்னையும் சண்டைக்கு அடுத்த தீக்குடுக்கைகள், கிறுனைத்துகள், மருந்துகள், குண்டுகள் இதுகளெல்லாம் முஸ்தீதுபண்ணிவித்து எந்தெந்த விதத்திலே சபுறுதஸ்து பண்ணவேணுமோ அந்தந்த படிக்கெல்லாம் சகல சாமானும் தயார்பண்ணிவித்து, யுத்தாய்த்தமாய் வைத்துப்போட்டு, ஐந்தரை மணிக்கு வீட்டுக்குப்போனார். இந்த வேடிக்கையைப் பார்க்கப்போன பிரசைகள்,

பட்டணத்திலுள்ளவர்கள் பதினாயிரம் பேருக்குண்டு. இந்தச் சனங்களெல்லாம் (ஈ) துரையவர்கள் பார்த்து இந்த மட்டுக்கும் வேடிக்கைப் பார்த்தது போதும். அவரவர்கள் வீட்டுக்குப் போகச் சொல்லச் சொன்னார். இந்த வேடிக்கையெல்லாம் நானும் கூடப்போய்ப் பார்த்து வந்தேன். பொர்த்துய்கேஸ் சேன்லூய் (St. Louis) என்கிற கப்பலிலே வந்த சரக்கு, கோதும்பையும், அரிசியும், மெழுகுத்திரி, பின்னையும் பல தினுசு பங்காளத்து கொஞ்சநஞ்சமுண்டு என்று சொன்னார்கள். அந்தச் சரக்கெல்லாம் கலந்துவிட்டு இராத்திரி பனிரெண்டு மணி அடித்து இரண்டு மணி மட்டுக்கும் பறிக்கச் சொல்*...........................................................................

1746ஹு பிப்ரவரிமீ 8உ க்கு குரோதனஹு தைமீ 30உ செவ்வாய்க்கிழமை

எண்பித்து முன் இந்த ஊரிலேயிருந்த பிதாலுகும் (M. Fidelque) மகன் கடைசிப்பிள்ளையாண்டான் அவனைக் கப்பித்தானாக்கி அனுப்பிவித்தார்கள் என்றும் சொன்னார்கள். இங்கிலீஷ் கப்பல் இன்றையதினம் வந்தது. அந்தப்படி அவைகள் நாலும் இன்னும் போகவில்லை இதனால் துரையவர்கள் என்னை அழைப்பித்து, தேவனாம்பட்டணத்து துபாசிக்கு ரங்கப்பநாயக்கனுக்கு ஒரு காகிதம் எழுதச்சொன்னார். எழுதின வய்ணப்படிக்குப் பிரதி எழுதியெழுதி அனுப்பிவித்து அதற்கு அவரது ஆக்ஞைபடி யிருக்கிறது. இந்தக் காகிதத்துக்கு உத்திரம் வருகிறதைப் பார்த்துக்கொள்ளவேண்டியது இந்தநாள் ஆற்காட்டு நவாப் அன்வருத்திகான் குமாரன் மாபூசுகான் (Nawab Anwar uddin Khan son Mahfas Khan) என்கிறவன் ஆற்காட்டுக்குப் போய் தகப்பனார் சரீர சுவஸ்தம் தப்பியிருந்தவனைப் பார்த்துவிட்டு மறுபடி திருச்சினாப்பள்ளிக்குப் போகத்தக்கதாய்ப் பயணம் புறப்பட்டு வந்தவர் புதுச்சேரி குவர்னரைப் பார்த்து விட்டுப் போகவேணுமென்று புதுச்சேரிக்கு வருகிறதாய் குவர்னர் அவர்களுக்குக் காகிதம் எழுதி அனுப்பிவித்தார். (ஈ) துரையவர்களும் அந்தப்படிக்குத் தானே வரச்சொல்லி யெழுதியனுப்பிவிக்கச் சொன்னதாகச் சொன்னார்கள். மாபூசுக்கானை எதிர்கொண்டழைத்து வருகிறதற்குக் கனகராய முதலியார் தம்பி சின்ன முதலியாரையும் மதனந்த பண்டிதரையும் போகச்சொல்லி, துரையவர்கள் உத் ..........................................................................

* 6 வரிகள் கிழிந்துபோய்விட்டன.

தாரங் கொடுத்தார்கள். அவர்களும் பகலைக்கு மேலாக நாலு மணிக்கு இருபது சேவகரும் அவரும் மதனந்த பண்டிதரும் போனார்கள்

இந்தநாள் பகலைக்குமேல் துரை தவளைக்குப்பத்துச் சாவடியிலே போயிருந்த படையும் படைத்தலைவரும் நடத்தின சேதியென்னவென்று விசாரித்ததால், தவளைக்குப்பத்துச் சாவடியிலே டிக்காணுவாக இருந்துகொண்டு சவாரி புறப்படுகிறாப்போலே புறப்படுகிறதும் மரிகிருஷ்ணபுரம் குண்டுசாலை மட்டுக்கும் போகிறதும் குறுக்கே கண்டவர்களை அடிக்கிறதும் லூட்டி பண்ணுகிறதும் இப்படிச் செய்தார்கள். இதல்லாமலும் நல்லம்பாபுரெட்டிச்சாவடியிலே யிருந்த கும்பினி டபால்சேவகனை அடித்து உங்கள் துரையுடனே போய்ச்சொல்லென்று சொல்லியும் இப்படியெல்லாம் நடத்தினார்கள். இந்தச் சேதியெல்லாம் தேவனாம்பட்டணத்து குவெர்னேர் சண்டைக்கப்பல் கப்பித்தான்மாருடனே சொல்லி நீங்களும் அந்தச் சாடையாய்த்தானே சிறிது வெள்ளைக்காரரையும் கர்நாடக மனுஷரையும் சிறிதுபேரை கப்பலின்மேலேற்றி மூன்று இரட்டைச் சலங்குங்கூட கொடுத்து அனுப்பிவித்தார்கள் அவர்கள் அந்தச் சாடையாய்த்தானே சிறிது வெள்ளைக்காரரையும் கர்நாடக சிப்பாய்களையும் ஏற்றிக்கொண்டு மூன்று சலங்கிலே சலங்கு ஒன்றுக்கு நூறு, நூறு, பேர் இருக்கத்தக்கதாகச் சலங்கைக் கரைக்கு அனுப்பி, கப்பல்களைப் பாயெடுத்து, நாலு கப்பல்களையும் கரைக்குக்கிட்ட கொண்டுவந்துவைத்துப் பிடித்தான், அந்தச் சலங்குகாரன் கோட்டைக்கு வடவண்டை பாரிசத்திலேயிருக்கிற சேன்லூய் கொத்தளத்துக் கடுத்தாற்போலே கொண்டுவந்து வைத்துப் பிடித்துக் கரையிலே இருபது மாத்திரம் இறக்கினார்கள். அதிலே அந்த கொத்தளத்துப் பீரங்கியவர்களைப் பார்த்தாற்போலே, திருப்பினாற்போலே மறுபடி இறங்கினவர்கள் சலங்கு பாயெடுத்துக் கோட்டைக்குத் தென்னண்டை மூலையிலேயிருக்கிற சேன்லொரென்சு கொத்தளத்துக்கு அடுத்தாற்போலே போய் இறங்கினார்கள். அங்கேயும் அந்தப்படிக்குத்தான் பீரங்கியை அவர்களைப் பார்க்கிறாப்போலே. திருப்பினாப்போலே மறுபடியும் சலங்கின்பேரிலே ஏறிக்கொண்டு அவர்கள் கப்பலுக்குப் போனார்கள். இராத்திரிக்கு என்ன நடக்குமோ தெரியாது. இவர்களிந்தப்படி நடப்பித்த சாடையென்னவென்றால், இவர்கள் படைபோய் தேவனாம்பட்டணத்துச் சமீபத்திலே சிறிதுபேர் போகிறதும் வருகிறதுமாகக் காண்பித்துக்கொள்கிறதுமாய் நடத்தின சாடைப்படிக்கு இங்கிலீஷ் கப்பற்காரரும் சற்று அதிசயமாய்த்தானே நடப்பித்தார்கள் முன் தவளைக்குப்பத்திற்குப் போய் சாவடியிலே தங்கியிருந்த படையும் ஒப்பிசியே

மாரும் கணக்கரும் அரியாங்குப்பம் வந்து சேர்ந்து, ஒப்பிசியே மாரும் கணக்கரும் மாத்திரம் புதுச்சேரி இற்றைநாள் சாயங் காலம் வந்து சேர்ந்தார்கள். அரியாங்குப்பத்திலே இருக்கிற படையும் இப்பால் வருவார்களோ அங்கேதானே இருப்பார் களோ தெரியாது.

1746 ஞு மாசி மீ 1 உ பிப்ரவரி மீ 9 உ க்கு குரோதன ஞு புதன்கிழமை

இந்தநாள் நடந்தசேதுமயன்னவென்றால், நேற்று இராத்திரி சாயங்காலமான மூன்று நாழிகைக்குள்ளாக இங்கிலீஷ்காரகப் பல் பாயெடுத்து கரைக்குச்சமீபத்திலேவந்தான். அப்போதான் கப்பல் எல்லாம் விளக்குக் கொளுத்தி, கப்பலைச்சிங்காரம் பண் ணிக்கொண்டு, கரையோரத்துக்கு ஓடிவந்தது, சற்று நேர மிருந்து அப்பால் பாயெடுத்து மறுபடியும் யதாஸ்தாவிலே போய் நின்றான். அப்போது அந்தச்சேதி (ா) துரையவர்களுக்கு வந்து கப்பல் கிட்ட வரக்காரியம் என்னவென்று அந்நேரம் கடற்கரைக்குப் போகவேணுமென்று பயணம் புறப்பட்டு வரும்போது தீவட்டி கொளுத்தினால் தீவட்டியை அவித்துப் போட்டுவிடச்சொல்லி இருட்டிலேயே கடற்கரையே போய் அங்கே யிருக்கிற சொலுதாதுகளையும் பீரங்கி மேஸ்திரிகளை யும் முஸ்தீதாயிருக்கச் சொல்லிவிட்டு மறுபடியும் வீடு வந்து சாப்பிட்டுப் படுத்துக்கொண்டார் என்று காலத்துக்கேள்விப் பட்டது.

இந்த நாள் மத்தியானம் பனிரெண்டு மணிக்கு நபாபு மகன் மாபூசுகானிடம் போயிருந்த தானியப்ப முதலியாரும் மதனந்த பண்டிதரும் வந்து வழுதாவூரண்டையிலே மாபூசுகானை சந்திப்புபண்ணிக்கொண்டு வந்தோமென்றும் வந்து சாரத்திற்கு அப்புறத்திலே யிருக்கிற வீரா செட்டிச் சாவடியாகிய சதிராம்பிள்ளையார் கோவிலிலே இறங்கினாரென்று (ா) துரையவாகளுக்குக் கபுறு வந்து சொல்லினார்கள் நாலு மணிக்கு மறுபடியும் அவருக்கு உப சாரம் சொல்லத்தக்கதாக மூசே மீராவையும் மூசே பேர்த்தலே மியையும் கூட கூட்டி மேளதாள தட்டுமுட்டுக்காரருடனே சின்ன முதலியார் மதனந்த பண்டிதருடனே இவர்களையும் கூடப் போகச்சொல்லி யனுப்பினார்கள்.

இவர்களும் கூட சாரத்துக்குப் போய் மாபூசுகானைச் சந் தித்து மறுபடியும் (ா) துரையவர்களுக்குக் கபுறு வந்து சொன் னார்கள். துரையவர்களும் நாளைக்கு அவரை அழைப்பிப்போ மென்று சொல்லி, அவரவர் வீட்டுக்குப் போகச் சொல்லச்

சொன்னார்கள். அவரவர்கள் வீட்டுக்குப் போனார்கள். போன விடத்திலே நடந்த சேதி யென்னவென்றால், சின்னமுதலியாரையும் மதனந்த பண்டிதரையும் கேட்டதற்கு அவர்கள் சொன்னது என்னவென்றால், தாங்கள் போனவிடத்திலே அவர்களுக்குப் பண்ணவேண்டிய மரியாதையும் தெரியாது அவனுக்குத்தானிருக்கவேண்டிய கெளரதையும் தெரியாதென்றும், தோல் சுத்த சோனகன்போலே யிருக்கிறதென்றும், கறெலென்று அந்தவிகாரமாயிருக்கிறானென்றும் மரியாதையே யறியானென்றும் நம்முடைய சேவகராகிலும் சற்று வரிசையாய், அந்தமாய், நல்ல சட்டையும், பாகையும் கட்டியிருக்கிறார்களென்றும், அதுதானுமில்லையென்றும், நாளைக்கு வந்தால் பார்த்தால் தெரியும் என்றும் சொன்னார், போனவிடத்திலே நடந்த சேதி என்னவென்றால், போனவர்கள் மூசே மீராவும், மூசே பர்த்திலேமியும் உபசாரம் சொன்னார்கள். அவர்களும் (ள) துரையவர்களுக்கு உபசாரம் சொல்லி வந்தவர்களுக்கு உபசாரமும் சொல்லி, நாம் புடவை சிலைக் கொண்டுவரவில்லை. அவசரமாய் வந்துவிட்டோம். ஆனபடியினாலே, உங்களுக்கு வெகுமானம் கொடுக்கிறதாக வஸ்திரமில்லை நாளையதினம் அப்படியே உங்களுக்கு வெகுமதி பண்ணி (ள) துரையவர்களுக்கும் வெகுமதி பண்ணி வஸ்திரம் கொடுக்கிறோம் என்று சொல்லியனுப்பிவிட்டான் என்று பஞ்சப்பேச்சாய்ச் சொல்லிப், போகச்சொன்னானென்று சொன்னார்கள். இதல்லாமல் அவன் ராசவட்டம் விட்டதென்னவென்றால் நவாபுக்குத் தெத்துவாசல் மட்டுக்கும் (ள) துரையவர்கள் எதிரே வந்து அழைத்துக்கொண்டு போனபடியினாலே அப்படிக்குத் தன்னையும் அழைத்துப் போகவேணுமென்றும் அந்த மரியாதைகளெல்லாம் தனக்கு நடக்கவேணுமென்றும் சின்ன முதலியாருடனேயும் மதனந்த பண்டிதருடனேயும் சொல்லி (ள) துரையவர்களுக்குச் சொல்லச் சொன்னார்கள். அவர்களும் அந்தப்படிக்கு வந்து சொன்னார்கள். இனிமேல் எப்படி நடக்குமோ அறியவேணும். இந்த நாள் சாயங்காலமான இரண்டரை நாழிகைக்கு அரியாங்குப்பத்திலே இறங்கியிருந்த படையும் படைத்தலைவரும் புதுச்சேரி வந்து இரண்டாம் பேர் அறியாமல் வந்துசேர்ந்தார்கள்.

இனிமேல் என்னமாய் நடக்குமோ தெரியாது. துறையிலே யிருந்த இங்கிலீஷ் கப்பல்கள் எல்லாம் சாயங்காலமான ஒரு நாழிகைக்குப் பாயெடுத்துத் தெற்கே போனான். மறுபடியும் இராத்திரிக்கு வருவானோ, அப்படித்தானே போவானோ தெரியாது. நாளையதினம் அறியவேண்டியது.

**1746 ஸ பிப்ரவரி மீ 10 உக்த குரோதன ஸ மாசி மூ 2 உ**

இந்தநாள் வியாழக்கிழமைதினம் காலமே மாபூசுகான் மீருகுலா மூசேன் சாயபு மருமகளைக் கலியாணம் பண்ணின மீரா ஆசம் சாயபுடனே முன் நபாபு வந்தபோது துரை வாசற்படிக்கப்புறத்திலே கூடாரம் போட்டுக்கொண்டிருந்த நபாபு அவ்விடத்துக்கு வர அப்படியல்லோ மரியாதையாய் நடப்பித்தார்கள். இப்பவும் அந்தப்படிக்கும் நடப்பிக்கவேணுமென்று சொல்லியனுப்பினார்கள்.

அந்தப்படிக்குத்தானே அவர் வந்து (ஈ) துரையவர்களுக்குச் சொல்லிச் சமாதானம் பண்ணியவரும் அந்தப்படி அவரை அழைத்துக்கொண்டு போகிறோம் என்று போனார்கள். அந்தப்படிக்கு வழுதாவூர் வாசற்படிக்கு அண்டையிலே எப்போதுங் கூடாரம் போடுகிற விடத்திலே கூடாரம்போட்டு முன் நபாபு வரும்போது (ஈ) துரையவர்கள் எப்படி மேன்பாடு சகல கோஞ்சேலியேரோடும் நகபத்துடனேயும் கூடப்போய்.... அந்தக் கூடாரத்திலே இறங்கியிருந்து நவாபு மாபூசுகானை யழைத்துவர சின்னமுதலியாரும், மதனாந்த பண்டிதரும், மூசே மீராவும் எதிரேபோய் அழைத்துவந்தார்கள். அப்போது பனிரெண்டு மணி அடித்து இரண்டுமணிக்கு வந்தார்கள். (ஈ) துரையவர்கள் பலகைபோட்டிருக்கிற விடத்திலே போய் நபாபு மாபூசுகானை எதிரே போய் அழைத்துவந்தார்கள். கூடாரத்திலே அரை நாழிகை உட்கார்ந்திருந்து அப்துல் சலீலுடனே கூட ஆறு குதிரை கட்டின வண்டியிலே ஏறிக கொண்டு மூசே மீரா ஏறி ரெப்பிரெத்து Raporter கொடுக்கிறதற்குக் கூட ஏறிக்கொண்டு (ஈ) துரையவர்கள் வண்டியை நடப்பித்தார்கள். மற்றப் பேர் சிறிது பேர் பெரிய மனுஷர்கள் வண்டியின்பேரிலே நடந்தார்கள். நடந்த உத்திர க்ஷணம் இரண்டு பாரிசங் கொத்தளங்களிலேயிருக்கிற பீரங்கிகள் எல்லாம் சுட்டார்கள். அதற்கு முன்பாகவும் நபாபு கோட்டை வாசற்படியிலே நுழையும்போதும் அந்தப்படிக்கு விஸ்தாரமான பீரங்கிகள் சுட்டார்கள், இந்தப்படிக்கு நடப்பிக்கிற மரியாதையெல்லாம் முன் நபாபு அன்வருதிகான் வந்தபோது எந்தத் திட்டத்திலே நடந்ததோ அந்தப்படிக்குச் சரியாய் நடப்பித்தார்கள். வெகுமானம் மாத்திரம் எண்ணூறு வராகனுக்குக் கொடுத்தார்கள். இதை விஸ்தரித்துப் பிறகு எழுதுகிறேன் இதுகளிலே சிறிது ரகசியங்களாய் நடந்ததுமுண்டு சிறிது பகிரங்கமாய் நடந்ததுமுண்டு. அதுகளெல்லாம் வயணமாய்ப் பிறகு எழுதுகிறேன்.

**1746** ஆ பிப்ரவரி **12** உ க்கு குரோதன ஆ மாசி ௴ 4 உ சனிவாரம்

இந்த நாள் ராத்திரி பொழுதுவிடிகிற காலத்திலே ஐந்து மணியடித்தவுடனே இந்தப் புதுச்சேரிபட்டணம் பெரிய துபாசித்தனம் பண்ணின கனகராயமுதலியார் தெய்வீகமாய்ப் போனார்.

இந்த நாள் மத்தியானம் முதலியாருக்குச் சரீரம் கேவலம் சுவஸ்தம் தப்பிச் சரீரம் சுமரணையில்லாமல் சலாதிகள் புடவையுடனே யானபடியினாலே அவருடைய பெண்சாதி (ரா) துரையவர்களுடைய பெண்சாதிக்குச் சொல்லியனுப்பி, தானும் போய்ச் சரீரம் சுவஸ்தம் தப்பியிருக்கையில் வெளியிலே யிருப்பானேன், குடியிருக்கிற வீட்டுக்குள்ளே வாருமென்று அழைத்ததற்கு அவள்பேரிலே யிருக்கிற குறையினாலே வருகிறேன், போவென்று சொல்லியனுப்பிவிட்டார் அதிலே ராசஸ்ரீ அம்மாளவர்கள் வந்து தெரியப்படச் சொல்லி அம்மாளவர்கள் ஏறுகிற கூண்டிலே இவரை வைத்து வீட்டுக்குள்ளே கொண்டுபோய் படுக்கை வீட்டிலே சேர்த்தபிறகு கனகராயமுதலியார் பெண்சாதி நக்ஷத்திரம் என்கிறவள், அம்மாளுடனே தனக்கும் தன் புருஷனுக்கும் நாளது வரையில் இருக்கிற வித்தியாசத்தையும் சொல்லி அவருடைய நினைப்பு தம்பிக்கும் உடன்பிறந்தாள் பிள்ளைகளுக்கும் இந்தப் பணத்தைச் சேர்க்கவேணுமென்று நடப்பித்துக்கொண்டுவந்த சம்மதியெல்லாம் தெரியுமே என்றும், இவன் தம்பிக்கு இந்தக் கனவைக்கு வருகிறதற்குக் காரியமில்லை என்றும் அவர்கள் தகப்பனார் காலம்பண்ணிப்போன பிறகு பங்கு பயல் தீர்ந்து போய்ச் சென்றும், ஆனபடியினாலே சின்னமுதலியாருக்குக் கனவையில்லை என்றும் அல்லவென்றும் அவருக்குப் பிள்ளையிருந்தால் கனவையுண்டென்றும் அவருக்குப் பிள்ளையில்லாததினாலே இந்த உடமையை அவரைச் சேர்க்கக் கனவையில்லை என்றும், தானே அதற்குப் பாத்தியமென்றாற்போலேயும், இது தன் கைவசம் பண்ணினால் உங்களுக்குச் சம்மதியானபடிக்கு நடப்பித்துப் போடுகிறேனென்றும் ஆசைவார்த்தையும் சொல்லிக் காலம்பண்ணினவுடனே வீடுவாசலெல்லாம் முத்திரித்துவைத்தால் அப்பால் நடப்பிக்கவேண்டிய காரியம் நடப்பிப்போமென்றும் இப்படியெல்லாம் சொல்லி அனுப்பிவித்தாள். அந்த வார்த்தை மனதிலே வைத்துக்கொண்டு (ரா) துரையவர்களுக்கு அங்கே நடந்த சம்மதியெல்லாம் சொல்லியும் பத்திரம் பண்ணிவைத்தான். இந்தப்படி இற்றை நடந்திருந்தது.

**1746** ஞு பிப்ரவரி மீ **13** வ க்ஷய ௵ மாசி மீ 5 உ ஆதிவாரம் நாள்

(புதுச்சேரிபட்டணத்திலே நடந்த சேதி யென்னவென்றால், நேற்றுச் சனிவாரம் ராத்திரி பொழுதுவிடிய இரண்டு நாழிகைக்குள்ளாகக் காலம்பண்ணிப்போன கனகராயமுதலியார் வீடுவாசல்பெட்டி பேழைகள் எல்லாம் (ग) துரையவர்கள் உத்தாரப்படிக்கு ராசாவுடைய புரொக்குய்ரேராயிருக்கிற கோஞ்சேலியே மூசே ... ........, கிறேப்பியே, மூசே தெப்பிறேயும் (M. Desmarats) வந்து முத்திரைபோட்டு எட்டு சேவகரையும் ஒரு சாவடி கணக்குப்பிள்ளை ரங்கப்பிள்ளை என்கிறவனையும் காவல்வைத்துவிட்டுப்போனார்கள்) அதன்பேரிலே கனகராய முதலியாரை அலங்காரம் பண்ணிப் பல்லக்கின்பேரிலே வைத்து மூசே தும்மா சீர்மையிலே யிருந்தனுப்பின சரிகைக் கச்சையையும் கட்டி, பின்னையும் அநேகவிதமான அலங்காரம் பண்ணி, ஒரு மண்டலாதிபதி சவாரி புறப்பட்டால் எப்படி அலங்கரிப்புப்பண்ணிக் புறப்படுகிறார்களோ அந்தப்படிக்கெல்லாம் அலங்கரிப்புப்பண்ணி இற்றைநாள் சாயங்காலம் ஏழு மணிக்கு வீடுவிட்டுப் பிரேதத்தைப் பல்லக்கின்பேரிலே வைத்துக்கொண்டு போய் குதிரைக்கொத்தளம்போக அதன் மேற்கே நாற்பது சொலுதாதுகள் முழு துப்பாக்கிப் பிடித்துக் கொண்டு போகிற சட்டமாய்ப் பிடித்துக்கொண்டுபோக சாவு தம்புரு அடித்துக்கொண்டு போக, பாதிரி கோவிலிலே வெள்ளைக்காரர் பிள்ளைகள் படிக்கிறார்களே அவர்கள் இருபாரிசமும் நாற்பது பிள்ளைகள் மாத்திரம் போக, கப்புஸ்கோவில் பாதிரிமார், சம்பாக்கோவில் பாதிரிமார் அனைவரும் ஏகமாய்க் கூடிக் கொண்டு, அவர்கள் நியாயப்படிக்குப் படித்துக்கொண்டு போக, மற்றச் சம்பிரம வீணைவாத்தியங்கள் என்ன உண்டோ அதுகளெல்லாம் வாத்தியம்பண்ணிக்கொண்டு போக, சகல சம்பிரமத்துடனே எடுத்துப்போகையிலே கோன்சேல்காரர் அவரவர்கள் வீட்டுப் பெண்டுகள் பிள்ளைகளும், புதுச்சேரி பட்டணத்திலேயுள்ள வெள்ளைக்காரிச்சிகள், வெள்ளைக்காரர், பெரிய மனுஷர் முதலாகிய பேர் மற்றப்படி தமிழர்கள், துலுக்கர், மற்றுமுண்டான சனங்களெல்லாம் ஸ்திரீகள் கூட புருஷாள் வந்து பார்த்தவர்களில்லை. அங்கலாய்க்காதவர்களில்லை இந்தப்படிக்கு எல்லாம் சகல சனங்களும் தாபந்தப்படத்தக்கதாக வீடுவிட்டுப் புறப்பட்டுக் கல்லறைக்குக் கொண்டுபோகையிலே, (ग) துரையவர்களும், அம்மாளவர்களும், கோன்செலியேர் அவர்களில் சிறிது பேரும் காளத்தீசுவரன்கோவிலண்டையில் வருகிறபோது அங்கேயிருந்த (ग) துரையவர்களும் மற்றப்பேர் அவ்விடத்திலே யிருந்த பேரும் பிரேதம்சமீபித்தவுடனே எழுந்திருந்து பிரேதம் தாங்கள்

இருக்கிறதற்கு நேராக வருகையிலே கிறிஸ்துவவேத நியாயப் படிக்குக் கையிலே மெழுகுதிரி வாங்கிக்கொண்டு பிரேதம் அப்பால் நடந்தாற்போலே மெழுகுதிரிகளைக் கொடுத்துவிட்டுப் பல்லக்கு ஏறிக்கொண்டு அப்பால் வீட்டிற்குப் போய்விட்டார்கள். அப்புறம் கல்லறைக்குப் போனவுடனே அவர் குமாரனை அடக்கியிருக்கிற கோரிக்குள்ளே இவரையும் கூடவைத்தவுடனே வந்த துப்பாக்கிக்காரர் ஒரு வரிசை துப்பாக்கி தீர்ந்ததானுற்போலே கோட்டையிலே பதினொரு பீரங்கி சுட்டார்கள். அந்தப்படிக்கு அடக்கமானபிறகு அவரவர் வீடுகளுக்குப் போனார்கள் அவர்தம்பி அங்கலாய்த்துவந்ததைக் காகிதத்திலே எழுதி முடியாது. அவர்கள் வீடுவந்து சேர்ந்தபிறகு சிறிதுபேர்களிருந்தபேர் எல்லாம் அனுப்பிவித்துக்கொண்டு போனார்கள்.

இவர் உத்தியோகம் பண்ணுகிறதற்குமுன், குரோதி வரு புரட்டாசி மீ 3 வ வெள்ளிக்கிழமை துவாதசி மகா நக்ஷத்திரம் உத்தியோகம் கொடுத்தது. இற்றைநாள் உத்தியோகத்திலே யிருக்கிறபோது மரணத்தை அடைந்தது இந்த மட்டுக்கும் இருபத்தொரு வருஷமும், ஐந்து மாதமும் சில்லரை நாளும் ஆகிறது. இந்தப்படிக்கு வெகுநாள் ஒரே ரீதியாய் நடந்தது ஒருத்தருமில்லை.

1746 வரு பிப்ரவரி மீ 15 வ க்கு குரோதன வரு மாசி மீ 7வ செவ்வாய்க்கிழமை இற்றைநாள்

காலமே எட்டு மணிக்கு, சின்னமுதலியார், செகன்னிவாச முதலியார் தம்பி மலையப்பமுதலியார், ஆசாரப்பமுதலியார் இவர்கள் எல்லாரும் (ா) துரையினிடம் வந்து முதலியாரவர்கள் காலம்பண்ணிப்போன சேதியைச் சொல்லிக்கொண்டு தாபந்தப்பட்டார்கள். அதின்பேரிலே துரையவர்களும், சின்னதுரையவர்களும், எல்லாரும் அது வழியாய்த்தான்போகிறது என்று சொல்லிச் சும்மாயிருந்தார்கள். அதன்பேரிலே துரையவர்கள் வளவிலே இவர்களை குமிசேலெல்லாம் கூடிக்கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கையிலே, வாசுதேவபண்டிதர் இருந்துகொண்டு (ா) துரையவர்கள் துக்கோபசரணையாய் இவர்களுக்கு வெகுமதிபண்ணி அனுப்பிவிட்டார். காரியமில்லை. இது க்ஷேமமற்போனல் உம்மைச் சொல்லுவார்கள் என்று சொன்னதின்பேரில், நான் சேஷாசலசெட்டியை அழைத்துக்கொண்டு போய் முன்னே விட்டு விடத்திலே என்னவென்று (ா) துரையவர்கள் கேட்டார்கள் அதின்பேரில் சேஷாசலசெட்டியார் சொல்லுகிறதாய் இவர்களுக்கும் சின்னமுதலியாருக்கும் நாலு கெசம் சகலாத்தும் மலையப்பமுதலியாருக்கு இரண்டு கெசம்

சகலாத்தும் கொடுக்கவேணுமென்று சொன்னதற்கு அந்தப் படிக்குத்தானே கோட்டைக்கு எழுதி அனுப்பிவித்து ஆறு கெசம் சகலாத்தும் அழைப்பித்து, பாக்கு வெற்றிலையும் பன்னீரும் மூஸ்தீதுபண்ணச்சொல்லி உத்தாரங் கொடுத்த படிக்கு மூஸ்தீதுபண்ணி எச்சரித்தவிடத்திலே சின்னமுதலியாரையும் மலையப்பமுதலியையும் அழைப்பித்து, சகலாத்தும் பன்னீரும் பாக்குவெற்றிலையும் கொடுத்தபிறகு சுவாமியையும் மனதிலே நன்ருய் தியானம் பண்ணுங்கள் என்று சொன்னர்கள். இதற்கு இவர்களும் சுவாமிக்குப்பிறகு உங்களை நம்பியிருக்கிறோம் என்று சொன்னர்கள். அந்த மட்டிலே அனுப்பிவித்துக்கொண்டு வீடுபோனர்கள். வீட்டுக்குப் போகையிலே சின்னதுரை வீட்டுக்குப் போனர்கள். சின்ன துரையவர்களும் என்னலே ஆன சகாயம் செய்கிறோம் போங்களென்று சொன்னர் இவர்களும் உபசாரங்கள் சொல்லிவிட்டு வளவேபோனர்கள். கும்பினீர் வர்த்தகரும், நானும் பின்னையும் சிறிதுபேர் கூடப்போய் முன்கட்டிலே உட்கார்ந்தபிறகு எல்லாருக்கும் வெற்றிலைப்பாக்குக் கொடுக்கச் சொன்னர். கொடுத்தபிறகு சின்னமுதலியாரை அனுப்பிவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தோம்

1746 ஸு மார்ச்சு மீ 1வ க்ஷயதன ஸு மாசி மீ 21வ

செவ்வாய்க்கிழமை காலமே பத்து மணிக்கு என்னையும் கறுத்தம்பி நயினரையும் அழைப்பித்து சின்னமுதலியாரையும் மலையப்பமுதலியையும் அழைப்பித்து இவர்கள் இரண்டுபேருடைய வியாச்சியமும் மகாநாட்டிலே கூடி கேட்கத்தக்கதாக வேண்டியதானபடியினலே...... எல்லோரையும் கூட்டித் தம்மண்டைக்கு அழைத்துவரவேணுமென்று உத்தாரங் கொடுத்தபடிக்கு மகாநாட்டுக்கு வரவேண்டியதற்கு உத்திரவு கொடுக்கிறோம் என்றும் உத்தாரங்கொடுத்தார். அந்தப்படிக்கு நயினருக்கு உத்திரவு கொடுத்து எல்லோரையும் அழைத்துவரச்சொன்னர் அந்தப்படிக்கு நயினரும் மகாநாடு கூட்டச்சொல்லி சேவகரையும் அனுப்பி அழைத்துவரச் சொன்னர்.

1746 ஸு மார்ச்சு மீ 2 வ க்ஷயதன ஸு மாசி மீ 22 வ

புதன்கிழமை காலமே பத்து மணிக்கு மகாநாட்டெல்லாரும் வந்து சேர்ந்தார்கள் என்று நா பெரிய துரையவர்களுக்குக் கபுறு சொல்லினமாத்திரத்திலே அவருடைய வளவிலே பெரிய மாலிகையிலிருந்துகொண்டு மகாநாட்டாரை அழைக்

ச் சொன்னவிடத்திலே அனைவரும் போய் சலாம்பண்ணி நின்றவிடத்திலே (ள) துரையவர்கள் இவர்கள் எல்லாரையும் பார்த்து இந்த நியாயம் தீர்க்கிறதற்கு நேமித்த பேர் வயணம்;

1. ஆனந்தரங்கப்பிள்ளை
2 லக்ஷ்மண்ணநாயக்கர்
3 சங்கர அய்யன்
4. ஆதிவராகசெட்டியார்
5 சித்தம்பலசெட்டியார்
6. அருணாசலசெட்டியார்
7 காளத்திசெட்டியார்
8 எழுத்துக்கார வீமன்
9. கொண்டுசெட்டி
10. நல்லதம்பிமுதலியார்
11. தில்லைமுதலியார்
12 பவழக்கார உத்திரபெத்துசெட்டியார்
13 பெத்தாச்சிசெட்டியார்
14. சுங்கு முத்துராமுசெட்டியார்
15. சுங்கு சேஷாசலசெட்டியார்
16. சலது வெங்கடாசலசெட்டியார்
17. வீராசெட்டியார்
18. அரியப்பமுதலியார
19. சின்னதுமுதலியார்
20 கருத்தம்பிநாயனர்

இந்த இருபது பேரும் இருந்து கனகராயமுதலியார் தம்பிக்குச் சுதந்தரிகமுண்டோ என்றும், அவர் பெண்சாதிக்குச் சுதந்திரிகமுண்டோ என்றும், இன்னவர் வீட்டுக்கு எசமானனென்றும் இருவர் வாக்குமூலமுங் கேட்டு அவரவர் சத்தியப்படிக்கு வந்து சொல்லவேண்டியது என்றும் சொல்லி உத்தாரங் கொடுத்திருந்தார். கேட்கிறதற்கு இடம் மூசே தும்மா தோட்டம் இப்போது கும்பினீர்தாயிருக்கிறதே அந்தத் தோட்டத்திலேயிருந்து கேட்கச் சொல்லி உத்தாரங்கொடுத்தால் நல்லதென்று அந்தப் பக்கத்திலே இந்த வியாச்சியம் தீர்க்க நேமித்த இருபது பேரையும் அனுப்பிவித்துக்கொண்டு சலாம் பண்ணிக் கொண்டு வந்தார்கள் ...... ..... அதன்பேரில் மகாநாடுகூடி கேட்கிறதற்குப் போகச்சொல்லிப் போனார்கள்.

1746 ௵ மார்ச்சு ௴ 3 உ க்ஷய ௵ மாசி ௴ 23உ வியாழக்கிழமை

காலமே கும்பனீர்தாயிருக்கிற தோட்டத்திலே மகாநாட்டார் அனைவரும் கூடி கனகராயமுதலியார் தம்பி சின்னமுதலி

யாரையும், முதலியார் பெண்சாதி நக்ஷத்திரம்மாளையும், அவளுடைய உடன்பிறந்தான் செகனிவாச முதலியையும், மலையப்பமுதலியையும் அழைப்பித்துக் கேட்டவிடத்திலே சின்ன முதலியார் தானியப்பமுதலியார் சொன்னது என்னவென்றால், எங்களுக்குத்தான் சுதந்தரிகம் உண்டென்றும் மற்றப்பேர் ஒருவருமில்லை என்றும் சொன்னார். அதிலே செகனிவாச முதலியும் மலையப்ப முதலியும் இவர் தகப்பனுடைய ஆஸ்தியை, தம்பி தமையனார், தங்கச்சிமார், தாயார் இவர்கள் பங்கிட்டுக் கொண்டமட்டுக்கும் இவன் தமையன் ஆஸ்திக்கு அவனுக்கு அக்கரையில்லை என்றும் இதல்லாமல் சித்தார்த்தினத்திலே பிராணவஸ்தையாயிருந்தபோது தானியப்பமுதலியார் ஆஸ்தி யெல்லாம் அவன் பெண்சாதிக்கு எழுதிவைத்தபடியினாலே முன் பங்குதீர்த்துக்கொள்ளாமற்போனால் இவர் அப்படி எழுதுவாரா? இவர் தமையனார் சம்மதிப்பாரா? அந்தப் படிக்கு நடந்திருக்கிறபடியினாலே இவரும் தன் பெண்சாதிக்கு எழுதினார். இவர் தமையனாரும் அவனுடைய உடைமையை அவன் மனதின்படியே நடப்பித்துக்கொண்டுபோகிறான். நமக்கென்னவென்று முதலியாரும் சும்மாயிருந்தார். இந்தப்படி நடந்திருக்கிறபடியினாலே இவர் பங்கு தீர்த்துக் கொண்டதற்கு இதுவே பெரிய சாதகமென்றும் சொன்னார்கள். அதற்குச் சின்னமுதலியாரை அழைத்துக் கேட்டதற்கு இவர்கள் வாய்ப்பேச்சினாலே சொல்லுகிறதற்கு நானும் பதினாயிரம் சொல்லுவேன். என் தமையனும் நானும விவாகம் பண்ணிக்கொண்டதற்கு லிகித புத்தி சாக்ஷி இந்த மூன்று காரியத்தில் ஒருகாரியம் சாதகம் வந்தால் பங்கு விட்டுவிட்டுப் போகிறேனென்று சொன்னார். அதிலே மத்தியஸ்தாரிருந்து கொண்டு நீர் அவஸ்தையாயிருக்கையிலே தெஸ்துமெண்டு என்று எழுதினீரே அந்த வயணமென்னவென்று கேட்டார்கள் அதற்குத் தானியப்பமுதலியார் சொன்னது: எனக்கு அவஸ்தையாயிருக்கையிலே கும்பினீர் வர்த்தகர் சங்கரய்யர், ஆதிவராகசெட்டி சித்தம்பலசெட்டி வீராசெட்டி, பின்னையும் நாலத்து ரெண்டுபேர் இருந்தவர்களைக்கூட அழைப்பித்து என் தமையனாரிடம் நீங்கள் போய்ச் சொல்லுகிறதென்னவென்றால், நான் நாளது வரைக்கும் உம்முடைய மரபிலே யிருந்து சம்பாதித்த சம்பாத்தியமெல்லாம் ஆயிரம் ஆயிரத்தன்னூறு வராகனுக்குள்ளே யல்லாமல் அனதமில்லை. இது உமக்கு ஒரு மாதத்திய செலவுக்குக் காணாது என்னுடைய ஆஸ்தியெல்லாம் ஆனபடியினாலே நீர் தயவுபண்ணி உத்தாரங் கொடுத்தாலேயல்லாமல் எனக்கா சுதந்தரிகமில்லையே தயவுபண்ணி உத்தாரங் கொடுத்தனுப்பிவைக்கவேணுமென்று எழுதிப்போடுகிறேன் இது அவர் சம்பாத்தியத்துக்கு அவர் ஆஸ்திகளே எவ்வளவோ பெரிது என்று இந்தப்

படிக்குத் தெரியப்படச்சொல்லி உத்தாரம் வாங்கி வரவேணு மென்று சொல்லி அனுப்பினேன். அந்தப்படிக்கு அவா சம்ம தித்து உத்தாரங் கொடுத்தனுப்பினார். அதின்பேரிலே நான் தெஸ்தமென்டு எழுதி அவரிடம் அனுப்பி, கையெழுத்துப் போடச்சொன்னால் அதிலே யவருக்கு........ ... ............ அதிலே கையெழுத்துப் போடமாட்டோ மென்றார். அதின் பேரிலே........................................முதலியாரைக்கொண்டு தெரியபடச்சொல்லி... ............................ ........இதற்கும் சம்மதியாமல் இவனுக்கு என்ன ஆஸ்தி.........................எழுதுகிறதற்கு இவனுக்குக் கொடுக்கிறதற்கு என்ன இருக் கிறது என்று சொல்லிக்கொண்டு கையெழுத்துப்போடாமற் போனார். அதின்பேரிலே என் தமையன் பெண்சாதி வந்து இவன் பெண்சாதிக்கு என்ன திரவியமிருக்கிறது. இவளுக்குச் சோற் றுக்கும் புடவைக்கும் அக்கரையே யல்லாமல் மற்றப்படி கன வை என்ன இருக்கிறது என்றும், இவன் எழுதினாற்போலே செல்லுமாவென்றும், வீடுவாசல் எல்லாம் ஆக்கிரமித்துக் கொண்டு உட்கார்ந்துகொண்டிருந்தாள். இப்படியிருக்கை யிலே தெய்வாதீனமாய் எனக்கு நாலு நாழிகைக்கு எல்லாம் அவஸ்தை நீங்கிச் சுவஸ்தமாச்சுது அந்தமட்டுக்கும் நடப்பித்த காரியங்களிலே நான் சுவதந்தரீகனல்லாமற் போனால் இப்படி நடக்குமா இதுவே எனக்குப் பெரிய சாதகம் நான் பங்குபயல் தீர்த்துக்கொள்ளவில்லை என்கிற தற்கு ஆனபடியினாலே நான் சுவதந்தரீகன். இந்த நியாயம் அல்லவென்று தள்ளுகிறதற்கு ஒரு சாதகங்கொண்டுவந்து தள்ளிப் போடச்சொல்லுமென்று, பின்னையும் அநேக காரியங் களும் சங்கதிகளும் பிரயோசனமில்லாத பேச்செல்லாம் சொன்னார். ஆனாலவர்வசமிருந்ததை மாத்திரம் எழுதினேன். அப்பால் செகனிவாசமுதலியாரையும் மலையப்பமுதலியாரை யும் அவர் அப்படிசொல்லுகிறதற்கு லிகிதமாவது, புத்தியாவது, சாக்ஷியாவது கொண்டுவந்தா லல்லவோ தள்ளவேணுமென்று கேட்டார்கள். அவர்கள் சொன்னதற்கு எங்களுக்கு லிகித புத்தி சாக்ஷி இந்த ஞாலத்திலே ஒன்றும் வரமாட்டாது. சத்தியம்பண்ணுகிறோமென்று சொன்னார்கள். இதற்குச் சாதகம் கொண்டுவந்து விடாதமட்டுக்கும் உங்கள் நியாயம் செல்லாது என்று சொல்லி, நல்லதுதான் நீங்கள் நன்றா யோசனைபண்ணிக்கொள்ளுங்கோள். இன்னும் நன்றாய் விசா ரித்துச் சாதகம் ஏதாகிலும் உண்டானால் நாளையதினம் கொண்டுவாருங்களென்று சொல்லி மத்தியஸ்தர் இருபது பேரும் நாளைக்கு என்று எழுந்திருந்து அவரவர் வளவுக்குப் போனார்கள். இவர்களுக்கும் அவர்களுக்கும் இதற்குள்ளே நடந்த பேச்சுக்களும் வார்த்தைகளும் கேட்டு இரண்டு பெரிய மனுஷர் லாயக்கானபேர் கூடி உள்பட.............................

சின்னமுதலியார் அநேகம் பேச்சுகள் சொல்லி, காகிதம் ஒன்றும் இல்லாமல் பிரயோசனம் என்னவென்று கேட்டதற்கு இதற்கிவர்கள் சொன்னதிலேயும் அவர்கள் சொன்னதிலேயும் சாரமாயிருக்கிறதைமாத்திரம் எழுதிவைத்தேன்.

1746 ஸு மார்ச்சு மீ 4உக்கு குரோதன ஸு மாசி மீ 24உ

வெள்ளிக்கிழமை கனகராயமுதலி தம்பிக்கும், கனகராய முதலியார் பெண்சாதி நக்ஷத்திரம் அம்மாளுக்கும் உண்டான வியாச்சியம் தீர்த்துவைக்கத்தக்கதாகச் சொல்லப்பட்ட தோட்டத்திலே * ........................ ...... ................... ... பண்ணி தீர்த்த வயணம்.

........ இந்த இரண்டு நாளும் ஒருவர் வாக்குமூலம் மூவர் வாக்குமூலமும்......கேட்டபடியினாலே இவ்விடத்திற்கு அவர்களை அழைப்பித்து ஏதாகிலும் சாதகம் பண்ணத்தக்கதுண்டா அல்லவா என்று நேற்றையதினம் சொன்ன பேச்சுதானு என்று கேட்டவிடத்திலே நேற்று சொன்ன பேச்சு மட்டுக்குமேயல்லாமல் இன்றைக்கு வேறே சொல்லத்தக்கதில்லையென்று சேஷணிவாசமுதலியாரும் மலையப்பமுதலியும் சொன்னபடியினாலே அவர்களைப் போகச்சொல்லி, சின்னமுதலியாரை அழைப்பித்துக் கேட்டவிடத்திலே அவரும் நேற்று சொன்ன உத்திரவுதான் வேறே உத்திரவு என்ன இருக்கிறது என்று சொன்னார். ஆனபடியினாலே, அவரையும் அப்பாலே போகச்சொல்லி மத்தியஸ்தர் இருபதுபேரும் கூடி ஆலோசனைபண்ணித்தீர்த்து கனகராயமுதலியார் உடைமைக்குச்சுதந்தரீகம் தன் திணத்துக்கு கர்த்தவியம் சின்னமுதலியாருக்கே யல்லாமல் அவர் பெண்சாதி நக்ஷத்திரம்மாளுக்கு கனவையில்லை என்றும், அந்த அம்மாளை வீட்டுக்குப் பெரிய மனுஷியாய் வைத்துக்கொண்டு அன்னவஸ்திரத்துக்குத் தாக்ஷியில்லாமல் நடப்பித்துக்கொண்டு அந்த அம்மை தானதர்மம் பரஉபகாரம் பண்ணவேணுமென்றால் அந்தப்படிக்குக் கொடுத்து நடப்பித்துக்கொண்டு ஒருத்தருக்கொருத்தர் அனுகூலித்திருக்கிறதற்கு இவர்களுக்குள்ளே கூடாதபடியினாலே இந்தம்மாளுக்கும் இந்த அம்மாளுடைய மருமகளுக்கும் அன்னவஸ்திரங்களுக்குத் தாக்ஷியில்லாமல் நடக்கிறதற்கு இவ்வளவென்று ஏற்படுத்துவோமென்றால் அதற்குத் துரையவர்கள் இந்த உடைமைக்குச்சுவதந்திரிகம் இன்னாரென்று வந்து சொல்லுங்கோளென்றபடியினாலே (ா) துரையவர்கள் உடனே போய்

* கிழிந்துவிட்டது.

இந்தச் சேதியைச் சொல்லி அந்த அம்மாளுக்கும் அதற்குத் தக்கன மார்க்கமாக நடப்பிக்கவேணுமென்று சொல்லுமிடத்தில் அவர் பார்த்துத் தீர்த்துச் சொல்லச் சொன்னால் அவர் சொல்லுகிறதுபோல் சொல்வோம் அல்லவென்று அவரப்படி ஆஸ்தியைப்பார்த்து இவ்வளவு அவர்கள் சீவனத்துக்குக் கொடுக்கவேணுமென்று சொன்னாலும் நல்லதென்று யோசனை பண்ணி.......... கடுதாசியிலே எழுதப்பட்ட விய ச்சியம் சம்மதியோடே பெரிக்கெத்து..........கடுதாசியிலே துவக்கி எழுதியிருக்கிறது. பார்த்துக்கொள்ளவேணுமென்றும்........

*1746* ஸு மார்ச்சு மீ *9* உ க்த ருரோதன ஸு மாசி மீ *29*உ புதன்கிழமை

இற்றை நாள் காலமே குவர்னேரவர்கள் கனகராய முதலியாருக்கு கப்புசினார் கோவிலிலே ஒப்பீசு படித்தார்கள். அதற்குப் போயிருந்து ஒன்பது மணிக்கு கோன்சேல் கூடினார்கள். பத்து மணிக்கு கோன்சேல் கலைந்து அவர்கள் போனார்கள். இந்தக் கோன்சேல் பண்ணுகிற சாடையென்ன வென்றால், ஒருத்தருக்கும் இன்னதென்று தெரியாதும் மாயே சிப்பாய்களே ஐம்பத்தைந்து பேரும் இரண்டு பேர் ஒப்பிசியேமாரையும் பயணம்பண்ணினார்கள். இவர்கள் சாயங்காலம் ஆறரை மணிக்குப் பயணம் புறப்பட்டுத் தெற்கே போனார்கள். இன்னவிடத்திற்குப் போனார்களென்று ஒருத்தருக்கும் தெரியாது. சிறிதுபேர் காரைக்காலுக்குப் போனார்கள் என்றும் பரங்கிப்பேட்டைக்குப் போனார்களென்றும் நானு விதமாய்ச் சொல்லுகிறார்கள்.

இற்றை நாள் சாவடி மணியமாயிருந்த சூரப்பமுதலியார் குமாரன் அப்பாக்கம்பி காலம்பண்ணிப்போனான். சாயங்காலம் கல்லறையிலே கொண்டுபோய் அடக்கினார்கள்

மேலே யெழுதியிருக்கப்பட்ட மாயே சிப்பாய்களுடைய செய்தி இன்ன விடத்துக்குப் போனது தெரியவில்லை என்றல்லோ எழுதியிருக்கிறது. அவர்கள் போனது என்ன காரியமாய்ப் போனார்களென்றால், திருச்சிராப்பள்ளியிலிருந்து அசரத்து மாபுசுகான அவர்கள் அனுப்பிவித்த இரண்டு வெண்கல பீரங்கியும் தேவனாம்பட்டணத்துக்கு நேராய் வருகையிலே ஒரு வேளை இங்கிலீஷ்காரரும் மற்றப்பேர் யாராகிலும் தடைபண்ணிவிடப்போகிறார்களென்று சொல்லி இவ்விடத்திலிருந்து சிப்பாய்களும் இரண்டு ஒப்பிசியேமாரும் திருவந்திபுரத்துமட்டுக்கும் போய் அந்த பீரங்கியும் பிறகே கூடவந்து இற்றைநாள் பங்குனி மீ முதல்தேதி வியாழக்கிழமை ஊர் வந்து சேர்ந்தார்கள்.

**1746 ஞு மார்ச்சு மீ 11 உ க்கு குரோதன ஞு பங்குனி மீ 2 உ வெள்ளிக்கிழமை**

இந்த நாள் நடந்தசேதி என்னவென்றால், கனகராயமுதலியார்வீட்டு வியாச்சியம் முன்சொல்லப்பட்ட இருபதுபேர்மத்தியஸ்தரும் (ரா) துரையவர்களண்டைக்கு மத்தியானம் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது போய்ச் சொன்னார்கள் இந்த வயணம்:—கனகராயமுதலியாருடைய ஆஸ்திக்கு அவர் தம்பி தானியப்பமுதலியார் சகலத்திற்கும் தனரிணத்துக்கும் கர்த்தனென்றும், அவர் பெண்சாதிக்குப் பிள்ளை பிறந்து காலம்பண்ணிப்போனபடியினாலேயும் மகாராசனைப் பெரியவனையிருந்தவனுடைய பெண்சாதியானபடியினாலேயும் கைம்பெண் கூறென்று தீர்க்கிறது நியாயமில்லை யென்று கனகராயமுதலியார் சம்பாதித்த ஆஸ்தியிலே இந்த அம்மைக்கும் இந்த அம்மையினுடைய மருமகளுக்கும் ஆஸ்திக்குத் தக்கதாய் சுகசீவனமாய் இருக்கத்தக்கதாக, நடப்பிக்கத்தக்கதாக, சுகந்தர்கம் உண்டாயிருக்கிறபடியினாலே இந்தம்மைக்கு மரியாதைப்படிக்கு நடப்பிக்கவேணுமென்று சொன்னார்கள். அதற்கு (ரா) துரையவர்களிருந்துகொண்டு கனகராய முதலியார் தம்பி பங்கிட்டுக்கொண்டு போனார் என்று சொன்னார்களே அது என்ன மாயாச்சுதென்று கேட்டார் அதற்கு மத்தியஸ்தரிருந்துகொண்டு எதிராளியினுடைய சாதகம் கேட்டால் சாதகமில்லை யென்று சொன்ன சங்கதியெல்லாம் வயணமாய்ச் சொன்னதின் பேரிலே, நல்லது இவன் பங்கிட்டுக்கொள்ளாதபடியினாலேதான் சுதந்தரிகன் ஆனானே, பங்கிட்டுக்கொண்டு போயிருந்தால் இவன் சுதந்தரிகன் ஆவானோ என்று கேட்டார் அதற்கு மத்தியஸ்தரிருந்துகொண்டு பங்கிட்டுக்கொண்டு போயிருந்தாலும் கனகராய முதலியாருக்குப் பிள்ளையில்லாதபடியினாலே அவருடனே கூடப் பிறந்த சகோதரமிவரானபடியினாலே இவருக்குச் சுதந்தரிகமல்லாமல் மற்றப்பேருக்குக் கவையில்லை என்று சொல்லி, ஒரு வேளை கூடப் பிறந்த சகோதரமில்லாமல் ஞாதிகளிலே ஒருத்தரிருந்தாலும் அவன் சுதந்தரிகனாவான் என்று சொன்னார்கள். (ரா) துரையவர்கள் இருந்துகொண்டு இப்போது நீங்கள் தீர்த்தபடிக்கு ஒரு காகிதத்திலே ஊர்க்கணக்கன் கையெழுத்தாய் எழுதி வைத்து அதின் கீழே நீங்கள் எல்லாரும் கையெழுத்துப் போட்டுக்கொண்டு வாருங்களென்று உத்தாரங்கொடுத்துப் போகச்சொல்லிச் சொன்னார். அதின் பேரிலே எல்லாரும் நாளை காலமே வந்து கூடி தீர்த்து எழுதிவைத்துக் கையெழுத்துப் போட்டுக்கொண்டுபோய்க் கொடுப்போமென்று சொல்லி விட்டுப் போனார்கள்.

1746 ஞூ மார்ச்சு மீ 5 உக்கு குரோதன ஞூ மாசி மீ 25 உக்குச் சொல்லப்பட்ட மத்தியஸ்தர் இருபது பேரும் மூசே தும்மா தோட்டத்திலே கூடி தீர்த்து எழுதின வயணம்:—

(ஈ) துரையவர்களுக்கு எழுதிக்கொடுத்த தீர்ப்புக்கு வயணம்:—

1746 ஞூ மார்ச்சு மீ 5 உக்கு குரோதன ஞூ மாசி மீ 25 உ

புதுச்சேரிபட்டணம் பிராஞ்சுக்கும்பினீர்காரியத்து....... மூசே சிஞ்ஞேர், குவெர்னேர் துப்ளேய்க்சு அவர்கள் சமுகத்தில் கனகராய முதலியார் அவர்கள் தம்பி தானியப்பமுதலியார் அவர்களும் கனகராய முதலியார் அவர்கள் பெண்சாதி நக்ஷத்திரம்மாளும் கனகராய முதலியார் அவர்கள் காலம்பண்ணிப் போனபடியினாலே அவர் சம்பாதித்த அப்பு ஆஸ்தி, நிமித்தியம் இவர்கள் ஒருத்தருக்கொருத்தர் வியாச்சியப்பட்டு தானியப்பமுதலியாரும், நக்ஷத்திரம்மாள் தம்பி செகனிவாசமுதலியாரும், மலையப்பமுதலியாரும் (ஈ) துரையவர்களுடனே வந்து சொல்லிக் கொள்ளுகையில் (ஈ) துரையவர்கள் இருவர் வாக்கு மூலங் கேட்டு மகாநாட்டார் லக்ஷ்மண நாயக்கரவர்கள் சங்கரய்யர் அவர்கள் ஆனந்தரங்கப்பிள்ளையவர்கள். சுங்கு முத்துராமு செட்டியார் அவர்கள், சுங்கு சேஷாசலசெட்டியார், ஆதிவராகசெட்டியார், சித்தம்பலசெட்டியார், சலத்து வேங்கடாசலசெட்டியார், வீரராகவசெட்டியார் சூரியப் முதலியார், சின்னது முதலியார். பெத்துசெட்டியார், பெத்தாச்சிசெட்டியார், நல்லதம்பிமுதலியார், தில்லையப்பமுதலியார். அருணாசலசெட்டியார், காளத்திசெட்டியார், கொண்டிசெட்டியார், பீமணமுதலியார், கறுத்தம்பிநயினார் அவர்கள் இந்த இருபதுபேரையும் அழைப்பித்து (ஈ) துரையவர்கள் சொன்னது உங்கள் சாதி நியாயப்படிக்கும் உங்கள் சாஸ்திரப்படிக்கும் பக்ஷபாதகமில்லாமற்படிக்கும் இருவர் வாக்குமூலங்கேட்டு கனகராயமுதலியாரவர்கள் அப்பு ஆஸ்திக்கு இந்த இரண்டுபேருக்குள்ளே யாருக்குச் சுதந்தரிகம் உண்டு என்று தீர்த்துவந்து சொல்லுங் கோளென்று உத்தாரங் கொடுத்தபடியினாலே மகாநாட்டார் இந்த இருபதுபேருங்கூடி இருதிறத்தார் வாக்குமூலங்கேட்கையில் தானியப்பமுதலி அவர்கள் சொன்னது: என் தமையன் கனகராயமுதலியார் சம்பாதித்த தனத்திற்கும் சகலத்திற்கும் கர்த்தன் நானேயல்லாமல் பின்னை ஒருவருக்கும் கவையில்லை யென்று சொன்னார். செகனிவாசமுதலியாரும், மலையப்பமுதலியாரும் சொன்னது கனகராயமுதலியாருக்கும் தானியப்பமுதலியாருக்கும் அவர்கள் தகப்பன் சம்பாதித்த ஆஸ்தி இருவரும்

பங்குதீர்த்து வாங்கிக்கொண்டு போனபடியினாலே கனகராய முதலியார் அவர்கள் சம்பாதித்த ஆஸ்தி எங்கள் தமக்கையைச் சேரவேணுமே யல்லாமல் தானியப்ப முதலியாருக்குக் கவையில்லை என்று சொன்னபடியினாலே தகப்பன் சம்பாதித்த பணம் அண்ணன் தம்பிமார் பங்கிட்டுக்கொண்டுபோனதற்கு லிகித புத்தி சாக்ஷியுண்டா என்று கேட்குமிடத்திலே லிகித புத்தி சாக்ஷியில்லையென்று சொன்னபடியினாலே லிகித புத்தி சாக்ஷியில்லாத காரியம் செல்லாது என்று மகாநாட்டார் அனைவருக்கும் சம்மதியில்லை. அதினாலே தள்ளிப்போட்டு, கனகராயமுதலியாரவர்கள் சம்பாதித்த திரவியத்திலே அவர் பெண்சாதிக்கும் அவர் மருமகளுக்கும் சுதந்தரிகம் உண்டானபடியினாலே மரியாதைப் பிரகாரம் நடக்க வேண்டியது இந்தப்படிக்கு மகாநாட்டார் கூடி தீர்த்தோம். இது எழுதினதற்குச் சாவடி கணக்குப்பிள்ளை முத்தியப்பிள்ளை அவர் கணக்கு சூரியான் கையெழுத்து... ... ..... ... .......... இந்தப்படிக்கு எழுதிக்கொண்டு (ஈ) துரையவர்கள் மூசே தூப்ப்ளேய்க்சு அவர்களும் கையெழுத்துப்போட்டார்.

1746 ஹு மார்ச்சு மீ 12 உ க்ஷய குரோதன ஹு பங்குனி மீ 3 உ சனிவாரம்

* ... ... . ... ... ... ... ..

என்கிறவன் ஏதாகிலும் சொல்லுவான். நீங்கள் அதையெல்லாம் மனதிலே யெண்ணவேண்டாம் என்று சொன்ன சங்கதியும் அவன் வீட்டிலேயிருந்துகொண்டு எந்நேரம் கிட்டுகிற சாடையும் மகாபதிவிரதைப்போலே-சாப்பிடுகிறதும் இந்தச் சமாசாரமெல்லாம் அடிக்கடி கேட்டிருந்தபடியினாலேயும் விசயராகவலு ஆசாரியார் சொன்னதற்குச் சரியாயிருந்ததென்று கண்டுகொண்டு இவன் மோசம்பண்ணிவந்ததற்கும் சந்தேகமில்லையென்று யோசனைபண்ணினேன். இதல்லாமலும் இதற்குமுதல்நாள் இராத்திரி பனிரெண்டுமணிக்குநம்முடைய வீட்டிலேயிருந்து வீட்டுக்குப் போகவேணுமென்று போகையிலே நம்முடைய குதிரைலாயத்தண்டையிலே ஒரு வெள்ளைக்காரப்பிள்ளை என்னும் பேத்தாளை உயரம் கறேலென்று கண்டது. நாங்கள் அதைக்கண்ட மாத்திரத்திலே அங்கே யிருந்து ஒரு ஓட்டமாய் வெள்ளாழத் தெருவிலே முடிய மேற்குப் பார்க்க ஓடினான். நாங்களும் பயந்து எவனோஎன்னமோ என்று பயந்துப் போனோமென்று சொன்ன அய்யமார் விசயராகவாச்சாரியார், ரங்காச்சாரியார், தெய்வநாயக அய்யங்கார், தெற்கேயிருந்துவந்த சிதாரம் சோசியனும் கூடப்போனோம் என்று

* ஒன்பதுவரிகள் கிழிந்திருக்கின்றன.

சொன்ன சாடையைப்பார்த்தால் செகன்னிவாசந்தான் அதற்குச் சந்தேகமில்லையென்று தீர்த்தேன். அங்கே யிருப்பானேனென்றால், தம்பி திருவேங்கடம் எனக்குச் சொல்லி கனகராய முதலியார் பெண்சாதிக்குச் சுதந்தரீகம் கவையில்லை ... ... தம்பி தானப்பமுதலிக்குச் சகல சுதந்திரம் என்று தீர்த்து ...

... ... ... ... ... ... ... ... ...

தான குறையெல்லாம் தோத்தியிருக்கிறபடியினாலே... ...

... ... த்துக்கொண்டு அவன் ஓ ... ... ...

... ... ஓடினவனும் செகன்னிவாச ... ... ...

... ... ராத்திரி கண்ட அய்யமாரை ... ... ...

க்கிறது ... என்று கேட்டால் ... விவ ...

* ... ... ... ... ... ... ...

... ... ... ... ... ... செகன்னிவா

... ... ... ... ... மோசம் பண்ண வந்த

... .. ... ... ... ண்டேன்.—

... ... ... ... நடந்த சேதி யென்னவென்றால்

... ... ... ... வருவானென்று ஆலோசனை பண்

... ... ... ... அரம் வளர்த்தானென்கிறபேர்

... ... ... ... ... பேரையும் நம்முடைய

... ... ... ... தி. லுவனு வீடு முதற்கொண்

... ... ... ... தெரியச்சொல்லியும் மேலண்டை

... ... பிரகாரம் சதாசிவப்பிள்ளை வீடு முதற்கொண்டு

நம்முடைய வீடு மட்டுக்கும் இரண்டுபேரை திரியச்சொல்லியும், இவர் .....லு பேருடைய வேஷமாறி திரியச்சொல்லியும் இதற்கு மைகக்ஷி நம்முடைய வீரராக வைத்தியர் சொல்லியும் வீரராகும் நாலு சேவகரிலே ஒருத்தனும் வெள்ளாழத் தெருவிலே நம்முடைய தம்பியிருக்கிற வீடு முதற்கொண்டு சாவடி கணக்கு முருகப்பிள்ளை வீடு மட்டாகச் சுற்றிப் பார்த்துவரச்சொல்லித் திட்டம்பண்ணி, பத்து மணிக்கு அனுப்பினேன். அவர்களிலே பதினொரு மணிக்கு வீரராகும் ஒரு சேவகனும் வந்து கபுறு சொன்னது: செகனிவாசன் ஒரு கறுப்பு கம்பளி போர்த்திக்கொண்டு முருகப்பிள்ளையும் அவனும் வெள்ளாழத்தெருவிலே புறப்பட்டுவந்து முருகப்பிள்ளை வீட்டண்டையிலே வந்து ஒரு நாழிகை மட்டுக்கும் நின்று பேசிக்கொண்டிருந்து அப்பாலே முருகப்பிள்ளை வீட்டுக்குள்ளே நுழைந்தார்கள். அப்போது நாங்கள் சந்திரம்பிள்ளை வீட்டுத்திண்ணையின்பேரிலே யிருந்து பார்த்துக்கொண்டிருந்தோம். இப்பால் நமக்கு வேண்டியதென்னவென்று கேட்டார்கள் அவன் அப்படித்தானே சேவையாய்ப் போய்விட்டானு

---

* 9 வரிகள் முக்கால்வாசி கிழிந்துபோய் இருக்கின்றன.

போகட்டும் அல்லது நம்முடைய தெருவிலே புறப்பட்டுச் சேவையாய்ப்போனால் போகட்டும். அப்படிப்போகாமல் நம்முடைய தெருவிலே சதாசிவபிள்ளை வீட்டண்டையிலே யிருக்கிற குடிசையண்டையிலே நேற்றையதினத்தைப்போல ஒளிந்திருந்து...இப்புறம் சிதம்பரம்பிள்ளை வீட்டண்டை... ... ... ...நம்முடைய திண்ணையண்டையிலே வந்து நின்றாலும் ... ... ... அனுப்பினேன். அவர்கள் போனதும் தம்பியிருக்கிற வீட்டண்டை வந்து நின்றாலும்.

... ... ... ... ... அனுப்பின சாடையும்
விசைய ... ... ... அய்யங்காருடனேயும் சொல்
... ... ... ... அடித்து அரை மணி நேரத்திற்கு
... ... ... ... பார்த்துக்கொண்டிருந்தோம். முருக
... ... ... டயில்லை. உள்ளே தானே யிருக்கு ...
... .. ... ... ... ... ...
... ... ... ... ... ... ...
* ... .. ... ... ... ...
† ... ... ... ... ... ...

......ப்பிக்கப்பண்ணி தான் சகலத்திற்கும் மந்திரியாயிருக்கவும் அல்லது கனகராயமுதலியார் தம்பிக்குப் பாதியும் அவர் பெண்சாதிக்குப் பாதியாய்த் தீர்த்தாலும் துப்பி ............ ஆஜிராயிருக்கிறபடியினாலேயும், அவர்கள் காரியத்திற்கு நிர்வாகம்பண் ..........கிறோமென்று பரவசம் கொடுத்திருக்கிறபடியினாலேயும், அவர்............. ய இந்தக் காரியம் இனம் பண்ணிக்கொள்ளவேணுமென்று.......................லச்சொல்லி ...........................கட்பிள்ளையும் மத்தியஸ்தத்திற்கு வகிக்கச்சொல்லி ........ டியினாலே அந்த யோசனைகள் ஒன்றும் நடவாதே போனபடியினாலே நம்மைச் சரிகட்டினால் அப்புறம் மலையப்பமுதலிக்கு வருமென்று யோசனை பண்ணிக்கொண்டு முருகப்பிள்ளை கூட இந்தப் பயித்தியக்காரனுக்கு இப்படி தப்பு ஆலோசனை சொல்லியிருப்பானென்று தோற்றுது. ஆனால், சின்னமுதலியாருக்குக் கொடுப்பார்களே யல்லாமல் இவனுக்குக் கொடுப்பார்களா? இந்த ஆலோசனை அவர்கள் பண்ணினார்களாயென்றால், அந்த ஆலோசனையும் பண்ணுவார்கள். அதெப்படி யென்றால், சின்னமுதலியார் வியாதிஸ்தன், திரிய தள்ளாதவன், அல்லவென்று அதிகார ஆசையினாலே திரிந்தாலும் .....மதுரைகள் சின்னமுதலியார் கையிலே ஆகா

* ஒன்பது பக்கம் கிழிந்து அரைவாசி முக்கால்வாசி எழுத்துகளில்லை.

† 10 வரி ... ... ... பெரிய துபாசித்தனம்.

தவன் மிகுதியும் கைலஞ்சம் வாங்குகிறவன் என்றும், ஆபத்துக்காரனென்றும், இவனுக்குக் கொடுக்கப்போகாதென்றும் நாளது வரையிலே துரைகள் அனைவரும் சொல்லிக்கொண்டு வருகிறபடியினாலேயும் ... ... ... ... ... மலையப்பமுதலியாருக்கு மிகுதியும் இருக்கிறபடியினாலேயும் ... ... ... ருக்குக் கொடாமல் மலையப்பமுதலி பத்துப்பண முகாந்திரமாய் ... சொல் ... ... லாமென்று இந்த யோசனையெல்லாம் பண்ணி முருகப்பிள்ளை ......க்கு அனுகூலமாயிருப்பானென்று தோற்றுது. இதல்லாமல் ... ... ... ... ரேும் ... ... இந்தப் பக்கத்திலே ... ள்ளே போய் யோசனை பண்ணுகிறபடியினாலேயும் ... ... ராயிருந்து நடத்துகிறரென்று கெட்டியாய்த் தோற்றுது. இதல்லாமல் ... ... ... ... ...

1746 ஹு மார்ச்சு மீ 3 உ க்கு குரோதன ஹு பங்குனி மீ 4 உ ஆதிவாரம்

... ... ம. துரோகம் பண்ணுவாரென்று ... .. நடத்தை ... ... அல்லாமல் அந்த யோசனை நடவாதென்று ... ... தெரியும் மனுஷருக்குத் தெரியாது. மனுஷயோ ... ... ... ... ... ... இருக்கிறவிடத்திலே உட்கார்ந்திருக்கையிலே தெய்வநாயக அய்யங்காரும் விசயராகவாச்சாரியாரும் இரண்டுபேரும் வந்தார்கள். அவர்கள் வந்து சொன்ன கபுறு என்னவென்றால், நாங்கள் வர சம ... . ... ... முருகப்பிள்ளை வீட்டுத்தெருவிலே முருகப்பிள்ளையும் செகனிவாசமுதலியாரும் இரண்டு பேரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். செகனிவாச ... .. கொண்டு நின்று பேசியிருக்கிறர்கள். நாங்கள் பார்த்துவந்தோம் என்று சொன்னார்கள். இவனிப்படி இராத்திரி இருட்டுக்காலத்தில் வேஷமாறிக் கம்பளியும் போட்டுகொண்டு ஒண்டியாய் உங்கள் வீட்டைச் சுற்றினாற்போலே தானே திரிகிறது. அவன் மனதிலே ஒரு களங்கமில்லாமல் திரியான். இதற்கு நீங்கள் சும்மாயிருக்கிறது யுக்தமில்லை, துரையவருக்காகிலும் சொல்லி அவனுக்குத் தாக்கீது பண்ணவேணும் அல்லவென்றால், நீங்களாகிலும் இராமாறு சாக்கிரதையாய் வெளியே புறப்படாமலிருக்கவேணும். எங்களுக்கு இராமாறு பத்து நாழிகைக்குமேல் இவ்விடத்திற்கு வருகிறதற்கு எங்கள் மனதிற்கு அச்சம் தோற்றியிருக்கிறது. ஆனபடியினாலே, நாங்களும் இனிமேல் இராமாறு பத்து நாழிகைக்குமேல் இவ்விடத்திற்கு வருகிறதில்லை என்

றும் இப்படியாக மெத்தவும் பயந்து அநேகவிதமாய்ச் சொன்ஞர்கள். ... ... ந்துகொண்டு இது முகாந்திரமாய் யாதொரு காரியம் நடக்கிற ... ... ... யிருந்தால் நாமென்ன மூலே வீட்டிலே யிருந்தாலும் விட ... ... நடக்கிறதற்கு ஏஷ்யமில்லாமலிருந்தால் அவன் எ ...... ம் பண்ணவேணுமென்று' திரிந்தாலும் ஒருக்காலும் ...... வந்தது வார்த்தை......படி பேசிக்கொண்டிருக்கிற சமயத்திலே ........ வந்து சொன்னசேதி செகனிவாசமுதலி கம்பளி போர்த்துக்கொண்டு

* ... ... ... ... ... ... ... ...

† ... ... ... ... ... ... ... ...

பேரையும் பார்த்து இன்றைக்கு இந்தத் தெருவிலே வராதேபோனசாடை யென்னவென்ருல், இவ்விடத்திலே. நடந்த சேதிகள் அங்கங்கே சாடை சாடையாய்ப் பிறந்தது இதல்லாமலும் முருகப்பிள்ளை இவ்விடத்திலே யாரையோ மனுஷரை ... .. விடத்திலே நடந்துகொள்கிற சேதியெல்லாம் அறிந்துகொள்ளுகிருன். ஆனபடியினலே, இந்தச்சேதி இவ்விடத்திலே நடந்திருக்கிற சாடையும் செகனிவாசமுதலிக்குச சொன்னபடியினலே இந்தத் தெருக்களிலே போனல் மோசம் வரும் என்று யோசனைபண்ணி இந்தத்தெரு வராமல் அப்படித்தானே போனன். இனிமேல் அசரப்போட்டு வருவானேயல்லாமல் உடனே இந்தப் பாரிசம் வரானென்று சொன்னேன். அதற்கு அய்யமார்களுமிருந்து மெய்தானென்று சொன்ஞர்கள். பின்னையும், ஒரு நாழிகை நேரம் லோகா பிராம வார்த்தைகளாய்ப் பேசியிருந்து பனிரெண்டு மணி யடித்துச் சப்தங்கேட்டு மணியானல் பனிரெண்டாச்சுது நாங்கள் வளவுக்குப்போகிருேம் என்று அனுப்பிவித்துக்கொண்டு போனர்கள். நானும் தெருக்கதவை சாத்திவிட்டு வந்து பாய்ப்போட்டுக்கொண்டிருக்கையிலே வீரராகு வந்து பனிரெண்டடித்து அரை மணிக்கு வந்து சொன்ன சேதி யென்னவென்ருல், இங்கேயிருந்து அனுப்பிவித்துக்கொண்டு வீட்டுக்குப் போன அய்யன்மார், வைபோகன் வீட்டண்டை போகையிலே நானும் ஒரு சேவகனுமாக அன்னப்பமுதலி வீட்டுத் திண்ணையின் பேரிலே படுத்துக்கொண்டிருந்து வருகிறவர்களைப் போகிறவர்களைப் பார்த்துக்கொண்டிருந்து ......................
.................இவர்கள் வீடுபோய்ச் சேர்ந்த கபுறும் பார்த்துப்போவோமென்று இவர்கள் பின் தொடர்ந்து போனேன். அவர்கள் வைபோகமுதலி வீட்டண்டையில்

---

* 11 வரிகள் அரை வாசியும், முக்கால் வாசியும் கிழிந்திருக்கின்றன.

† 12 வது வரியிலிருந்து ஆரம்பிக்கப்பட்டது.

பேர்கிறவர்கள் நான், தென்னவராயமுதலியா॥ வீட்டுக்கிட்டேவர..........இவன்தான் செகனிவாசமுதலி வந்தானென்று பயந்து ஒருத்தர் * ... ... ... ... ... ... ... ... ... ... அறியார்களா என்று கேட்டேன், என்னை தூரக் கண்ட மாத்திரத்திலே இத்தனை யவஸ்தைப்பட்டுப் போகிறவர்கள் என்னைக் கிட்டே கண்டால் என்னமாய் ஆவார்களோ என்று கிட்டே போகாமல் செவ்வையாய்ப் புறப்பட்டு வந்துவிட்டேன் என்று சொன்னான்

**1746** ௵ மார்ச்சு மீ 16 உ க்கு குரோதன ௵ பங்குனி மீ 7 உ புதன்கிழமை

இற்றைநாள் காலமே எட்டு மணிக்கு (ா) துரையவர்கள், அழைத்துவரச் சொன்னார் என்று வீட்டிலே யிருக்கையிலே கும்பினீர் சேவகன் வந்து அழைத்தான். அதின்பேரிலே நான் போய் கண்டு பேசினவிடத்திலே அவர் எழுதுகிற கபினேத்திலே இருவருமே யல்லாமல் மூன்றும்பேர் இல்லை. அங்கே என்னை அழைத்துப்போய் கும்பனீர் இப்புறம் வரவேண்டியிருக்கிறதே, நீ பணம் செலுத்துகிறதில்லை. இந்தப் பணம் எல்லாம் என்னசெய்துபோட்டாய் கும்பினீருக்குக் கொடுக்க வேண்டிய பணம் கொடுக்கத் தேவையில்லை என்றும், நீ என்ன வட்டிவைத்துக்கொடுக்கிறாய் என்றும் இந்தப்படியெல்லாம்.. .. சொன்னார். அதற்கு நான் சொன்னது: உம்முடைய பணத்தை நான் எடுத்துக்கொண்டு சூதாடி தோற்றுவிடவுமில்லை. பின்னேயும், விருதாவாய் செலவழிக்கவுமில்லை..................... பண்ணவிடத்திலே கப்பல்மேலே சிறிது பணம் நின்றிருக்கிறது, வெளியிலே சிறிது பணம் அவரவர் கொடுக்கவேணும். லாலாப்பேட்டையிலே உள்ளூரிலே சரக்கு நிலுவையிருக்கிறதும், இந்தத் தொகைகளெல்லாம் சொல்லி உமக்குக் கொடுக்கவேண்டிய பணத்துக்கு இரட்டித்த பணம் இருக்கிறது. உம்முடைய பணத்துக்கு ஈடு சுப்பலச் சம்மதியும் உள்ளூர் நிலுவையும் எழுதிவைத்தால் உம்முடைய சம்மதி சரிபட்டுப்போகுதென்று சொன்னேன். அதற்கு அவரிருந்துகொண்டு நான் ஈடு இல்லை என்றும், நீ கொடுக்கமாட்டாய் என்றும் சொல்லவில்லை. ஆனால், திரிச்சிராப்பள்ளியிலேயிருந்து வந்த.. ......ண்ண கையிலே நீ பதினாயிரம் வராகன் வாங்கிக்கொண்டாயே அந்த வராகனை கும்பினீருக்குச் சம்மதி பண்ணால் உனக்கு லகுவாயிருக்குமேயென்று சொன்னேனென்று சொன்னார்..................

---

* 12 வரிகள் கிழிந்துவிட்டன.

அதின்பேரிலே நானிருந்துகொண்டு, அய்யா, நான்பதிஞயிரம் வராகன் வாங்கிக்கொண்டேனென்று உங்களுடனே சொன்ஞர்களே. அந்த மனுஷரை அழைப்பித்து, கொடுத்த மனுஷரும் இங்கே யிருக்கிருர்களே அவர்களையும் அழைப்பித்து என்னையும் அதற்கேற்றபடி சாதகபாதகத்துடனே விசாரித்து அறுபத்துநாலு காசிலே ஒரு காசி அளவிலே யிருந்தாலும் நான் கும்பினீருக்கு ஆக்கினைப்பட்டுப் போகிறேனேயல்லாமல் வெறுமனே என்பேரிலே சொல்லியிருந்தால் அவர்களை இந்த ஆக்கினை இடவேண்டுமென்று சொன்னேன். அதற்கு அவரிருந்து கொண்டு, ஆனல், அவன் பெண்சாதி பிள்ளைகள் எல்லாரையும் போகச்சொல்லி ஏன் உத்தரவு கொடுத்து அனுப்பிவிட்டாயென்று கேட்டார். அதற்கு நானிருந்துகொண்டு, போகிறவர்களைப் போகவேண்டாமென்று நீர் கட்டுப்பண்ணச் சொன்னீரா அப்போதுதானே எப்போது அவன் வரவில்லையோ அவனைப் போகச்சொல்லுமென்று சொல்லவில்லையா? அதற்கு நானிருந்துகொண்டு இவனை விடப்போகாது, இன்னமொரு உபாயம் பண்ணிப் பார்ப்போம் ஆனல் ஆகுது, போனல் போகுது என்று சொல்லித் திட்டம்பண்ணினேனேயல்லாமல் மற்றப்படியல்லவே. அப்படியிருக்க, நான்தானே இப்படி பண்ணினேன் என்று சொன்னல் நான் செய்யவாவது என்ன இருக்கிறது. அவனை மாத்திரம் பத்திரம் பண்ணச் சொல்லிச் சேவகருடனே சொல்லிவைத்தேன். அவன் பிள்ளையாண்டான் இருபதுதரம் போய்ப்போய் வந்தானென்றும், அவன் பெண்சாதி இரண்டுமூன்று தரம்போய் வந்தார்களென்றும் இவர்களிவ்விடத்திற்கு வரவேணுமென்றும் வந்தார்கள். நான் கைப்பணம் செலவழித்து எந்த உபாயமாகிலும் இப்படிப்பட்ட பேர் இரண்டொருத்தரை அழைப்பித்தால் உமக்கு விசேஷித்த பிரயோசனமாம். அதிஞலே என்பேரிலே உமக்குப் பிரீதியுண்டாமென்று யோசனைபண்ணி நாளாக நடத்தின காரியமாய் நீர் ஏதாகிலும் உத்தாரங் கொடுத்தீரா, இதெல்லாம் நீங்கள் யோசனைபண்ணிப் பாருங்கோள் என்று சொன்னதினபேரிலே நல்லது அவருடனே சொல்லி அவர் சூஞ்சு குழந்தைகளை அழைப்பிக்கச்சொல்லு; இல்லாவிட்டால் நான் எழுதிக் கொடுத்த கவுலை அழைப்பித்துக் கொடுக்கச்சொல்லு என்று சொன்ஞர். அதற்கு நானிருந்து கொண்டு ஐயா, அப்படித்தானே அவர்களுக்குச் சொல்லுகிறேனென்று சொல்லி, பின்னேயும் ஒரு விசேஷம் சொல்லுகிறேன். கோபம் பண்ணத்தேவையில்லை என்று ஒரு வார்த்தை சொன்னேன். அவர்கள் வரும்போது என்னமாய் வந்தார்களோ, வரும்போது சிறிது கொண்டுவந்திருப்பார்கள்

போலே கண்டது. அப்பாலிவர்கள் இவ்விடத்திற்கு வந்த பிற்பாடு மேலே போட்டுக்கொண்டிருக்கிற கட்டுமுட்டை விற்றுச் சாப்பிடுகிறுர்கள் என்று உங்களுடனே கூடச் சொல்லவில்லையா? என்று கேட்டதற்கு வாயை மூடிக் கொண்டிருந்தார். அதின்பேரிலே நானிருந்துகொண்டு உம் முடனே சொன்னவனை அழைப்பித்து நீர் தெரிந்துகொண்டு, நான் அபத்தக்காரனென்றும், அவன் அபத்தக்காரனென்றுந் தான் அறிகிறதெப்படி. உம்முடைய காரியத்துக்குள்ளே நான் பிரயாசைப்படுகிறேனென்று ஊரெல்லாம் திட்டாத பேரில்லை. கொல்லவேணும் குத்தவேணும் என்றும் இப்படி யெல்லாம் திரியும்போதுகூட யாரென்ன சொன்னாலும் சொல்லட்டும். யாரென்ன செய்தாலும் செய்யட்டும் என் றும் சொன்னேன். உம்முடைய அன்பு மாத்திரம் இருந்தால் போதும் என்றும் நான் வரப்போதேயல்லாமல் நான் ஆதாயத் தைக் குறித்துப் பார்த்ததில்லையென்று அநேக முகாந்திரத்திலே சொன்னேன் அதெல்லாம் எழுதவேணுமென்றால் நாலு காகி தம் ஆறு காகிதம்செல்லும். ஆகிலும், எழுதினதினாலே சுவா ரஸமில்லாதபடியினாலே விஸ்தரித்து எழுதவில்லை. அதற்கு, துரையிருந்துகொண்டு சுங்குவார் கணக்கென்ன, ஆனைக்காரர் கணக்கென்ன என்று இந்தப் பேச்சைவிட்டு வேறே பேச்சைப் பேசினார் அதின்பேரிலே எல்லாவற்றுக்கும் நல்லது இந்தக் காரியத்திலே அபத்தக்காரனென்றும் நசஸ்தனென்றும் அறி யத் தேவையில்லையா. அறிந்துகொண்டாலப்புறம் ... ... சுவஸ்தமாயிருக்கும், என் மனதுக்கும் களங்கமில்லாமல் இருக் கும். என் பின்னையும் அநேகவிதமாய்ச் சொன்னவிடத்திலே யும் அதை மறக்கடிக்க யோசனைபண்ணி ஆலம்புரவியிலிருக் கிற கப்பல் கோதாவுக்கு 100 ரூபாய் கொடுத்தனுப்பி அந்தச் செலவு சிட்டாயும் பத்திரமாயும் கணக்கெழுதி வை, போவென்று சொன்னார். நான் வருகையிலே திரும்பியும் தமி ழரை நம்பப்போகாது. திருவேங்கடத்தைக் காவல்வைத்த சீட் டுச் சம்மதி அபத்தமென்றும் வெளியிலேயிருக்கிற மனிதர் எத்தனையோ பொய் சாதகங்களை எழுதியனுப்பினார்கள். இதெல்லாம் பார்த்துப் பெதுருவந்து இந்தத் தமிழரை நம்பிப் போகாதென்று சொன்னான். இனிமேல் நீர் அந்த இடத்துக்கு வருகிறபோது நீ யல்லவோ விசாரிக்கவேணும். உன் தலையை என்னமாய்த் திருப்ப எத்தனை பொய் சாதகங்களை உண் டாக்குவார்கள் என்று சொல்லி நீ சீக்கிரமாய்ப் போய் ஆலம் புரவிக்கு ஓலை எழுதி கிளாசுக்காரனை அனுப்பிவிடு என்று சொன்னார். இந்தத் திரிச்சிராப்பள்ளியார் சேதி நாலு மாதமாய் திருச்சிராப்பள்ளிக் கோனப்பய்யன் அண் ணன் மகன் வேங்கடகிருஷ்ணன் என்கிறவன் திருட்டுப் பையன். இந்த ஊரிலே இரண்டு மூன்று வருஷமாய்

வந்து திரியாவரமாய் சிவனம் பண்ணிக்கொண்டு அபத்தங்கள் பேசிக்கொண்டு கள்ளப்பயலாய் திரிந்துகொண்டிருந்தவன், முதல் மார்கழி மாதத்திலே அப்புடன் சொன்னான். என்னவென்று சொன்னானென்றால், திருச்சிராப்பள்ளியிலே ஒரு ரசபுத்திரன் சேவித்தான் என்றும் அவன் கையிலே மீனாட்சி அம்மாள் கடன் வாங்கினாள் என்றும், அதற்காக கோட்டைக்காட்டு வேங்கடாசலய்யன் பிணையிருந்தானென்றும் அந்தச்சீட்டு இருக்குது என்றும், அது ஐம்பதினாயிரம் பொன்என்றும், இதற்குத்துரைக்குக் கால்வாசி கொடுக்கிறோம் என்றும், அப்புக்குக் கொஞ்சம் கொஞ்சம் கொடுக்கிறோம் என்றும் இப்படியாகச் சொன்ன சேதியை என்னுடனே சொல்லியிருந்தான். இதிலே அவன் வீட்டிலே சரீர சுவஸ்தமில்லாமலிருந்து வீட்டிலேதானே இருந்தபடியினாலே இப்போ மதாம் துப்பிளேக்சு அண்டையிலேயிருக்கிற நாராயணனென்கிற துபாசிப்பிள்ளையாண்டான் முகாந்திரமாய் சென்னப்பட்டணத்திலேயிருந்து வந்திருக்கிற பார்ப்பனப் பிள்ளையும், ஒரு தத்துவாதி பார்ப்பானுங்கூட சேர்ந்து மதாமுக்குச் சொல்லி அவளுக்குக் கால் கொடுக்கிறோமென்று ஆசையைச் சொல்லி அவளைக்கொண்டு துரைக்குச் சொல்லிவித்து இப்படியெல்லாம் நடப்பித்தார்கள். உண்டானது உண்டு இல்லாதது இல்லை அபத்தரு சொல்லிக்கொண்டிருக்கிறவர்களுக்கு இது காலமானபடியினாலே இப்படி நடக்கிறது கடைசியிலே மெய் மெய்யாய் நிற்கும் பொய் பொய்யாய் நிற்கும். ஆனாலிந்த வேளைக்கு வருத்தமேயல்லாமல் மற்றப்படி ஒன்றும் நடக்க அறியாது. ஏனென்றால். சுவாமியிருந்து எல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறபடியினாலே உள்ளது உள்ளதாம்படியே முடியும்.

1746 ௵ மார்ச்சு மீ 17 உ க்ஷய ௵ பங்குனி மீ 8 உ

வியாழக்கிழமை நாள் நடந்தசேதி 1 உ புதன்கிழமை நாள் இராத்திரி பதினொருமணி நேரத்திலே ஈசுரன்கோவிலிலே யாரோ இரண்டுபேர் கல்பாசியிலே நரகலைக் கரைத்துவந்து பலிபீடம் சுற்றிலே யிருக்கிற தெய்வங்களிதுகள் தலையிலேயும் விட்டு ஈசுரன் சன்னதி சாலக வாசலாலே உள்ளேயும் இறைத்து நந்திகேசுரன் பேரிலேயும் அதையும் உடைத்தும் போட்டு கோவில் இடிந்திருக்கிற வழியோடே புறப்பட்டுப் போனார்கள். இற்றைநாள் உதயத்திலே நம்பியானும், கோவில் தொழிலாளிகளும், கோவில் பெரியவாசல் கதவைத் திறந்து உள்ளேபோன விடத்திலே இந்தப்படி அசுசிபண்ணிகிடக்கிறதை யெல்லாம் பார்த்து வெளியிலே வந்து பெரிய கிரகஸ்தர்களாயிருக்கிற பேர்களுடனே போய்ச் சொல்லி, மகாநாட்டா

ருடனேயுஞ் சொல்லி, அவர்களையும் கூட்டிக்கொண்டுவந்து கோவிலிலே பண்ணியிருக்கிற அசுசியெல்லாம் காண்பித்தார்கள். அதின்பேரில் நம்பி அவர்களும் நாலுபேர் பிராமணரும் புறப்பட்டுப் பிராமண வீதிமுதல் சகலவீதிகளிலேயும் போய் வீட்டுக்கு வீடு ஈசுரனுக்குப் பூசையில்லை. ஈசுரன்பேரிலேயும் தேவிபேரிலேயும் ஆணையிருக்கிறது. யாரும் அடுப்பு மூட்டிச் சமையல் பண்ணத் தேவையில்லை சாப்பிடவும் தேவையில்லையென்று ஆணையிட்டார்கள், அதின்பேரிலே ஒன்பது மணிக்குப் பெருமாள்கோவில் வாசலிலே மகாநாடு கூட்டினார்கள். அதிலே கூடினபேர் பிராமணர்முதற்கொண்டு பறையர்வரைக்கும் சகல சாதியும் கூடினார்கள். பட்டணத்திலே கடையெல்லாம் கட்டினார்கள் இந்தச் சேதி (ா) துரையவர்கள் கேட்டு, பாளையக்கார நயினாரைக்கூட்டி வரச் சொல்லி ரொம்ப கோபம் பண்ணி, நயினார் வர சல கிரிமோசி பண்டிதரை அனுப்பிவித்து மகாநாடு கூடியிருக்கிறபேரையெல்லாம் அடித்துத் துரத்தி விடச் சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அந்தப்படிக்கு, கிரிமோசிபண்டிதர் மகாநாட்டார் கூடியிருக்கிற விடத்திலே போய் ஒரு செட்டியைக் கன்னதறிலே அடித்து எல்லாரையும் ஓடிப்போகச் சொல்லி, திரும்பவும் அடிக்கப்போனார். இதிலே மகாநாட்டாருக்குள்ளே பத்துப்பேர் குறுக்கே வந்து விழுந்து நீர் அடிக்கிறதென்ன, அவரவர் மதத்துக்கு அவரவர்கள் கூடார்களா எங்கள் கோவிலிலே இப்படியெல்லாம் பண்ணக் காரியமென்ன, இது துரையவர்கள் விசாரிக்கவேணுமென்று நாங்கள் கூடினால் நீர் வந்து அடிக்கிறதென்ன, எல்லாரையும் கொன்றுபோடுங்களென்று தெரிப்புமேலே தள்ளிவிட்டார்கள் அதின்பேரிலே கிரிமோசிபண்டிதர் (ா) துரையவர்களண்டைக்கு வந்து நடந்த சேதி யெல்லாம் சொன்னார். அவர் சொன்ன சேதியை துரையவர்கள் கேட்டு, சின்னமுதலியாரையும் பிள்ளையவர்களையும் அழைத்துவரச் சொன்னார்கள். அப்போது சின்னமுதலியார் வந்தார். அவரை துரையவர்கள் அழைத்து நீ போய் மகாநாட்டாரைக கூட்டிவாவென்று அனுப்பிவித்தார். அந்தப்படிக்குச் சின்னமுதலியார் போனார் அவர்போன பிறகு பிள்ளையவர்களும் வந்தார்கள். உடனே (ா) துரையவர்கள், பிள்ளையவர்களையும் போய் மகாநாட்டாரைக் கூட்டிவரச்சொல்லி அனுப்பினார்கள். அதின் பேரிலே பிள்ளையவர்களும் போய் முதலியார் அவர்களுமாக மகாநாட்டாருக்குச் சொல்லி மகாநாட்டாரை (ா) துரையவர்கள் அண்டைக்குக் கூட்டிவந்தார்கள் இரண்டு மணிக்கு மகாநாட்டாரும்வந்து (ா) துரையவர்களைக்கண்டார்கள். அப்போது (ா) துரையவர்கள் மகாநாட்டார்பேரிலே ரொம்ப கிரிமோசி பண்டிதரை அடிப்பானேனென்றும் உங்களைச் சுட்டுப்போடச்சொல்லுவோமென்றும் ரொம்பவும் கோபம்பண்ணி அதின்

பேரிலே எல்லாவற்றிற்கும் உங்கள் காரியமெல்லாம் பிள்ளையவர்களுடனே சொல்லுங்கள். அவர் நமக்குச் சொல்லித் தீர்த்துக்கொடுப்பார். நீங்கள் கூடியிருக்கத் தேவையில்லை என்றும் சமாதானமாகச் சொல்லி அந்தக் காரியமெல்லாம் பிள்ளையவர்கள் பேசுகிறதென்று பிள்ளையவர்கள் முகாந்திரம் பண்ணி மகா நாட்டாரை அனுப்பிவித்தார் மகாநாட்டார் எல்லாம் போனவுடனே மாயே துலுக்கரிலே நூறு இரு நூறுபேரை மகாநாட்டாரைச் சுடுகிற நிமித்தியம் (ா) துரையவர்கள் அண்டைக்கு வந்தார்கள். அதற்கு முன்னே மகாநாட்டார் சம்மதி தீர்ந்துபோனபடியினாலே அவர்களையும் அழைத்து நாலு வாசலிலேயும் மகாநாட்டார் போகாமல் பத்திரமாயிருக்கச் சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அந்தப் படிக்கு மாயே துலுக்கரும் போனார்கள். இற்றைநாள் நாலு மணிக்குள்ளே இவ்வளவு நடந்தது இனிமேல் என்ன நடக்குமோ தெரியாது.

*1746* ௵ மார்ச்சு ௴ *18* ௳ குரோதன ௵ பங்குனி ௴ *9* ௳ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் பனிரெண்டு மணி அடித்து இரண்டு மணி அடிக்கையிலே என்னையும் சின்னமுதலியாரையும் (ா) துரையவர்கள் அழைக்கச் சொன்னாரென்று சேவகன் அழைக்கவந்தான். அப்போது ஸ்நானம்பண்ணிச் சாப்பிடப்போகிற வேளையிலே வந்தபடியினாலே சாப்பிடாமல் அங்கி போட்டுக்கொண்டு துரை வீட்டண்டை போகையிலே அதற்குமுன்னே சின்ன முதலியார் போய் கண்டுபேசி எதிராக வந்தவர் எத்தனை பேர் நோயாளிகள் வந்தார்கள், நியாயக்காரர் வந்தார்களென்று கேட்டார். நான் அறியேன் என்று சொன்னேன் என்று சொன்னார். நம்மைக் கேட்டால் நானும் அப்படிதானே சொல்லுகிறேனென்று சொல்லிவிட்டுத் துரையண்டைக்குப் போனேன். துரை என்னைக் கண்டாற்போலே காரைக்காலிலேயிருந்து ஒரு குருப்பிலே நெல் ஏற்றிவரும்போது தேவனும் பட்டணத்தார் பிடித்துக்கொண்டுபோனார்களென்றும், அதிலே ஒரு சோனகன் வந்தான்; அவனண்டைக்கு ஒரு சோனகனை அனுப்பி மும்பரிந்து எந்தப்படிக்குச் சொல்லச் சொல்லி அனுப்பினானே அதற்கு வழுவுதலை வராமற்படிக்கு தைரியத்துடனேயிருந்து சொல்லச்சொல்லு என்றுசொன்னார். அந்தப்படிக்குச் சொல்லிவந்தால் அவனுக்கு ஒரு வராகன் கொடுத்து கும்பினீர் பற்றிலே எழுதிவையென்று சொல்லி திரும்பியும் இரண்டு வராகன் கொடு என்று சொன்னார். அந்தப்படிக்குத்தானே யனுப்பிவிக்கிறோம் என்று சொல்லி விட்டுவந்து சாப்பிட்டு, பீருமரைக்காயன் தம்பி நம்மு

டைய இடத்திற்குப் பாராகாரியமாய் வந்திருந்தவனை யழைப்பித்து மேலே எழுதப்பட்ட வயணமெல்லாம் சொல்லி பத்திரமாய் அதற்கு எப்படிச்சொல்லவேணுமோ அப்படியெல் லாம் சொல்லியனுப்பினேன். இதல்லாமல் ஊரிலே கேட்கப் பட்டசேதியும் தேவனாம்பட்டணத்திலே யிருந்து வந்தவர்கள் சொன்ன சேதியும் இங்கிலீஷ் கப்பல் காமண்டோராய் வந் திருக்கிறவன் மஞ்சகுப்பத்திலே கும்பினீர் தோட்டத்திலே யிறங்கியிருக்கிறானே அவன் சிறிதுபேர் சொல்தாதுகளையும் கூட்டிக்கொண்டு, சிறிது தமிழ ராணுவையும் சேர்த்துக் கொண்டு சிறிது பீரங்கிகளையும் மருந்து குண்டு சண்டை முஸ்தீதாய் புறப்பட்டு சூசரெட்டிரி மட்டுக்கும் சாரிவருகிறா னென்றும், சாரிவந்து மறுபடியும் புதுச்சேரி எல்லைக்கு அடுத் தாற்போலே யிருக்கிற தீவானத்து எல்லை ஓரமாய்ப் புறப் பட்டுத் தேவனாம்பட்டணத்துக்குப் போகிறதாகவும் இப்படி யாக ஊர்ச்சிதமாகவந்து கபுறு கேள்விப்பட்டது. இந்தச் சேதி புதுச்சேரி குவர்னர் கேட்டு நபாபு அன்வருத்தி கானுக்குக் காகிதம் எழுதி அனுப்பின வயணம், இங்கிலீஷ்காரர் உங்களைச் சற்றாகிலும் எண்ணாமல் எங்கள்பேரிலே சண்டைக்கு வரவேணுமென்று வருகிறார்கள். ஆனால், நாங்கள் உங்கள் அதைப்பு மனதிலே வைத்துக் கொண்டு நாங்கள் அவர்கள்பேரிலே சண்டைக்குப் போகாம லிருக்கவேணுமென்றிருக்கிறோம். ஆனால், ... ... ... சமீபத்திலேயிருக்கிற உங்கள் எல்லையிலே இறங்கியிருந்து எங்கள் பட்டணத்தின்மேலே ராசகாரியம் பண்ணவேணு மென்று நினைத்துவருகிறமட்டுக்கும் எங்கள் படையும் எங் கள் எல்லையிலே இறங்கியிருப்பார்களேயல்லாமல் உங்கள் எல்லையிலே சோராவரி பண்ணத்தக்கதில்லை. ஒரு வேளையிலே யவர்களாக ஒரு காரியத்தை நடத்தினால் அப்போது நாங்கள் சும்மாயிருக்கத்தக்கதில்லை. ஆனபடியினாலே, ஒரு வேளையிலே உங்கள் எல்லையிலே யாதொரு காரியங்கள் நடந்தாலும் எங் கள்பேரிலே சொல்லக்கவையில்லை எங்கள் பேரிலே விசேஷ மில்லாமல் எழுதிக்கொண்டோ இதுதானும் எங்களை எழுதத் தக்கச் செய்தவர்கள் இங்கிலீஷ்காரரென்றும் நீங்கள் அறிந் திருக்கவேண்டும் என்றும் உங்களுக் கெழுதிக்கொண்டோ மென்று எழுதியனுப்பினார்கள்.

*1746*ஸு மார்ச்சுமீ *19*உ க்குரோதனஸு பங்குனிமீ *10*உ சனிவாரம்

(ஈ) துரையவர்கள் பேர்கொண்ட பண்டிகையானபடியி னாலே அவரவர் பேட்டி சாட்டிகள் பண்ணிக்கொண்டு இந்தச் சம்பிரமத்தின்பேரிலே யிருந்துபோனார்கள். விசேஷித்த செய்தி ஒன்றுமில்லை.

**1746ஞு மார்ச்சுமீ 20 உக்கு குரோதனஞு பங்குனிமீ 11௳**

ஆதிவாரம் நடந்த சேதி என்னவென்றால், முந்தாநாள் கூடலூருக்குச் செய்தி யறிய ஒரு சோனகப்பிள்ளையாண்டானை அனுப்பியிருந்தோமே அவன் வந்துசொன்ன செய்தியென்னவென்றால், காரைக்காலிலிருந்து மூசே பரிதி நெல் ஏற்றி யனுப்பின வடக்கத்தி வாராக்கை தேவனும்பட்டணத்தார் பிடித்துக்கொண்டுபோய் அந்த வாராக்கிலே ஏற்றின நெல்லுக்குக் காபந்தாய் மூசே பரிதி அனுப்பின சோனகன் ஒருத்தன் அந்த வாராக்குக்கு எசமான் சாரங்குதண்டல், இரண்டுபேர் வடுகர் ஆக மூன்றுபேரையும் அழைத்துக் கேட்டவிடத்திலே அவர்கள் சொன்னது, நாகூர் நாகப்பட்டணம் இந்த குருப்புபேரிலே கெழவுக்கு நெல் ஏற்றிக்கொண்டு வடக்கே மயிலாப்பூர் சென்னப்பட்டணம் எந்தத் துறையிலே விலை நேராயிருக்கிறதோ அந்தத் துறையிலே விற்கத்தக்கதாகப் போகிறோமென்று சொன்னதற்கு அது பொய், நீங்கள் புதுச்சேரிக்குப் போகிறீர்களென்று சண்டைக்கப்பல் கொம்மாந்தான் சொன்னதற்கு இல்லையென்று சொன்னார்கள். ஆனால் சென்னப்பட்டணத்து விலைக்கு இவ்விடத்திலே பிரியமாயிருக்கிறதென்றும், உங்களுக்குப பிரியமாயிருக்கிறவிடத்திலேயல்லவோ விற்கவேணும். ஆனபடியினாலே, இந்தூர் விலைப் பிரிய விலை இங்கேதானே நெல்லை யிறக்கி விற்றுப் போடுங்களென்று கொம்மாந்தான் சொன்னதற்கு நல்லதென்று சொல்லாமல் நத்துபத்தென்று சொன்னதின் பேரிலே சந்தேகப்பட்டு கப்பல் வடுகர் ரெண்டுபேரையும் பேருக்கு இப்போ கூடிப் போட்டமாத்திரத்திலேயே எங்களுக்குக் காரியமென்ன, அடிபடுகிறதற்குப் புதுச்சேரி துரைக்கு, காரைக்காலிலேயிருந்து மூசே பரிதி அனுப்பினதென்று உள்ள தத்துவத்தைச் சொல்லிப்போட்டார்கள். அதின் பேரிலே சோனகனை என்னவென்று கேட்டதற்கு அவன் அடித்ததின் பேரிலே அடி பொறுக்கமாட்டாமல் சரிப்போனபடிக்கெல்லாம் சொல்லுகிறார்களென்று சொன்னதின்பேரில் கொம்மாந்தான் சொன்னவனைப் பத்தடிபடச் சொன்னான். அதின் பேரிலே சோனகன் சொன்னது மெய்தான் என்னிதுமல்ல, புதுச்சேரி துரையுதுமல்ல, புதுச்சேரி ஆனந்த ரங்கப்பனது என்று காரைக்காலிலே யவர்கள் கிராமமிருக்கிறதே அந்தக் கிராமத்து நெல் என்று சொன்னானும். அதின் பேரிலே புதுச்சேரி வர்த்தகருடையதேயானால் விட்டுவிடுகிறோமென்று தேவனும்பட்டணத்து குவர்னதோர் சொன்னதாகவும் அதின்பேரிலே குவர்னதோர் இருந்துகொண்டு நீயோரே பேச்சாய் புதுச்

சேரி வர்த்தகருடையது என்று உள்ளபடிக்குக் கோஞ்சலிலே கேட்கச்சே தீர்மானமாய்ச்சொன்னால் விட்டுவிடுகிறோமென்று சொல்லிப்படிக்கு அரைப்பணம் கொடுக்கச்சொல்லிக் கொண்டு போய் காவல் வைக்கச்சொன்னார்கள் என்று வடுகருக்குப் படி கொடாமல் சோற்றுக்கும் விடாமல் கைதிலே பத்திரம் பண்ணினார்களென்றும், அவர்களண்டையிலே ஏழெட்டு சேவகர் காவலிருந்துகொண்டு ஒருத்தரையும் கிட்டிப்பேச எட்டவில்லையென்றும், குளத்துக்குப் போனாலும் நீர் கலங்கப் போனாலும் அந்தச் சேவகர் கூடப்போகிறபடியினாலேயும், சோனகனுக்குத் தண்ணி வேணுமானாலும், சாப்பாடு வேணுமானாலும் சேவகர் தானே கொண்டுவந்து கொடுக்கிறதேயல்லாமல் பின்னையொருத்தரையும் சேர ஒட்டவில்லை. நானும் இரண்டு நாளைக்கு ஒட்டிப்பார்த்தேன். கூடாமற்போச்சுது. ஆனபடியினாலே, இந்தச் சமாசாரத்தை யறிந்துகொண்டு வந்துவிட்டேன் என்றும் காமன்டோ சாரிப் புறப்படுகிறதற்கு முஸ்திப்பு பண்ணுகிறதும் மருந்து குண்டுகள் பீரங்கிகள் முதலாகிய சண்டை முஸ்த்திரிகளெல்லாம் எத்தனம் பண்ணிக்கொண்டு புறப்படுகிற சட்டமும் இந்த மட்டுக்கும் எட்டுக் கப்பல் துறையிலே வந்திருக்கிறதென்று கப்பல்கள் கடலின்பேரிலே வருகிறாப்போலேயும் வெள்ளைக்காரர் கரை வழியாக வருகிறதாகச் சொல்லிக்கொள்ளுகிறார்களென்றும் இப்படியாக வந்து சொன்னான். அதின்பேரிலே இற்றைநாள் சாயங்காலம் ஆறரை மணிக்கு (ா) துரையவர்களண்டைக்குப் போய் சாரி வருகிற செய்தியைச் சொல்லாமல் சோனகன் சொன்னதும், வடுகன் சொன்னதும், அவர்கள் அடிபட்டதும் இனிமேல் நடத்தப்போகிற சங்கதியெல்லால் வயணமாம் படியே சொல்லிப்போன ஆள் சோனகனைக் கண்டு பேசவிடாமல் வந்துவிட்ட சாடையும் பூர்வோத்தரமாம்படியே சொன்னதற்கு, துரைசொன்னதைப் படித்துக்கேட்டால் சரிப்போனாற்போலே சொல்லுவார்கள் இதினாலே இங்கிலீஷ்காரருக்கு அபகீர்த்தி ரொம்பவென்று சொன்னதின்பேரில் நான் தரகுத் தக்காப்போலே யவர்களுக்குத் தூஷணையான வார்த்தையாய் சொன்னேன் அதற்கு அவரும் சிறிது தூஷணங்களைச் சொல்லி, பின்பு இந்தச் சேதியெல்லாம் எழுதி அனுப்பினேனென்று சொன்னார். அந்தப்படித்தான் செய்யவேண்டியது என்று சொன்னதற்கு, கனகராயமுதலி வீட்டு உடமை தட்டுமுட்டு இதெல்லாம் பார்த்துச் சோதித்து இவ்வளவு ஆஸ்தியென்று எழுதிவரவில்லையா என்று கேட்டார்.......... நேற்றையதினம் பெதுரு தம்பி இவ்விடத்துக்கு அனுப்பினாலே கூடாதென்று சொன்னாரென்று சொன்னேன். அதற்கு நாளைக்காகிலும் தீர்த்துப்போடு என்று சொன்னார். நல்லதென்று சொல்லி வந்துவிட்டேன்.

நான் வீட்டுக்கு வந்த இரண்டு நாழிகைக்கு எட்டடித்தான். எட்டடித்தவுடனே கெவுனி பெரிய கதவு சாத்திவிட்டு விடுகிறதே விட்டுப்போட்டு பெரிய கதவை சாத்திப்போடச் சொன்னுன் துரை என்றும், அந்தப்படிக்கு கெவுனி வாசல்களெல்லாம் சாத்திஞர்களென்றும், வெளியே போகிறவர்கள் போகாமல் நின்றுபோனுர்கள் என்றும் ஒன்பது மணிக்கு எப்போதும் சாத்துகிற வாடிக்கை யானபடியினலே ஒன்பதுக்குள்ளே போவோமென்று இருந்தார்கள். எட்டு மணிக்கே சாத்திவிட்டபடியினலே வெளியே போகிறவர்கள் வெகுபேர் நின்றுபோனுர்கள் என்று சொன்னுர்கள். ஏன் சாத்திஞர்கள் என்ருல், இங்கிலீஷ்காரர் சண்டைக்கு வருகிருர்களென்று சொல்லியிருக்கிற சாடையின்பேரிலே சாத்ினதாகச் சொனனுர்கள்.

1746 ஞு மார்ச்சு மீ 21 உ க்கு குரோதன ஞு பங்குனி மீ 12 உ திங்கட்கிழமை நாள்

நாலுமணிக்கு நிசாம் அண்டையிலேயிருந்து இமாம் சாயபு வாங்கி அனுப்பின காகிதங் கொண்டுவந்து இமாம்சாயபு மனுஷன் அவாய் சாயபு (ா) துரையவர்கள் அண்டைக்குக் கொண்டுவந்து கொடுத்தான். நிசாம் காகிதத்திலேயிருக்கிற வயணம் படித்துப்பார்க்கையிலே பதினெரு பீரங்கி சுட்டார்கள் அந்தக் காகிதத்திலேயிருந்த வயணம்: ஏனும் பெத்திரியின்பேரிலே ராசாக்காரியம் பண்ணிக்கொண்டிருந்த சிகாக்குலம் ராசமகேந்திரம் நவாபுக்கு தாக்கீது பண்ணினேம் என்றும், இனிமேல் உங்கள் காரியத்திலே தொந்தரவு பண்ணுமல் மரியாதையாய் நடப்பிப்பார்கள் துரையவர்கள் சினேகமானதினலே உபசாரமாய் எழுதிவந்தது என்றும் துரைக்குப் படித்துக்காண்பித்தார். அதின்பேரிலே இமாம் சாயபு காகிதம் நிசாம் காகிதம் வாங்கி அனுப்பி..............இருபத்தையாயிரம் ரூபாய்க்குச் சகலாத்தாகிலும் ரொக்கமாகிலும் கொடுக்கச் சொல்லி எழுதியிருந்த காகிதத்தைப் பார்த்துப் படித்துச் சொனன மாத்திரத்திலே துரை முகத்தைச் சுளித்துக்கொண்டு அந்த வார்த்தைக்குப் பிரதி உத்தாரம் கொடாமல் பாக்கு, வெற்றிலே, பன்னீர் அவாய் சாயபுக்குக் கொடுத்தனுப்பிவிட்டார். அந்தப்படிக்கு................சடையாஷ சாடையைப்பார்த்து அவாய் சாயபும் லேசடையாய்ப் போனுர்கள். இதனுல் ராத்திரியும் எட்டு மணிக்கு......து வாசல் கதவுகளெல்லாம் சாத்திஞர்கள்.

*1746*ஞு மார்ச்சுமூ 22உக்கு குரோதன ஞு பங்குனிமீ 13உ செவ்வாய்க்கிழமை

சூரிய உதயமான ஐந்து நாழிகைக்குள்ளே சூரியக்கிரகணம் பிடித்துவிட்டது. இதற்கு முன் பதினைந்தாம்நாள் பருவத்தன்று சந்திரகிரகணம்.

இற்றைநாள் இமாம் சாயபுக்கு பதிலுத்தாரம் எழுதச் சொன்னது இருபத்தய்யாயிரம் ரூபாய்க்கு ரொக்கம் கொடுக்கிறதற்கில்லை உங்கள் மனுஷர் சகலாத்து கேட்டால் கொடுக்கிறோம் என்றும் யானத்துலைப்பேச்சுக்கும் நபாபு அசப்சா தாக்கீது வந்ததே அங்கே ராசமயேந்திரத்து நபாபு மறைவாய்ப் பண்ணுகிறதேயில்லை சுவாமியைத் தொட்டு மறைவாய்ப் பண்ணல் பண்ணுகிறபடி, இல்லாவிட்டால் நிசாம் தாக்கீதைத் தொட்டு நடக்கிறுப்போலே யிருக்கிறதில்லையென்றும் மணிலாக்கப்பல் மகம்மதுசா என்கிற கப்பல் பேச்சை மறந்துபோனீர், அதற்கு எப்படியுண்டோ காரியம் அப்படியே பார்க்கச்சொல்லி எழுதியனுப்பச்சொல்லி உத்தாரங் கொடுத்தார். அந்தப்படிக்கு எழுதியாச்சுது எப்போ அனுப்புவார்களோ தெரியாது.

* ... ... ... ... ... ... ... ...

*1746* ஞு மார்ச்சுமீ *26* உக்கு குரோதன ஞு பங்குனி மீ 17 உ சனிவாரம் நாள்

காலமே பத்து மணிக்கு நான் பாக்குக்கிடங்கண்டையிருக்கிற சமயம் என் கணக்கன் ரங்கப்பிள்ளையும் கிட்டேயிருக்கும்போது நான் அவனிடம் சொன்னது என்னவென்றால், கனகராயமுதலியார் காலம்பண்ணிப்போனவுடனே சின்ன முதலி எனக்குச் சொல்லியனுப்பிவித்த கிரிமாசி பண்டிதர் கிறிஸ்தவர் என்னிடம் வந்தார். அவர் சொன்ன வயணம். கனகராயமுதலி காலம்பண்ணிப் போனவுடனே அந்த நாழிகைக்குச் சொல்லியனுப்பினார். இதல்லாமல் பின்னை நாலு நாழிகைக்கு என் தம்பி விசாரிக்கப்போனபோதும் சொன்னபடியினாலேயும் அன்று ராத்திரி என்னண்டைக்கு வந்து முகதாவிலே சொல்லி எங்கள் வீட்டை நிறுத்துகிற காரியமேயல்லாமல் சாமானியமான காரியமல்ல. இப்படி பெரிய மனுஷன் வீடு எடுபட்டுப்போகிறதை நிறுத்தினார் என்கிற கீர்த்தி சாசுவதமாய் நிற்கும், புண்ணியமுண்டு என்று சொன்னாரே

* பாதிவரை கிழிந்துபோய் இருக்கிறது

யென்று இதையெல்லாம் நான் யோசனைபண்ணி இதைத் தொட்டும் மகத்தாகிய கீர்த்தி வரும் சகல சனங்களுக்கும் இவரிப்படிப்பட்ட சமயத்திலே நிர்வாகம் பண்ணினாரென்று கீர்த்தியாய்ச் சொல்லிக்கொள்ளுவார்களென்றும், இதினாலே அநேகந் தூரத்துக்குக் கீர்த்தி பிரதிஷ்டையுண்டென்றும் யோசனைபண்ணி (ஈ) துரையவர்கள் மனதை முன்னே மதாம் துய்ப்ளேய்க்சு கலைத்து மாறுபாடாய்ப் பண்ணியிருந்ததை நான் போய் அவர் மனதைக் கலைத்து இவர் முகமாக்கி இவர் பேரிலே சந்தோஷம் வரப்பண்ணினால் கனகராயமுதலியார் பெண்சாதிக்கும் நம்மைச் சொல்லியேனும் என்னைக்கூட நினைக்கிறமட்டுக்கும் பகை தோன்றியிருக்கிறபடியினாலே ...............அறிந்திருந்தும் சின்னமுதலியார் நம்முடைய இடத்திலேயிருந்த......படியினாலே என்ன சகாயம்பண்ணியும் இவர் சாடையிப்படித்தானே... ........ ..துரை கணக்கு ரங்கப் பிள்ளையுடனே கலந்து பேசினதற்கு அவரும்...... ............ ... ... ...நாமிந்தக் கணக்குப்பார்த்த சாடையிலேயும் உடமை... ... ... ...மமதிகள் பாணிப்பரப் பார்த்த சாடையும் ... ... ... ... ... ... ...

* ... ... ... ... ... ...

யிருந்துகொண்டு இப்போ துரையண்டைக்குப்போய்ச் சொல்ல வேணுமே முன்னே துரைக்குத் தோற்றியிருந்ததற்கும் சனங் களுக்குந் தோற்றியிருந்த துகைக்கும் இப்போபோய் சொல்லப் போகிற துகைக்கும் வெகு அதிகமாய்க் காணுது. இதற்கு எப்படி யென்று யோசனைகேட்டதற்கு அவரிருந்துகொண்டு இப்போ பார்த்த துகையிலேயும் பதினாயிரம் ரூபாய்மட்டுக்கும் தள்ளிப் போடச்சொல்லவேணுமென்று சொன்னார். அப்போ வெளியாய்ச்சொன்ன பேச்சென்னவென்றால், துரையவர்கள் உத்தாரப்படிக்கு நாங்கள் வந்து பார்த்ததைப் பின்னை யாரா கிலும் வந்துபார்த்தால் பதினாயிரம் வராகன் உயர்த்திப்பார்ப் பார்கள். வெள்ளைக்காரர் வந்துபார்த்தால் பின்னையும் இரண்டு மூன்று உயரும். இப்படியிருக்க இன்னும் கழித் தால் எப்படியென்று சொன்னேன், அதிலே துரை கணக்கு ரங்கப்பிள்ளை யிருந்துகொண்டு அதென்ன முதலி யார் மனதிலே தோற்றுமலாயிருக்கிறது. அவர்களுக்கு என்ன தெரியாதா. இப்படி நியாயங்கள் பதினாயிரம் இருபதினாயிரம் நடப்பித்தும் இருப்பார்கள். நடக்கச்சொல்லி உத்தாரமும் பண்ணியிருப்பார்கள். அப்படியிருக்க, அவர்களுக்குத் தெரி யாதா வென்று சொன்னார். நானிருந்துகொண்டு அதென்ன அபத்தமா தெரியாமலிருக்கிறார்களா என்று சொல்லவில்லை.

---

* பாதி பக்கம் கிழிந்துபோயிருக்கிறது.

(ா) துரையவர்கள் பிள்ளையவர்கள் ஒருத்தரை விட்டு நாம் பார்த்து .........பட்டு இருப்பும் புடவை தினுசுகளுடைய யிருபது............தினுசுகளுக்குக் கிரயமும் கணக்கு நிலுவை யும் பார்க்கச் சொன்னார். எல்லாரும் திருடராய்ப் போகிறதே யல்லாமல் மற்றப்படி இல்லையென்று சொல்லவாகிலும் உங்கள் மனதின்படிக்கே நடப்பிக்கிறேன்...........··துகை வயணம். பலபேர் பேரில் ... ... ...வராகன் ௨௲௬௱௯௰௩௫ 26935. (சனிவாரம்) பொன்நகைகள் கல்லுகள் உள் பட

| | | |
|---|---|---|
| விலை சுமார் | வராகன் | |
| வெள்ளி நகைகள் விலை சுமார் | வராகன் | $1005\frac{3}{4}$ |
| ............Laced Cloth | வராகன் | $468\frac{1}{2}$ |
| முடிப்புத்திட்டம் பெட்டியிலே இருப்பு | வராகன் | 7662 |
| ஆக துகை 6 க்குக் கூடின... ... ... ... ... ... | | |
| ரொக்கம் இருப்பு ரூபாய்... ... ... ... ... ... | | |
| .........வரவுக்குக் கொடுக்கவேண்டியது | வராகன் | $5947\frac{1}{4}$ |
| ... ... ... ரூபாய் ... ... ... ... ... | | |
| நீக்கி சுத்தம்... ... ... ... | வராகன் | ... ... |
| சந்தேகமாயிருக்கிற நிலுவை வராதென்றும் வரும் என்றும் தள்ளின | வராகன் | 3410 |

இந்தப்படிக்கு எழுதியிருந்ததைக் கழிக்க வேணுமென்று சின்னமுதலியார் சொன்னார். அதற்கு நல்லது என்று கழித்துப் பார்த்த நிலுவை பின்பக்கத்திலே எழுதுகிறேன். நான் கணக்கு நியாயப்படிக்கு 6 முத்திரையைப் பார்த்தால் இரு பதினாயிரம் வராகன் உயரும். இது ஆராய்ந்தவருக்குத் தெரி யும் என்றால் கணக்கிலே விட்டுவிட்டதும் உடமையிலே தள்ளி வைத்ததும் பதினாயிரம் வராகனுக்கு உண்டு. இது பாரமு நாத பிள்ளைக்கும் சவரிமுத்துமுதலி மருமகன் முத்துக்குமரனுக் குத் தெரியும், சின்னமுதலியாருக்கும் தெரியும், பராபரவஸ்து வாயிருக்கிற சர்வசீவதயாபரனுக்கும் தெரியும், மற்றப் பேருக்குத் தெரியாது. ஆனால், சனங்களுக்குச் சமுதாயமாய் அவர்கள் காலத்திலே நானாவிதத்திலேயும் சௌகரியம் பண்ணி நிர்வாகம்பண்ணினார்கள் என்று மாத்திரம் தெரியும். உடமை விலையிலேயும் உடமைத்தள்ளிப்பார்த்ததிலே சௌகரி யம் பண்ணினது உத்திராப்பெத்து செட்டிக்கும் கங்கிப்பாட்டி வீராசெட்டிக்கும் தெரியும். புடவை விலையிலே பார்த்தத் தற் கும் தள்ளிவிற்றதற்கும் கங்கிப்பாட்டி வீராசெட்டிக்கும் சலத்து வெங்கடாசல செட்டிக்கும் இந்த இரண்டு சம்மதி

யிலேயும் ஆராயிரம் வராகன் கண்டு சௌகரியமாய்ப் பார்த்தது இப்படியிருக்கவில்லை.

| | | |
|---|---|---|
| தள்ளிப்பாாக்க தொகை விபரம் ... ... ... | | ... |
| பலபேர்பேரில் வரவேண்டிய நிலுவை | வராகன் | 25685 |
| பொன் நகை கல் உள்பட சுமார் | வராகன் | 68505/8 |
| வெள்ளி நகை விலை சுமார் | வராகன் | 10053/4 |
| சரிகைப்புடவை விலை சுமார் | வராகன் | 4681/2 |
| ரொக்கம் இருப்பு புதுச்சேரி 8 மாத்து | வராகன் | 7652 |
| ரூபாய் 800 ... ... ... | | |
| ஆக துகை 6 க்குக் கூடின ... ... ... ... | | ... |
| நீக்கி, சுத்தம் எடுககவேண்டியது ... ... ... | | ... |
| க்கு | | |
| சந்தேகமாய் வருமென்றும் வராதென்றும் தள்ள | | |
| வேணுமென்று தள்ளிவைத்தது | | 3,410 |

இதல்லாமல் இனிமேல் பார்க்கவேண்டியதென்னவென்றால், வீடுகள், தோட்டங்கள், பெஞ்சுகள், குதிரை லாயம் இவருக்கு இருக்கிற கொம்மப்பாக்கம் கிராமம் டங்காசாலையிலே நடக்கிற ஆயிரத்துக்கு அரை ரூபாய் குஸ்-மாதுக்கு இதுகள் பார்க்கவேண்டியது. முன் தொகைக்குத் தள்ளினது இருபதினாயிரம். இந்தத் தொகைக்குத் தள்ளிப்பார்த்தது இரண்டாயிரத்துச் சில்லரையாகவென்று இதற்குத் தள்ளிப்பார்த்தது ரூபாய் இருபத்தீராயிரம். இப்படி தள்ளிப்பார்த்ததும் சின்னமுதலியார், வெசடையும் துக்கமும் சொல்லிமுடியாது. இந்தத் துக்கம் இவருக்கு வருவானேனென்றால், நாங்கள் தள்ளச்சொல்லுகிறதிலே இப்போது இந்தக் காரியமென்னவென்றால் கனகராய முதலியார் பெண்சாதி இவர் இதை பங்கிட்டுக்கொண்டு போனன். இந்த ஆஸ்தி என்னுடையதேயல்லாமல் இவருக்குக் கவையில்லை அம்மான் முகாந்திரமாக அதற்குத் தக்க மார்க்கமாய் துரைக்குச் சொல்லி வீட்டை முத்திரித்தபோது சின்னமுதலியார் என்னண்டைக்கு வந்து சொல்லி, துரைக்குச் சொல்லச்சொன்னது: கனகராமுதலியார் ஆஸ்தியிருக்கிறதிலே எடுப்பிலே பாதி துரைக்குக் கொடுத்துவிடுகிறேன். கனகராயமுதலியார் பெண்சாதிக்கும் பதினாயிரம் வராகன் மட்டுக்கும் கொடுக்கிறோம் என்று சொன்னதற்கு, நான் துரையண்டையிலே அப்படி சொல்லாமல் துரைக்கு மூணத்தொரு பங்கு கொடுக்கத்தக்கதாகப் பேசியும் உடன்படிக்கை பண்ணி, நீர் சொன்னதுக்கும் நான் தீர்த்ததுக்கும் எவ்வளவு சௌகரியமிருக்குதோ பார்த்துக்கொள்ளு

மென்று சொன்னதற்கு அப்போது அவர் எனக்குச் சொன்ன உபசாரமும் எனக்குப் பண்ணின மரியாதையும் நான் எழுதினால் பார்த்தபேர் கேட்டபேர் பேயாய்க்கு தனக்குச் சரிப்போனாற்போலே எழுதிவித்தானென்று சொல்லுவார்களே யல்லாமல் மெய்யென்று ஒருவரும் சொல்லார்கள். ஆனபடியினாலே, விஸ்தரித்து எழுதவுமில்லை. எழுதியும் பிரயோசனமென்னவென்றும் எழுதவில்லை. ஆனால், சர்வசீவதயாபரனாயிருக்கப்பட்ட ஆண்டவனுக்கு மாத்திரம் தெரிந்திருக்குமென்று எழுதினவரை போதும். அல்லாமலும் லஞ்ச பரிதானத்துக்கு ஆசைபட்டுச் செய்யவில்லை. கீர்த்திக்கும் பாரமார்த்திகரைக் குறித்தும் செய்த வேலையேயல்லாமல் மற்றப்படியல்லவென்று நினைத்துக்கொண்டு, அப்பால் துரையவர்களண்டைக்குப் போகவேணுமென்று … … போனோம். சின்னமுதலியார் இப்புறமிருந்துகொண்டு … … …துரை கணக்கு ரங்கப்பிள்ளையும் இரண்டு பேரும் .. … … … … இரு சாட்சியிலே கொண்டு நாம் சொன்னதின் பேரிலே அவர் கோபித்துக்கொண்டு சொன்னது:

1746 ௵ மார்ச்சு ௴ 27 உக்கு குரோதன ௵ பங்குனி ௴ 18 உ

நீங்கள் இரண்டு பேரும் திருடர். என்னை மோசம் பண்ணினீர்கள். முப்பத்தாறாயிரம் வராகன் ஆஸ்தியென்று எப்படி சொல்லுவீர்கள். லக்ஷம் வராகனுக்குத் தாழ்த்தியில்லையென்று எல்லாரும் சொல்லியிருக்கிறார்களே என் புத்திக்கேற்க இரண்டு லக்ஷ வராகன் மட்டுக்கும் உண்டென்றும் தோற்றியிருக்க எல்லாந் தள்ளிப்போட்டு, சரிப்போனாற்போலே வந்து சொன்னீர்களென்று அவர் கோபித்துக்கொண்ட மாத்திரத்திலே அந்தக் கோபம் காகிதத்திலே எழுதிமுடியாது. அவர் கோபம்பண்ணுவானேனென்றால், நாங்களுமவருக்கு வஞ்சனை பண்ணினபடியினாலே மனதுக்கு மனதே சாட்சி என்கிற நியாயப்படிக்கு அவருக்கும் தோற்றிக் கோபம் பண்ணினார். அதின்பேரிலே நாங்கள் தப்பித்துக்கொள்ளப்பட்டது சுவாமிக்குத் தெரியும். அப்படி தப்பித்துக்கொண்டு உபாயமாய் வீடு இம்மாத்திரம் பெறும். கிராமத்துமாலாய் நடக்கிற கொம்மப்பாக்கம் ஒன்று இருக்கிறது. இதல்லாமல் தோட்டங்கள் கிடங்குகளிது முதலாகியன. பத்து வராகன் மட்டுக்கும் காணுமென்று உபாயமாய்ச் சொல்லிப்போட்டு தணித்தோம். அப்படி யவரும் மார்க்கமாய்க் கேளாமல் பின்னை யாராகிலும் விட்டுப் பரிசோதித்தாரேயானால் பிரஷ்டாய்ப்போகிறதற்கும் சந்தேகமில்லை. எங்களுடைய நல்ல வேளையினுடைய குணம் அப்படி

சொல்லாமல் இப்படியாக நடப்பிக்கவேண்டிய தென்ன் வென்றுகேட்டார், ஒரு பெரிய வச்சிரம் என்று கணக்கெழுதியிருக்கிறது. அது காணேம். கொலுசிலே அவர் கையெழுத்தாய் எழுதியிருக்கிறபடிக்கு இருநூற்றியைம்பது வராகனெடை கொலுசு காணேம் இரண்டு வைடூரிய மோதிரம் ஒரு கெம்பு மோதிரம் காணேம் என்று சொன்னேம். இதின்பேரிலே லீவ்ர் தெ கேஸ் இல்லாதபடியினாலே முன்னாலேதானே சிறிது பணங்காசு தாண்ட வைத்தாற்போலே யிருக்குதேயல்லாமல் மற்றப்படியல்லவென்றுபோய் விசேஷமாய் முன்பேச்சை மறக்கத்தக்கதாகப் பேசினேம் அதின்பேரிலே லாசரை (Lazar) அழையுமென்று சொன்னார் அதின்பேரிலே சின்னமுதலியாரையழைத்தோம் இவர் வந்தவுடனே லீவ்ர் தெ கேஸ் விசாரியாமல் போன சாடையும் வைரம் காணேமென்ருல் நீ ஆச்சரியப்படாமலிருக்கிற சாடை எவன் அப்படி இப்படியென்று கணக்குப் பார்க்கிறப்போலே பார்த்து வீடு, தட்டுமுட்டுச் சறுவாலோட்டியமும் ஐம்பதினாயிரம் வராகனுக்கு உண்டென்று சொன்னார். அதன்பேரிலே ரங்கப்பன் மத்தியஸ்தர் இருபது பேரையும் கூட்டி, கனகராயமுதலியார் பெண் சாதிக்கும் அவர் மருமகனுக்கும் இவ்வளவு என்று தீர்த்துவந்து சொல்லச்சொல் என்று உத்தாரங் கொடுத்தார். அதின்பேரில் நயினாரை நான் அழைத்து நாளைக்கு மகாநாட்டு மத்தியஸ்தர் இருபது பேரையும் கூட்டுங்கோளென்று சொன்னேன். அந்தப்படிக்கு நயினாரும் கூட்டுகிறேமென்று சொன்னார்கள்.

*1746* ௵ மார்ச்சு ௴ *27* ௳ க்ஷய ௵ பங்குனி ௴ *18* ௳ ஆதிவாரம்

நடந்த சேதி என்னவென்ருல் கனகராயமுதலியார்...... ஆஸ்தி தனத்தியத்துக்கு அவர் தப்பிதம்...... ...... ......... கொடுத்த மத்தியஸ்தர் இருபது பேரும் கடைத்தெருவிலே யிருக்கிற சுங்குவார் கும்பினீரிலேகூடி தீர்த்தவர்கள் திரும்பியும் நவ்வாலு பேராய்க்கூடிச் சீட்டுப்போடுவோமென்று ஐந்து பேராய் நாலு கங்குகூடி சீட்டுப்போட ஒரு கங்குசீட்டு வராகன் *1500*, குடியிருக்க வீடு *1*, தோட்டம் ஒன்று ஒரு கங்கு சீட்டுக்கு வராகன் *5000*, கங்குக்கு சீட்டுக்கு வராகன் *4000*, கங்குக்கு வராகன் *3300*, வீடு *1* இந்தப்படிக்கு ஒரு சீட்டாக சீட்டு நாலும் பதினையாயிரத்தைந்நூறு விழுந்தது. ஆனபடியினாலே, பதினாயிரம் வைத்து நாலத்தொன்றுக்கு நாலாயிரம் வராகன் என்று யோசனைபண்ணி குடியிருக்க கனகராயமுதலியாரவர்கள் குடியிருக்கிற வீட்டுக்கு மேற்கு கிடங்கு கொடுக்

கத்தக்கதாகவும் யோசனை பண்ணினார்கள். அதிலே சின்ன முதலியார் சொல்லியனுப்பினார். இன்றையதினம் நிறுத்திப் பார்த்தால் காலமே கண்டு பேசிக்கொண்டபிறபாடு ஆகுதென்று சொன்னார். அதின்பேரிலே நாளையதினம் ஆகுது...... என்று நிறுத்தி அவரவர் வளவே போனோம்.

1746ஞு மார்ச்சுமீ 28 உக்த துரோதனஞு பங்குனிமூ 19௳ திங்கட்கிழமை நாள்

காலமே நான், பாக்குக் கிடங்கிலே யிருக்கையிலே சின்ன முதலியார் வந்து நாலாயிரம் வராகனுக்குத் தொகை ரொம்ப உசத்தி. அப்படியிருக்க அவள் வசத்திலே தட்டுமுட்டு யிருக்கிறதே அதை முன்னே அழைத்துக்கொண்டு அதின்பிறபாடு தீர்த்துச் சொல்லவேணுமென்று சொன்னார். அதிலே நானிருந்துகொண்டு தீர்த்தபிறபாடு உடமையை வாங்கிக்கொண்டுதான் இந்த வராகன் கொடுக்கப்போகிறது, இல்லையென்றால் உடமையைப் பெறுமென்று விலை வைத்து இந்தத் தொகையிலே தள்ளிவிட்டு மற்றதைக் கொடுக்கப்போகிறதென்று சொன்னேன். நீங்கள் தாயும் தகப்பனும், குரு தெய்வம் எல்லாம் நீங்கள் உங்களை நம்பினேன். உங்களுக்குச் சம்மதியானபடிக்குச் செய்யுங்கோளென்றும் சொன்னார். அதின் பேரிலே நானிருந்துகொண்டு நீங்கள் என்ன எனக்கு உபசாரஞ் சொன்னீர்கள். முதலியார் அவர்கள் செத்து அன்று ராத்திரி என்னண்டைக்கு வந்து கண்டு பேசுகையிலே முதலியார் பெண்சாதிக்குப் பதினாயிரம் வராகனுகத் தீர்த்துவிட்டு மற்றதை யென்னைச் சேரப் ண்ணிவிக்கவேணுமென்று சொல்லவில்லையா. அப்படியிருக்க, நாலாயிர வராகனுகத் தீர்க்கத்தக்கதாகப் பண்ணிவித்தேனே. துரை சம்மதிக்குப் பேர் பாதி கொடுக்கிறோமென்று சொன்னதை மூணுத்தொரு பங்காய்த் தீர்த்துக்கொண்டுவந்தேனே உடமை பார்த்ததிலேயும் கணக்கு பார்த்ததிலேயும் இருபதினாயிரம் வராகன் மட்டுக்கும் சுலுவு பண்ணிப்பார்த்ததற்கு அதிலே ஆறாயிரத்து முந்நூறு வராகன மட்டுக்கும் கொடுக்க துரைக்கும் உம்முடைய கைவிட்டுப்போகிற பணம் சுலுவு பண்ணினேனே. இந்தப்படியெல்லாம் செய்தும் நீர் இன்னும் தள்ளிச்சொன்னா லெப்படியென்று சொன்னேன். அதெல்லாம் உள்ளது ஆனபடியினாலேதான் இப்போது வந்த இக்கட்டுக்கு இப்படியெல்லாம் காத்து ரக்ஷித்தபடியினாலேதான் இன்னம் எந்த மட்டுக்கும் சொல்லுகிறது அப்புறம் உங்கள் ... ... ... ...
கோளென்று சொல்லியனுப்பிவித்துக்கொண்டு ... ...
... ... ப்பண்ண சகாயத்தைப் பின்னையொரு.. ...
... ... சரீரத்தைச் செருப்பாய் தைத்துப்போடுவார்

கள். ஆனால் புண்ணியமுண்டே, கீர்த்தியுண்டேயென்று மன திலே யெண்ணிக்கொண்டு சுங்குவார் கிடங்கிலே போயிருந்து அந்த இருபது மத்தியஸ்தரையும் கூட்டி நாலாயிரம் வராக னும் மேலண்டை கிடங்கும் கொடுக்கத் தீர்த்தெழுதி (ா) துரையவர்களுடனே சொல்லுவோமென்று இருபது பேரும் சொன்னார்கள். ஆனால், நாலு மணி வேளையாச்சுதே அவரவர் கள் சாப்பிடப் போகவேணுமேயென்று சாயங்காலம் துரை வீட்டண்டைக்குவந்து அனைவரும் சேரச்சொல்லிச் சாப்பிடப் போனோம். சாயங்காலம் முன்சொன்ன இருபதுபேரும் கூடி துரையவர்கள் வீட்டண்டையிலே கூடி என்னை முன்னே போய் கபுறு சொல்லச் சொன்னபடியினாலே நான் முன்னே போய் (ா) துரைக்கு கபுறுசொன்னேன். அவனுக்குப்பிற்காலம் யாருக்கு இவர்கள் கொடுக்கிறதென்று தீர்த்தார்களென்று கேட்டார். அதற்கு நானிருந்துகொண்டு மத்தியானம் தீர்க்கும் போதுதானே இந்தப்படிக்குத் துரையவர்கள் கேட்பார்கள். இதற்கு முன்னே என்ன சொல்லுகிறீர்களென்று சொல்லிக் கேட்டால், அவர்களிருந்துகொண்டு (ா) துரையவர்கள் கேட் டால், அப்போது வேணுமென்றால் அப்படியே சொல்லுகிறோ மென்று சொன்னார்கள் என்று சொன்னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு இப்போது நீ என் பாடுத்தியாய்ப் போய் அவர்களுக்குச் சொல்லி அவர்களைக் கொண்டு இப்போ தானே போயிருந்து தீர்த்துப்போடு என்று சொன்னார். நல்ல தென்று ஆசாரம்பண்ணி யனுப்பிவித்துக்கொண்டு வெளி யிலேயிருந்து மத்தியஸ்தர் இருபது பேருடனேயும் சொன்னேன் ஆனால், இப்போதானே சுங்குவார் கும்பினீர் கிடங்கைப்போலத் தீர்த்துப் போடுவோமென்று சொல்லி, சுங்குவார் கும்பினீரிலே போய் உட்கார்ந்தோம். அப்பால் இருபதுபேரும் கூடி ராத்திரி பத்து மணிக்குத் தீர்த்த விபரம்: நக்ஷத்திரம்மாள் அவள் மருமகன் சந்திரமுத்துக்குப் பிற்காலம் யாருக்குச் சம்மதியாய் சின்னமுதலியார் எடுத்துப் போடுகிறார்கள், அவர்களுடையதே யல்லாமல் சின்னமுதலியாருக்குக் கவையில்லையென்று தீர்த்துச் சொன்னார்கள். அந்தப்படிக்குத் தீர்த்த வயணத்துக்கு ஒரு டாப்பு எழுதின விலைக்குத் துரைக்குச் சொன்ன பிற்பாடு வேறே எழுதிவித்துக் கையெழுத்துப் போடுவோமென்று சொனனார்கள். அதின் பிற்பாடு கலைந்து அவரவர் வீட்டுக்குப் போனார்கள்.

1746 ௵ மார்ச்சு ௴ 29 உக்கு குரோதன ௵ பங்குனி ௴ 20 உ செவ்வாய்க்கிழமை

காலமே மத்தியஸ்தர் இருபது பேரும் (ா) துரை யவர்களண்டைக்குப் போய் தீர்த்த வயணத்தைச் சொன்ன

விடத்திலே எனக்குத் துரையவர்கள் சொன்னது: இந்தப் படிக்கு உன்..............அழைப்பித்துத் தீர்ப்பு எழுதிவித்து எல்லார் கையெழுத்தும் போடுவித்து............வந்தாய். நாமும் கையெழுத்துப் போட்டோம்... ... ... ... ... ... ... ..கணக்கு சூரியப்பிள்ளை குமாஸ்தா இயாவற்றையும் அழைப்பித்துச் சீட்டெழுதிவித்து மத்தியஸ்தர் இருபது பேரும் கையெழுத்துப் போட்டபடிக்கு இரண்டு எழுதிவித்து இரண்டிலேயும் துரையவர்களுடைய கையெழுத்தும் வாங்கினார்கள். கனகராயமுதலியார் பெண்சாதிக்காக வந்து பேச வந்த மலையப்பமுதலியார் கையிலே ஒன்று கொடுத்து மற்ற ஒன்றும் சாவடியிலே கட்டிவிக்கச்சொல்லி, சாவடி கணக்கு முருகப்பிள்ளை கையிலே கொடுத்தனுப்பிவித்துவிட்டோம்.

1746 ஹு மார்ச்சு மீ 30 உக்கு குரோதன ஹு பங்குனி மீ 21 உ புதவார நாள்

(ஈ) துரையவர்கள் அண்டைக்கு பத்தேசிங்கு குமாஸ்தா கேசவராயனென்கிற காயத்துவான் வந்தான். அவன் சொன்ன தென்னவென்றால், சாவுராசா அவர்கள் அன்வர்த்திகானுக்குக் காகிதமெழுதி அனுப்பின தென்னவென்றால், முன்னாலே சரபோசிராசா மகன் சகசிராசாவென்கிறவன் ஒரு வருஷ காலம் தஞ்சாவூரிலே ராச்சியம்பண்ணி வெட்டுப்பட்டுப் போனான் என்றும் அதன்பிற்பாடு பிரதாபசிங்கு ராசா வல்லவோ ராசரீகம் பண்ணுகிறான் அந்த சகசிராசா வெட்டுப்பட்டுப்போனதில்லை. அவன் சீவந்தனாயிருக்கிறான் அவனிருக்கிற மட்டுக்கும் பிரதாபசிங்கு ராசாவுக்கு அந்த சமஸ்தானத்திலே ராசரீகம் பண்ண நியாயமில்லை. ஆனபடியினாலே, அந்த சமஸ்தானத்தை வாங்கி சகசிராசா பாரிசம் பண்ணவேண்டுமென்று யோசனை பண்ணுகிறது பவுஞ்சு அனுப்பிவித்தோம், நீரும் நாலாயிரம் குதிரையும் அதற்குத் தக்க ஸௌஸ்தமும் அனுப்பிச் சகசிராசாவுக்கு மற்றது பண்ணி. கேட்டை வாங்கி சகசிராசாவுக்குப் பட்டம் கட்டினால் இந்தச் சகாயம் மறக்கத்தக்கதில்லையென்றும், இதற்கு ஆகிற செலவுகள் எல்லாம் சவுதாயப் பணத்திலே பிடித்துக் கொள்ளச் சொல்லியும் காகிதம் எழுதி, சாவுராசா எழுதின படிக்கு நடப்பித்துக்கொள்ளச் சொல்லி. நிசாம் அவர்கள் பர்வானாவும் வாங்கி நம்மையும் அனுப்பிவித்தார்கள். நாம் வந்து அந்தப்படிக்கே நபாபு அன்வர்த்திகானைக் கண்டு பேசினோம். அவரும் அந்தப்படிக்கே பவுஞ்சுகூட்டி மற்றது பண்ணிச் சாதித்துத்தருகிறோம் என்று சொல்லி வார்த்தைப்பாடு கொடுத்து அதற்குத்தக்க சரஞ்சாமிபண்ணுகிறான்

என்று சொன்னார்கள். அதின்பேரிலே தங்களுக்கு சாவுராசா கொடுத்த காகிதமென்று கையிலேயிருந்த காகிதத்தைக் கொடுத்து வாய் விசேஷம் சொன்னதென்னவென்றால், சாவு ராசா அவர்களும் பத்தேசிங்கு அவர்களும் உங்களுக்குச் சொல்லச்சொன்னது என்னவென்றால், நீங்களும் அவர் பேரிலே தயவுவைத்துக் காரியங்களிலே மற்றது பண்ணுகிறோமென்றும், அறத்தளவிலே சகாயம்பண்ணுகிறோமென்றும், பின்னையும் சண்டையானால், அதற்கு மற்றது பண்ணுகிறோமென்றும் இப்படியாகச் சொல்லியிருக்கிற சம்மதியெல்லாம் நாங்கள் கேள்விப்பட்டோம் ஆனால், உங்களுக்கு இந்தச் சகாயம் சகசிராவு பட்டத்துக்கு வந்தாற்போலே காரைக்காலை கொடுக்கவில்லையா. இப்பவும் உங்களுக்குத் தேவிகோட்டையும் அதைச் சேர்ந்த கிராமமும் இனாமாகக் கொடுக்கிறோமென்றும் இந்த உபகாரத்துக்குத் தக்கதாக இன்னமநேக முகாந்திரத்திலே உங்களுக்குக் கூடிவரத்தக்கதாக நடப்பித்துக் கொடுக்கிறோம் என்றும் இதைத் தொட்டு உங்களுக்குக் கீர்த்தி உண்டென்றும் சாத்தாரா யந்தப் பிராந்தியத்திலே உங்களுக்கு எங்களாலே ஆகவேண்டிய காரியங்களிலேயும் தாழ்த்திவராதென்றும் பின்னையும் அநேகவிதமாய் உபசாரம் சொல்லி, சாவுராசா அவர்கள் காகிதத்தையும் பார்த்துக்கொண்டால் தெரியவருமென்றும் வாய் விசேஷ சாடைக்குறியாய் சரியாயிருந்தது என்றும் மதனந்த பண்டிதர் சொன்னார் அதற்கு (ா) துரையவர்களிருந்துகொண்டு சொன்ன உத்திரம்: முன்னே காரைக்காலுக்குக் கொடுத்ததற்கு எங்களுக்கு அதினாலே பொழுது விடிந்தால் அந்திபட்டால் போராட்டமும் பண விரயமும் அதனாலே வரப்பட்ட நஷ்டம் அநேகமுண்டு, ஆனபடியினாலே, எங்களுக்குத் தேவிகோட்டையும் கவையில்லை. அதனுடன் சேர்ந்த கிராமங்களும் கவையில்லை. ஆகிலும், சகசிராசா மனுஷர் வந்தால் எல்லாவற்றிற்கும் அவர்களும் நாங்களும் கண்டு பேசிக்கொண்டு அப்பால் உத்தாரஞ் சொல்லுகிறோமென்று சொன்னார்கள் அதன்பிற்பாடு, சந்தா சாயபை அழைத்துக்கொண்டு பத்தேசிங்கு அவர்கள் ஆற்காட்டிற்கு வருகிறதாயிருக்கிறார்கள். வந்த சாவுக்காரருக்கு அவர் பெண்சாதி பணம் சம்மதி கொடுக்காமல் அட்டிபண்ணினால், அவர் வரமாட்டார், இப்போதானால் சாத்தாரா வந்துசேர்ந்திருக்கிறார் அவர் பெண்சாதியைக் கேட்டால் பணத்துக்குத் தக்கபடி சொல்லவில்லை பணம் வந்துசேராமற்போனால் அவருக்கு ரொம்ப தாக்கீது நடக்கும் என்று சொன்னவிடத்திலே நல்லதுதான் நாங்களும் அவர் பெண்சாதிக்குச் சொல்லியனுப்புகிறோம். நீங்களும் கண்டுபேசிக்கொள்ளுங்கோளென்றுசொல்லி, இனிமேல்சவகாசமாய்ப் பேசிக்கொள்ளுவோம். ஆசுவதாகப் போயிருங்கோள்

என்றுசொன்னான். அதின்பேரிலே பாக்குவெற்றிலையும் பன்னீ ரும்கொடுத்தார்கள்.வாங்கிக்கொண்டுதுரைகையிலே அனுப்பி வித்துக்கொண்டு போனார். இந்தக் கப்பித்தானைப் பார்த்தால் சுருட்டுப்பொறுக்கிப்போலே கருப்பிலே அடிபட்ட கருத்த வீங்கலாய் அருப்பமாய் பார்க்கிறதற்குக் கருவா அகண்யமா யிருந்தாலும் சமானமாக இவனைக் கூடவைத்துக்கொண்டு துரை பேசினதென்னவென்றால், இவன் எசமானனுடைய பேரைத்தொட்டு நடத்தவேண்டி வந்தது இற்றைநாள் பகல் பதினொரு மணிக்கு நடந்தது என்னவென்றால், பத்தேசிங்கு வந்து கண்டு பேசிப்போன பிற்பாடு தானப்பமுதலியார் மலையப்பமுதலியாரைப் பார்த்து, காதிலே போட்டிருக்கிற பச்சைக்கல் கடுக்கனைக் கொடுத்துவிடுமென்று கேட்டார். அதின்பேரிலே, மலையப்பமுதலி சொன்னதற்கு இந்த கடுக்கன் கனகராய முதலியார் அவர்கள் எனக்குக் கொடுத்துவிட்டார் என்று சொன்னார் ஆனால், துரையுடனே சொல்வோம் என்று எழுந்துபோகையிலே என்னை அழைத்தார்கள். நீங்கள் போகிற பல்லக்குள்ளேறி நானும் வருகிறேன் என்று போய்ச் சொல்லி...... .........இவர்கள் இரண்டு பேரும் துரை கிட்டே நின்ற மாத்திரத்தில் ...........அழைக்கச் சொன்னார் * ... ... ... ... ... ... ...

1746ஸு மார்ச்சுமீ 30உக்கு குரோதனஸு பங்குனி மீ 21உ

அவர்களைப் பார்த்து துரையவர்கள் சொன்னது தெரிந்து தெத்தேரஞ் சொல்லி அளங்கோளென்று சொன்னேன். அதற்கு தானப்பமுதலியார் சொன்னது: முதலியார் பெண் சாதி சம்மதி இவ்வளவு என்று தீர்ந்துபோச்சுதே. முதலியார் பெண்சாதி கையிலே சிறிது நகைகளிருக்கிறது. அதை அழைப் பித்து விலைதீர்த்துப்போடவேண்டுமென்று சொல்லி மலையப்ப முதலி காதிலே யிருக்கிற பச்சைக்கல் கடுக்கன் பெதுரு முதலி யார் எழுதிவித்த கையிருப்பு நகையுடனே கூடி எழுதியிருக் கிறது. இவரைக் கேட்டால் எனக்குக் கொடுத்துவிட்டார் என்று சொல்லுகிறார் என்றுசொன்னார் அந்தப்பேச்சை, துரை யவர்கள் கேட்டு மலையப்பமுதலியைப் பார்த்து, நீ என்ன சொல்லுகிறாய் என்று கேட்டார். மலையப்பமுதலி சொன்னது: பெதுரு எனக்குக்காரைக்காலுக்கு முசே தும்மா போகிறபோது கொடுத்தாரென்று சொன்னான். அதற்கு, துரையிருந்து கொண்டு கொடுக்கிறதிலே இரண்டு விதமுண்டே நன் கொடை யாய்க் கொடுக்கிறதும் மறுபடியும் வாங்கிக்கொள்ளத் தக்க தாக இரவலாகக் கொடுக்கிறதுமுண்டே என்று கேட்டார்.

* கிழிந்திருக்கிறது.

அதிலே சின்னமுதலியார் இருந்துகொண்டு, அதற்குமுன்னே இவர்கள் சாப்பாட்டுக்கு இல்லாமல் கஷ்டப்பட்டது சுவாமிக்குத்தெரியும். பெதுரு பெண்சாதிக்குப் பயந்து அவன் திட்டுகிற திட்டுக்கும் அவன் பண்ணுகிற லச்சைக்கும் அவன் சாப்பாடு கூடப் போடாமல் கஸ்திபண்ணின சங்கதியெல்லாம் விஸ்தரித்து இரண்டு நாழிகை மட்டுக்கும் சொன்னார் துரை நகைத்துக்கொண்டு கேட்டுக்கொண்டிருந்தார். இவர் சொன்னபடிக்கு எழுதவேணுமென்றால், இரண்டு காகிதம் மூன்று காகிதமட்டுக்கும் செல்லும் ஆனாலும் அந்த ஞாந்தையான விசேஷத்தை இந்தக் காகிதத்தின்பேரிலே எழுதினால் காகிதத்துக்குத் தப்பிதமுண்டு, நமக்கும் எழுதுகிறது நியாயமில்லை. ஆனால், சின்னமுதலியார் இந்த விசேஷம் வெளியிலே சொல்லுகிறது. இது சொல்லவாவது என்று யோசனைபண்ணமலும், இது அவமானமென்றும், யோசனைபண்ணமலும் துரையவர்களினிமே லென்னமாயெண்ணுவார்களென்றும் யோசனை பண்ணமல் வாய்க்கு வந்தபடிக்கெல்லாம் சொன்னார். அதின் பிற்பாடு துரை சொன்னது: அவனால் கொடுத்தானென்று சொல்லுகிறான் நீயானால் கையிருப்பு நகையுடன் கூடவே யெழுதியிருக்கிறபடியினாலே கொடுத்ததில்லையென்று சொல்லுகிறாய். ஆனபடியினாலே, சத்தியஞ் சொல்லச்சொல்லிக் கேட்டுப்போ, சத்தியஞ் சொல்லாமற்போனால் நகையை வாங்கிக்கொள்ளும். இதுவே நியாயம் அல்லாமல் வேறே நியாயமல்லவென்று சொன்னார். அப்பால், ரங்கப்பா, நீ கூடப் போயிருந்துகொண்டு பெதுரு பெண்சாதி கையிலேயிருக்கிற நகையை வாங்கி மதிப்புப் பார்த்து அவளுக்குக் கொடுக்கத்தக்கதாகச் சிறிது நகைகளைத் தள்ளிவிட்டு மற்ற வராகனை கும்பினீர் கணக்குக்குப் பர்த்திப் போடுவிப்போம் என்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவித்துக்கொண்டு... ... ... ... ... ... ... ... ... ...

... ... ... ... ... மறுபடியும் அழைப்பித்து...............

... ... ... ... ... ... ... ...

... ... ... ...சொல்லிவிட்டு வந்துவிட்டோம்.

1746 ௵ மார்ச்சு ௴ 31 ௳ க்குச் குரோதன ௵ பங்குனி ௴ 22 ௳

வியாழக்கிழமை காலமே நடந்த சேதி என்னவென்றால், கனகராயமுதலியார் வீட்டுக்கு எதிரே, குதிரை லாயத்துக்கு

---

* நான்கு வரிகள் கிழிந்துபோயின.

தெற்கே, கனகராயமுதலியார் வசமாயிருந்த வீட்டிலே போய் சேஷாசலசெட்டியையும் ஆதிவராகசெட்டியையும், வீராசெட்டியையும், உத்திராபெத்துசெட்டியையும் வைத்துக்கொண்டு கனகராயமுதலியார் பெண்சாதி கூடப்பிறந்தான் மலையப்ப முதலியையும் செகனிவாச முதலியையும் அழைப்பித்து வைத்துக்கொண்டு, முதலியார் பெண்சாதியண்டைக்குப் போய் அந்த நகைகளைவாங்கி வரச்சொல்லி, மலையப்பமுதலியாரையும் செகனிவாசமுதலியாரையும் அனுப்பிவித்தோம். அவர்கள் போய்வந்து சொன்ன தென்னவென்றால் ஆனந்தரங்கப்பிள்ளையையும், வீராசெட்டியையும், ஆதிவராகசெட்டியையும் கண்டு பேசவேண்டுமென்று நக்ஷத்திரம்மாள் வரச்சொல்லுகிறாள் என்று சொன்னார்கள். அப்போது நாங்கள் மூன்று பேரும் போனவிடத்திலே அந்த அம்மை சொன்னது: என் புருஷன் கட்டின வீடேயொழிய மற்றப்படியல்லவே. என்புருஷன் என் பிள்ளையிடத்திலே நானும் செத்துப்போகிறேன் செத்துப்போன பிறகு, யாரிந்த வீட்டிலே புரளவேணுமோ அவர்கள் புரளட்டும். அதற்கு முன்னே என்னை அந்த வீட்டைவிட்டுப் போகச்சொன்னால் நான் போகிறதில்லை அல்லவென்று பலவந்தமாய் கையைப் பிடித்திழுத்து வெளியே தள்ளிவிட்டாலப்போ போவனேயல்லாமல் மற்றப்படி போகிறதில்லை. இந்தப்படிக்கெல்லாம் சொல்லு என்று சொல்லிவிட்டு உடைமை என்கையிலே யிருக்கிறது. ஆயிரம் வராகன் என்று சொன்னாளே, அந்தப்படிக்குக் கூட்டிக்கொள்ளச் சொல்லு. இதுவே என் கையில் உடமையை நான் கொடுத்தனுப்புகிறதில்லை யென்று சொன்னாள். அதின்பேரிலே நாங்கள் மூன்றுபேரும் அனுப்பிவித்துக்கொண்டு எதிர் விட்டை வந்து தானப்பமுதலியாருடனே அந்தம்மை சொன்ன விசேஷத்தை எல்லாம் வசனச் சொல்லாய்ச் சொல்லாமல் புருஷன் பிள்ளை செத்தவிடத்திலே நானும் இருக்கிற அநியாயம் இந்த நியாயம் என்னுடைய மைத்துனன் அனுமதியின்பேரில்தான் இந்த வீட்டில் நான் இருக்க இயலும். அதற்கப்பால் அவர் நகைகள் மதிப்பு ஐந்நூறு, ஆயிரம், இரண்டாயிரம் வராகன் என்று அவன் மதிப்புக்குத் தக்கதாகச் சொல்லச்சொன்னாள். அதற்கு, தானப்பமுதலி சொன்னது: சுட்டமண்ணும் சுடாதமண்ணும் மறுபடியும் ஒன்று சேருமோ, அது ஒட்டுமோ. உடமையை அழைப்பிக்கிறது விலை பார்த்துத் தீர்க்கிறது. வீட்டைவிட்டு வெளியியே போகிறது நியாயம் அல்லாமல் வேறே அவமானமில்லையென்று அநேகஞ் சங்கதிகள் சொன்னார். அதின் பிற்பாடு, மறுபடியும் நக்ஷத்திரம்மாளுக்குச் சொல்லியனுப்பினோம். அதற்குத்தக்கதாக மார்க்கமாய்ச் சொல்லியனுப்பின பிற்பாடு செகனிவாச முதலிக்குத் தெரியப்படச் சொல்லி

யனுப்பினோம். அதன் பிற்பாடு அந்த அம்மை கொடுத்தாள் என்று ஒரு ஜோடி பொன் கல்லிழைத்த சரிகை கட்டுப்பவழம் சோடு 1, முத்துக்குவம் 1, கல்லிழைத்த சாந்துக்காரை 1, கெம்புக்கல்லிழைத்த குண்டு தாவடம் 1, பணவிடை சரப்பளி 1, இந்த நகையைக் கொண்டுவந்து கொடுத்து இவ்வளவு தான். என்று சொன்னார்கள். அதின்பேரிலே தானப்ப முதலியாரிருந்துகொண்டு இன்னமந்த நகையிருக்கவேண்டும். இந்த நகையிருக்கவேண்டும் என்று சொன்னார். அவர்கள் ஒரே வார்த்தையாய் இதைவிட வேறே நகையில்லையென்று தாலியைக் கொடுத்தனுப்பினார். அதை மறுபடியும் கொடுத்தனுப்பி. விட்டு, பெண்கள் நகைக்குக் கையிருப்பு எழுதியிருக்கவில்லை இனிமேல் விஸ்தரிக்கவேண்டாம். இது நாளுமில்லையென்று சொன்னால் இப்புறம் என்ன சாதகம் இருக்கிறது. மார்க்கமாய்த்தானே போகவேண்டியதென்று சொன்னேன். அதின் பேரிலே நல்லதென்று வந்த நகையை மதிப்புப் பார்த்தார்கள். கிரயம் வைத்த வராகன் 479½. அவர்கள் சாப்பிடுகிற வெள்ளிக்கலம் கிண்ணி செம்பு வகையரா, வெள்ளிநகை கிரயம் வராகன் 106½. ஆகக்கூடுதல் வராகன் 586. இந்த ஐந்நூற்றி எண்பத்தாறு வராகனும் தள்ளி நிற்கும் மாமியஞ்சைக்கும் மருமகளுக்கும் கொடுக்கத் தீர்த்ததனால் நாலாயிரத் திருநூறு வராகனுக்கு அவள் பற்றிக்கொண்ட நகை கிரயம் வராகன் ஐந்நூற்றெண்பத்தாறு போக நீக்குநின்ற வராகன் மூவாயிரத்தி அறுநூற்றிப்பதினாலு என்று கணக்குப் பார்த்து, நாளையதினம் துரையுடனே சொல்லுவோமென்று நகையை மறுபடி செகனிவாசமுதலி கையிலே கொடுத்துவிட்டு நக்ஷத்திரம்மாள்வசம் பண்ணிப்போட்டு வீட்டுப் பேச்சுக்கு நாளைக்கு (ா) துரையவர்களுடனே சொல்லுகிறோமென்று சொல்லியனுப்பிவிட்டு அவரவர் வீட்டுக்குப் போனோம் இந்த நகை விலையைப் பார்க்கையிலே உத்திராபெத்திசெட்டியையும், கனகிபாடி வீராசெட்டியையும், தானப்பமுதலி அழைத்து ரகசியமாய் விலையிலே பின்னையும அதனமாய் வைக்கச்சொன்னார். அவர்கள் நல்லதென்று விலை வைக்கையிலே சற்று உசத்தி இருபத்தைந்து வராகன் முப்பது வராகன் மட்டுக்கும் விலை வைத்தார்கள். அதற்கு நானிருந்துகொண்டு, இந்த நகை * ... ... ... ... ... ... ... ... ...

1746 ஸு மார்ச்சு மீ 28 உக்கு குரோதன ஸு பங்குனி மீ 19 உ சோமவாரம்

புதுச்சேரி பட்டணம் பிராஞ்சு கும்பினீர் காரியத்துக்குக் கர்த்தராகவும் பிராஞ்சுராசா ஸ்ரீ சிஞ்ஞோர் குவர்னதோர் மும்சு துப்ளேய்க்சு அவர்கள் சமுகத்தில் மகாநாடு தர்மகர்த்தர்

* 5 வரிகள் கிழிந்துபோயிருக்கின்றன.

இருபதுபேரும் கனகராயமுதலியார் பெண்சாதி நக்ஷத்திரம் மாளுக்கும் ஷை மருமகள் சந்திரமுத்து அம்மாளுக்கும் தானப்பமுதலியார் அவர்கள் நடப்பிக்கவேண்டிய சம்மதி தீர்த்த விபரம்: கனகராயமுதலியார் அவர்கள் காலம் பண்ணிப்போனபிறகு அவர்கள் தம்பி தானியப்பமுதலியார் அவர்களுக்கும் நக்ஷத்திரம்மாளுக்கும் வியாச்சியப்பட்டு மகா—ா—ா—ஸ்ரீ துரையவர்களுடனே சொல்லிக்கொண்ட விடத்திலே (ா) துரையவர்கள் முன்னாலே எங்களை அழைப் பித்து இவர்கள் வியாச்சியம் தீருங்கோளென்று சொல்ல, நாங்கள் அந்தப்படிக்கு எல்லாரும் பேசி சகல சன சம்மதி யாய் கனகராயமுதலியார் அவர்கள் திதிகளெல்லாம் கர்த்தத் துவம் தானியப்பமுதலியார் அவர்களுக்கு என்று முன் 5 வ. தீர்த்ததற்கு இப்போது (ா) துரையவர்கள் எங்களை அழைப் பித்து தானியப்பமுதலியார் அவர்கள் நக்ஷத்திரம்மாளுக்கும் ஷை மருமகளுக்கும் (சந்திரமுத்து அம்மாள்) நடத்திவிக்க வேண்டிய சம்மதிக்கு இன்னதென்று தீர்த்துப்போடுங்க ளென்று... ... ... ... ... ... ... ...

சொன்னபடியினாலே, நாங்கள் எல்லோரும் கூடிப் பேசி இற்றைநாள் தீர்த்த விபரம்: தானியப்பமுதலியார் அவர்கள் கொடுக்கிறது நக்ஷத்திரம்மாளுக்கு உடைமையும்வராகனுமாய் இரண்டாயிரத்திஎண்ணூறு வராகனுக்கு ரொக்கம் கொடுக் கிறது. ஷை மருமகள் சந்திரமுத்து அம்மாளுக்கும் உடைமை யும் வராகனுமாய் ஆயிரத்தி நானூறு வராகனுக்கு ரொக்கம் கொடுக்கிறது. இதல்லாமல் கனகராயமுதலியார் அவர்கள் குடியிருந்த வீட்டுக்கு மேலண்டையிலே இருக்கிற கிடங்கு இரண்டு, தோட்டக்கட்டிலேவடவண்டைபக்கமும், தோட்டக் கட்டு நக்ஷத்திரம்மாளுக்கும், தென்புறம் தோட்டக்கட்டு சந்திரமுத்தம்மாளுக்கும் அந்தக்கிடங்கோடே சேர்ந்த புழைக் கடை அவர்கள் இரண்டுபேருக்கும் பொதுவாக இருக் கிறது என்று நாங்கள் எல்லோரும் தீர்த்தபடியினாலே, தானி யப்பமுதலியார் அவர்கள் நக்ஷத்திரம்மாளுக்கும் சந்திரமுத்து அம்மாளுக்கும் நாலாயிரத்திருநூறுவராகனுக்கு உடைமையும் வராகனும் மேல்பக்கம் கிடங்கும் அவர்களுக்கு அறுதியாக கொடுத்துவிடுகிறது அவர்களிதை வாங்கிக்கொண்டு அந்த வீட்டிலே குடியிருந்துகொண்டு வராகனைக் கும்பினியிலே வட்டிக்குக் கொடுத்துவருகிற வட்டியை... ... ...அனுப்பி வித்துக்கொண்டு... ... ... ... ... ... ...

... ... ...அவர்களுக்குப் பிற்காலம் இவர்களுக்குச் சம் மதி வட்டிக்குக் கொடுக்கவேணுமோ அவர்களுக்குக் கொடுத் துப் போட்டுவிடவும் தீர்த்தோம். எழுதின நன்மைக்குச் சாவடியிலேயிருக்கிற முத்தியாப்பிள்ளை அவர்கள் கணக்கு

சூரியனூர் கையெழுத்துடன் அவரவர்கள் கையெழுத்துப் போட்ட விபரம்:— (ா) துரையவர்கள் கையெழுத்து

| | | | | |
|---|---|---|---|---|
| லக்ஷமணநாயக்கன் | ,, | ஆதிவராகன் | | ,, |
| சங்கர அய்யன் | ,, | காளத்தி | | ,, |
| ஆனந்தரங்கப்பிள்ளை | ,, | பீமண்ண முதலி | | கைக்குறி |
| சுங்குமுத்துராமசெட்டி | ,, | சின்னடு | | ,, |
| சுங்கு சேஷாசலசெட்டி | ,, | கங்கிபட்டி வீரராகவன் | | கையெழுத்து |
| சரவுது வெங்கடாசலம் | ,, | பெத்துசெட்டி | | ,, |
| அருணசலம் | ,, | கொண்டிசெட்டி | | கைக்குறி |
| பெத்தாச்சி<br>கருத்தம்பிநயினர்<br>அரியப்பன் | } | | | கையெழுத்து |
| தில்லையப்பன் | | சிதம்பரம் | | கையெழுத்து |
| நல்லதம்பிமுதலி | | | | கைக்குறி |

1746 ஷு மார்ச்சு மீ 29 க்கு குரோதன ஷு பங்குனி மீ 20 உ செவ்வாய்க்கிழமை நாள்

நடந்ததென்னவென்றல், நேற்றையதினம் கனகராயமுதலியார் பெண்சாதி நக்ஷத்திரம்மாளுக்கும் ஷை மருமகள் சந்திரமுத்தம்மாளுக்கும் கொடுக்கச் சொல்லித் தீர்த்து எழுதி கையெழுத்துப்போட்ட சீட்டை (ா) துரைக்குக் காண்பித்து மத்தியஸ்தர் இருபது பேரும் சொன்ன சேதிஎல்லாம் சீட்டிலே எழுதப்பட்ட வயணமான படியினலே, அதை விஸ்தரித்து எழுதாமல் சுருக்கமாய்ச் சொன்னர்கள். அதற்கு (ா) துரை அவர்களிருந்துகொண்டு கனகராயமுதலியார் பெண்சாதி உடற்பிறந்தார்மார் செகனிவாசமுதலியாரையும். மலையப்பமுதலியாரையும், கனகராயமுதலியார் தம்பி தானப்பமுதலியாரையும் அவர்களுக்குச் சம்மதிதான என்று கேட்டார். அவர்களும் எங்களுக்குச் சம்மதிதானென்று சொன்னர்கள். அதின் பேரிலே சின்னமுதலியாரிருந்து கொண்டு முதலியார் பெண்சாதி கையிலே ஆயிரம் வராகன் உடைமை மாத்திரம் இருக்கிறது. அது வரவேணுமென்று கேட்டார். அதற்கு அவர்கள் இரண்டுபேரையும் பார்த்து துரை சொன்னது: நீங்கள் ஏதாகிலும்... ... ...சாட்டப்படத் தேவையில்லை. அந்தநகை பெத்ரு பெண்சாதி... ... .. தை மதிப்பு கொடுத்துவிட்டு அவர்களுக்குச் சொல்லப்பட்ட வகையிலே தள்ளிப்போட்டுச் சொல்லவும் அவனுக்குப் புடவைகள் என்ன இருந்தாலும்... ... ... ... ஒரு பெட்டியும்

கொடுத்து, பின்னையும்... ... ... ... ...சொல்லித் தானப்பமுதலியாரைப் பார்த்துச் சொல்லி ரங்கப்பா நீ போய் என் பாடுத்தியாயிருந்து இந்தப்படிக்கு நடப்பியென்று உத்தாரங் கொடுத்து அவர்களிருதரத்தாரையும் பார்த்து நீங்களொன்றுக்கொன்று அன்னியோன்னியமா யிருக்கச்சொல்லி உத்தாரங் கொடுத்துப் போகச்சொன்னார். அதின்பேரிலே மத்தியஸ்தர் இருபதுபேரும் வழக்கரும் அனுப்பிவித்துக் கொண்டு ... ... ... ... ... ...

**1746 ஷு அவ்ரீல் மீ 3உ க்கு குரோதன ஷு பங்குனிமீ 25உ ஆதிவாரம்**

இந்த நாள் நடந்த சேதி யென்னவென்றால், நான் சமபாக்கோவிலுகுப் போயிருந்தேன் (St. Paul Church) அங்கே தொமினிக் தெ குருசுவை ஆறுமணிக்குச் சந்தித்துச் சென்னப்பட்டணத்து பழய வாசற்படி தெருவே போகையிலே காளத்தீசுவரன்கோவிலுக்கு இப்புறம் போகையிலே ராமச்சந்திரய்யனும் வாசுதேவ பண்டிதனும் குதிரையின் பேரி லேறிக்கொண்டு என் பல்லக்குக்கு எதிரே வந்தார்கள் இவர்களை நான் பார்த்துத் தெண்டன்வைத்துச் சவாரி போனீர்களோ என்று கேட்டேன். அவர்கள் நகைத்துக் கொண்டு ஆசீர்வாதம் என்று சொல்லிவிட்டு முகவிலாசமாய்ப் போனார்கள். இவர்கள் எங்கேபோனார்கள், இந்த வழியில் வருவதற்கு முகாந்திர மென்னவென்று என் மனதிலே யோசனை பண்ணிக்கொண்டு, எல்லாம் வெளியாகுது என்றும் யோசனை தீர்த்து அப்பாலே போனேன். போகையிலே பல்லக்கு நீலச் சரக்குக் கிடங்குக்கு எதிரே போகையிலே நீலக்கிடங்கிலே வந்திருக்கிற திருச்சிராப்பள்ளி கோட்டைக்காட்டு வேங்கடாசல அய்யர் அண்டையிலே சாத்திருக்கிற கும்பனீர் சேவகர் உத்தாண்டியும் அருணாசலமும் வந்து சொன்னதென்னவென்றால், வாசுதேவ பண்டிதரும் கடற்கரையிலிருக்கிற ராமச்சந்திரய்யரும் வந்து குதிரைவிட்டிறங்கி உள்ளே வந்து வேங்கடாசலய்யர் என்ன செய்கிறார் என்று கேட்டார்கள். அவருக்குச் சரீரம் சுகமில்லாமல் படுத்துக்கொண்டிருக்கிறார். இப்போது கேவலம் பலவீனமாய் எலும்பெல்லாம் எடுத்துக் கொண்டு மூன்றுநாளாய் சுரம் வருகிறதும், அதன்பேரிலே நாலு நாழிகை சரீரம் பிரக்ஞையில்லாமல் படுத்துக் கொண்டிருக்கிறதும் இப்பவோ பின்னையோவென்று நாலுவிதமாயிருந்து கொண்டிருக்கிறது என்று வாசுதேவ பண்டிதருக்கும் ராமச்சந்திரய்யனுக்கும் சொன்னோம். இப்போதிருக்கிறதென்ன, வந்து கண்டு பேசவேணும், துரையனுப்பிவித்தாரென்று சொன்னார்கள். அதின்பேரிலே நாலு நாழிகைமட்டுக்கும்

காத்திருந்து அவருக்குச் சுரம் வாங்கினபிற்பாடு இவர்கள் போய்க்கண்டு பேசினார்கள். திருச்சிராப்பள்ளி சமஸ்தானம் மீனாட்சி அம்மாள். சந்திரசேனன் என்கிறவனுக்கு ஐம்பதினாயிரம் பொன்னுக்குக் கடன் சீட்டு எழுதிக் கொடுத்தாளாம் அதற்கு நீர் பிணைச்சீட்டு எழுதிக் கொடுத்தீராம் அது மெய்தானா என்று கேட்டு வரச்சொன்னார் துரையவர்களுடைய உத்தாரப்படிக்கு நாங்கள் கேட்கவந்தோம் என்று சொன்னார்களாம். அதற்கு அவரிருந்துகொண்டு நான் சந்திரசேனனையும் அறியேன்; மற்றப்பேரையும் அறியேன். சந்தாசாயபு காவல் வைத்தபோது யாராரிருந்தார்களோ தெரியாது. அப்போது நாங்கள் துறையூரிலே போயிருந்தோம் என்று சொன்னாராம். அதற்குப் பிற்பாடு இரண்டு சீட்டு எடுத்து இதிலே ஒரு சீட்டு காண்பித்து இது மீனாட்சி அம்மை கையெழுத்துதானா என்று கேட்டார்கள். மீனாட்சி அம்மை கையெழுத்தல்ல. மீனாட்சி அம்மை கையெழுத்துப்போடுகிற சட்டம் ஸ்ரீ மூ மீனாட்சி அம்மாள் என்று போடுகிறது. இதிலே மீனாட்சி அம்மாள் என்று மாத்திரம் எழுதியிருக்கிறது. ஆனபடியினாலே இதல்லவென்று சொன்னார். அதின்பேரிலே எழுந்துதான் அந்த அம்மாள் கையெழுத்துதானா என்று கேட்டார்களாம். அது எனக்குத் தெரியாது என்று சொன்னார். அதின் பிற்பாடு இதற்கு இப்பிணைச்சீட்டு எழுதிக்கொடுத்தீராம் இது உன்னுடைய கையெழுத்துதானா என்று கேட்டார்கள் நான் எழுதிக் கொடுத்ததில்லையே என் கையெழுத்துச் சீட்டு வருமென்று கேட்டாராம். அதின்பேரிலேயும் இப்போது நீர் கொடுக்கப் போகிறீரோ அல்லவென்று எழுதிக்கொடுத்தாலும் சமஸ்தானம் எடுபட்டுப்போன மட்டுக்கும் இதெல்லாம் என்ன கவை இவரது என்று உபாயமாய்ச் சொன்னார்கள் அதின்பேரிலே அவரிருந்துகொண்டு நீங்கள் என்ன சொன்னாலும் நான் எழுதிக்கொடுத்ததுமில்லை நான் அவரை அறிந்ததுமில்லை. இதற்கு வேணுமென்று உத்திரவாதம் பண்ணுகிறேனென்று கெட்டியாய்ச்சொல்லி எனக்கானால், சரீரம் சுவஸ்தமில்லை மயக்கமும் தியக்கமுமாயிருக்கிறது. இது நடுவே எதாகிலும் வார்த்தைகள் வித்தியாசங்கள் வந்தால் நீங்கள் பார்க்கத்தேவையில்லை என்று சொல்லியனுப்பினார். அவர்கள் அதற்கு நாங்கள் இந்தச்சேதியை துரைக்குச் சொல்லுகிறோம் என்று புறப்பட்டார்கள். எனக்கானால், சரீரம் நிற்கிறதில்லை. இப்படிப்பட்ட அபாண்டம் போட்டு என்னசெய்யவேணுமானாலும் செய்யலாம். அவர்கள் பட்டணத்திலே வந்து அகப்பட்டுக்கொண்டிருக்கிறோம் என்று சொன்னாராம் அதுவும் கேட்டுக்கொண்டு, நல்லது இந்தச் சேதியெல்லாம் துரையவர்களுடனே சொல்லுவோம் என்று புறப்பட்டு வந்தார்கள் என்று கும்பினீர் சேவகர் சொன்னார்கள். ஆனால், சுவாமி

நமக்கு இப்படிப்பட்ட கஸ்தி கொடுக்கவேண்டியது நியாயம். அவர்கள் அப்போதானே போகிறவர்களை நாம் துரைக்கு ஏதாகிலும் மார்க்கம் பண்ணிக் கொடுத்துத் தீர்த்தனுப்புவோமென்றும் நாம் போட்டு நிறுத்தினதற்கும் நமக்கும் இதினாலே அவகீர்த்தி வரத்தக்கதாக நடத்தவேண்டியது நியாயந்தானென்று மனதிலே வைத்துக்கொண்டு சுவாமியைப் பார்த்து இதினாலே வரப்பட்ட பாபத்தைக் காத்துரக்ஷிக்கவேணுமென்று வேண்டிக்கொண்டேன்.

1746 ஆ அவ்ரீல் மீ 4வ-க்கு குரோதன வூ பங்குனி மீ 26வ திங்கட்கிழமை

இற்றை நாள் சாயங்காலம் ஐந்து மணிக்கு, துரை சேவகன் வந்து (ா) துரையவர்கள் அழைக்கிறார் என்று அழைத்தான். துரை எங்கே யிருக்கிறாரென்று கேட்டால், கடற்கரையிலே மூலக்கொத்தளங் கட்டுகிறார்களே அங்கே யிருக்கிறார் என்று சொன்னான். பின்னையாராகிலும் அழைக்கச் சொன்னார்களா என்று கேட்டால், சின்னமுதலியாரையும் மலையப்ப முதலியாரையும் அழைக்கச் சொன்னார்கள். அவர்களண்டைக்கு இரண்டு சேவகர் போயிருக்கிறார்கள் என்று சொன்னான். அதின்பேரிலே மூலக்கொத்தளத்துக்குப் போனோம். அதற்கு முன்பாக சின்னமுதலியாரும் தம்பி திருவேங்கடமும் தனுத்தி அடைத்துக்கொண்ட நிலச்சம்மதிக்கு, குண்டுகிராமம் குத்தகைதாரரும் பொகேத்தும் சொன்ன பிராதுக்காக துரை மூச்ச பொகேத்தும் பேரிலே நிலம் விற்கிற சாடையும் சாலை மரங்கள் வெட்டி விற்று எடுத்துப்போகிற சம்மதியும் பின்னையும் அவன் செய்த துரோகங்களையெல்லாம் பெத்திஸியோ மெழுதி சின்னதுரைக்குக் கொடுத்த சம்மதி சொல்லப் போயிருந்தார்கள். மலையப்பமுதலியும் அணக்குநரம் போயிருந்தான் நான் போனவுடனே என்னைக்கண்டவுடனே சிஞ்ஞோர் குவர்னதோர் கிட்டே வந்து 24வ சனிக்கிழமை ராத்திரி ஆறு மணிக்கு கனகராயமுதலியார் பெண்சாதி நட்சத்திரம்மாளுக்கும் அவள் மருமகளுக்கும் (சுந்திரமுத்து சம்மதி மூவாயிரத்தி ஐந்நூறு வராகன் புதுச்சேரி எட்டு ம.த்து கொண்டுபோய் மூசே துலாராம் வசத்திலே செலுத்தி அதற்குமேலே எழுதப்பட்ட இரண்டு பெண்கள்) (நக்ஷத்திரம்மாளுக்கு இரண்டு பங்கும் சந்திரமுத்துக்கு பங்கு ½யும்) ... ... . ... ...தானப்பமுதலி, மலையப்பமுதலி ரங்கப்பிள்ளை இவர்கள் மூன்றுபேரும் கொண்டுவந்து முதலிட்டதாக எழுதி இதற்கு வட்டிக்கும் 1-க்கு 100-க்கு ஏழாகிற வீதம் வட்டி எழுதி வருஷத்துக்கு ஒருதரம் வட்டி கொடுக்க எழுதி, இந்தப்படி கடன் சீட்டெழுதி துரை மூதலா

கிய கோன்செல்காரர் அனைவரும் கையெழுத்துப்போட்டு கும்பினீர் முத்திரையும் போட்டிருந்த மூவாயிரத்து ஐந்நூறு வராகன் கடன் சீட்டை என்கையிலே கொடுத்து நீ கொண்டு போய் கன்கராயமுதலியார் பெண்சாதியண்டைக்குப் போய் இந்தச் சீட்டைக் கொடுத்து அந்த வீட்டைவிட்டுப் போகச் சொல்லச்சொல்லு என்று சொல்ல, நல்லது, அந்தப்படிக்குத் தானே போய்ச் சொல்லுகிறேன் என்று சொன்னேன். அப்பால் கடுக்கன் சம்மதியென்னமாச்சுது என்று கேட்டார். மலையப்பமுதலியை சின்னமுதலியார் கோவிலிலே வந்து சத்தியம்பண்ணச் சொன்னார்கள். அந்தப்படிக்கு நேற்றுக்காலமே கோவிலுக்குப் பூசை கேட்கப்போனவிடத்திலே சத்தியம் பண்ணச்சொன்னால், கோவில் சுப்பேரியோரோடே போய்ச் சொல்லுவோம் என்று சொல்லச் சொன்னவிடத்திலே அவரிருந்துகொண்டு சன்னதியிலே சத்தியம்பண்ணப்போகாது. காலையில் தினம் வாருங்கள் ... ... ... ... தீர்த்துப் போடுகிறோமென்று சொன்னார் ... ... ... அதின் பேரிலே பேசிக்கொள்வோம் ... ... ... விட்டு அங்கேயிருக்கிற சேவகரையும் சாவடி கணக்கு ரங்கப்பிள்ளையையும் சாவடியே போகச்சொல்லு என்று சொன்னார். அதற்கு முன்பாகத்தான் சின்னமுதலியார் உங்கள் முத்திரையை வாங்கிப்போடச்சொல்லியும், சேவகரையும் போகச்சொல்லியும் துரையவர்கள் சொன்னதேயுண்டானால் அவன் வீட்டை விட்டுப்போகிறமட்டுக்கும் சேவகருமிருக்கவேணுமென்று உம்முடைய முத்திரையுமிருக்கவேண்டுமென்று சொல்லியிருந்தார். ஆனபடியினாலே, அந்தச் சாடையை துரையுடனே சொன்னதற்கு உம்முடைய முத்திரையை வாங்கிப்போட்டு அவர் முத்திரையைப் போட்டுக்கொள்ளச்சொல்லி இரண்டு சேவகரை மாத்திரம் இருக்கச்சொல்லென்று சொன்னார். அப்பால் அலங்கத்தின்பேரிலே ஏறிக்கொண்டுபோய் துவான்கிட்டேயிறங்கி அங்கேயிருந்து துரைவீட்டே போனார் அவ்விடத்திலேயிருந்து அனுப்புவித்துக்கொண்டு கனகராய முதலியார் வீட்டண்டைக்கு வந்து சாவடி பிள்ளையையும், அழகப்பமுதலியையும். மலையப்பமுதலியையும் அழைப்பித்து எதிர் திண்ணையின்பேரிலேயிருந்துகொண்டு கும்பினியார் எழுதிக்கொடுத்த மூவாயிரத்தி ஐந்நூறு வராகன் கடன் சீட்டையும் கொடுத்து நக்ஷத்திரம்மாளுக்குச் சொல்லியனுப்பினது. இந்த வீட்டிலே யிருந்தால் சின்னமுதலியாருக்கும் உங்களுக்கும் விருத்துவராதே ஆனபடியினாலே, உங்களுக்கு விட்ட வீட்டைப் போகச்சொல்லச் சொன்னாரென்று அதற்கு வயணமாய் நயமாய்ச் சொல்லியனுப்பினோம். அதற்கு அந்தம்மாள் சொல்லியனுப்பினது: நீ என் மட்டிலே செய்த

சகாயமெல்லாம் அறிவேன். நீ பார்த்து துரைக்குச் சொன்னால் துரை கேளார் என்று சொல்லி, நீ பார்த்து எப்படி நடப்பித்தால் அப்படி நடக்கும் என்று சொல்லி யனுப்பினாள். அந்தப் படிக்கு வந்து சொன்ன அழகப்பமுதலிக்கு தம்பி மலையப்ப முதலியுடனேயும் நான் அதற்கு உபசாரமாய் நீ தாய் நான் பிள்ளை, உன் காரியத்திலே வித்தியாசமாய் நடப்பிப்போமா? துரை சொன்னபடிக்கு நான் சொல்லுகிறவனேயல்லாமல் மற்றப்படி என்றாலே ஆகவேண்டியதென்ன. உம்முடைய மைத்துனன் தானப்பமுதலி வயிராக்கியமாய் நீர் இந்த வீட்டிலே யிருக்கப்போகாதென்று சொன்னால், நாங்கள் செய்யவேண்டியதென்னவென்று அதற்கு அநேகமாய் உபசரணையாய்ச்சொல்லி யனுப்பினதின்பேரிலே பதினைந்து நாளையிலே அவள் வீடு பார்த்துக்கொண்டு போகிறோம் என்று சொல்லியனுப்பினாள் அதின்பேரிலே சின்னமுதலியார் அவ்விடத்துக்கு வந்தார் அவருடனே பதினைந்து நாளையிலே அப்பாலே வீடு பார்த்துக் கொண்டு போகிறோமென்று சொன்னாளென்று சொல்லி யனுப்பிவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டேன்.

*1746*ஷு அவ்ரீல் *மீ 5*உக்கு குரோதன ஷு பங்குனி *மீ 27*உ செவ்வாய்க்கிழமை

காத்தாலே நடந்த சேதி யென்னவென்றால், சின்ன முதலியார் தீர்ப்பைப்போலே இன்னமொரு தீர்ப்பு எழுதி எல்லாரும் கையெழுத்துப்போட்டு எனக்குக் கொடுக்க வேண்டுமென்று சொன்னார் அந்தப்பேச்சு துரையவர்களிடம் சொன்னேன் .. ... ... சொல்லி உத்தாரங்கொடுத்தார். அந்தப்படிக்கு ... ... யும் முதலியார் பெண்சாதிக்கு மத்தியஸ்தர் தீர்த்து எழுதிக்கொடுத்தபடிக்கு ஒன்று எழுதி வித்து மூன்றுபேருடைய கையெழுத்தும் வாங்கிக்கொண்டு வந்து கொடும் என்று சொல்லியனுப்பினேன்.

*1746* ஷு அவ்ரீல் *மீ 6*உ க்கு குரோதனஷு பங்குனி*மீ 28*உ புதன்கிழமை

காலமே பத்து மணிக்கு நடந்ததென்னவென்றால், கனகராயமுதலியார் தம்பி தானப்பமுதலியார் துரைவீட்டுக்குப் போகையிலே என்னண்டைக்கு வந்து கண்டுபேசினார் * ...... புத்திக்கு மோசம்வந்தது என்று சொல்லி, தமிழருடைய காரியம் எல்லாம் இப்படித்தான். திருவேங்கடத்து சீட்டு பெத்ரு வீட்டிலே யிருக்கிறது. அதை யெடுத்துவருகிறேன் என்று

* 10 வரிகள் கிழிந்துபோயிருக்கின்றன.

சொன்னேன். அதுகூட எடுத்துவருகிறதற்கில்லை நானென்ன செய்கிறது-என்று மனதிலே வைக்கிறதில்லை என்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு அப்படிக்கு எனக்கு ஏற்ற காரியஞ் சொன்னால் அந்தக் காரியம் நான்... ... ... செய்கிற காரியம் நீங்கள் சொன்னீர்கள். இப்படிப்பட்ட காரியம் ... ... .. உன்னுடைய தம்பியினாலே முடித்துப்போட்டு வித்து... ... ...இந்த விபரமாய்ச் சொன்னாலும் அவர்களுக்கு யாரொத்துப்போறதில்லையென்று சொல்லி ... ... ...கொண்டுவாரார்கள். அவர்களிந்தப் பேச்சை மெய்யென்று கேட்டுவிட்டுப்போகிறதில்லை. அவர்களுடைய பொல்லாத வேலையினுடைய குணம் அப்படியிருக்கிறது. ஆனாலிவர்கள் எப்போ இப்படி உம்முடனே எதிராடுகிறார்களோ அவர்கள்முன்சுவாமி என்னை நேமகம்பண்ணியிருந்தார். கள். அந்தப் பாவத்துக்குக் கஸ்திக்காரடுவந்துவிடும். இந்த முகாந்திரமாய் உம்மைக்கொண்டு வழக்கு பண்ணிவிக்கிறோம் என்று... ... ...சொன்னேன். அதற்குத் துரையிருந்து கொண்டு, நீ என்ன அவர்களைக் கேட்கிற உடன்படிக்கையென்று கேட்டார். பணம் மெள்ளக் கொடுங்கோளென்று தவணை தவணையாய் வைக்கிறேன். இந்தக் காரியங்களிலே உங்கள் கோவிந்தய்யன் அருணாசலசெட்டி வரத்தேவையில்லை. நான்தானே பார்க்கப்பண்ணி மேல்வாங்கிக்கொள்ளுகிறேன் என்றும் கும்பினீர் வர்த்தகரைக்கொண்டு... ... ...

தனியே சொல்லிவிட்டு * ... ... ... ... ...

ஒருவேளை யாருடைய பேரிலே வைக்கக் கேட்டுக்கொண்டு மருள்விழுந்து பேசுகிறார்களென்று சொன்னேன். சொன்ன மாத்திரத்திலே தம்முடைய கணக்கு ரங்கப்பிள்ளையை அழைத்தார்கள், அவர் வந்தார். அப்பாலே,... ...சின்ன

துரை † ... ... ... ... ... ... ... ...

... ... ...நான் சொன்னது எப்படியிருக்கிறதென்று கேட்டால், தேவரீர்கள் சொல்லுகிற நியாயத்துக்கு வழுவு வருமா? எங்களுக்கு எல்லாம் ஒவ்வொரு காரியத்திலே புத்தி கொஞ்சம் குறைந்து சர்வாந்தர்யாமியாகிய சுவாமி சகல சவாபு பண்ணித் தீர்த்தருள வேணுமே. அப்படிப்பட்ட உங்களுக்குப் பிரதி சொல்லுகிறவன் என்று சொன்னேன் .. ...அது கேட்டவுடனே... ... ... ...உன் இஷ்டப்படி செய் என்று சொல்லுவார்.... ...பெத்து ... ... தாயென்று கேட்டார். பாதிரியார் கோவிலிலே சத்தியம்பண்ணிவிட்டு ... ... ...

---

* கிழிந்துபோய் விட்டிருக்கின்றன.

† 10 வரிகள் கிழிந்திருக்கின்றன.

அவர்களை உங்கள் முன்பாகத் தீர்த்துக்கொள்ளவேணு மென்று வந்தார்கள் என்று சொன்னேன். அதற்கு, சம்பா கோவில் பாதிரி கெர......என்று பெரிய பாதிரியார் இருக்கி ருனே அவனை அழைத்துவந்து சொல்லி எண்பித்துப் போ என்று சொன்னூர். செருபுருதாருடனே சொல்லி அழைத்துக் கொண்டுவரச்சொன்னபடிக்கே அவனை அழைத்து வந்தார் கள். அவரைக் கண்டு பெரி அனுப்பிவிட்டு என்னையும், லாசரையும், மலையப்பனையும் அழைக்கச்சொன்னது. பாதிரி சொன்னது: கோவிலிலே சத்தியம் பண்ணுகிற வாடிக்கை யில்லையென்று சொன்னூர். அதுவும் மெய்தான் கோவிலிலே சத்தியம் பண்ணப்போகாது சொன்னது. தானப்பமுதலியா ரைப் பார்த்து, உங்கள் வீட்டிலே சிலுவையிலே அடித்த ரூபம் இருக்கிறதே ... ...வென் கையிலே சத்தியம் பண்ணி வித்துக்கொள்ளச் சொல்லி மலையப்பமுதலியாரைப் பார்த்து அந்தப்படி சத்தியம் பண்ணிக்கொடுக்கச்சொல்லி யனுப்பி விட்டார். நல்லது என்று சொல்லி அனுப்பிவித்துக்கொண்டு, பிறகு இவ்விடத்திலே யிருக்கையிலே உடனே என்னையும் அழைத்துவருவாயென்று போனேன் ... ... அவர்களுக்கு விட்டுவிடவேண்டிய ... ... ... கனவையில்லை ... அந்தப்படிக்கு ... ... ... ... ...கொடுக்கிறோம். எங்களுக்கு ... ... ... ...இவர்கள் பண்ணின காரியத்தினுலே யாரும் நம்பமாட்டார்கள்.

*1746* ௵ அவ்ரீல் ௴ *6* ௳ க்ஷய குரோதன ௵ பங்குனி ௴ *28* ௳ புதன்கிழமை

பட்டணத்துக்குள்ளே தலையிறக்கமாயிருக்கிறது. வெளி யிலே அவகீர்த்திப்பட்டுப்போனோம். நீங்கள் தயவுபண்ணி அவர்கள் செய்த தப்பிதத்தை மனம்பொறுத்து ரக்ஷிக்க வேண்டும் என்று பின்னையும் அதற்கு அடுத்த நியாயமாய் அநேகம் வார்த்தைகளைச் சொல்லி அவர்களைக் கொண்டு வந்து என் காலிலே போட்டுவிட்டுத் தெருத்திவிடு. இந்தப் பணம் உங்கள்பேரிலே சாரும் என்று யோசனைபண்ணத் தேவையில்லை, நானிந்தப் பணத்தை விட்டுவிட்டேன். வெளிக் குச் சும்மாய் விட்டுவிட்டான் என்றும் போகாதே. ஆனபடியி னுலே, இப்படி செய்து விட்டுவிடு என்று சொல்லி இந்தப் பணம் எனக்குக் கொடுக்கிறதற்கு அருணசலசெட்டியும், என் கணக்குப்பிள்ளையும் வெகு பிரயோசனத்தை அடைந் திருக்கிருர்கள். ஆனபடியினுலே, நீ அந்தப் பணம் போகு தென்று யோசனை பண்ணவேண்டாம் என்று சொல்லி இனி மேல் அரை நாழிகையாகிலும் தாமதப்படி வைக்கவேண்டாம். சீக்கிரமத்துக்கு முடித்துப்போட்டுவிடு என்று சொல்லிப்

போகச்சொன்னார். அந்த மட்டிலே நானும் அனுப்பிவித்துக் கொண்டு பாக்குக்கிடங்கிலே வந்து உட்கார்ந்துகொண்டேன். இதிலே சின்னமுதலியார் அவர்களும் மலையப்பமுதலியும் வந்து நின்றார்கள் ஏன் உட்காருங்கோளென்று சொன்னேன். தானப்பமுதலியாரிருந்து நீங்கள் வளவுக்கு வரவேணு மென்று அழைத்தார்கள். நல்லதென்று கூடத்தானே எல்லா ரும் நடந்து கனகராயமுதலியார் வீட்டை முன் கட்டிலே வடக்குப் பார்த்த தென்னண்டைக் கூடத்திலே போய் உட் கார்ந்தோம். உட்கார்ந்தபிற்பாடு உபதேசியை அழைத்துவரச் சொல்லி ஆளனுப்பிவித்தார். உபதேசி வருமளவும் நாங்களனை வரும் பேசியிருந்தோம். இதிலே செகனிவாசமுதலியார் வந் தார், சின்னமுதலியார் பின்னையும் நாலத்துரெண்டு கிறிஸ்து வர்கள் வந்தார்கள். சென்னப்பட்டணம் ஆனை வியாச்சியம் எறமநாயக்கன், மதனந்தபண்டிதர், கோபாலய்யன், அவ சரம் கிருஷ்ணய்யன், எண்டபல்லி வெங்கடாசலய்யன் மேற்படி குமாரர் இரண்டு பேர் தட்டார ராமாசி இப்படி வந்தான் வரத்தான் பதினைந்து இருபதுபேர் இருக்க சவரிமுத்துமுதலி மகன் ஆசாரப்பமுதலி வந்தான். அவனுங்கூட இருக்கையிலே சிலுவையிலே யறைந்த பாடுபட்ட சுரூபத்தை மலையப்பமுதலி கையிலே கொடுத்து, கனகராயமுதலியார், நான் காதிலே போட்டிருக் கிற பெரிய பச்சைக்கல் கடுக்கன் சோடு எனக்கு நன்கொடை யாகக் கொடுத்துவிட்டார் என்று சத்தியம் பண்ணச்சொல்லி, தானப்பமுதலியார் சொன்னார். அந்தப்படிக்கு மலையப்பமுதலி பாடுபட்ட சுரூபத்தைக் கையிலே வாங்கிக்கொண்டு கனகராய முதலியார் அவர்கள் எனக்கு நன்கொடையாகக் கொடுத்தார். மறுபடி வாங்கிக்கொள்ளுகிறதில்லை என்று சொன்னார். நான் கையிலே வைத்திருக்கிற சுரூபம் அறியவென்று சொன்னான். அதின்பேரிலே தானப்பமுதலியார் தெருவாசற்படிக்கட்டு மட் டுக்கும் வந்து அவரவரை அனுப்பிவித்துக்கொண்டு தாம் தாம் குடியிருக்கிற வீட்டைப் போனார். அவரவரும் அனுப்பிவித்துக் கொண்டு அவரவர் வீட்டுக்குப்போனார்கள் ஆனால், அவர் செய்த சத்தியம் பொய்ச்சத்தியம் என்று இவர் இவ்வளவு காரியத்துக்குச் சத்தியம் வீட்டுக்குள்ளே தானே செய்வித்துக் கொள்ளுகிறதல்லவென்று சொல்லிக்கொண்டார்கள். அந்தப் பச்சைக்கல் கடுக்கன் சோடு பெறும் விலையானால் நூற்றியைம் பது வராகன் பெறும். மெத்த விலை உயர்த்திப் பார்த்தால் இருநூறு வராகனுக்கு அதனம் பெறமாட்டாது இது காரியத்துக்குள்ளே இவர்களித்தனை நடப்பித்துக்கொண் டார்கள் என்று சமஸ்தமானபேரும் சொல்லிக்கொண்டார் கள். தமையனார் கனகராயமுதலியார் சம்பாதித்த திரவியம்

இவருக்கு சுலுவாய் நாற்பதினுயிரம் ஐம்பதினுயிரம் வராகன் மட்டுக்கும் வந்திருக்கும்போது தமையனுர்தானே மைத்துனன் காதிலே காரைக்காலுக்குப்போகையிலே போட்டக் கடுக்கன், அவர் நன்கொடையாகக் கொடுக்கட்டும் அல்லது இரவலாகக் கொடுக்கட்டும் இந்த ஐந்து வருஷகாலமாக அவன் காதிலே யிருந்ததை அவன்தான் ஆசைப்பட்டுச் சொன்னுலும் போகட்டும் கொண்டது நூறு வராகனுச்சுதென்று சொல்லாமல் வீட்டுக்குள்ளே சத்தியம் பண்ணுவித்துக்கொண்டாரேயென்று இப்படி யவரவருக்குத் தோற்றினபடிக்குப் பின்னையும் அனேகவிதமாய் நோயதான வார்த்தையாய்ச் சொல்லிக் கொண்டார்கள்.

இற்றைநாட் காலையிலே கனகராயமுதலியார் பெண்சாதி சம்மதி நூற்றிப்பதினுலுபிறை வராகனிருந்ததைச் சாவடி மணியம் அழகப்பமுதலி கையிலே கொடுத்து கனகராயமுதலியார் பெண்சாதி நக்ஷத்திரம்மாளும் கொடுத்து உங்கள் வராகன் நாலாயிரத்தியிருநூறும் சரியென்று கணக்கு வயணம் சொல்லி அனுப்பிவித்தேன். அவர் அந்தப்படிக்கு அவள் தம்பி மலையப்பமுதலியைக்கூட வைத்துக்கொண்டு கொடுத்துவிட்டு வந்தேனென்று கபுறுசொன்னுர்.

1746 ௵ மார்ச்சுமூ 31உக்கு குரோதனஸ்ரீ பங்குனிமீ 22உ வியாழக்கிழமை

மதிப்பு ஓசத்திவைத்துப்போட்டபடியினுலே ... ... இனியும் பார்க்கிறபேர் அல்லாமல் பாப புண்ணியத்தை விசாரிக்கிறவர்கள் அல்லவென்று சேஷாசல செட்டியாருடனே சொன்னேன். அவரிருந்துகொண்டு வீராசெட்டி பாபத்தை யெண்ணுகிறவனல்லவென்று சொன்னுர். இதனளவிலே சின்னமுதலியாரும் இப்படி செய்கிறதல்லவென்று சேஷாசல செட்டியார் சொன்னுர்.

1746 ௵ அவ்ரீல் மூ 1உக்கு குரோதன ௵ பங்குனி மீ 23உ வெள்ளிக்கிழமை நாள்

சேதி யென்னவென்றுல், தேவனும்பட்டணத்திலே சீர்மை புவுஞ்சுதாரன் சேக் இரகி முல்லா சாயபு என்கிறவன் மகா-ா-ா-ஸ்ரீ புதுச்சேரி குவர்னதோர் முசே துய்ப்ளேய்க்சு அவர்களுக்கு ஒரு காகிதமெழுதியனுப்பினுர். அந்தக் காகித சேதி என்னவென்றுல், தேவனும்பட்டணம் குண்டுகிராமம் பதினுறையும் சப்தி பண்ணச்சொல்லி நபாபு அவர்கள் பர்வானு வந்தது. அசரத்து நபாபு அவர்களுக்கு அண்ணன் தம்பி மரியா

தையாய் சினேகம் நடக்கிறபடியினாலே சப்தி பண்ணுகிற காரியங்களுக்கு எங்கள் பவுஞ்சும் வருகிறது. பின்னையும், பவுஞ்சு மற்றது வேணுமானாலும் உங்களுக்கு எழுதி யழைப்பித்துக் கொள்ளச் சொல்லி எனக்கு பர்வானா வந்தபடியினாலே எங்களுக்கு நபாபு சாயபு எப்படியோ அப்படித் தாங்கள் ஆனபடியினாலே இங்கே நடக்கிற காரியம் அப்போதைக்கப் போது தங்களுக்கு எழுதி அனுப்புகிறோம். தாங்கள் எழுதின படிக்கு நடந்துகொள்ளுகிறோம் என்றும், இப்போது சிறிது ராணுவம் குண்டு மருந்தும் அனுப்பிவிக்கச்சொல்லி எழுதியிருந்தது. அந்தக் காகிதத்தைப் பார்த்துக்கொண்டு மதனாந்த பண்டிதரும் சின்னமுதலியாரும் இந்த வயணமென்ன எல்லாம் சொன்னார்கள் சொன்னபிற்பாடு இதையெல்லாம் கேட்டு இந்தக் காகிதத்தைத் திரான்சிவிட்டு, பிரான்சு வார்த்தையிலே எழுதிக்கொண்டு வாருங்கோளென்று உத்தாரங்கொடுத்தார். இவர்களும் பிரான்சு வார்த்தையிலே எழுதிக்கொண்டுபோய் பகலைக்கு மேலாக மூன்று மணிக்குக் கொடுத்தார்கள்.

1746 ஷு அவ்ரீல் மீ 2உ க்கு குரோதன ஷு பங்குனி மீ 24உ சனிவார நாள்

காலமே எட்டு மணிக்கு கோன்சேல் கூடி நேற்று தேவனாம் பட்டணம் சீர்மை பவுஞ்சுதாரன் சேக் இரகிமுல்லா சாயபு அனுப்பின காகிதம் பிரான்சுப்படுத்தி இருக்கிறதே அதைப் படித்து என்ன யோசனை பண்ணினார்களோ தெரியாது அரை நாழிகைக்கெல்லாம் கோன்செல் கலைந்து சின்ன முதலியாரையும் மதனாந்தபண்டிதரையும் அழைப்பித்து துரை ஒண்டியாயிருந்துகொண்டு தேவனாம்பட்டணம் சீர்மை பவுஞ்சுதாரன் அனுப்பின காகிதத்துக்குப் பதிலுத்திரவு எழுதியனுப்பிக்கச் சொன்னது நீரே யதின் காகிதம் பிரான்சு செய்த தற்குச் சந்தோஷமாச்சுது. நீர் எழுதின காரியத்துக்கு நாங்கள் உங்களுக்கு......வேண்டிய சகாயம் பண்ணுகிறோம். ஆனால், அசரத்து நபாபு சாயபு .... ...அப்படியே மற்றதைச் செய்து நடப்பிவித்துக் கொடுக்கிறோம் என்றும், பின்னையும் சிறிது சொல்லத்தக்கவிதமாய் விசேஷமான வார்த்தைச் சொல்லி அனுப்பிவிக்கச் சொன்னார். அந்தப்படிக்கு, தெலுங்கு காகிதம் எழுதியனுப்பினார்கள்.

**1746ஆ அப்ரீல்மீ 2உக்கு குரோதனஆ பங்குனிமீ 24உ சனிக்கிழமை நாள்**

காலமே பதினொரு மணிக்கு, சின்னமுதலியார், மலையப்ப முதலி, நானும் (ா) துரையவர்களண்டைக்குப்போனோம். அப்போது உடமையும் வெள்ளிநகையும் விலை வைத்துத் தீர்த்து நக்ஷத்திரம்மை வசம் கொடுத்த வயணம் சொன்னதற்குத் துரையவர்கள் கேட்டது: எத்தனை வராகன் ஆச்சுதென்று கேட்டார் ஐந்நூற்றியெண்பத்தாறு வராகனாச்சுதென்று சொன்னோம். அதற்கு துரை யிருந்துகொண்டு சொன்னது: ஆயிரம் வராகனுக்கு உண்டு. பின்னையும், அதனமுண்டு. லாசர் சொன்னாரே, எப்படி அபத்தமாய்ச் சொல்லுகிறது என்று சொன்னார். அதிலே நானிருந்துகொண்டு, இவர் முன்னே அந்த நகையைப் பார்த்ததில்லையே, அதினாலே சொன்னார் என்று சொன்னேன். நல்லது, நாலாயிரத்தி இருநூறு வராகனுக்கு ஐந்நூற்றியெண்பத்தாறு வராகன் போக, நின்ற வராகன் எத்தனையென்று கேட்டார். மூவாயிரத்தி அறுநூற்றிப்பதினாறு வராகன் என்று சொன்னேன். மூவாயிரத்தி ஐந்நூறு வராகன் கும்பினீரிலே கொண்டுபோய் மூசே துலாராம் வசம் செலுத்துங்கோளென்றும் குறைவு வராகனை பெத்ரு பெண்சாதி கையிலே செலுத்திப் போடுங்கோளென்றும் சொல்லி மூசே துலாராம் (M. Dulaurems) பேருக்கு ஒரு காகிதம் எழுதி என் கையிலே கொடுத்தார். அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: கனகராயமுதலியார் பெண்சாதி கபுறும், அவள் மருமகள் சந்திரமுத்தும் மூவாயிரத்தி ஐந்நூறு வராகன் லாசரும் மலையப்பன் கனகராயமுதலியார் தம்பியும், மைத்துனனும், ரங்கப்பனுங்கூட கொண்டுவந்து முதலிடுவார்கள். அதை வாங்கிக்கொண்டு கனகராயமுதலியார் பெண்சாதி நக்ஷத்திரம்மாள் மேற்படி மருமகள் சந்திரமுத்துபேருக்கும் கும்பினீரிலே கடன் வாங்கினதாய் கடன் சீட்டெழுதி அதிலே அந்த வராகனுக்குப் பிரிவு கனகராய முதலியார் பெண்சாதிக்கு இரண்டு பங்கும் மேற்படி மருமகளுக்கு ஒரு பங்கும் இந்தப்படி வயணமாம்படியே எழுதி வட்டிக்கு ஆ 1 க்கு 100 க்கு 7 ஆக வருஷத்துக்கு வருஷம் கொடுத்துவிடுகிறது என்றெழுதிக் கொடுக்கச்சொல்லி மூசே துலாராம் பேருக்குக் கடுதாசி யெழுதியிருக்கிறது. இந்தப் படிக்கு இருக்கிற வராகனிலே எடுத்துக்கொண்டுபோய் முதலிடுங்கோளென்று சின்னமுதலியார் பார்த்து துரையவர்கள் சொன்னார்கள். நல்லதென்று அனுப்பிவித்துக்கொண்டு வருகையிலே துரையவர்கள் சொன்னது: மத்தியஸ்தர் தீர்த்தபடிக்கு நாலாயிரத்திருநூறு வராகனும் வீடும் பற்றிக் கொண்டதற்கு நக்ஷத்திரம்மை ஷ மருமகள் கையிலேயும்

ஊர்கணக்கன் கையெழுத்துப்பட, செல்லாஞ்சீட்டு வாங்கிக் கொடுக்கச் சொல்லச்சொன்னார். அந்தப்படிக்குச் சாவடி மணியம் அழகப்பிள்ளையையும் ஊர்கணக்கு சிவாதத்தையும் அழைப்பித்துச் சம்மதிச் சீட்டெழுதிவித்து, கனகராயமுதலியார் பெண்சாதி நக்ஷத்திரம்மை கையெழுத்தும் ஷெ மருமகள் சந்திரமுத்து கையெழுத்தும் வாங்கிவாரும் என்று சொன்னார். சாவடி கணக்கன் அழகப்பிள்ளை, ஊர்கணக்கன் கையெழுத்திடக் கேட்டபோது நக்ஷத்திரம்மை யண்டைக்குப்போய் கையெழுத்துப் போடச்சொன்னால் போடமாட்டோமென்றும், தன் தமையனைப் போடச்சொல்லியும் தடட. தம்பி போய்ச் சொல்லியும் இரண்டு சாமம் திருப்பியடித்து, இது சின்னமுதலியார் கேட்டு அவன் கையெழுத்துப் போடாதேபோனால் நான் சம்மதிக்கமாட்டோமென்றேன். என் தம்பி கையிலே பலவந்தமாய்ப் போட்டுக்கொண்டார்களென்று சொல்லுவாள். ஆனபடியினாலே, அவளுக்கு எழுதத் தெரியாதேபோனாலும் அவள் கிழித்தபடிக்கு அவள் எழுத்தாணி பிடித்து ஊணினால் சரியென்று சொன்னார்.

அதன்பிறகு வெகு விதமாய்த் தெரியச் சொன்னதின் பேரில் எழுத்தாணி வாங்கிக்கொண்டு அடையாளம் சயிக்கினை பண்ணினாளென்றும், அதின் பிறகு அவன் மருமகளும் அப்படியே அடையாளம் சயிக்கினேயாய் கையெழுத்துப்போட்டாள் என்றும் அழகப்பிள்ளையும் ஊர் கணக்கு சீயாலமும் வந்து சொன்னார்கள் செல்லுஞ் சீட்டுப்படிக்கு எழுதினது 1746 ஆண்டுக்கு அவ்ரில் மாதம் 2 உக்குச் செல்லுங் குரோதன வருஷம் பங்குனி மாதம் 24 ந்தேதி புதுச்சேரி பட்டணம் பிராஞ்சுக் கும்பினிர் காரியத்துக்குக் கர்த்தரான ம-ா-ா-ஸ்ரீ சிஞ்ஞோர் குவர்னதோர் மூச்சே துய்ப்ளெக்சு அவர்கள் சமுகத்தில் தானியப்பமுதலியார் அவர்களுக்கு மேற்படி தமையனார் பெண்சாதி நக்ஷத்திரம்மாள் மேற்படி மருமகள் சந்திரமுத்து அம்மாள் நாங்களிருவரும் ஏகஸ்தராய் சம்மதித்து எழுதிக் கொடுத்த செல்லுஞ் சீட்டு: முந்நாள் மகாநாட்டார் கூடி வழக்குத் தீர்த்து எங்களுக்குக் கொடுக்கச்சொன்ன வராகன் 4200 க்கும் சிறிது உடமையும் ரொக்கமுமாக வாங்கிக்கொண்டோம். இதுவும் மேலவீட்டுக்கு மேற்கு கிடங்காகக் கட்டியிருந்த வீடும் நாங்கள் கைப்பற்றிக்கொண்டோம். இந்த வராகன் நாலாயிரத்திருநூறும் வீடும் நாங்கள் கைப்பற்றிக் கொண்டதற்கு இதுவே செல்லுஞ் சீட்டாகக் கட்டிக் கொள்ளவும். இதற்குச் சாட்சி, ஆனந்தரங்கப்பிள்ளை அவர்கள், சுங்கு சேஷாசல செட்டியாரவர்கள். இந்தச செல்லுஞ் சீட்டெழுதின நன்மைக்குச் சாவடி ஊர்

கணக்கன் முத்தியப்பிள்ளை அவர்கள், கணக்கு சூரியன் கையெழுத்து:—இந்த அடையாளம் நக்ஷத்திரம்மாள் கைநாட்டு ............இந்த அடையாளம்—சந்திரமுத்து கைநாட்டு.........., ஆனந்தரெங்கப்பன் அறிவேன்... ... .... ... ...

ஈங்கு சேஷாசலசெட்டியார் சாட்சி

இந்தப்படிக்குச் சாட்சிப்பேர்கூட கையெழுத்துப்போட்டார்கள்.

இந்தநாள் ராத்திரி எட்டு மணிக்கு மூசே நுலாராம் வீட்டுக்கு நானும், சின்ன முதலியாரும், மலையப்பமுதலியும் மூன்று பேரும் போனோம். சின்ன முதலியார் மூவாயிரத்தி அறுநூற்றிப்பதினாலு வராகன் கொண்டுவந்து அதிலே நூற்றிப்பதினாலு வராகன் எடுத்து என் கையிலே கொடுத்து மற்ற மூவாயிரத்தி ஐந்நூறு வராகனும் புதுச்சேரி எட்டு மாத்துப்பிறை வராகனாக மூசே நுலாராம் கையிலே முதலியார் முதலிட்டார் நான் அதற்கு துரை எழுதிக்கொடுத்த காகிதத்தைக் கொடுத்தேன். அதைப் படித்துப் பார்த்துக்கொண்டு வராகன் என் கையிலே முதலிட்டீர்களே சீட்டு நாளைக்கு எழுதித்தருகிறேன். மலையப்பமுதலியாரைப் பார்த்து, நீ வா நாளைக்கு என்று சொல்லி அவர்களைப் போகச்சொன்னார். நாங்கள் அனுப்பிவித்துக் கொண்டுவந்து அவரவர் வீட்டுக்குப் போனோம்.

*1746* ஞு அவ்ரீல் மீ *11* உக்கு அக்ஷய ஞு சித்திரை மீ *2* உ

இற்றைநாள் சாயங்காலம் ஆறு மணிக்கு, சத்தாராவிலிருக்கிற சந்தா சாயபுவிடமிருந்து அலிஅக்பர் சாயபு காடியின்பேரிலேறிவந்தான். அவன் பிறகே கபுறுதாரும் அரக்கர்களுமாய் இருபதுபேர் மட்டுக்கும் கூடவந்தார்கள். அவர்களை எதிரேபோய் அழைத்துவர சந்தா சாயபு குமாரன் ரசா சாயபும், சாமாராயனும், பின்னையும் இரண்டுபேர் துலுக்கர் குதிரையின்பேரிலேறியும், இரண்டு பேர் ரதத்தின்பேரிலேறிப் போய் அழைத்துவந்தார்கள். அவன் வந்து சந்தா சாயபு வீட்டிலே இறங்கினார்கள். அவன் வந்த காரியம் என்னவென்று கேட்டால், முன்னே சாமாவின் பிறகே வந்த சாவுகாரருக்கு இன்னம் பணம் செல்லவில்லை என்றும், அதிசீக்கிரமாய் சாவுகாரருக்குச் செலுத்துவிக்கத்தக்கதாக வந்தானென்றும், ரகோசி போன்சலா பங்காள சீர்மையெல்லாம் தன் வசம் பண்ணிக்கொண்டு அந்த நபாபு மற்றப் பேரும் அப்பாலே எட்டிப்போய்விட்டதாகவும், அதுகள் பத்தே பண்ணிக்

கொண்டபடியினாலே அதற்குத் தக்கன மனுஷரை ஏற்பாடு பண்ணிவைத்துத்தான் வாரோமென்றும், வந்தவுடனே சந்தா சாயபைக் கூட்டிவந்து ஆற்காட்டிலே சபைக்குவைத்து, திருச்சிராப்பள்ளியும் இவர் வசம் பண்ணுகிறோமென்று வங்காளத்திலேயிருந்து காகிதமெழுதி அனுப்பிவித்தானென்றும். அந்தக்காகிதம் பார்த்துக்கொண்டவுடனே அவன் வருகிறதற்குள்ளே சாவுக்காரருக்கு பணம்செலுத்தி தீர்த்துப்போட வேணுமென்று யோசனை பண்ணி தனக்கு ஆப்த சினேகிதனாக தன்னுடைய சுகதுக்கத்துக்கு உடந்தையாய்க் கூடப்போயிருக்கிற அலி அக்பர் சாயபை இவ்விடத்திற்கு பெண்சாதி மற்றப் பேரண்டைக்கு அனுப்பித் தெரியப்படச் சொல்லி, பணம் சீக்கிரமத்துக்குள்ளே சாவுக்காரருக்குச் செலுத்திவிடச்சொல்லி, சந்தா சாயபு அலி அக்பர் சாயபை அனுப்பினார் என்று சொன்னார்கள். இந்தச் சேதி சாமாராயன் சொன்னதாகக் கோபாலசுவாமி பெட்டுக்காணி பாபடிசெட்டி வந்து சொன்னார்கள். இனிமேல் என்ன நடக்குமோ அறிய வேண்டியது.

இற்றைநாள் ராத்திரி ஆறு மணிக்கு குவர்னதோருக்குக் காரைக்காலிலிருந்துவந்த காகிதச்சேதி வயணம், மூசே புயேல் கப்பல் புதுச்சேரி மறுஷாம் என்கிறபேருடைய கப்பல் மசுக்கரையிலிருந்து மாயேக்கு (Mahé) சேதி கொண்டுவந்தாற்போலே மசுக்கரைக்குப்போகாமல் கொளச்சி அந்த வட்டாரங்களிலே திரிந்துகொண்டிருந்து திருவாங்கூர் ராசா மூசே புயேல் அழைப்பித்துச் சொன்னது: இங்கிலீசுக் கப்பல்காரர் இவ்விடத்துக்கு இரண்டு மூன்று வருகிறதாய்ச் சேதி வந்தது. நீ இந்த வட்டாரங்களிலே இருந்தாலும் உன் பேரிலே உனக்குப் பயமில்லையே. ஆனபடியினாலே, அப்பாலம்பட ருபாயமாய், உபாயத்துக்குத் தங்கவிடத்திலே போய் மறைவாய் இருமென்று சொன்னதாகவும் அதின்பேரிலே அவன் புறப்பட்டுவந்து காரைக்கால் துறையிலேயிருந்த விறகையும் அதிகபாரத்தையும் இறக்கிப்போட்டுத் தயங்கம்பாடி தினமார்கன் துறையிலே கொண்டுவந்து வைத்துப்பிடித்தான். அதின்பேரிலே அந்த வட்டாரங்களிலே திரிந்த இங்கிலீசுக்காரர் சண்டைக்கப்பல் ஐந்து கப்பல்காரர் வந்து இந்தக் கப்பலை சுற்றிக்கொண்டு ஒரு நாள் ராத்திரியெல்லாம் சண்டைபோட்டார்கள். அதின்பேரிலே இவனுக்கு நிர்வாகமில்லாமல் இந்தக் கப்பலைக் கரையிலே ஏற்றிப்போட்டு, கப்பலை ஒண்டியாகப் போட்டுவிட்டு, மற்றச் சிப்பந்திகளையெல்லாம் இறங்கச் சொல்லிவிட்டு இந்தக் கோட்டைக்காரர் திஞுசி தயங்கம்பாடி குவர்னதோர் திவீனசுக்காரது தனது

துறையிலே யிருக்கையிலே சண்டை பண்ணலாமா? அவன் அந்தக் கப்பல்காரன்பேரிலே சிறிது பீரங்கிசுட்டான். அந்தக் கப்பல்காரரும் கோட்டையின் பேரிலே சிறிது பீரங்கிசுட்டார்கள். கோட்டையிலே யிருந்த பேரிலே ஒரு பீரங்கி மேஸ்திரி சாவும் இரண்டுபேருக்குக் காயம் ஆச்சுது. அதின் பேரிலே தினேசு குவர்னதோர் சொன்னது: நாம் பலவீனமாயிருக்கிறோம். அவர்கள் வலுத்து இருக்கிறார்கள். இந்த நியாயம் சீர்மையிலே கேட்கட்டும். ஆகட்டும், சுவாமி யிருக்கிறார் என்று மூசே பரிதிக்கு காகிதமெழுதியனுப்பிவித்தாரென்று சொன்னார்கள். இந்தச்சேதி துரையவர்களுக்கு வந்தவுடனே துரையவர்கள் சொன்னது. மூசே புயேல் இங்கிலீசுக்காரர் கையிலே ஒப்புவிக்காமல் கரையிலே தட்டவிட்டு நல்ல வேளையிலேதானே வைத்தான். இந்தச் சேதி தினேமார்குராசாவுக்கு எழுதியனுப்பினால் இங்கிலீசு ராசாவுக்கும் எழுதியனுப்பி இங்கே துறையிலேபோய்ச் சண்டை போட்டதற்கும், ஒரு பீரங்கி மேஸ்திரி செத்ததற்கும், இரண்டு பேர் காயம்பட்டதற்கும் எழுதியதற்குத் தக்க மார்க்கமாக அப்புறப்படுத்தியனுப்பினால், அவர்கள் நியாயத்திலே ஒருத்தர் கொடியின்கீழ் போய் இருந்தால் ஒன்றும் செய்யப்போகாது. செய்தால் அந்தக் கொடியுடைய ராசாவுக்ும், சோராவரி பண்ணினவன் கொடிக்கு எசமானனாயிருக்கிற ராசாவுக்குச் சண்டையாம். அல்லவென்றால், ராசாவுடைய உத்தாரமில்லாமல் நடப்பித்தால் நடப்பித்தவனுடைய தலையை வெட்டியனுப்பித் தீர்க்கவேணும். இந்த நியாயம் வெள்ளைக்காரருக்குள்ளே கட்டாயம் இருக்கிறபடியினாலே இந்த நியாயம் இப்போ வந்திருக்கிற கொமாந்தேராயிருக்கிற பர்ணைத்து தலைபோமென்று துரை சொல்லிக்கொண்டிருந்தாரென்று இரண்டு மூன்று வெள்ளைக்காரரிலே பெரிய மனுஷர் என்னுடனே சொன்னார்கள். இனிமேல் மூசே புயேன் என்கிறவன் உடைத்துப்போட்ட கப்பல் கப்பித்தான் வந்தால் தெரியும் என்று மூசே மேர், மூசே கோர்னே பின்னையும் இரண்டொரு வெள்ளைக்காரர் சொன்னார்.

1746 ௵ அவ்ரீல் ௴ 13 உக்கு அக்ஷய ௵ சித்திரை ௴ 3 ௳ செவ்வாய்க்கிழமை

காலமே தரங்கம்பாடி சின்ன துரை பேர்விளங்கன் வந்தான். ஆள் கழுக்குமழுக்கென்று மணலிலே பிடுங்கி எடுத்த வள்ளிக்கிழங்காட்டமா யிருக்கிறான். முகம் பரந்தமுகமாய் ஆனவாகனனாயிருக்கிறான். அவன் சென்னப்பட்டணத்துக்குப் போயிருந்து வந்தவன். மீனாட்சி அம்மை சத்திரத்திலே வந்து

சொல்லி அனுப்பினான். அதின்பேரிலே துரை மருமகன் மூசே கற்சாமும் கப்பித்தான் குவாடு வந்து பேர்விளங்கனும் எதிரேபோய் அழைத்துவந்தார்கள். வருகையிலே கெவுனிவாசலிலே பதிமூன்று பீரங்கிபோட்டார்கள். அதின்பேரிலே, துரை வீட்டு மெத்தைமேலே, துரை வீட்டிலே, வடவண்டை வராந்திலே சற்றுநேரங்கிறங்கி அங்கிருந்து அவர்களை எதிர்கொண்டுபோய் கட்டிக்கொண்டு அழைத்துப்போனார். அதின்பேரிலே உட்கார்ந்தாற்போலே கபேகொண்டுவந்து வைத்தார்கள். கபே சாப்பிடுகையிலே துரை லோகாபிரமாய் சேதி பேசிக்கொண்டிருந்தார். பிராஞ்சு வார்த்தை நன்றாய் பேசினான். அதின்பேரிலே கபே குடித்தானபிறகு துரையும் அவனும் அந்தரங்கமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பால், சாப்பிடும்போது பத்தேபண்ணி பத்தொன்பது பீரங்கிபோட்டார்கள். அப்படி நாலுதரம் சுட்டார்கள். இவனுக்கு இத்தனை மரியாதை பண்ணினதென்னவென்று யோசனைபண்ணி பார்த்தால், இவர்கள் மணிலாவுக்கு அனுப்பின ஷுலுப்பு இவர்கள் கொடியும் மசுப்போடுத்தும் கப்பித்தான் சின்ன கப்பித்தான் தின்மார்களைப்போட்டு (Denmark) (Danich) அனுப்பினதினாலேயும் பின்னையும் இவர்கள் எந்தக்காரியமாக எழுதியனுப்பிவைத்தாலும் அந்தக்ஷணமே அவர்கள் செய்தனுப்புகிறபடியினாலேயும் நேற்று மூசே புயேல் கப்பல் தரங்கம்பாடி துறையிலேவைத்துப் பிடித்தாற்போலே இங்கிலீசுக்காரர் கப்பல்காரர் வந்தவுடனே சண்டை தொடுத்தாற்போலேயும் கோட்டையானும் சண்டை தொடுத்தாற்போலேயும் இந்த நியாயத்தையெல்லாம் வைத்துப்பார்த்து இவர்களுக்கு உற்சாகம் பிறக்கத்தக்கதாக இத்தனை மரியாதைபண்ணினதாய் தோற்றிற்று.

சாப்பிட்டபிறகு துரை பெண்சாதி, பின்னையும் அனேகம் பெண்களும், நாலத்துரெண்டு கோன்செல்காரர்களும் நாலத்து ரெண்டுபேர் ஒபிசியேமார்கூட வண்டியின் பேரிலேயும் பல்லக்கின் பேரிலேயும் சவாரிபோனார்கள் சவாரி போய்வந்து ராத்திரிக்கு எட்டு மணிக்குச் சாப்பிட்டு மத்தேசுவீட்டிலே விடுதிவிட்டார்கள். அங்கே போய் படுத்துக்கொண்டான்

1746-ம் ஸ்ரீ அவ்ரீல் மீ 13 உ க்கு அக்ஷய ஸ்ரீ சித்திரை மீ 4 உ புதன்கிழமை

காலமே ஒன்பது மணிக்கு, துரை யண்டையிலே நடந்த சேதி: முன்னே பத்தேசிங்கு வக்கில் கேசவராயனென்கிறவன் வந்திருந்தானே அவன் பத்தேசிங்கு காகிதம் வந்ததென்று

தன்னண்டையிலே யிருக்கிற வீங்கல் பிராமணன் கையிலே கொடுத்துத் துரை யண்டைக்கு அனுப்பிவித்தான் அந்தக் காகிதத்தை மதனுந்த பண்டிதரும் தானப்பமுதலியும் படித் துக் காண்பித்தார்கள். அதிலே எழுதியிருந்த வயணம்: தஞ் சாவூர் சகசிராசா நிமித்தியம் நபாப் அன்வருத்திகானுக்குத் தாக்கீது எழுதி யனுப்பிவித்தோம். அவன் சட்டைப் பண் ணுமற்போனன் அதினாலே என்னமாச்சுது. நாமும் பவுஞ்சு கூட்டிக்கொண்டு வந்து அதற்கு எப்படி நடப்பிக்கவேணுமோ அப்படி நடப்பிக்கிறோம். இப்பவும் கேசவராயன் வந்திருக் கிறனே அவ்விடத்திலே பவுஞ்சு வைக்கவேண்டியிருக்கிறபடி யினாலே செலவுக்கு வேண்டியிருக்கிறது இருபதினாயிரம் ரூபாய் கொடுத்தால் இந்த ரூபாய் தஞ்சாவூர் சம்மதியிலே ஆகிலும் அல்லவென்றால் சந்தா சாயபுபேரிலே வரவேண்டிய பணம் அவ் விடத்திலே செல்லவேண்டியிருக்கிறேன் அந்தப் பணத்திலே வாங்கி உங்களுக்குச் சம்மதி பண்ணிப்போடுகிறோம் என்று மத்தியஸ்தக்காரர்களும் .......................................வைக்கிற விடத்திலே .................. ............................பேசிக்கொண் டிருக்கையிலே தெரியும் என்றிருந்த உபசாரமாயெழுதின படிக்குப் படித்துக் காண்பித்துச் சொன்னவிடத்திலே துரை யிருந்துகொண்டு இதெப்படியிருக்கிறதென்று கேட்டார். அதற்கு மதனுந்தபண்டிதரிருந்துகொண்டு இந்தக் காகித மெழுதியிருக்கிற சாடை பார்த்தால் அடித்தலத்திலே வந்த தாய்க் காணவில்லை. நடுவாந்தரத்திலே பிறந்த சாடையாய்க் காணுதேயல்லாமல்......... வாய்க்காணவில்லை யென்றும், இந்தக் காகிதம் எப்போதும் எழுதுகிற முனிசி எழுதினதாய்க் காணவில்லையென்றும் அவர்கள் எழுதுகிற பேச்சு வேறே, அந்தக் கணத்திலே வேறே, இதைப் பார்த்தால் சிறிது, சிறு பிள்ளைகள் எழுதினாற்போலே காணுது அவர்கள் எழுதினால் இத்தனை உபசாரம் எழுதார்கள். இத்தனை பஞ்சப்பாட்டு எழுதார்கள். ஆனபடியினாலே, இந்தக் காகிதம் அவர்கள் காகிதமல்ல. வேறே இவ்விடத்திலே சிருஷ்டித்தாற்போலே யிருக்கிறது என்று சொன்னதற்கு, துரையும் எனக்கும் அப்படித்தான் தோற்றுது என்று சொல்லி, நாளைக்கு அந்த கேசவராயன் வந்தால் எல்லாம் பேசிக்கொள்ளலாம் என்று அவனண்டையிலிருந்து வந்திருக்கிற வீங்கல் வக்கீலுக்கும் சொல்லியனுப்பினார்கள். இந்தச்சேதியெல்லாம் மதனுந்த பண்டிதர் வந்து என்னுடனே சொன்னார். பத்துமணி நேரத்தி லே நடந்ததென்னவென்றால், வந்தவாசி திருவேங்கடப்பிள்ளை காவலிலேயிருந்த வனையும் திருச்சிராப்பள்ளி தளவாய் கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதியையும் அழைத்து வந்தார்கள். இருதிறத்தாரையும் அழைப்பித்து

அவளானால் கொடுத்தேன் என்று சொன்னால். நீயானால் வாங்கினதில்லையென்று சொல்லுகிறாய். நீ வாங்கினதில்லையென்று வேதபுரியீஸ்வரன் கோயிலிலே தீபத்தை நிறுத்தி சத்தியம் பண்ணிக்கொடு என்று சொல்லி, வீராசெட்டி என்கிறவனையும் இந்தச் சீட்டு நான் எழுதினதில்லை யென்று விளக்கு நிறுத்தி சத்தியம் பண்ணிக்கொடு யென்று சொன்னார்கள். நல்லதென்று திருவேங்கடமும் வீராசெட்டியும் சொன்னான். அதின்பேரிலே திருவேங்கடத்தைப் பார்த்து, கும்பினீர் உத்தியோகஸ்தனாயிருந்து சத்தியம் பண்ணுகிறது நியாயமில்லை யென்று துரை சொன்னதற்கு உங்கள் தயவினாலே உங்கள் உத்தரவு ஆன பிற்பாடே காரைக்காலுக்குப் போகிறேன் என்று சொன்னானாம். அதற்குச் சும்மாயிருந்தார். அதின் பிற்பாடு அந்தப்படிக்குப் பொய் சத்தியம் பண்ணச்சொல்லி உத்தாரங்கொடுத்து தானப்ப முதலியார் மனுஷன் ஆசாரப்ப முதலி மச்சான் முத்துக்குமரனும், தளவாய் கிரிமாசி பண்டிதரும், அண்ணாமலை நயினாரும் கூடப்போய் கிட்டேயிருந்து சத்தியம் பண்ணிவித்து வரச்சொல்லி அனுப்பிவித்தார்கள். அவர்கள் போகையிலே நானிருக்கிற பாக்குக் கிடங்கிலே வந்து நடந்த பூருவோத்திரமெல்லாம் சொல்லி சத்தியத்துக்குப் போகிறோமென்று சொன்னார்கள். பள்ளங்கண்ட விடத்திலே தண்ணீர் நிற்குது திருவேங்கடப்பிள்ளையும் சத்தியம் பண்ணினாற்போலே காவல் விடுதலையாய் வீட்டுக்குப் போனான் இந்த வியாச்சியம் நடந்தது குரோதன ளு அற்பிசி மீ 7 உ சேவகர் வந்து கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதி ஆயிரம் வராகனும் வட்டியும் கொடுக்க வேண்டும் என்று சொல்லி மறிப்பு வந்திருந்தது 25 உ மேலண்டை கோட்டைவாசற்படியியே கொண்டுபோய்க் காவல் வைத்ததும், அதற்குப் பிற்பாடு கிழண்டை வாசற்படியிலே சிறிது நாள் காவலிலிருந்தும், அதின் பிற்பாடு சாவடியிலே காவலிலேயிருந்ததும், இன்றையதினம் விடுதலையான மட்டுக்கும் ஆறு மாசத்திற்கு மூன்று நாள் குறைச்சலாய் விடுதலையாச்சுது. இந்த ஆறு மாதம் காவலிலிருக்கப் பிராப்தியிருக்கிற போது இதற்கு முன்னே என்ன பிரயத்தனம் பண்ணினாலும் நடக்குமா சுவாமி, சங்கல்பத்தைத் தள்ளுகிறதற்கு ஒருத்தராலேயும் ஆகாது. இவனுக்குக் கஷ்டகாலம் இன்றைக்கு நிவர்த்தியானபடியினாலே விடுதலையாச்சுது. பிரபுவுக்கு விவேகமில்லையென்று சொல்லலாம். எப்படி யென்றால், இந்தச்சீட்டு சம்மதி ஆயிரம் வராகனும் கொடுத்துவிடுகிறோம். இந்தச் சீட்டை நியாயமாம்படிக்கு நாலுபேர் மத்தியஸ்தரிலேபோட்டு விசாரித்து அவள்பேரிலே நிசமிருந்தால் சீட்டுப் பொய்யென்று சமஸ்தமான உங்களுக்கு மனதிலே களங்கமில்லாமற்போனால் சத்தியம் என்னயிருக்கிறது. ரகசியமும் எல்லாம் தீர்ப்பா.

என்று சொல்லிப் போகச் சொன்னேன். அந்தப்படிக்கு வேதபுரியீசுரன் கோயிலுக்குப் போனார்கள். போய் சத்தியம் பண்ணும்போது வந்தவாசி திருவேங்கடப்பிள்ளை சொன்னது: நானிவளுடனே மூன்று தரம் போய் இருபத்தொன்பது பணமும் இரண்டு வேளை படி அரிசியும் கொடுத்தது அறிவேனேயல்லாமல் மற்றப்படிக்கு இவள் கையிலே வராகன் வாங்கினதுமில்லையென்று சொல்லித் தீபத்தை அணைத்துச் சீட்டையும் கிழித்தான். வீராசெட்டி என்கிறவன் இந்தக் கடன் சீட்டு நான் எழுதினதில்லை. இந்தச் சீட்டு வரலாறும் நான் அறியேன் என்று தீபத்தை அணைத்தான். அப்போது கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதி சொன்னது: இப்படிக்கு முன் சொன்னதினாலேதான் நானிப்படி செய்தேன். இன்னும் வாய்க்கொழுப்பு போகவில்லையென்று அந்தச் சாடையிலே சொன்னாள். அதின் பிற்பாடு கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதிக்கு வெளிக்காவலாய்ப் பார்த்துக்கொண்டிருந்த இரண்டு தலையாரி, செட்டிகளிருந்தவர்களையும் நயினாத் துரையவர்கள் உத்தாரப்படிக்கு வாங்கிவரச் சொன்னார். அந்தப்படிக்கு வாங்கிப் போனார்கள் பேரும் அறிய தண்டித்து ஊர் கடக்கத் துரத்திவிடும் என்பேரிலே நேரமிருந்தால் கும்பினீருக்கு அவள் தானமும் கொடுத்து நேரஸ்தனாகப்போகிறேன். இந்தப்படிக்கு நடப்பிக்கச் சொல்லி எத்தனை தரம் சொன்னாலும் கேளாமற்படிக்குத் தன்னுடைய கணக்கு ரங்கப்பிள்ளை பேச்சைக் கேட்டுக்கொண்டு எவர்கள் சொன்னாலும் கேளாமற்படிக் கிருந்தவன் ஊரிலே கடைக்காரர் தங்களை அநியாயம் பண்ணிக் கட்டாயம்போட்டு எங்கள் குடிகளைக் கெடுத்துப்போட்டார் துரை அவர்கள் என்று கோன்சல்காரருக்கும் சம்பா கோவில் பாதிரிமாருக்கும் பெத்திசியோ மெழுதிப்போட்டதுமல்லாமல் துரையுடனே எதிராடுகிற சாடையைப் பார்த்து இதினாலே ரொம்ப போராட்டம் இருக்கிறது. பிராது ரொம்ப வருகிறது. கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதி ராத்திரி பகலாய்......கிற சாடையைத்தொட்டு இதுவும் அநியாயமாச்சே என்னை ரக்ஷிக்கிறதற்குப் பார்க்கிறதற்கு வரவில்லையே. கோன்செல்காரர் எல்லாம் பிதிரெஷயாயிருக்கிற சாடையும் எங்களுக்குச் சாவுதான் பிடிக்கிற காரியமெல்லாம் இப்படிப்பட்ட அநியாயம் பண்ணுகிறானென்று ஊரெல்லாம் துவனிக்குது என்றும் சிதம்பரத்துப் பார்ப்பான் அருணாசலத்தைப் பிடித்துக்கொண்டு கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதி நடப்பித்த சங்கதிகளையும் இதுகள் பெண்சாதி சொல்லி மிரட்டிவிட்டபடியினாலேயும்

பொய்சத்தியம்பண்ணித் தீர்த்துப்போடென்று சொன்னானே அல்லாமல் .....தென்று என்றென்னுள்ளே யிருந்தாலும் வெளிக்குக் கம்பீரமாய்த்தானே யிவனையும் ராசவட்டத்திலே பணமூலமாயிறக்கிக்கொண்டு அவனையும் சீட்டு அபத்தமென்று சொல்லுகிறதுக்கு கனகராயமுதலி விசாரித்து வந்து சொன்ன சாதகக்தைச்சொல்லி அவளுக்குப் பயமுண்டாக்கி நல்லது இனிமேலிப்படிப்பட்டவேலை செய்யவேண்டாம். இந்த ஊரிலே யிருக்காமல் புறப்பட்டுப் போ வென்று சொல்லி அனுப்பிவிட்டு இவனையும் விடுதலைபண்ணி உத்தியோகத்தைப் போக்கச்சொல்லி தனக்குவரவேண்டிய காசையும்வரப்படுத்திக் கொண்டா லிதனாலே கீர்த்தியுமுண்டு. பார்த்தபேருக்கும் கனமாயிருக்கும். அப்படி நடப்பியாதபடியினாலே காரியம் காரியமாம்படியே நடப்பித்து நேர்பா போகாதபடியினாலே இவனுக்கு அபகீர்த்தியும் வந்து பிரயோசனத்துக்குப் பிரயோசனமு மிழந்து கையிலே ஆகாதவனென்று எண்பித்துக் கொண்டு போனான். இதுகளை விசாரித்து எழுதவேணுமானால் பத்துக் காகிதமாகிலும் செல்லும். அது நமக்கு நியாயமுமல்ல. ஆனபடியினாலே, விஸ்தரித்து எழுதவில்லை. விவேகிகளாயிருக்கிறவர்கள் பார்த்தமாத்திரத்திலே தெரிந்துகொள்ளுகிறார்கள். விவேகமில்லாதவர்களுக்கு எத்தனை விஸ்தரிதது எழுதினாலும் தெரியாது. நானும் சாயங்காலம் ஆறரை மணிக்கு திருவேங்கடப்பிள்ளையைப் போய் விசாரித்து உபசாரம்சொல்லிப் போட்டுவந்தேன். பின்னையும் ஊரிலே இருந்தவர்கள் அனைவரும் போய் விசாரித்து வந்தார்கள்.

**1746 ௵ அவ்ரில் ௴ 14 உ க்கு அக்ஷய ௵ சித்திரை ௴ 5 உ**

இன்றையதினம் ராத்திரி கடைக்காரரில் சிலர் மாரிசெட்டி கிழவனையும் அழைப்பித்து அவனும் நானும் சொன்ன சேதி: (ா) துரையவர்களுக்குக் கொடுக்கவேண்டிய பணத்துக்கு உன்னுடனிருந்த கடைக்காரருக்குள்ளே இரண்டு மூன்று பேர் தவணை பண்ணிக்கொண்டு தவணைப்படிக்குச் செலுத்திவிடுகிறோம் என்று சீட்டு எழுதிக்கொடுத்துச் சாவடியிலே காவலிலே இருந்தவர்கள் காவல் விடுதலை பண்ணி எனக்கு வீட்டுக்குப் போனார்களே, நீயும் அந்தப்படிக்குத் தவணைச்சீட்டு எழுதிக்கொடுத்துச் சுகமாய் வீட்டுக்குப் போகலாமென்று சொன்னோம். அதற்கு அவனும் சம்மதித்தும் சம்மதியாமலுமாக உத்தாரங்கொடுத்துச் சொல்லிக்கொண்டிருக்கிறதினாலே ராத்திரி நேரம் சென்று போச்சுது எல்லாம் நாளை பேசிக்கொள்ளுவோமென்று சாவடியிலே வைக்காமல் நயினார் வீட்டிலே வைத்துவிக்கச் சொன்னோம்.

1746 ஞு அவ்ரீல் மீ 15 உ க்கு அக்ஷய ஞு சித்திரை மீ 6 வ வெள்ளிக்கிழமை

நாள் நடந்த சேதி: காலமே நாம் நயினார் வீட்டிலேயிருக்கிற மாரிசெட்டி கிழவனை சாராயக் கிடங்குக்குக் கூட்டிவரச் சொல்லி நேற்று ராத்திரி பேசினபடிக்குத் தவணை பண்ணிக்கொண்டு சீட்டு எழுதிக்கொடுக்கச்சொல்லி அந்த சம்மதி பேச்சுப் பேசிக்கொண்டிருக்கிறதிலே சாவடியிலே பின்னையும் இருந்த கடைக்காரருக்குள்ளே தேவாம் தாண்டவராயனும், கோவிந்தன் தம்பி ரங்கனும் இவர்கள் இரண்டுபேரும் மாரி செட்டி கிழவன் தகப்பனாரையும், தாயாரையும், பின்னையும், சிறிதுபேர் பெண்டுகள் ஆண் பெண் பிள்ளைகளையும் சேர்ந்துக் கூட்டமாகக் கூட்டிக்கொண்டு (ா) சின்னதுரை அவர்கள் அண்டைக்கு அவர் வீட்டுக்குப்போய் சொன்ன வயணம்: அவர் வீட்டிலே இருக்கிறதிலே தெருவாசலிலே கூட்டங்கூடி அவர் காதிலே கேட்கத்தக்கதாகச் சொன்ன வயணம்: சாவடியிலே யிருக்கிற கடைக்காரரை ஒரு வீட்டுக்குள்ளே போட்டு அடைத்துச் சாப்பாட்டுக்கு விடாமல் மலசலாதிகளுக்கும் விடாமல் மிளகு காயம் புகைபோட்டு மெத்த உபாதிபண்ணியிருக்கிறார்கள் என்றும் ஆவலாதி பண்ணினார்கள் அவர்கள் கூப்பிடுகிற சத்தம் (ா) சின்னதுரை முசே லிரு அவர்கள் கேட்டு, அது ஆரென்று விசாரித்தார்கள். அப்போது கடைக்காரர் என்று கபுறு சொன்னார்கள். அதற்கு அவர் சொன்ன உத்திரம் அவர்கள் திருடர், போகச் சொல்லு (ா) துரையவர்களுக்குக் கொடுக்கவேண்டிய பணத்துக்குச் சம்மதி சீக்கிரத்துக்கு பண்ணினால் ஆச்சுது இல்லாவிட்டால் இவர்களுக்கு ரொம்பவும் உபாதிவரும் என்று சொல்லிப்போட்டு போகச் சொன்னார்கள். அதின்பேரிலே அவர்கள் அவ்விடம் விட்டு முசே பெடுத்தலமேன் அண்டைக்குப் போய் அவருடனே சொன்ன வயணம் ஏதென்றால், மாரி செட்டி கிழவன் என்கிறவன் அழைப்பித்து விசாரித்தார்கள்... ... ... ...துரையவர்களுக்குக் கொடுக்கவேண்டிய பணத்துக்குத் தவணைச்சீட்டு எழுதிக்கொடுக்கச்சொல்லி, பின் கட்டும் நீதியாகக்கட்டிவித்துத் தலைகீழாய் தொங்கப்போட்டு அடிப்பிக்கிறாரென்றும், கட்டின கட்டின்மேல் தண்ணீர் வார்த்து அடிப்பிக்கிறான் என்றும், மிளகு காயம் புகைபோடுவிக்கிறாரென்றும் ரொம்பவும் கஸ்திப்படுத்துகிறார்களென்றும், அவன் செத்துப்போய்விடுவான் இந்த அநியாயம் உண்டாவென்றும் இதெல்லாம் சாவடியிலேயிருக்கிற பேரையும் ஒரு வீட்டுக்குள்ளே ரூபாய்க்கு அடைத்து மலசலாதிகளுக்கும் விடாமல் மிளகு காயம் புகைபோட்டுக்கொள்ளுகிறாரென்

றும் இப்படி நடவாத சேதிகளையெல்லாம் போய்ச்சொன்னார்கள், அந்தச் சேதியெல்லாம் அவர் கேட்டு, இது நம்முடைய வேலையல்லவென்று போகச் சொன்னார். அப்பால் அவர்கள் அவ்விடம்விட்டு (ா) துரையவர்கள் அண்டைக்குப் போகவேணுமென்று (ா) துரையவர்கள் வீட்டு வாசல்படிமட்டுக்கும் போனார்கள். அங்கே சின்னமுதலியாரிருந்துகொண்டு, இந்தக் கூட்டமெல்லாம் வேண்டாம் அப்படியே போகவேணுமானால் இரண்டுபேர் மாத்திரம் தனித்துப் போங்கோளென்று சொன்னார். அதற்கு அவர்கள் சம்மதியாமல் அப்பால் மூசே துலோரராம் வீட்டுக்குப்போய் அவருடனேயும், மூசே மீரானு, மூசே மேநு முதலான கோன்சேல்காரருடனேயும், சம்பாகோவில் பாதிரிமார்களுடனேயும் இவர்களுடனேயெல்லாம் மூசே பெடுதேலேனுடனே சொன்னபடிக்குத்தானே வயணமாய்ச் சொன்னார்கள். அதிலே மூசே மீரா அவர்களை ஒருதரத்துக்கு இரண்டு தரமாய்க் கேட்டு கடுதாசியிலே எழுதிக்கொண்டு அந்தக் கடுதாசியை எடுத்துக்கொண்டு (ா) துரையவர்களண்டைக்குப் போய் கடுதாசியைக் கொடுத்து, கடைக்காரர் சொன்ன சேதியும் துரையவர்களுடனே சொன்னார். அந்தச் சேதியெல்லாம் (ா) துரையவர்கள் கேட்டு இப்படிக்கொத்த காரியம் நடவாது. இந்தக் கடைக்காரர் சம்மதிக்கு ரங்கப்பிள்ளையைப் பேசச் சொன்னது மெய்தான். அந்தப்படிக்குத்தானே இரண்டு மூன்று பேர் சம்மதித்து நமக்குத் தவணைச் சீட்டும் எழுதிக் கொடுத்து, காவலும் விடுதலைபண்ணிக்கொண்டு போனார்கள். அதன் பிறகு நான் அந்தக்கிழவனுடனே பேசினதற்கு அந்த வேளைக்கும் அவன் சம்மதிக்கு வராதபடியினாலே அவனை நயினார் வீட்டுக்கு அனுப்பிப் போட்டு நாம் வீட்டுக்குப் பனிரெண்டடித்து அரை மணிக்கு வந்து ஸ்நானம்பண்ணிக் கொண்டிருக்கிறபோது கும்பினீர் சேவகன் ஒருத்தன் வந்து (ா) துரையவர்கள், சாப்பாடு ஆனவுடனே வரச்சொன்னார் என்று வந்த சேவகன் சொன்னான். அந்தப்படிக்கு நாமும் போசனம் பண்ணிக்கொண்டு ஒன்றரை மணிக்கெல்லாம் சாராயக்கிடங்குக்குப் போனோம். நான் வந்த சேதி (ா) துரையவர்களுக்குக் கிட்டேயிருக்கிற பேர் சொன்னார்கள். அந்தச் சேதி கேட்டவுடனே (ா) துரையவர்கள் சின்னமுதலியாரைக் கூட்டிவரச்சொன்னார்கள். அவரும் உடனே வந்தார். அதற்குமுன்னேதானே தேவராம் தாண்டவராயனும் கோவிந்தன் தம்பி ரங்கனையும் (ா) துரையவர்கள் அழைப்பித்து வைத்துக்கொண்டிருந்தார்கள். நாமும் சின்னமுதலியாரும் இரண்டுபேரும் துரையவர்களண்டைக்குப் போனோம் எங்களைக்கண்டவுடனே மேசையை விட்டு அவ்விடத்திலே

தரங்கம்பாடி சின்ன துரை இருக்கிறபடியினாலே அவ்விடம் விட்டுத் தாம் கடுதாசி எழுதுகிற அறைக்குள்ளே முசே மீராவையும் கூட அழைத்துக்கொண்டு வந்து சின்ன முதலியாரையும் தாண்டவராயனையும் இன்னம் இரண்டுபேர் ஒருத்தர் உடன்படிக்கைப் பண்ணி, சீட்டெழுதிக்கொடுத்துவிட்டுப் போகிறோமென்று சொன்னார்களென்று ரங்கப்பிள்ளை நம்முடனே சொன்னாரே, அப்படியிருக்க, உங்களுடனே கடைக்காரர் சொன்னபடிக்கு நடவாது ஆனாலுமென்ன இப்போது மத்தியானம் சாப்பாட்டுவேளையாச்சுதே, இங்கேதானே நீர் சாப்பிடும், இதற்குள்ளே ரங்கப்பிள்ளையையும், மற்றப்பேர்களையும் எல்லாரையும் அழைத்து அனுப்புகிறோம் என்று உடனே சொல்லி என்னண்டைக்குச் சேவகனை அனுப்பிவித்தார். நான் சாராயக்கிடங்கிலே மாரி செட்டி கிழவனுடனே பேசிக்கொண்டிருக்கிறதிலே கிழவன் பெண்ஜாதி வந்தாள். அவள் வந்து உம்மை ஆனந்த ரங்கப் பிள்ளையவர்கள் அழைப்பிக்கிறார்களென்று தேவாம் தாண்டவராயனும் கோவிந்தன் தம்பி ரங்கனும் இவர்கள் இரண்டு பேரும் உம்முடைய தாயாரையும், தகப்பனாரையும், மற்றும் சிறிது பேர்களையும் கூட்டிக்கொண்டு துரையுடனே போய்ச் சொல்லிப்போனார்கள் அதினாலே நான் இவ்விடத்துச் சேதி தெரிந்துகொண்டு போகவேணுமென்று வந்தேன் என்று சொன்னாள் அந்தப்பேச்சைக்கிழவன் கேட்டுப் போய் விசேஷம் சொன்னார்கள். நானிவ்விடத்திலே பிள்ளையவர்களுடனே கண்டுபேசிக்கொண்டிருக்கிறேனே, போவென்று சொன்னான். அதின்பேரிலே அவனும் வீட்டு ரங்கனையும் கூட்டிவரச் சொல்லி (ா) துரையவர்கள் சின்னமுதலியாருக்குச் சொல்லி, இவர்களுடனே ரங்கப்பிள்ளை என்ன உபத்திரவம் உங்களைப் பண்ணிவித்தார் என்று முசே மீராவுடனே என்ன சொன்னீர்கள், கேளுமென்று சொன்னார். அந்தப்படிக்குச் சின்ன முதலியார் அவர்கள் இரண்டுபேரையும் கேட்டவிடத்திலே அவர்கள் சொன்னது: ரங்கப்பிள்ளை வந்தவுடன் எங்களை உயர நிறுத்தி... ... ... ... ... ... ...

விசாரித்து ரக்ஷித்ததில்லை. சாவடி கிடங்கிலே ரொம்ப உபத்திரவம் பண்ணுகிறார்கள். சாப்பாட்டுக்கும் மலசலவாதிகளுக்கும் விடுகிறதில்லை. அதினாலே ரொம்ப உபாதைப்படுகிறோமென்று சொன்னோம் என்று சொன்னார்கள். அதற்கு துரையவர்கள் சொன்னது: மாரிசெட்டி கிழவனை ரங்கப்பிள்ளை தலைகீழாய்க்கட்டித் தூக்கி அடிப்பிக்கிறார். மிளகுகாயம் புகையும் போட்டுக் கட்டின கட்டிலே தண்ணீர்விட்டு அடிப்பிக்கிறானென்று முசே மீராவுடனே சொன்னீர்களே, இப்போது இப்படிச் சொல்லுகிறதென்னவென்று கேட்டார் அதற்கு அவர்கள் சொன்னது: நாங்களிப்படிச் சொல்லவில்லை, கிடங்கிலே

யிருக்கிற பேரை கிடங்கு காக்கிறபேர் ரொம்ப உபாதை பண்ணுகிறார்கள் என்று சொன்னேனேயல்லாமல் வேறே சொல்லவில்லை என்று சொன்னார்கள். அதற்கு மூசே மீரா சொன்னது: என்னுடைய துபாசியுடனே அவர்கள் சொல்லி அவன் எனக்குச் சொல்ல நான் கடுதாசியிலே எழுதி இப்படியெல்லாம் இருக்க இப்போது இப்படிச் சொல்லுகிறார்கள் அல்லவா என்றும், துபாசியை அழைப்பிக்கிறேனென்றும், அவருடைய துபாசி சூரப்ப முதலியண்டைக்கு ஆள் அனுப்பினார்கள். அதின் பிறகு இப்பாலே நான் இருக்கிறதிலே (ா) துரையவர்கள் என்னை அழைப்பித்து இந்தக் கடைக்காரர் சம்மதிக்கு என்ன நடந்தது நீர் என்ன நடப்பித்திருக்கிறீர் என்று கேட்டார். அதற்கு நாம் சொன்னது: இந்தக் கடைக்காரர் இரண்டொருத்தர் என்னண்டைக்கு மனுஷரை அனுப்பித்து (ா) துரையவர்கள் கடன் சம்மதிக்கு ஒரு தவணை வைத்து ஒருவனை வைத்துப் பின்னை உடன்படிக்கைப் பண்ணிக்கொண்டு நடப்பிக்கச் சொன்னார்கள். உங்கள் பேச்சு நம்பப்போகாது. நீங்கள் இல்லாத வியாச்சியம் போடுகிற பேர்கள், நம்மாலேயாகாதென்று சொன்னேன். அப்படிச் சொல்லவேண்டாம். நாங்கள் உடன்படிக்கைப் பண்ணிக்கொண்டு தவணைப்படிக்குப் பணம் சம்மதி பண்ணுகிறோமென்று சொன்னார்கள். அதின் பேரிலே உங்களுக்குத் தெரியச் சொல்லி, இரண்டு மூன்று பேருக்குத் தவணைமுறி வாங்கிக் காவல் விடுவித்தேன். இன்றைய தினமும் மாரி செட்டி கிழவன் வந்து உடன்படிக்கைப் பண்ணிக்கொண்டிருக்கிறதிலே அவனை நான் அடிப்பித்தேன் என்றும் இல்லாத கஸ்தியெல்லாம் பண்ணினேனென்றும் கோன்சேல்காரருடனேயும் பாதிரிகளுடனேயும் இவர்கள் இரண்டுபேரும் கும்பல் கூட்டிக்கொண்டுபோய் என்பேரிலே இல்லாத பேச்செல்லாம் சொன்னார்கள். இது நடந்த வயணம் என்று சொன்னேன். (ா) துரையவர்கள் இந்தச் சேதி என்னுடனே ஏன் சொல்லவில்லையென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது என்னவென்றால் என்பேரிலே அல்லவோ பிராது சொல்லுகிறார்கள். அவர்களாய்த்தானே வந்து சொல்லிக்கொள்ளட்டுமா நானாகச் சொன்னால் துரை மனதுக்கு என்ன தோன்றுமோவென்று நான் சொல்லவில்லையென்றான்.... ..........சின்ன முதலியார் சொன்னது: இவர்கள் வந்து என்னுடனே சொன்னார்கள். நான் விசாரித்தேன் அதின்பேரிலே ஒன்றுமில்லை. அதினாலே இப்படி போய் வந்து விசேஷம் சொல்லுவேன் என்று இவர்களைக் கோபித்துக்கொண்டு போகச் சொன்னேன் என்று சொன்னார். அதற்கு (ா) துரையவர்கள் சொன்னது: நீங்களும் நம்முடனே சொல்லாமலிருந்ததென்னவென்று கேட்டார். அதற்குச் சின்னமுதலியார், அப்போது

இங்கே ரொம்ப கும்பலாயிருந்தது. அதினலே நான் சொல்ல வில்லை என்று சொன்னூர். இதிலே யழைக்கப்போன மூசியே மீரா துபாசி சூரப்ப முதலி வந்தான். அவனுடனே (ா) துரை அவர்கள் கேட்டது- மூசியே மீராவுடனே இந்தத் தாண்டவ ராயனும் ரங்கனும் வந்து என்ன சொன்னூர்கள் என்று கேட் டார். அப்போது அவன் பிரபுமுன்னே உத்தாரஞ் சொல்ல மாட்டாமல் கைகால் நடுக்கம் கண்டு வாய் பிசுக்கொட்டிப் பேசமாட்டாமல் போனுன். அதற்கு, துரையவர்கள் பயப்பட வேண்டாம். உண்டானதைச் சொல்லென்று கேட்டார்கள். அதற்கு அவன் உத்தாரம் சொல்லமாட்டாமல் நாக்குத் தடு மாறிப்போயிருந்துவிட்டு அப்பாலே தமிழிலே இவர்கள் என் னுடனே சொன்னதற்குச் சாக்ஷியிருக்கிறூர்கள். அப்போது என்னிடம் சொன்னவனிப்போ இல்லையென்று சொன்னுன் என்று சொல்லி, சின்னமுதலியார் துரைக்குச் சொன்னூர். அத்தனைபேரிலே (ா) துரையவர்களுக்குத் தாண்டவராயனை யும் ரங்கனையும் பார்த்து இப்படிக்கொத்த பொய் விசேஷங் கள் இந்த குன்செல்காரருடனேயும் பாதிரிமார்களுடனேயும் சொன்னுற்போலே அவர்கள் என்னை என்ன செய்வார்கள்? என்று கேட்டு கோபித்துக்கொண்டு அதின்பேரிலே மூசியே ்ராவைப் பார்த்து இந்தப் பொய்கள் சொல்லுகிற பொய்ப் பேச்சுகளை நீங்கள் கோன்சேல்காரர்களெல்லாம் கேட்டு நன் ருய் விசாரியாதபடிக்கு என்னைக் கொஞ்சப்படுத்துகிற நிமித் தியம் நீங்களெல்லாம் இடங்கொடுக்காதபடியினலே அல் லவோ இந்தச் சின்ன மனுஷர் இப்படியெல்லாம் இந்தப்படி நடத்துகிறூர்கள் என்று சொல்லி மூசே துலோராம் முதலான உங்களுக்கெல்லாம் இந்தக் கடைக்காரருக்கு விற்றதாகச் சரக்கிலே பங்குயில்லையானல் மாத்திரம் தானு கொண்டுபோ கிறோம் நயநஷ்டமெல்லாம் எல்லாருக்கும் சரிதான் அல்லவா வென்று மனதிலே கோபத்துடனே குறையாகத்தானே சொன் னூர். அதற்கு மூசே மீரா சொன்னது: நானிதுவரையிலே இப் படிக்கொத்த சம்மதி கேட்டதில்லை. ஆகையினலே இப் போது இதுகேட்டவுடனே உங்களுக்கு அறிக்கைப் பண்ணி இதை விசாரிக்கவேணுமென்று முகத்தைச் சின்னது பண்ணிக் கொண்டு மறு உத்தாரஞ் சொன்னூர் அதின் பேரிலே (ா) துரையவர்கள் தாண்டவராயனையும் ரங்கனையும் சாவடியிலே கொண்டுபோய் காவலிலே வைத்துவைக்கச் சொல்லி யனுப்பு வித்துக்கொண்டு சின்னமுதலியாரைப் பார்த்து, சாவடி நியா யத்தின் முறைக்குச் சாவடிக்குப் போய் (ா) சின்னதுரை யவர்களுடனே சொல்லி முன்னே விசாரிக்கிற நியாயத்தை இந்த இரண்டுபேரும் போய்ச் சேதி சொன்னதற்கு எந்தப் படிக்கு தண்டிக்கவேணுமோ அந்தப்படிக்குத் தண்டிக்கச் சொல்லி, (ா) சின்னதுரையுடனே சொல்லச் சொல்லிச் சொன்

ஞர். அதின்பிறகு வீட்டுக்கு வந்து இன்றையதினம் நடந்த சேதியெல்லாம்...........ரங்கப்பிள்ளையைச் சொல்லச் சொல்லி அருணாசலசெட்டி, முத்துசெட்டியுடனே சொல்லி அனுப்பி வித்தேன். அதின்பிறகு சாயங்காலமான சாமத்துக்கு மாரி செட்டி கிழவன் வந்து (ா) துரையவர்களுக்குக் கொடுக்க வேண்டிய பணத்துக்கு வந்தவாசி ரங்கப்பிள்ளை பேருக்குத் தவணைச்சீட்டு வீட்டுமேலே எழுதிக்கொடுத்துத் திரும்பவும் வீட்டுக்குப் போனான்.

இந்நாள் சூரியோதயத்துக்கு இரண்டு நாழிகையின் போது தளவாய் கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதி ரங்கம்மாள் என்கிறவள் கடன்காரருக்குப்பயந்து ஓடிப்போனாள். அவளுக்குக் கடன் கொடுத்த கோபாலகிருஷ்ணய்யன் அக்காள் மகன் தியாகய்யன் நூற்றிமுப்பது வராகன் கொடுக்கவேணுமென்று தாபந்தப்பட்டுக்கொண்டிருந்தான். அதிலே சிறிதுபேர் இருந்துகொண்டு அவளை மைதுனம்பண்ணிச் சுகமனுபவித்த தற்கும் அதற்கும் சரியென்று சிறிதுபேர் சொன்னார்கள். சிறிதுபேர் இதைத் தொட்டுச் சிறிது திரவியம் கிரகிக்கலா மென்றிருந்தவர்களும் முகம் கறுத்து வெளியே புறப்பட லச்சைப்பட்டிருந்தார்கள். சிறிதுபேருக்கு இவளிந்த வூரை விட்டுப்போனது சனியன் விட்டுப்போச்சுது என்று ஆனந்தத் தை அடைந்திருந்தார்கள் சிறிதுபேர் என்ன பதிலாமை போடுகிறாள் என்று இருந்தவர்கள் திகில் தீர்ந்து உத்சாகத்தை அடைந்திருந்தார்கள். இந்தப்படிக்கு வெகு சனங்களுக்குச் சந்தோஷமும் நாலைந்து பேருக்குத் துக்கமுமாக இருந்தது. இவர்கள் பேர் வயணம்:—

துரை கணக்கு ரங்கப்பிள்ளை, அருணாசலசெட்டி, விசய ராகவாச்சாரியார், ரங்காச்சாரியார், தியாகய்யன், மேலகிரி பண்டிதர் குமாரன் ராமச்சந்திரய்யன் அண்ணன், தம்பிமார் களுள்பட இவர்கள் தவிர மற்றப்பேருக்கெல்லாம் சந் தோஷம்:—

ஷ்ரீதுவும் அக்ஷய ஞு சித்திரை மீ

1746 ஞு அவ்ரீல் மீ 12உக்கு அக்ஷய ஞு சித்திரை மீ செவ் வாய்க்கிழமை

பனிரெண்டுமணிக்குள்ளாக (ா) துரையவர்கள் உத்தாரப் படிக்கு ஆலம்பிரிவிலிருக்கிற கப்பலுக்கு நெய் சாடியும் அமாறு முதலான தினுசுகளும் ஒரு சலங்கிலேபோட்டு அனுப் பச்சொல்லி நமக்கு உத்தாரம் கொடுத்திருக்கிறபடியினாலே அது நிமித்தியம் கடலோரத்துக்குப்போய் அந்தத் தினுசுகளை

ஒரு சலங்கின்பேரிலே ஏற்றி அனுப்புவித்து நாம் அவ்விடத்திலே இருக்கையிலே மேலகிரி பண்டிதன் குமாரன் (ரா) துரையவர்கள் ராமச்சந்திரய்யன நம்மோடே சொன்ன பணம் நீங்கள் வெகுநாளச்சுது. இவ்விடத்துக்கு வந்து ஒரு வருஷமாம்போலேயாகுது. இன்றைக்கு நல்ல நாள்என்று உபசாரஞ்சொல்லி பெரிய துபாசி உத்தியோகம் நீங்கள் வாங்கிக் கொள்ளுகிறீர்களா என்று கேட்டார். அதற்கு நாம் சொன்னது: எனக்கு அந்த உத்தியோகம் என்னத்துக்கு, இப்போது (ரா) துரையவர்கள் எனக்கு என்ன குறைச்சலாக நடத்துவிக்கிறார்கள் என்றும் நான் உத்தியோகம் வாங்கிக்கொள்ளப் போகிறேன். அந்தப் பெரிய துபாசித்தனம் பண்ணுகிறவர்களைக்காட்டிலும் (ரா) துரையவர்கள் ரொம்பவும் தயவுபண்ணி எனக்கு நடப்பிக்கையிலே அந்த உத்தியோகம் எனக்கு எதற்கு. களவையில்லை அல்லவென்று நான் வேணுமென்றால் ... ... ... ... ... ...தம்பி சின்னமுதலியார் வரப்போயிருக்கிறாரல்லவா அவருக்குத்தானே கொடுப்பாரென்று சொன்னேன். அதற்கு ராமச்சந்திரய்யன் சொன்னது: சின்னமுதலியார் அவர்களுக்கு ஒருநாளைக்கு அந்த உத்தியோகம் கொடுக்கப்போகிறதில்லையென்று அவர்கையிலே ஆகாதென்றும், இதல்லாமல் சாவடி உத்தியோகத்திலே யிருக்கிற போது அனேகம் அநியாயம்பண்ணியிருக்கிறார். ஒரு காசுமுதல் கொண்டு லஞ்சபரிதானம் வாங்கியிருக்கிறார். அதினாலே அவருக்குக் கொடுக்கப்போகிறதில்லையென்றும், இதல்லாமல் (ரா) துரையவர்கள், சின்னமுதலியார் ஒரு கழுதையென்றுசொன்னார். அந்தப்படிக்கு வெள்ளைக்காரர் எல்லாரும் சொல்லுகிறார்கள். அதினாலே அவருக்குப் பரிச்சேதம் அந்த உத்தியோகம் கொடுக்கிறதில்லையென்று சொன்னார். இதல்லாமல், பின்னையும் அவர்சொன்னது என்னவென்றால்: அந்த உத்தியோகம்(ரா) துரையவர்கள் உங்களுக்குக் கொடுக்கவேணுமென்றும் இதற்குப் பாத்திரவான்கள் உங்களை யல்லாமல் வேறே யில்லையென்றும் இந்தப் பேச்சு சகல்மான வெள்ளைக்காரரெல்லாரும் அறியத்தக்கதாகச் சொன்னாரென்றும், இதல்லாமல், தங்கள் தமையனாருடன் டங்கசாலையிலே முசே மீரா உங்களுக்குத் தானே உத்தியோகம் கொடுப்பார்களென்றும் (ரா) துரையவர்களும் சொல்லியிருக்கிறார் என்று சொல்லித் தங்கள் தமையனார் சொன்னாரென்று சொன்னார். பின்னையும், தாமும் முசே லெபோ முதலான கடலோரத்திலிருக்கிற வெள்ளைக்காரரெல்லாரும்... ... ... ...

**1746 ௵ அவ்ரீல் ௴ 18 உக்கு அக்ஷய ௵ சித்திரை ௴ 9 உ திங்கட்கிழமை**

காலே நாலரை மணிக்குத் தயங்கம்பாடி சின்ன கப்பித்தானும் அவனோடுகூட வந்த கணக்கனும் (ா) துரையவர்கள் வளவிலே மத்தியானம் சாப்பிட்டுப் பயணம் அனுப்புவித்துக் கொண்டுபோனான். அவன் கூடலூர் கெவுனி வாசற்படிதாண்டினால் மேலே கூடலூர் கெவுனிவாசல் இரண்டுபுறத்திலே யிருக்கிற கொத்தளத்திலேயும் அதற்குத் தென்னண்டையிலே யிருக்கிற மூலேக்கொத்தளத்திலேயும்கூடப் பதினேழு பீரங்கி சுட்டார்கள். அந்த வெகுமதியை வாங்கிக்கொண்டு நடந்துவிட்டான். இந்தநாள் சூரியோதயத்துக்கு, கனகராயமுதலியார் பெண்சாதி நக்ஷத்திரம்மையும் ஷை மருமகள் சந்திரமுத்து மகன் கனகராயமுதலியார் குடியிருந்த வீட்டை நிராசைபண்ணிப்போட்டு வேதபுரீசுவரன் வீதியிலே அருணாசலமுதலி வீட்டுக்குத் தென்னண்டை வீடாகிய உபதேசி முத்துப்பிள்ளை வீடு தம்புச்சாமிமுதலி மகன் மலேயப்பமுதலி வாங்கியிருந்தான். அந்த வீட்டை முஸ்தீதுபண்ணியிருந்தது. அந்தவீட்டிலே குடிபோனார்கள். இந்த வீடுவிட்டுப் போகலாகாதென்று அந்தம்மை சர்வ பிரயத்தினம் பண்ணினாள். அதற்கு கனகராய முதலியார் தம்பி தானப்ப முதலியார் அந்த வீடுவிட்டுப் போனாலேயல்லாமல் கூடாதென்று ஒரு பிடிவாய்ப் பிடித்துத் துரையுடனே சொல்லிப் பலவந்தத்திலே போகப்பண்ணினான். அவன் போகும்போது இரண்டு சரயமதபலே, கட்டில் மெத்தை, புடவை போடுகிற பெட்டி இப்படிப்பட்ட சில்லறை தினுசுகள். இருபது வராகன் பெறும். இதுகளை எடுத்துக்கொண்டுபோகிறதற்குத் தானப்ப முதலியாரை கேட்டால் உத்தாரங்கொடானென்று சாவடி மணியம் அழகப்பமுதலியாரைக்கொண்டு எனக்குச் சொல்லியனுப்புவித்து நான் தானப்ப முதலியாருக்குச் சொல்லி உத்தாரம் வாங்கிக் கொடுத்தேன். அந்த வீட்டுக்குச் சர்வ சுதந்திரிகமாயிருந்தவனுக்கு ஒரு சுதந்திரமுமில்லாமல் வீடுவிட்டு அப்பாலே போகவும், கட்டில் மெத்தை, இரண்டு தபலே செம்பு எடுத்துப் போகிறதற்கு உத்தாரமும் மனுவாய்க் கேட்டு வாங்கிக் கொண்டுபோகவும். ஆனால் பரலோகத்தினுடைய அயிசுவரியத்தை மெய்யென்று எப்படி நம்புகிறது. இப்படி நிலேயில்லாத அயிசுவரியம் என்று சகலமான பேருக்கும் தெரிந்திருந்தும் அவரவர்கள் அயிசுவரியம் சாசுவதமென்றும் சரீரம் பூலோகமுள்ளமட்டு மிருக்கிறுப்போலே யோசனை பண்ணிக்கொண்டதைவிட ஆச்சரியம் இருக்கிறதா இப்படியாக மாயை யுண்டாக்கி வைத்து இந்த மாயையிலே

சகல சனங்களுமறிந்திருந்து மயங்கி மானத்துக்கு அடுத்த காரியங்களைச் செய்ய இதினாலே நரகத்துக்குப் போகத்தக்க தாகவும் இப்படி பண்ணியிருக்கிறதை யென்னவென்று தெரியாமலிருந்து* ... ... ... ... ... ... ...

1746 ஞு அவ்ரீல் மீ 18 உக்கு அக்ஷய ஞு சித்திரை மீ 9 உ திங்கட்கிழமை.

......இல்லை. தமையனார் பெண்சாதி என்கிற மானம் சற்றாகிலு மில்லாமல் அகதம்மைப்படி நடப்பிக்க அதை நான் எழுதினால் பார்த்தபேருக்கு மெய்யென்றிராது. பத்துபேர் முன்னே அவர் சொல்லுகிறதற்குத் தத்துவமும் அப்படிப்பட்ட தமையன் காலம்பண்ணிப்போனமட்டுக்கும் இனிமேல் சரீரம் விட்டு விடவேணுமென்று சொல்லுகிறதும் காவி வஸ்திரம் தரித்துக் கொண்டு லோகத்தினுடைய ஆசையைவிட்டுப் போகிறவனைப் போலவே சொல்லுகிறதும் எங்கே நின்றாலும் அங்கே அழுகிறதும் அவ்விடத்திலே எல்லாரும் தைரியமும் சொல்லுகிறதும் தெத்துகிறதும் அப்படி பாசாங்கு அடிக்கிறதும் பார்த்த பேருக்கு மெய்யாகத் தோற்றத்தக்கதாகக் காண்பித்து நடிக்கிறதும் உள்ளே கனகராயமுதலியார் பெண்சாதி ஒரு தபலை யெடுத்துப்போகிறதற்கு எப்படி கண்டிப்புப் பண்ணுகிற சாடையும் தலைக்காணி மெத்தைக்குத் தகராறுபண்ணினதும் ஒரு வெள்ளாட்டிச் சிரிக்கிறதும் என் மனதுக்குத் தெரியும். அழகப்பமுதலி மனதுக்குத் தெரியும். வெளிக்கு அப்படி காண்பித்து உள்ளே இத்தனை குரூரமாய் நடத்துகிற புத்தி நாளொருத்தரையும் பார்த்ததில்லை. இதெல்லாம் தமையனார் சம்பாத்தியமேயல்லாமல் இவர் சம்பாத்தியமல்ல. அப்படியிருக்க, அவர் பெண்சாதிக்கு ஒரு தலைக்காணி மெத்தைக்கு இத்தனை தகராறுபண்ணி, குரூரம்பண்ணினால் மற்றப்பேர் காரியத்திலே எப்படி நடத்துவாரோ, இதிலே விவேகிகளாயிருக்கிறவர்கள் தெரிந்துகொள்ளவேண்டியது. ஆனால், முப்பது வருஷமே சாவடி துபாசித்தனம் பண்ணுகிறாரேயல்லாமல் மற்றப்படியல்லவே. ஆனபடியினாலே சகலமான சனங்களுக்கும் இவர் குரூரகுணம் தெரிந்திருக்குமானபடியினாலே நான் எவ்வளவு கொஞ்சம் எழுதினாலும் தெரிந்துகொள்ளுவார்கள். இவர் தமையனார் கனகராயமுதலியார் சுபாவம் குரூரமானாலும் வெளிக்குக் காண்பியாமல் மனத்தினுள்ளே வைத்துக்கொண்டு சமயம் வந்தபோது குடியைக் கெடுத்துப் போடுவார். தனக்குச் சத்துருவாயிருக்கிறவர்களை மித்திரராய் தன்னைச் சேர்ந்தபேரை ஒரு காரியங்களிலே உபகாரம்பண்ணி, பத்துப்பணத்தளவிலே சரீரவாக்குச்

* 4. வரிகள் கிழிந்துவிட்டன.

சகாயம் தன்னிலே செய்யாமற்போனாலும் பொல்லாப்பு பண்ணுர். அவருடைய நடத்தை பொருத்தலாய் கனத்தந்தியாயிருக்கும். இவருடைய சுபாவம் அப்படியல்ல. பெற்ற பிள்ளையானாலும் சமயம் வந்த விடத்திலே காசு வாங்கிவிடுகிறதேயல்லாமல் சும்மாய் விடத்தக்கதில்லை. காசு வந்த காரியமானால் பெற்ற தாயார்பேரிலேயாகிலும் எக்காரியம்பண்ணி நடத்திப்போடுகிறதேயல்லாமல் விடத்தக்கதில்லை. இதல்லாமல் ... ... ... ... ... ...* அதற்கு இவர் தமையன் கனகராய முதலியார் ஊருக்குப் பெரிய துபாசித்தனமாய் அதிகாரமாயிருந்தபடியினாலே தள்ளிப்போச்சுதே யல்லாமல் இல்லாமற்போனால் ஒரு நாழிகையாகிலும் மனம் பொறார்கள். இவர் நடப்பித்ததுகள் துரைகள் மனம் பொறுத்ததும் இவர் தமையனைப்பற்றியே யல்லாமல் மற்றப்படியல்ல. இதுகள் துரைகளும் சகல சனங்களும் அறிந்திருக்கிறபடியினாலே சூட்சுமமாய் இரண்டு வார்த்தையாய் எழுதிவைத்தேன். ஆனால், கனகராய முதலியார் நடத்தைப் பாரியாயிருக்கும். இவர் நடத்தை அல்காவாயிருக்கும் கனகராய முதலியார் லோபியென்று லோக வதந்தியாய்ச் சொல்லுகிறது. ஆனால், அவர் பெரிய தனத்துக்காகிலும் ஒழுகரைக்குப் போகிற வழியிலே ஏழாயிரம் வராகன் நெரந்து ஒரு கோவில் கட்டுவித்தார். புதைக்கிற கல்லறையிலே ஐந்நூறு அறுநூறு செலவழித்து ஒரு கோரி கட்டுவித்தார். இவரிப்படிப்பட்ட காரியத்திலே ஆயிரத்திலே ஒரு பங்காகிலும் நடத்தமாட்டார். ஐயா நானல்லவே அறுகுகொண்டு சூரையாடக் கண்டு மகிழுங்கோளென்று நடப்பிக்கிறவரேயல்லாமல் மற்றப்படியல்ல. இத்தனையாய் நான் எழுதினதென்னவென்றால்: அவர் தமையனார் பெண்சாதியினிடத்திலே நடப்பித்த காரியத்திலேதொட்டு இவர் நடத்தையிலே சூட்சுமமாயெழுதவேண்டி வந்தது... ... ... ... இப்போது ஒரு மாசமாய் பெரிய துபாசித்தனத்துக்குப் பாதிரிகளைக்கொண்டு துரை பெண்சாதிக்குச் சொல்லிவித்து அவள் முகாந்திரமாய் பிரயத்தனம்பண்ணிக்கொண்டு வாரான். இதுக்கும் அம்மாளுக்கும் இவருக்கும் ராசவட்டம்போகிற

* 5 வரிகள் கிழிந்திருக்கின்றன.

வன் பேசுகிறவன் நாரயணப்பிள்ளை. இனிமேல் என்னமாய் நடக்குமோ தெரியாது... .. ... ... ... ...

இமாம்சாயபு குமாஸ்தா அவாய்சாயபு கோட்டையிலே பதிறு சகலாத்துக்கட்டு எடுத்தார்கள். இன்னம் பதிறுகட்டு நாளையதினம் எடுக்கிறேமென்று வந்தார்கள்.... ...

இற்றைநாள் காவலிலேயிருந்த கடைக்காரரிலே கிழவன் மாரிசெட்டி, திருக்காமி, ராமலிங்கம், தில்லை என்கிறவனொருத்தன் ஆக மூன்றுபேரையும் விடுதலைபண்ணி விட்டுவிட்டேன். இந்தச் சரித்திரமெல்லாம் குறைபேர் விடுதலையானபிற்பாடு வயணமாய் எழுதுகிறேன். முன் வேலன், குமரன், மலைராம வீரப்பன் இவர்கள் இரண்டு பேர் ஆக ஐந்து பேருக்கு விடுதலை பண்ணினேன். இது வயணம் எல்லாம் மற்றப்பேரும் விடுதலை பண்ணினவுடனே எழுதுகிறேன் ... ... ...

1746 ஞு அவ்ரீல் மீ 19 உ க்கு அக்ஷய ஞு சித்திரை மீ 10 உ செவ்வாய்க்கிழமை

*... ... ... ... ... ... ... ...

இனிமேலைக்கு கும்பினியிலே இருக்கிற சகலாத்து கட்டுகள் இளப்பமேயல்லாமல் வளமில்லை. மூசே லெனுவார்கள் துரைத்தனத்திலே வந்த சரக்கிலே விற்றுமுதல் போக கழித்ததும் மூசே தூம்மா துரைத்தனத்திலே வந்த சரக்கிலே விற்கிரயம் போக கழிவானபடியினாலே வர்ணம் மங்கி காணுதும் பூச்சி விழுந்து நணைவும் இப்படி நானாவிதமாக இருக்கும். ஆனபடியினாலே, இனிமேலிருக்கிற நாற்பது அன்பது கட்டும் இளப்பம் என்று சொன்னார்கள்.

1746 ஞு அவ்ரீல் மீ 20 உ க்கு அக்ஷய ஞு சித்திரை மீ 11 உ புதன்கிழமை

நாலு பேர் கிடங்கிலேயிருந்த கடைக்காரர் கோவிந்தன், தேவான் தாண்டவராய செட்டி மகன் தேப்பெருமாள், ஏகாம்பரம் செட்டி மகன் அருணாசல செட்டி, ஆண்டா

* 4 வரிகள் கிழிந்திருக்கின்றன.

செட்டி மகன் அருணாசலம் இந்த நாலு பேர் கிடங்கிலே யிருந்தவர்களும் வந்தவாசி ரங்கப்பிள்ளை பேருக்குச் சாவடி சீட்டெழுதிக்கொடுத்து அவர்களுக்கு இருந்த சரக்கின் பேரிலே ஈடு எழுதிக்கொடுத்தும் வீட்டின்பேரிலே சீட்டெழுதிக்கொடுத்தும் தவணை ரெவ்வண்டு ஞூ வைத்தும் இந்தப் படிக்கு உடன்படிக்கைப் பண்ணினார்கள், இந்தப்படிக்குச் சிறிது தள்ளிக்கொடுக்க உள்பேச்சுப்பேசி தீர்ந்திருக்கிறது. இந்தப்படி பேசினதற்கு துரை காலிலே கொண்டுபோய் விட்டு, காவல் விட்டுவிடுவோமென்று, துரை சமயம் விசாரித்தால் துரைக்கு அரையிலே பருக்கண்டு அந்த வேதனையாலே உடுத்திக்கொண்டு வெளியே வராததினாலே மறுபடிக்கு இந்த நாலுபேரையும் நயினார் வீட்டிலே காவல் வைக்கச்சொல்லி அனுப்பிவிட்டு நானும் வீட்டுக்கு வந்தேன்...
... ... ... ... ... ... ... ... ...

இந்தநாள் சாயங்காலம் கிளிஞ்சிகுப்பத்திலே போட்ட வாழைத்தோட்டம் போய்ப் பார்த்துவந்தோம்... .. ...

1746 ஞூ அவ்ரீல்மீ 21உக்கு அக்ஷயஞூ சித்திரை மீ 12உ வியாழக்கிழமை

துரை வெளியே வராததினாலே சிறங்காயிருந்ததினாலே விந்தையாய் ஒருபேச்சுமில்லை... ... ... ... ...

1746 ஞூ அவ்ரீல் மீ 22உக்கு அக்ஷய ஞூ சித்திரை மீ 13உ வெள்ளிக்கிழமை

இந்தநாள் நான் பாக்குக்கிடங்கிலேயிருக்கையிலே மூசே தெம்ரோ வந்து என்னுடனே கல்லெடுக்கிற வண்டி கேட்க வந்தவன் சொன்ன சேதி: நாலாம் நாள் மாயேயிலிருந்து காகிதம் வந்ததே, அதிலே சீர்மைக் காகிதம் பசுராவிலே யிருந்து சூரத்துக்கு வந்து சூரத்திலேயிருந்து மாயேக்குவந்து, அங்கேயிருந்து இவ்விடத்துக்கு அனுப்பினார்கள். அந்தச் சீர்மைக் காகிதத்தைத் துரை தான் பிரித்துப்பார்த்துக்கொண்டு மற்றப்பேருக்கு நாலு ரெண்டு காகிதம் வந்ததையும் ... ...

... ... ... ... ... ... ... ... ... *
துரையாயிருக்கிற முசே லீதுவையும் கசேராயிருக்கிற முசியே கிலியாரையும் உத்தியோகம் பரிகரித்து எழுதி வந்ததென்றும், இவ்விடத்திலே நடந்த நியாயங்கள் விசாரிக்கிறதற்கு இரண்டுபேர் குமிசேர் வருகிறார்களென்றும் இந்தப்படியாகப் பின்னையும் முசே துப்ளெக்ஸ் குவர்னதோராயிருக்கிறவர் நடப்பித்த சம்மதிக்குத் தாக்கீதாய் எழுதிவந்ததென்றும், இதை வெளிப்படுத்தாமல் மனதிலேதானே வைத்துக்கொண்டிருக்கிறானென்றும் இதைச் சொல்லுகிறதற்கு எண்ணமென்று முசே லீதுவுக்கும் முசே கிலியாருக்கும் சொல்லப்போகிறோமென்றும், அது நிமித்தியத்துக்குள்ளே ரொம்பவும் தாபந்தமாயிருக்கிறதாக இது மேசையின்மேலே பேசிக்கொண்டதாய் முசே வேன்சான் (M. Vincent) சொல்லத்தக்கதாக நான் கேள்விப்பட்டேன் என்றும் சொன்னான். அதற்கு நானிருந்துகொண்டு முசே லீகு கும்பினியை நாற்பது வருஷமாய் சேவித்தவர். இதல்லாமல் வெகு நல்ல மனுஷர், பெரிய மனுஷர். மெத்த அமந்த மனுஷர். புடவை பார்க்கிறதிலே இவருக்குச் சமானமாய் பார்க்கிறவர்கள் ஒருத்தருமில்லையென்று கும்பினியார் சந்தோஷப்படத்தக்கதாக இருக்கிறவிடத்திலே எப்படிப்பட்ட குற்றம்செய்தாலும் மனம் பொறுக்கவேண்டிய கடனுச்சுதே. அப்படியிருக்க, ஒரு குற்றமும் செய்யாமலிருக்க அவரைத் தள்ளுகிறது என்ன நியாயம் என்று கேட்டதற்கு அவன் சொன்னது: முசே போர்ஷேர். (M. Porcher) முன்னே பந்தரிலே எசமானனாயிருந்தபோது நடந்த் சங்கதிக்கு முசே தும்மா அவர்பேரிலே குற்றம் சுமத்தி கோன்சேல் உத்தியோகத்தையும் பரிகரித்து இவர் இனிமேல் கும்பினீர் உத்தியோகத்துக்குப் பாத்திரவானல்லவென்று தள்ளின சம்மதிக்கு அவர் சீமைக்குப் போய் இந்த நியாயம் கும்பினியாருடன் பேசிக்கொள்ளுகிறேன் என்று போனதற்கு, கும்பினியாரும் அவ்விடத்திலேயும், இவ்விடத்திலே முசே தும்மா தீர்த்தபடிக்கு இனிமேல் நீ கும்பினீர் உத்தியோகத்துக்குப் பாத்திரவானல்ல பருத்திகுலாரிலே வர்த்தகம் பண்ணிக்கொண்டிருக்கலாமென்றும் உத்தாரங்கொடுத்துப் போகச்சொன்னபடியினாலே அவர்

* 4 வரிகள் கிழிந்துயிருக்கின்றன.

இவ்விடத்திலே வந்திருக்கையில் மூசே துப்ளேய்க்சு குவர்ன தோரிடத்துக்கு வந்தபிற்பாடு மூசே தும்மா நாளிலே தீர்த்த மூசே போர்ஷேநுடைய வழக்கை மறுபடியும் கோன்சேலிலே தீர்த்து மூசே தும்மா நாளிலே தீர்த்தபோது அனுகூலமாயிருந்த மூசே குலார்ம், மூசே துலோராம் இவர்கள் அபத்தசாட்சி சொன்னார்கள் என்று எண்பித்து இதற்கு மூசே லிதுவும் மூசே கிலியாரும் சாட்சி சொன்னார்கள் என்றும் மூசே போர்ஷேர் பரிசுத்தரென்றெண்பித்து கோன்சேல் உத்தியோகம் கொடுத்து மறுபடியும் சீர்மையிலிருந்துவந்து பரிகரிக்கவேண்டி நடந்தபடிக்குப் பரிகரித்துப்போட்டு சம்மதி மூசே தும்மா, சீமையிலே மூசே லிது. மூசே கிலியார் இவர்களிப்படி சமயத்துக்குத் தக்கதாப்போலே இவர்கள் கோன்சேலியராயிருந்து தப்புசாட்சி சொல்லலாமாவென்று கும்பினியாருக்கு இவர்கள் உத்தியோகத்தைப் பரிகரிக்கவேண்டி எழுதிவந்ததாக ஒரு சாடையும், பின்னையொரு சாடையும், மூசே தும்மா என்கிறவன் பருதி குலார் வர்த்தகன் பங்களாத்திலே இருக்கிறவன், முன்னே மூசே மசாக்கு என்கிறவன், குவர்னதோர் மூசே துப்ளேய்க்சு உறவாயிருக்கிறவன்பேரிலே அறு நூறு வராகன் வரவேணுமென்று எழுதி மூசே தும்மாவுடைய பெருக்குறேுதராயிருந்த மூசே சூது (M. Soude) க்கு எழுதியனுப்பி அந்த அறு நூறு வராகனும் அறுவிடச் சொன்னதின்பேரிலே மூசே சூது, மூசே மசாக்கை வராகன் கேட்டதற்கு நான் கொடுக்கவேண்டியதில்லை என்று சொன்னதின்பேரிலே, மூசே சூது கோன்சேலுக்கு பெத்திஸியோமெழுதிக் கொடுத்து இந்த நியாயம் விளங்கவேண்டியதென்றும் சொன்னதுக்கு கோன்சேலிலே மூசே சூது (M Soude) கொண்டு வந்த பெத்திஸியோம் அபத்தமென்றெண்பித்து அதற்குப் பிற்பாடு அந்தரங்கத்திலே போகாததிலே மூசே துமோவுக்த மூசே மசாக்கு பணம் செலுத்தி இதை வெளிப்படுத்தவேண்டாம் என்று சொன்ன சம்மதிக்கு மூசே கிலியார் அப்போது ராசாவினுடைய பெருக்குய்றதோராயிருந்து, இதற்கு மூசே சூது நியாயத்துக்கு விலக்காய் எதிராய் நின்று தள்ளிச் சொன்னுனென்று அதற்கு மூசே லிதுவும் (M. Legou) அனுசாரியாயிருந்தாரென்றும் இப்படிப்பட்ட அநீதத்துக்கெல்லாம் கோஞ்சேலியராயிருந்து

இப்படி தப்பு சாட்சி சொல்லலாமா என்று மூசே தும்மா கும்பினியாருக்கு இப்படி அநேகம் அநியாயங்களெல்லாம் நடப்பித்தார்களென்று சொல்லி இதின் பேரில் இவர்கள் உத்தியோகத்தைப் பரிகரிக்கவேண்டி யெழுதிவந்ததாய்ச் சொன்னான். இப்படி இரண்டு விதத்திலே ஒரு விதத்து நிமித்தியம் மூசே லிது, மூசே கிலியாருடைய உத்தியோகம் பரிகரித்து எழுதி வந்ததாய்ச் சொன்னான், அதற்கு நான் சொன்னது: கோன் சேலியர்கள் அந்தக் கடுதாசியைக் கோஞ்சல் கடுதாசியைப் பார்த்ததற்குமுன்னே எப்படி வெளிப்பட்டதென்று கேட்டதற்கு மாயேயிலிருந்து இவ்விடத்திலே இரண்டொருத்தருக்கு எழுதிவந்ததாய்ச் சொன்னான். ஆராருக்கு என்று கேட்டால், மூசே பேர்தலேர், மூசே துலோராய், பின்னையும் இரண்டொருத்தருக்கு எழுதிவந்தது. அவர்கள் சாடைசாடையாய் அந்தரங்கத்துக்குள்ளே பேசிக்கொள்கிறதாய்ச் சேதி கேட்டேனென்று சொன்னான். அதற்கு நான் எல்லாம் பத்து நாளையிலே வெளியாகுமென்று சொன்னேன். அதின்பேரிலே அவன் என் கையிலே யனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்குப் போனான்.

*1746* ஞு அவ்ரீல் மீ 22 உ க்கு அக்ஷய ஞு சித்திரை மீ *13* உ

இந்தநாள் வெள்ளிக்கிழமை பட்டணத்திலே நடந்த அதிசயம் என்னவென்றால்: மூசே கொக்கேத் என்கிறவர் சுமார்ஷாம் நொத்தேராயிருக்கிறவன் நேற்றையதினம் சாயங்காலமான ஏழுமணிக்கு வீட்டிலிருந்து புறப்பட்டு மீராப் பள்ளியிலேயிருக்கிற மூசே பாஸ்க்கு (M. Bas-que) தோட்டத்துக்குப் போய் சாராயம் குடித்து அவ்விடத்திலேயிருந்து மறுபடி வீட்டுக்குப் போகிறவன் அந்தத் தெருவிலே ஒரு வீட்டிற்குள்ளே புகுந்து பெண்டுகளிருக்கிறார்களோவென்று பார்க்கிறபோது இருட்டாயிருந்தபடியினாலே அடுப்பிலேயிருந்த கொள்ளியை எடுத்துக்கொண்டு விசுறும்போது வீட்டுக்குள்ளேயிருந்த ஒரு பெண் வெளியே புறப்பட்டு ஓடுகையில், இவன் இசப்பாதை உருவினவாக்கே ஓடுகையில், அவள் ஓடிப்போய் அவ்விடத்தி

விருந்த் அசல் வீட்டிலே புகுந்து வெகுசாய்க் கூப்பிட்டு அழுதாள். அப்போது அவ்விடத்திலிருந்த தமிழரும் பின்னையும் சிறிது வழி நடப்புக்காரரும் கூடி சொல்தாது வந்து புகுந்தானென்று பார்க்கும்போது இவன் அவ்விடத்திலேயிருந்து புதுசாய்க்கட்டின கூரைவீடு கதவில்லாதபடியினுலே அந்த வீட்டிலே புகுந்து ஒளிந்துகொண்டான். அப்போது தமிழர் பயந்து வீட்டைச் சுற்றியிருந்தார்கள். அவன் அந்த வீட்டிலே சற்றுநேரமிருந்து புறப்பட்டு மண்ணுங்கட்டிகளை எடுத்துக்கொண்டு போட்டான். அப்போது அந்தத் தெருவிலே கூட்டமாய்ப் பதுங்கியிருந்தவர்கள் பிறகே நாலு பேர் போய் பிடித்து எல்லாருங்கூடி அடித்து அவனுடைய பொன் பொத்தான் முதலாகிய வஸ்துவெல்லாம் கிழிந்து போகத்தக்கதாக அடித்துக் கத்தியையும் பிரம்பையும் பிடுங்கிக்கொண்டு சின்னதுரை வீட்டிலே கொண்டுபோய் ஒப்பித்தார்கள் அடித்த அடியானுல் தலை பிளந்துபோய் இனிமேல் பிழைக்கமாட்டானென்று சொல்லுகிருர்கள். அவனுடைய ஆயிசு எப்படியிருக்கிறதோ, அது இனிமேல் அறியவேணும். இந்தச் சேதி (ா) துரையவர்கள் கேட்டு, தமிழன் வீட்டுக்குள்ளே வெள்ளைக்காரன் புகுந்துகொண்டு பெண்டு பிடிக்கப்போனுல் அவர்கள் சும்மாயிருப்பார்களா நல்லவேலை செய்தார்கள் என்று சொன்னுர். அடித்தவர்களின்னுர் என்று தெரியாதபடியினுலே விசாரிக்கிருர்கள். இன்னமும் அடித்தவன் அகப்பட்டதில்லை.

---

மூன்றாம் புஸ்தகம் முற்றிற்று.

---

